உ

# தருமதீபிகை

(மூலமும்-உரையும்)

## இரண்டாம் பாகம்.

ஆசிரியர்
கவிராஜ பண்டிதர்
ஜெகவீர பாண்டியனார்



மதுரை
மத்ராஸ், சி. வரதராஜுலு நாயுடு பிரஸில்
பதிப்பிக்கப் பெற்றன.

சருவசித்து வருஷம் வைகாசி மீ
1947

# பொருள் அடக்கம்.

# முகவுரை.

இது தரும தீபிகையின் இரண்டாம் பாகம். மனிதன் நிலை முதலாக இருபத்து எட்டு அதிகாரங்கள் முதல் பாகத்தில் வந்துள்ளன. இதில் தன்னம்பிக்கை முதலிய பதினைந்து அதிகாரங்கள் தொடர்ந்து சேர்ந்திருக்கின்றன. வெண்பாக்கள் யாவும் பலவகையான பண்பாடுகள் படிந்து இன்பாகங்களாய் இசைந்து மிளிர்கின்றன- மனம் புனிதமாய் மனிதன் இனிது உயர்கின்ற நெறிமுறைகளையே கவிகள் எவ்வழியும் உரிமையுடன் உணர்த்தி வருகின்றன, பிறரை எதிர்பார்த்துப் பேதையாய் இழிந்து நில்லாதே; உன்னையே நம்பி மேதையாய் உயர்ந்து கொள்ளுக. யாண்டும் ஆண்மையுடன் நின்று மேன்மை புரிந்து வருக. சீர்மை சீலம் நீர்மை நெறி நேர்மை தூய்மை நேயங்களை மருவி உயர்ந்த குறிக்கோள்களுடன் சிறந்த கருமங்களைச் செய்து எங்கும் செவ்வியனுய் வாழுக. சாந்த சீலம் தோய்ந்து கருணைப் பண்பு கனிந்து உலக நிலைகளை ஓர்ந்து உறுதிநலம் காணுக என்னும் போதனைகள் இதில் பொதிந்துள்ளன.

> உன்னையே உன்னி உயர்க அயலிழிந்து
> பின்னைநீ வீழல் பிழை.

என இன்னவாறுன விழுமிய உண்மைகளை இனிது விளக்கி நுணுகிய மானச மருமங்களைத் துலக்கி ஆன்ம போதங்களை மேவிப் பான்மை சுரந்து வந்துள்ளமையால் இந்தப் பகுதி உணர்வுக்கு உயர் விருந்தாய்ச் சுவை நிறைந்து திகழ்கின்றது.

எங்கும் தரும மணமே கமழ்ந்து இருமை நலங்களையும் இனிது மருவி வந்துள்ள இந்தப் புண்ணிய நூல் அமுத நிலையமாய் என்றும் இன்பம் புரிந்து வரும் என்று நம்புகின்றேன்.

ஜெகவீரபாண்டியன்.

## சிறப்புப்பாயிரம்.

உள்ளப் பண்பும் உணர்வு நலங்களும்
வெள்ளம் என்ன விரிந்தெழு காட்சிய;
தெள்ளு செந்தமிழ் சிவ அமுதமாய்த்
துள்ளி வந்து துலங்கிய மாட்சிய. (1)

மாசு தீர்ந்து மனிதன் புனிதனுய்த்
தேசு கூர்ந்து திகழ அருள்வது;
ஈசன் இன்னருள் எய்திய பாண்டியன்
பேச வந்தது பேரொளி தந்தது. (2)

தரும தீபிகை என்னும் பெயரது;
இருமை உண்மைகள் எங்கும் நிறைந்தது;
அருமை நூல்இதை ஆய்ந்து நுகர்ந்தவர்
பெருமை காணுவர் பேரின்பம் பூணுவர். (3)

சுதந்திரமான வாழ்க்கையே மனிதனுக்கு இயற்கை யுரிமை யாய் இதம் தருகின்றது.

சுயம்பு சுயாதீனம் என்பன தெய்வத் தன்மைகளாம். கடவுள் ஒருவரே என்றும் நிரந்தரமான சுதந்திர நிலையினர். தெய்வ பிண்டமான மனிதனும் அந்நிலைமையைத் தழுவியுள்ள அளவே தலைமையில் மிளிர்கின்றான்.

"Self-existence is the attribute of the Supreme cause, and it constitutes the measure of good by the degree in which it enters into all lower forms." (Emerson)

"எதையும் சாராத தனி நிலைமையே இறைவன் தன்மையாம்; அந்த இயல்பின் அளவே உயிர்களும் உயர் நலம் உறுகின்றன" என்னும் இது ஈண்டு எண்ணத் தக்கது.

பெருமை பிழையாத ஒழுகின் என்றது சிறுமை யாதும் நுழையாமல் சீர்மையுடன் வாழ்தலை. அவ் வாழ்வில் மேன்மையும் இன்பமும் மேவியுள்ளன ஆதலால் அதன் பான்மை உணரவந்தது.

பிறருடைய மனம் போல் நடந்து ஏவலைச் செய்து வாழ்வது ஈனம் மிக வுடையது. அந்த ஊனம் அடையாதான் தன் மதிப்பாளனாய்த் தலை சிறந்து நிற்கின்றான். அவனுடைய பிறப்பும் இருப்பும் சிறப்புறுகின்றன.

> "How happy is he born and taught
> That serveth not another's will-
> Whose armour is his honest thought,
> And simple truth his utmost skill!" (Happy Life)

"பிறருடைய விருப்பிற்கு அடிமையாகாதவன் பிறப்பும் கல்வியும் எவ்வளவு மதிப்பும் இன்பமும் உடையன! தன்னுடைய கண்ணியமான எண்ணமும், நேர்மையான உண்மையும், சாதுரிய நீர்மையும் அவனுக்கு இனிய துணைகளாய் இதம் புரிந்தருள்கின்றன" என்று ஹென்ரி உட்டன் (Sir Henry Wotton) என்னும் மேல் நாட்டுப் போசிரியர் இங்ஙனம் கூறியுள்ளார். ஏவல் வாழ்வை எந் நாடும் கேவலமாக எண்ணியுள்ளமையால் அதன் இழிவும் துயரும் எளிது தெளிவாம்.

அயலைச் சார்ந்து இயல் திரியாமல் ஆனவரையும் சுயநிலையில் அமர்ந்து மானம் மரியாதைகளைப் பேணி ஞானமுடன் வாழ்க.

275. ஒன்றும் இலையென் றுளங்கவலேல் யாவுமே
என்றும் உடையாய் இருப்புணர்ந்து—நன்று
கருதி முயல்க கருதா நலங்கள்
உருகி அடையும் உனை. (ரு)

இ-ள்

யாதும் இல்லையே என்று உள்ளம் கவலாதே; எல்லாச் செல்வங்களும் உன்னிடம் உறைந்திருக்கின்றன; உறுதியுடன் கருதி முயல்க; யாவும் விரைவில் வெளியாய் விழி எதிரே பெருகி வரும் என்பதாம்.

பொருள்களை உளவாக்கவும், தொகுக்கவும், உபயோகிக்கவும், செலவழிக்கவும் வல்ல சத்திகள் மனிதனிடம் இனிது அமைந்திருக்கின்றன. அந்த ஆற்றலைப் போற்றிவரின் ஏற்றங்கள் யாவும் எதிர் வருகின்றன.

இருப்பு என்றது இரு பொருள் குறித்தது.

கையில் பொருள் இல்லை என்று கவலாதே; எல்லாச் செல்வங்களும் உன் கருத்தில் உள்ளன என்று காட்டிய படியிது. இருப்பு=மூலதனம், நிலைமை.

கருதி முயல்க என்றது தனது கடமையையும், உலக நிலைமையையும், பொருள் வகையையும், இடம் காலங்களையும் எண்ணிச் செய்க என வினையாட்சியை விளக்கி நின்றது.

நெடிய செல்வங்களுக்கெல்லாம் நினைவு மூல காரணமாயுள்ளது.

கருதுவது சரியாயின் குறி பிழையாத அம்புபோல் அரிய பலன்களை ஆக்கி அருள்கின்றன.

"ஞாலம் கருதினும் கைகூடும் காலம்
கருதி இடத்தால் செயின்." (குறள், 484)

உரிய நிலைகளை உணர்ந்து பருவம் தவறாமல் தொழில் செய்ய வேண்டும் என இது உணர்த்தியுள்ளது.

ஞாலம் கருதினும் கைகூடும் என்ற இந்த வாசகம் எவ்வளவு அதிசய முடையது! நினைந்து நினைந்து நெடிது சிந்திக்கவேண்டும்.

உலகம் முழுவதையும் ஒருங்கே ஆள நினைத்தாலும் ஒருவனுக்கு அது கைகூடும் என்றதில் கரும நலனோடு மனிதனது

தனி மகிமையும் இனிது வெளியாயது. காணிநிலமும் கைகூடாமல் கவலையுற்று உழலும் மானுடங்களுக்கு அரிய ஞான உபதேசமாய் இது ஒளி வீசியுள்ளது.

உள்ளம் திருந்தி ஒருமுகமாய்க் கருதின் எல்லாம் எளிதே ஒல்லையில் எதிர் ஓடி உரிமையுடன் வருகின்றன.

உள்ளிய எல்லாம் உடன் எய்தும். (குறள், 309)

உள்ளியது எய்தல் எளிது. (குறள், 540)

எண்ணிய எண்ணியாங்கு எய்துப. (குறள், 666)

இவை ஈண்டு எண்ணத்தக்கன. உய்தி நலமுடைய இப் பொய்யாமொழிகளின் உட்பொருள்களை ஊன்றி உணரவேண்டும்.

மனிதன் எதையும் அடையலாம்; அவன் பெற முடியாத பொருள் யாதும் இல்லை. அரிய முத்திப் பேறும் அவனுக்கு உரிமையாய் எதிர்நோக்கியுள்ளது. உள்ளம் கருதி முயலாமையால் உறுதி நலங்களை இழந்து விடுகின்றான். முயன்றான் உயர்ந்தான்; அயர்ந்தான் இழிந்தான். நினைவின் அளவே நிலை. "யாது பாவித்திடினும் அதுவாகி நிற்பை" என்பது வேத வாக்கியம்.

"What we love that we have" "நாம் எதை விரும்புகின்றோம் அதை அடைகின்றோம்" என மேல் நாட்டு மேதையும் கூறியுள்ளார். "கருதா நலங்கள் உருகி அடையும் உணே" என்றது எதிர்பாராத இன்ப நலங்கள் எல்லாம் புனித மனமுடையான் பால் இனிது வந்து சேரும் என்றவாறு.

---

276. உள்ளத் திருவென்ப தூக்கமே அவ்வூக்கம்
எள்ளத் தனை ஒருவன் எய்தினும்—வெள்ளத்
தனைய திருவந் தடையும் அதன்சீர்
நினைய வரிய நிலை. (௬)

இ-ள்

ஊக்கம் உள்ளத்தின் தெய்வத் திரு; அது எள் அளவு இருந்தாலும் வெள்ளம் அனைய செல்வங்கள் விரைந்து பெருகும்; அதன் பெருமை அளந்து சொல்ல முடியாது என்றவாறு.

இது உறுதி குன்றாமல் உயர்க என்கின்றது.

திரு=செல்வம், இலக்குமி. வெளியே ஒளிர்கின்ற திரு ஒன்று உள்ளமையால் உள்ளே மிளிர்கின்ற திருவின் உருவம் இங்ஙனம் உரை செய்ய வந்தது.

ஊக்கத்தை உள்ளத் திரு என்றது எல்லாச் செல்வங்களையும் இனிது அருளி மனிதனை அது மகிமைப் படுத்துதல் கருதி.

"ஊக்கம் உடைமை ஆக்கத்திற்கு அழகு." (ஔவையார்) என்றமையால் செல்வத்திற்கும் அதற்கும் உள்ள உரிமை புலனும்.

ஆக்கங்கள் யாவும் ஊக்கங்களால் உளவாகின்றன; ஆகவே உலக போகங்களுக்கும், உயர்ந்த யோகங்களுக்கும் ஊக்கம் உயிர் நிலையாய் ஒளி செய்து நிற்கின்றது.

செல்வத்தின் அதி தேவதை இலக்குமி. அந்தத் திருமகள் அருளுடையார் பெரு வளம் அடைந்து எல்லா நிலைகளிலும் பெருமையுடன் திகழ்கின்றார். அரசர் வீரர் புலவர்கள் முதலிய தலைமையாளர் எவரிடமும் திருவின் தேசு வீசியுள்ளது.

மல்லல் நெடும் புவி அனைத்தும் பொதுநீக்கித்
தனிபுரக்கும் மன்னர் யாரும்
கல்வியினில் பேரறிவில் கட்டழகில்
நிகரில்லாக் காட்சியோரும்
வெல்படையிற் பகைதுரந்து வெஞ்சமரில்
வாகைபுனை வீரர்தாமும்
அல்லிமலர்ப் பொகுட்டுறையும் அணியிழைநின்
அருள் நோக்கம் அடைந்துளாரே. (1)

செங்கமலப் பொலந்தாதில் திகழ்ந்தொளிரும்
எழில்மேனித் திருவே! வேலை
அங்கணுல கிருள் துரக்கும் அலர்கதிராய்
வெண்மதியாய் அமரர்க்கூட்டும்
பொங்கழலாய் உலகளிக்கும் பூங்கொடியே!
நெடுங்கானில் பொருப்பில் மண்ணில்
எங்குளை நீ அவண் அன்றோ மல்லல்வளம்
சிறந்தோங்கி இருப்ப தம்மா! (காசிகாண்டம்)

இலக்குமியைக் குறித்து அகத்தியமுனிவர் இவ்வாறு துதித்திருக்கிறார். செல்வ நிலையமாகிய இத் திரு எல்லார்க்கும் பொது ஆதலால் எவர்க்கும் நேரே வந்து தனியே உதவி யருளாள்.

உயிர்களின் நல்வினைகளை நோக்கி அவை ஊக்கி முயலும் அளவே அவள் பாக்கியங்களை உதவி வருகின்றாள்.

பொதுவாய் விலகி நிற்கும் அரிய திருவைத் தனி உரிமை யாக்கி மனிதனை மகிமைப் படுத்தி யாண்டும் என்றும் மேன்மை யாக்கி வருதலால் ஊக்கம் உள்ளத் திரு என வந்தது.

தைரிய லட்சுமி என மேலோர் இதனை வழங்கி வருதலால் இதன் நிலைமையும் தலைமையும் நேரே அறியலாகும்.

எள் அத்தனை ஊக்கத்தால் வெள்ளத்தனைய திரு வரும் என்றது அதன் வியத்தகு தன்மையை விளக்கி நின்றது. அணு அளவு ஊக்கம் மலை அனைய செல்வத்தை விளைத்தருள்கின்றது.

அளவிடலரிய ஆற்றல்கள் மனிதனிடம் மருவி யுள்ளன. அவ்வுண்மையை உணர்ந்து போற்றிய அளவே அவன் உயர்ந்து விளங்குகின்றான். ஊக்கம் பேணி ஆக்கம் காணுக.

---

277\. என்று முயற்சி இகந்து தணிந்தாயோ
அன்றே இகழ்ச்சி அடைந்தாயால்—நின்றுபின்
வாழ்ந்தாலும் செத்த வகையே வலியிழந்து
வீழ்ந்தாய் பழியுள் விரைந்து. (எ)

இ-ள்

முயற்சியை நீ எப்பொழுது கைவிட்டாயோ அப்பொழுதே இகழ்ச்சியை அடைந்தாய்; அதன் பின் உயிர் வாழ்ந்தாலும் இறந்து போன படியே இழிந்த பழியுள் வீழ்ந்தவனாகின்றாய்.

மனிதனது உயர்ச்சி உள்ளத்தில் உள்ளது; உள்ளம் ஊக்கி முயன்ற அளவே அவன் உயர்ந்து திகழ்கின்றான். முயலாது சோம்பி யிருந்தால் உயர்வு குன்றி ஒளி இழக்கின்றான்.

இகத்தல்=விட்டு நீங்குதல். இகந்து தணிதல் என்றது தொழிலைக் கைவிட்டு மனம் மழுங்கி மடிந்திருத்தலை.

தன் கடமையைக் கவனியாதவனை மடமை வந்து கவிந்து கொள்ளுகின்றது; கொள்ளவே அவன் உள்ளம் ஒளி மழுங்கி இழிவுறுகின்றது; அதனால் உயர்வழிந்து பழி யடைகின்றான்.

உரிய கருமம் இனிய தருமம் ஆதலால் அதனை மருவிய போது மனிதனிடம் பெருமையும்இன்பமும் பெருகிஎழுகின்றன.

ஒரு எந்திரம் இயங்கும் போதுதான் அதன் வலியும் வனப்பும் பயனும் வியனாய் விளங்குகின்றன; நின்றுவிடின் அவை யாவும் குன்றி மறைகின்றன.

மனிதன் மூண்டு முயன்றால் ஆண்டகைமையும் ஆற்றலும் நீண்டு நிலவுகின்றன; ஒன்றும் செய்யாமல் உளம் மடிந்திருந்தால் உறுதி நலங்கள் எல்லாம் வறிதே குன்றி விடுகின்றன.

செல்வம் உடையனாயினும் சோம்பேறியாயின் புல்லிய இழிவுகள் புகுந்து அவனை அல்லலில் ஆழ்த்தும். அவன் வாழ்க்கை வெளியே வளமாய்த் தோன்றினும் உள்ளே இளிவுகள் மலிந்து இடர்கள் ஊன்றி நிற்கும்.

"There is an idle class weak, wicked, and miserable among both rich and poor." (Ruskin)

" வறியனாயினும் செல்வனாயினும் மடி மண்டியிருப்பின் அவனிடம் இழிவு கொடுமை சிறுமைகள் குடி கொண்டிருக்கும்" என ரஸ்கின் என்பவர் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

என்று முயற்சி இகந்தாய் அன்றே இகழ்ச்சி அடைந்தாய்

என்றது மடியின் குடிகேடு கடிது தெரிய வந்தது.

உழைப்பில் உறுதி நலங்கள் உள; இளைப்பில் யாதொரு நலனும் இலை என்றதனால் தொழிலின் அளவே மனிதனது ஒளியும் வலியும் என்பது உணரலாகும்.

"Power ceases in the instant of repose." (Emerson)

" முயற்சியை ஒருவன் நிறுத்தியவுடனே சத்தி அவன் கையை விட்டு விலகி விடுகின்றது" என்னும் இது ஈண்டு எண்ணத்தக்கது.

நாளும் உனது நிலைமைகளை நினை; வினை செயல் வகைகளை விழைந்து செய்; மன வுறுதியுடன் மதி நலம் பேணுக.

---

278. தேக முயற்சி மனமுயற்சி செய்யபுத்தி
யோக முயற்சிஎன உள்ளனகாண்—வாகையுற
ஒன்றினொன்று மேலா யுயர்ந்து பெரும்பலனை
நன்று பயக்கும் நயந்து. (அ)

இ-ள்

தேகம் மனம் புத்தி ஆத்துமா என்னும் நான்கு வகை நிலைகளில் முயற்சிகள் உள்ளன; ஒன்றைவிட ஒன்று உயர் பயனுடையதாய் முறையே அவை தலை சிறந்து நிற்கின்றன என்றவாறு.

இது, செயல் வகைகளின் நிலைமைகளை உணர்த்துகின்றது.

மக்கள் எல்லாரும் பாடு படுகின்றனர்; அப் பாடுகள் பல வகையினவாய் விரிந்து வெளியே தொழில்கள் என வருகின்றன.

அவர் அவர் நிலைமைக்குத் தக்கபடியே உழைப்பும் பிழைப்பும் மனிதரிடம்தழைத்து நிற்கின்றன. அவை பலவாறு பல நிலைகளில் பரவியிருப்பினும் சில வகையுள் அடக்கிக் கொள்ளலாம்.

1. தேக முயற்சி.
2. மன முயற்சி.
3. அறிவு முயற்சி.
4. ஆன்ம முயற்சி.

என இங்ஙனம் நான்காகக் குறித்தது அவற்றின் பாங்கும் பயனும் தெரிய. கரும நிலைகள் கருதி உணர வுரியன.

தேக முயற்சி ஆவது உணர்வு நலம் புணராமல் உடலளவில் உழைப்பது. மாடுகள் போல் பாடுபடுவதால் இது மாட்டுப் பாடு எனப்படும். அறிவு கலவாமையால் பரிபவம் அதிகமாயது.

மன முயற்சி ஆவது கொஞ்சம் சிந்தனையோடு செய்யுந் தொழில். நெசவு வாணிகம் முதலியன இதனுள் அடங்கும்.

அறிவு முயற்சி என்பது கலையறிவோடு கலந்து புரிவது. மந்திராலோசனை, நியாயவாதம், நீதி தெளிதல், ஓவியம்புனைதல், காவியம்வரைதல் முதலியன இதில் மருவி வருவன.

ஆன்ம முயற்சி என்பது உலக நிலைகளை மறந்து சமாதி நிலையில் அமர்ந்து தன்னை அறிதல். தேகம், மனம் முதலியன யாவும் கடந்து பரமான்மாவுடன் சீவான்மா ஒன்றி நிற்கும் நிலையது ஆதலால் இது யோக முயற்சி என வந்தது.

குறித்த நான்கும் ஒன்றை விட ஒன்று மிகவும் உயர்ந்தது.

ஒரு நாள் முழுவதும் உழைக்கும் தேக முயற்சிக்கு ஒரு பொன் கூலி ஆனால், அதே அளவுள்ள மனமுயற்சிக்குப் பத்துப் பொன்; அறிவு முயற்சிக்கு நூறு பொன்; ஆன்ம முயற்சிக்கு ஆயிரம் பொன் ஆம். முயற்சியின் வகை அளவே உயர்ச்சியும் பயனும் உளவாகின்றன. எந்த எந்த நிலையில் நின்று முயல்கின்றானோ அந்த அந்த வகையிலேயே உலகிற்கு அவன் பயன் படுகின்றான். இனவுரிமைகளைத் தழுவிச் சமுதாயங்கள் இயங்குகின்றன,

உடல் உழைப்பால் விளைகின்றன உடல்களை வளர்க்க உதவுகின்றன. அதற்கு மேலே யுள்ள அறிவின் பசிக்கும் சுவைக்கும், அவை உதவாது போகின்றன.

கலை ஞானிகள் செய்கின்ற சிறந்த நூல்களே அறிவிற்கு உயர்ந்த இன்பங்களை உதவி யருள்கின்றன. உத்தமமான புத்தி தத்துவத்தில் விளைந்து வருவன ஆதலால் உரிய புத்திகளுக்கெல்லாம் புதிய போகங்களாய் அவை பொங்கி நிற்கின்றன.

புலமை நலம் கனிந்த தலைமையான அந்த அறிவின் விளைவு இல்லை ஆனுல் இவ்வுலகம் களையடர்ந்த காடுபோல் பொலிவிழந்து போம்.

"There must be work done by the brains, or the life we get would not be worth having." (Ruskin)

"அறிவாளிகள் அறிவால் வேலை செய்ய வேண்டும்; இல்லையாயின் நமது உயிர் வாழ்வு தகுதியாய் இராது" என்னும் இவ்வுறுதி மொழி ஊன்றி உணரத் தக்கது.

கம்பனுடைய கலை அறிவு அரிய பல பண்பாடுகளை விளைத்து உணர்வுக்கு இனிய உணவாய் உலகம் நலமுறச் செய்துள்ளது.

மின்சார ஒளியும், வான் ஒலியும் வெளிவரச் செய்த அந்த மனித அறிவு எவ்வளவு மதிப்புடையது? உடல் உழைப்பிற்கும் புத்தி வேலைக்கும் உள்ள வித்தியாசம் எத்துணையது? உய்த்துணர்க. இந்தப் புத்தி தத்துவத்தையும் கடந்து அப்பாலுள்ள ஆன்மக் காட்சி அதி மேன்மையானது.

சித்தம் ஒடுங்கி மெய்த் தவ நிலையமாய் மேவி நின்ற போது அவ்வுத்தம இன்பம் உதயமாகின்றது.

"அலை இலாத சாகரம் போல் அனிலம் சேரா விளக்கது போல்
அருங்கல் இரும்பொன் சமமாகி ஆன தராசின் நுனியது போல்
நிலை ஒன்றியநற் சமாதியுற்று நின்தாட் கமலத்து எழும்பிரச
நிறைவாரிதியில் புகுந்ததனில் நேசித்து அடியேன் இருப்பேனோ!
விலையில்மகுடத் திருமுடியாய்! மிளிர் குண்டலங்கள் செறிகாதா!
வியன்கேயூரத் திருத்தோளா! விஞ்சும் சதங்கை சூழ்தாளா!
புலையும் கொலையும் களவும் இலாப் புனிதத்தவத்தோர் தொழுதேத்தும்
புராரி குமரா! உமை சிறுவா! போரூர் முருகப் பெருமானே!"

(திருப்போரூர்ச் சந்நிதி முறை)

யோக முயற்சியின் நிலையை ஓரளவு இதனால் உணரலாகும்.

எதை அடைந்தால் எல்லாம் அடைந்ததாமோ அந்த முடிவான இன்பத்தின் தனி நிலயம் ஆதலால் இது முடிவில் வந்தது.

அரிய வேலைகளைச் செய்யவும், பெரிய இன்பங்களை அடையவும் மனிதன் தகுதியுடையவன்; தனது உரிமையை உணர்ந்து ஊக்கி முயன்று அவன் உய்தியுற வேண்டும்.

---

279. உள்ளம் படியா துடலளவில் நீமுயன்றால்
பள்ளம் படியும் பயனுமே—உள்ளந்தான்
கூர்ந்து முயலின் குலநலங்கள் கோடியாய்
ஆர்ந்து வருமே அடர்ந்து. (கூ)

இ-ள்

உணர்ச்சியின்றி உடலளவில் செய்யும் முயற்சிகளில் உயர்ந்த பலன்கள் உளவாகா; நல்ல உணர்வுடன் செய்யின் அரிய பெரிய நலங்கள் விரைந்து தொடர்ந்து நிறைந்து வரும் என்பதாம்.

உள்ளம் படிதல் ஆவது செய்யும் காரியங்களில் தன் கருத்தை ஊன்றிக் கவனித்தல். கவனமின்றிச் செய்யின் அவ் வுழைப்பு பிழைபாடுடையதாய் இழிவே அடையும்.

கருதிச் செய்யும் கருமம் குறிதவறாமல் எய்யும் இராம பாணம் போல் வெற்றி நலங்களை விளைத்தருளும்; கருதாமல் புரிவது விருதாவாய் விடும்.

செயலில் உள்ளம் படியாவிடின் பயனில் பள்ளம் படியும் என்றது வினையின் நிலைமையை உணர்ந்து கொள்ள வந்தது.

பள்ளம் = குறை, தாழ்வு.

தாழ்வு நேராமல் ஓர்ந்து செய்வது வாழ்வாகின்றது; அல்லது வீழ்வாய் விளிதலால் வினை நிலையை விழைந்து கொள்ளுக.

உடல் அளவில் உழைப்பது மாட்டுப் பாடு ஆகின்றது; ஆகவே அதன் பயனும் இழிந்த நிலையில் கழிந்து படுகின்றது.

எதையும் கருத்துடன் கவனித்துச் செய்தலே யாண்டும் நலமாம்; வினைகளைத் திருத்தமாகச் செய்யும் பொழுது பலன்கள் விருத்தியடைந்து வீரியமாய் விளைந்து வருகின்றன.

"கூர்ந்து முயலின் நலங்கள் ஆர்ந்து வரும்" என்றது திருந்திய செயல்களால் விளைந்து வரும் பயன்களை விளக்கியது. கூர்மை வினைகளுக்குச் சீர்மை ஆகின்றது. அந் நீர்மை குன்றாமல் நினைந்து செய்க. ஆர்தல் = நிறைதல். அடர்தல் = இடையறாது தொடர்ந்து வருதல்.

உள்ளம் ஆனது உயிருக்கு ஒளி நிறைந்த விழியாய் உறைந்துள்ளது. அந்த அருமைக் கண்ணால் உரிமையுடன் நோக்கிக் கருமங்களைச் செய்க; அங்ஙனம் செய்யின் பெருமைகள் யாவும் பெருகி வரும்; அதனால் இருமையும் இன்பமாம்.

---

280. ஆன்ம நிலையில் அணுவணுகி ஞானுமவன்
மேன்மை விசும்பின் விரியுமே—நோன்மையுறு
தேவரும் போற்றச் சிறந்து திகழுவான்
மேவரும்சீர் மேவும் விரைந்து. (ம)

இ-ள்

ஆன்ம ஞான நிலையில் அணு அளவு தோயினும் மேன்மையான நலங்கள் மிகவும் பெருகித் தேவரும் புகழ்ந்து கொண்டாடத்தக்க உயர்ந்த மகிமைகள் உளவாம் என்றவாறு.

உலகத்தையும், பலவகையாக விரிந்து பரந்துள்ள சீவ கோடிகளையும், கல் மரம் முதலிய பொருள்களையும் மனிதன் பார்க்கின்றான். பார்த்தவைகளை யெல்லாம் நினைந்து சிந்தித்து உணர்ந்து கொள்கின்றான். இங்ஙனம் ஓர்ந்து உணர்கின்ற தான் யார்? தன் நிலைமை என்ன? என்பதை அவன் கூர்ந்து உணர்வது இல்லை.

கண் எதிரே காண்பவற்றை எண்ணி அறிவதும், தன்னை யாதும் எண்ணாதிருப்பதும் மாயா விநோதங்களாயுள்ளன. பொய்யான உலகத் தோற்றத்தை மறந்து, மெய்யான தன்னை உண்மையாக உணர்ந்தபோதுதான் அவன் மெய்யுணர்வன், தத்துவஞானி, எனச் சிறந்து விளங்குகின்றான். இந்த நிலைமையை அடைந்தவனே தலைமையான பிறவியின் பயனைப் பெற்றவன் ஆகின்றான்.

முன்னைப் பிறவியில் செய்த முதுதவம்
பின்னைப் பிறவியின் பேற்றால் அறியலாம்;
தன்னை அறிவது அறிவாம்; அஃதன்றிப்
பின்னை அறிவது பேயறிவாமே. (திருமந்திரம்)

பிறந்து பெற்ற அறிவால் பெறும்பயன்
நிறைந்த நீர்முகில் நீங்கிய வான்என
அறிந்து தம்மை அமல வியாபகம்
செறிந்து நல்ல தியானத்து இருத்தலே.

(தேவிகாலோத்தரம்)

சகம் என உடலம் என்னத் தருகர ணங்கள் என்ன
அகம் என இதமதென்ன அழிவில் போகங்கள் என்ன
வகைபட உயிர்கட்கு ஆதல் மாயை; அம்மாயை நீக்கிப்
புகலரு முத்தி சேரு மவர்கள் புண்ணியத்தினோரே.

(பரிபூரணசித்தி)

துன்பமயக் காகியபொய்த் துட்டபந்த நோயதனை
இன்பமெனக் கொண்டிங் கிழந்தேனே—அன்பிலெழுந்து
ஓவாத மெய்யுணர்வாய் உள்ளேநின் றுள்ளுருக்கும்
தாவா ஆனந்தம் தனை. (சிவானந்தமாலை)

ஆன்மா ஆனந்த மயமானது; அதனை அறிந்து அனுகாமல் இழந்து நிற்பது பெரிதும் பரிதாபமாம் என இவை உருகி உரைத்துள்ளமை அறிக. கவிகளின் பொருள்களைக் கருத்தூன்றிக்காண்க.

பல படத் தோன்றுகின்ற உலகக் காட்சிகளை யெல்லாம் ஒதுக்கித் தன்னை அறிகின்றவனே பெரியவன்; அவனே பெரும் பாக்கியவான்; பேரின்ப போகம் அவனுக்கே தனி உரிமை யாகின்றது.

இந்திரியங்களை அடக்கி, மனத்தை ஒடுக்கி, ஆத்துமாவுடன் சிறிது நேரம் தோய்ந்திருந்தாலும் அந்த மனிதன் திவ்விய மகிமை வாய்ந்து தேசுமிகுந்து சிறந்து விளங்குவான் ஆதலால் "அணு அணுகினும் மேன்மை விசும்பின் விரியும்" என வந்தது.

ஆனந்த மயமாய் விரிந்து எல்லாம் அறிந்து எங்கும் நிறைந்து பேரொளிப் பிழம்பாயுள்ள பரமான்மாவின் பின்னமே சீவான்மாவாய்ப் பிரிந்துள்ளமையால் நித்தியமான இன்ப நிலையமாய் இது நிலவியுள்ளது என்க. நிலைமை உணரின் தலைமை புணரும்.

தேக போகங்களை மறந்த போதுதான் ஆத்தும போகம் சுரந்து வருகின்றது. ஆன்ம நிலையில் ஒருகணம் தோயினும் ஓராண்டு வரையும் அவ் ஒளியும் மணமும் வெளி வீசுவனவாம்.

இத் தகைய அரிய தத்துவக் காட்சியைப் பெற்று மகிழ் பவனே பேரின்ப நலனை உற்றவ னுகின்றான்.

மேவரும்சீர் மேவும் என்றது ஆன்ம தரிசனம் செய்யும் மேன்மையாளனுக்கு உளவாம் அதிசய நலங்களை உணர்த்தியது. முடிமன்னரும் தன் அடி வணங்கும்படியான அற்புத நிலைமையை ஞானசீலன் எளிதே அடைந்து கொள்கின்றான்.

"தானை சூழ மண்ணுலகை ஆண்டழிபவர்
தங்கள் வாழ்வினி தென்றே
நீ நினைத்தியோ நெஞ்சமே எஞ்சுறு
நிமல ஞானம துற்றால்
வானும் வையமும் வந்துதாள் வணங்குமெய்
வாழ்வு காண்டலும் வீண்முன்
போன நாட்கிரங்கவும் வரும் எனநலோர்
புகன்றது ஓர்ந்திலை காணே." (வைராக்கிய சதகம்)

நெஞ்சை நோக்கி அறிவு கூறிய படியாய் வந்துள்ள இந்தப் பாசுரத்தின் பொருள் நன்கு சிந்திக்கத் தக்கது. தன்னையறிந்த தத்துவ ஞானியை மண்ணும் விண்ணும் வணங்கும் என்றமையால் அவன் மகிமை புலனும்.

உனது உண்மை நிலையை உணர்ந்து உய்க என்பது கருத்து.

---

## இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

உன்னையே உறுதியாய் நம்பி நில்.
எல்லாம் வல்ல இறைவன் பிள்ளை நீ.
உலகம் ஆளும் தலைமை உன்னிடம் உள்ளது.
அடிமை வாழ்வு மிகவும் இழிவு.
உயர்ந்த நிலைகளை நினைந்து வாழ்.
உள்ளத்தின் அளவே உயர்வு வரும்.
முயற்சியை விடின் இகழ்ச்சி அடையும்.
மன நிலையினும் மதி நலம் உயர்ந்தது.
அறிந்து முயலின் சிறந்த பயனும்.
ஆன்ம தரிசனம் மேன்மையெலாம் தரும்.

உ௮-வது தன்னம்பிக்கை முற்றிற்று.

---

# இருபத்தொன்பதாம் அதிகாரம்.

## ஆண்மை.

அஃதாவது ஆண்மகனது தகைமை. உறுதி, ஊக்கம், அறிவாற்றல் அஞ்சாமை முதலிய இயல்புகளில் சிறந்து செயல் புரிந்து வருவதே உயரிய ஆண்மையாம். தன் எண்ணங்களின் அளவே மனிதன் உயர்கின்றான் என்னும் உண்மையை உணர்த்து நின்றமையால் தன்னம்பிக்கையின் பின் இது வைக்கப்பட்டது.

281 ஆளும் தகைமை அமைந்துநீ வந்தமையால்
ஆளெனும் பேரை அடைந்துள்ளாய்—ஆள்எனவே
போந்தநீ நேர்ந்த புயவலியைப் பேணியிசை
ஏந்தி ஒழுகல் இனிது. (க)

இ. ள்.

எல்லாவற்றையும் அடக்கியாளும் தன்மையால் ஆள் என்னும் பேரை அடைந்து வந்துள்ள நீ உன் தோள்வலியை உயர்த்தி நீள் இசையை வளர்த்து நிலைத்து வாழ வேண்டும் என்றவாறு.

இது, ஆண்மையின் அமைதி கூறுகின்றது.

உலகில் காணப் படுகின்ற மிருகம் பறவை முதலிய பிராணிகள் எவற்றையும் அடக்கி ஆளும் தலைமை மனிதனிடம் மருவியுள்ளமையால் ஆள் என நேர்ந்தான். இதனால் அவனது பான்மையையும் மேன்மையையும் கூர்மையாக ஓர்ந்து சீர்மையைத் தேர்ந்து கொள்க.

முயற்சிக்கு ஆள்வினை என்று பெயர். மனிதன் கருதிச் செய்வது என்னும் காரணத்தான் அப்பேர் வந்தது.

ஊழ்வினையாளனாய் வந்துள்ள மானிடன் சூழ்வினையுடன் செய்ய வுரியது என்றமையால் ஆள்வினையின் கேளும் கிழமையும் அறியலாகும். காளும் அது நன்கு ஆற்ற அமைந்தது.

பொறியின்மை யார்க்கும் பழியன்று; அறிவறிந்து
ஆள்வினை இன்மை பழி. (குறள், 618)

காலம் அறிந்து, ஆங்கு இடம் அறிந்து, செய்வினையின்
மூலம் அறிந்து, விளைவறிந்து,—மேலும்தாம்
சூழ்வன சூழ்ந்து, துணைமை வலி தெரிந்து,
ஆள்வினை ஆளப்படும். (நீதி நெறி விளக்கம், 52)

ஆள்வினையின் அமைவையும், அதைச்செய்பவரது தகவையும் இவை உணர்த்தி யுள்ளன. பொறி=விதி, அதிட்டம்.

நமக்கு நல்ல விதி இல்லையே என்று நீ யாண்டும் அயர்ந்து நில்லாதே; மூண்டு முயல்; அதுவே ஆண்டகைமையாம் என உறுதி நலனை அறிவுறுத்தி யிருக்கும் அருமை ஊன்றி உணரத் தக்கது.

ஆண் மகனாய்த் தோன்றியுள்ள நீ உன் தோற்றத்திற்குத் தக்க ஏற்றத்தை ஆற்றி வர வேண்டும்; இல்லையேல் பிறந்தும் பிறவாதவனாய் இழிந்துபடுவாய். "கிடா ஆனால் ஒரு பாய்ச்சல்பாய வேண்டும்; ஆடு ஆயின் கொஞ்சம் பால் கறக்க வேண்டும்" என்னும் பழமொழியால் ஆண்மை பெண்மைகளைக் குறித்து நம் முன்னோர் எண்ணியிருக்கும் எண்ணம் இனிது தெளிவாம்.

புய வலியைச் சுட்டிக் காட்டியது செயலின் வியனிலை கருதி. புயம்=தோள். ஆள் நிலை தோள் வலியால் துலங்கி வருகின்றது.

"நாடிய பொருள்கை கூடும்; ஞானமும் புகழும் உண்டாம்;
வீடியல் வழியதாக்கும்; வேரியங் கமலை நோக்கும்;
நீடிய அரக்கர் சேனை நீறுபட் டழிய வாகை
சூடிய சிலை இராமன் தோள்வலி கூறுவோர்க்கே."

இராமனது பேராண்மையைத் தோள்மேல் ஏற்றி இதில் துதித்திருத்தல் அறிக. கருதியகருமங்களை உறுதிபெற முடித்துக் காரிய சித்தி பெறுவது எல்லாம் ஆண்மையால் அமைவன ஆதலால் அதுவே வெற்றி வீரங்களாய் விளங்கி நிற்கின்றது.

"வலியும் வென்றியும் வாய்மையும் ஆண்மை" (பிங்கலந்தை)

ஆண்மை என்னும் சொல் வலிமை வாய்மை வென்றிகளைக் குறித்து வரும் என்ற இதனால் அதன் உண்மையான மேன்மை நிலைகளை உணர்ந்து கொள்ளலாம். சத்திய சீலனாய், வெற்றி வீரனாய்த் தழைத்து நிற்பவனே உத்தம ஆண்மையில் உதித்தவனாகின்றான். அந் நீர்மைகளை மருவிச் சீர்மையுற வேண்டும்.

282. பெற்றவர்கள் உற்றவர்கள் பேணி அடைந்தவர்கள்
மற்றவர்கள் யாவருக்கும் மாண்பருளி—வெற்றி
நிலையில் நிலைத்து நெறிபுரிந்து வாழ்வோன்
தலைமகனே யாவன் தனி. (உ)

இ-ள்

பெற்றவர் உற்றவர் மற்றவர் எவரையும் மாண்புறுத்தி வினையாண்மைகளில் வெற்றி மிகப் புரிந்து கொற்றமுடன் வாழ்வோனே குலமகன் ஆவான் என்றவாறு.

பலரும் மேன்மை யுறும்படி பண்பாற்றி வருதலே தலைமையான ஆண்கடன் என இது அவனது நிலைமையை உணர்த்துகின்றது. நெறி=நீதி முறை.

பெற்றவர் என்றது தாய் தந்தையரை. உற்றவர்=உறவாய் அமைந்த சுற்றத்தார். அடைந்தவர் = ஆதரவை நாடி வந்து அடுத்தவர். மற்றவர்கள் என்றது பொதுமக்களை.

ஆண்மகனாய்ப் பிறந்த ஒருவன் தன் பிறப்பினைச் சிறப்புறச் செய்ய வேண்டிய வகைகளை வகுத்துக் கூறிய வாறிது.

மாண்பு அருளி என்றது தன்னைச் சேர்ந்தவர்கள் யாவரும் பெருமையுறும்படி உரிமை செய்தலை.

பெற்றவர்களை முதலில் குறித்தது தன்னை ஈன்றவர்கள் உள்ளம் இன்புறச் செய்வதே பிள்ளையாய்த் தோன்றிய தோன்றலின் ஆன்றகடமை ஆதலால் அந்நிலைமையும் தலைமையும் நினைந்து.

சிறந்த ஆண்மையும் சீர்மையும் நீர்மையும் நிறைந்த ஒருவனைக் கண்டபொழுது அவன்பிறந்த குடியை உலகம் உவந்து போற்றும்.

"இந்த உத்தமனைப் பத்து மாதம் தன் வயிற்றில் வைத்திருத்தற்கு அத் தாய் எத்தகைய தவம் செய்தாளோ?" என இராமனைக் கண்டபோது தண்டக வன வாசிகள் கொண்டாடினர்.

"தாய்புரி நோன்போ? தந்தைசெய் தவமோ?
தேசமும் மக்களும் செய்தநல் வினையோ?
இந்த அண்ணலை இங்ஙனம் கண்டது!"

என உதயணனைப் பார்த்தவர் கூறியது போன்ற வார்த்தைகளை உள வாக்குவோரே உத்தம புத்திரர் ஆகின்றார்.

கண்ட பண்டங்களைத் தின்று, பெண்டிரை மணந்து, பிள்ளைகளைப் பெற்று உல்லாசமாய்ப் பிலுக்கித் திரிவதினால் மட்டும் ஒருவன் பிறப்பு சிறப்பினை அடைந்து விடாது; ஆண்மையாளனாய் அரிய செயல்களை ஆற்றிப் பான்மை உயர்ந்த போதுதான் அவன் மேன் மகனாகின்றான்.

"வெற்றி நிலையில் நிலைத்து" என்றது எவ்வழியும் உள்ளம் தளராமல் கருதியகருமங்களை உறுதிபெறச்செய்து ஊக்கி நிற்றலை.

நெறி புரிதலாவது தன் வழியைப் பின்பற்றிப் பிறரும் தொழில் புரிந்து உயர்ந்து வரும்படி ஒளி செய்தருளுதல்.

தனது அறிவாண்மைகளால் அரியன செய்து காட்டி உலகிற்கு முன் மாதிரியாய் உறுதி நலங்களை ஊட்டியருளுதலால் அவன் தலைமகன் என நின்றான்.

---

283. ஊராண்மை பூணும் உரிமையும் ஒன்னலர்முன்
பேராண்மை காணும் பெருமையும்—போராண்மை
வென்றி மருவும் விறலும் விழுமியராய்
ஒன்றி வருவார்க் குள. (௩)

இ-ள்

உயிர்களுக்கு இரங்கி உதவி புரிதலும், பகைவருக்கு அஞ்சாமல் நெஞ்சு உரம் காட்டலும், போரில் வீர வினை ஆற்றி வெற்றி பெறுதலும் ஆண்மை மிக்க மேன் மக்களுடைய பான்மைகளாம் என்றவாறு.

ஊராண்மை=உபகாரம். உயிர்களுக்கு இரங்கி உதவி புரியும் நீர்மை ஊராண்மை எனவந்தது. அருள் ஊர்ந்து ஆதரவு புரிவது என்னும் பொருள் பொதிந்துள்ளமையான் இப் பெயர் நயம் உயர் பயனுடையது.

பேராண்மை ஆவது யாண்டும் தளராது நிற்கும் தறுகண்மை.

போராண்மை=போரில் ஏறி வீர வினை ஆற்றும் விறன்மை.

பிறர்க்கு உதவியாய் இதம் புரியும் தன்மையே ஆண்மையின் தலைமையான கடமை ஆதலால் அந் நிலைமை தெரிய அது முதலில் நின்றது. சீவ கோடிகளுக்கு ஆதரவு செய்பவன் தேவர் நேசனாய்த் தெய்வீக நிலையில் சேர்ந்து திகழ்கின்றான்.

உபகரித்தற்கு உரியபொருள் முயற்சியால் உண்டாகின்றது. அம் முயற்சி ஆண்மையால் அமைகின்றது. ஆகவே ஆளாண்மை தாளாண்மை வேளாண்மை என இம் மூன்றிற்கும் உள்ள உறவுரிமைகளை உணரலாகும்.

தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும். (குறள், 614)

இதில் வந்துள்ள ஆண்மை வகைகளை ஆய்ந்து உணர்க. தாளாண்மை=முயற்சி. வேளாண்மை=உபகாரம். உபகாரியே உயர்ந்த ஆண்மையாளன்; அஃது இல்லாதவன் இழிந்த பேடியே.

வேளாண்மையாளன் வாளாண்மையாளனினும் முதன்மை யானவன் என்பதை இதன் கண்ணும் உணர்ந்து கொள்கின்றோம்.

எளியரிடம் இவ்வாறு இதமுடையனாயினும் பகைவர்க்கு அச்சத்தைவிளைத்து உச்சநிலையில் உறுதிகொண்டு நிற்கவேண்டும்.

அடுத்தவரை ஆதரி; கடுத்தவரைக் களைந்து எறி.

"நட்டவர் குடி உயர்க்குவை;
செற்றவர் அரசு பெயர்க்குவை." (மதுரைக்காஞ்சி)

என நெடுஞ்செழியன் என்னும் பாண்டிய மன்னனை மாங்குடி மருதனார் இங்ஙனம் பாராட்டியிருக்கிறார்.

"மலைந்தோர் தேஎம் மன்றம் பாழ்பட
நயந்தோர் தேஎம் நன்பொன் பூப்ப." (பெரும்பாண்)

இளந்திரையன் இருந்துள்ளதும் ஈண்டு உளம் கொள்ள வுரியது.

"ஞாயிற் றன்ன வெந்திறல் ஆண்மையும்
திங்கள் அன்ன தண்பெருஞ் சாயலும்
வானத் தன்ன வண்மையும் மூன்றும்
உடையை ஆகி இல்லோர் கையற
நீ நீடு வாழிய நெடுந்தகை" (புறம், 55)

பகைவரைக் காய்தலில் சூரியன், பரிந்து அருளுதலில் சந்திரன், இரங்கி ஈதலில் கார்மேகம் என நன்மாறன் பேரிசை பெற்றிருக்கின்றான். நம் முன்னோருடைய ஆண்மைத் திறங்களை எண்ணுந்தோறும் உணர்ச்சியும் மகிழ்ச்சியும் நமக்கு உளவாகின்றன. போரில் நேர்மையாகப் பொருது வெற்றி பெறுதல் பெரிய கீர்த்தியாம். ஒருவனை வீரன்எனின் அவன்உள்ளம் பூரிக்கின்றான்.

கொடையும் வீரமும் வென்றியும் ஆண்மையின் சிறந்த அடையாளங்கள் என இங்ஙனம் வரைந்து காட்டியது அவற்றை இயன்ற அளவு மனிதர் அடைந்து கொள்ளவேண்டும் என்று கருதி.

விழுமியர் ஆய் ஒன்றி வருவார் என்றது சிறந்த பெரியராய்ப் பிறந்து வருவாரை. அத் தகைய மேலோரிடமே இந்த உத்தம நீர்மைகள் உரிமையாய் அமைந்திருக்கும் என்றமையால் இவற்றின் அருமையும் பெருமையும் அறியலாகும்.

எவர்க்கும் உபகாரியாய் இரு; எதிரிக்கு இடங் கொடாதே; கருமவீரனாய்க் கதித்து வாழ்; யாண்டும் வெற்றியாளனாய் விளங்கி நில் என உளங் கனிந்து உரிமையுடன் வேண்டிய படியிது.

---

284. வெம்பிக் கொதிக்கும் வெயில்எலாம் மேல்தாங்கி
நம்பியடி சார்ந்தார்க்கு நன்னிழலைப்—பம்பவே
தந்துதவும் நன்மரம்போல் தன்தமரை ஆண்மகன்
முந்திப் புரப்பன் முதல். (௪)

இ-ள்

கொதித்துத் தகிக்கும் வெயிலை எல்லாம் தன் தலையில் தாங்கி வைத்துத் தன்னை அடுத்து நிற்பவர்க்குக் குளிர் நிழலை உதவி யருளும் பழுமரம் போல நேர்கின்ற அல்லல்களைத் தானே பொறுத்துக் கொண்டு தன் குடும்பத்தை ஆண்மையாளன் மேன்மையாகப் பாதுகாத்தருளுவன் என்பதாம்.

இது உரியவரை ஆதரிப்பதே பெரிய ஆண்மை என்கின்றது.

நம்பி அடிசார்ந்தார் என்றது மனைவி மக்கள் ஒக்கல் முதலிய குடும்பத்தாரை. குளிர் நிழலைத் தருகின்ற ஆலமரமாகக் குடும்பத் தலைவனைக் குறித்தது அவனது நிலைமையும் நீர்மையும் கருதி.

கொதிக்கின்ற சூரிய வெப்பத்தைத் தன் மேல் ஏற்றுக் கொண்டு, தன் கீழ் உள்ளவர்களுக்கு இனிய நிழலைத் தருகின்ற தரு அத் தன்மையில் ஆள்கின்ற நன்மையாளனுக்கு உவமையாய் வந்தது. கொதிக்கும் வெயில் வாழ்க்கையில் கதிக்கும் துயர்களைச் சுட்டியது. எல்லாம் என்றது அந்த அல்லல்களின் எல்லை தெரிய.

“இன்பு ஓர் அணு; இடர் அதற்கு மாமலை” என மனித வாழ்வு மருவியுள்ளமையான் துன்பத் தொகுதிகள் முன்புற

வந்தன. உறுபொருள் ஈட்டல், வருபிழை ஓட்டல் முதலிய முயற்சித் துன்பங்களை யெல்லாம் தான் ஏற்றுக் கொண்டு தன் குடும்பத்தார் எவ்வழியும் இன்பம் உறும்படி பாதுகாத்து வருகின்ற அன்பும் ஆண்மையும் குடித் தலைவனுக்குப் பண்புகளாய் அமைந்துள்ளன.

"இடும்பைக்கே கொள்கலம் கொல்லோ குடும்பத்தைக்
குற்றம் மறைப்பான் உடம்பு." (குறள், 1029)

குடும்பம் தாங்கும் ஆண்மையாளன் இடும்பைக்கே இடமாயுள்ளானே! என்று தேவர் இதில் இரங்கியுள்ளமையான் அவனது நிலைமை புலனும். குடும்ப பாரம் என வழங்கும் தொடர்மொழியாலும் அதனைச் சுமந்து நிற்பவனது அமைதி தெளிவாம்.

நெடும்பல் மால்வரை தூர்த்து நெருக்கவும்
துடும்பல் வேலை துளங்கியது இல்லையால்
இடும்பை எத்தனையும் படுத்து எய்தினும்
குடும்பம் தாங்கும் குடிப்பிறந் தாரினே.

(இராமாயணம், சேதுபந்தனம் 53)

அணைகட்டுவதற்காக நெடிய பல மலைகளைக் கொண்டு வந்து வானரங்கள் தொடர்ந்து வீசியும் கடல் யாதும் கலங்காமல் குடும்பம் தாங்கும் குடிப்பிறந்தாரைப் போல் இருந்தது எனக் குறித்திருக்கும் இதன் அழகைக் கூர்ந்து பார்க்க. வள்ளுவர் வாய்மொழியைக் கம்பர் அள்ளியெடுத்துக் கலையுலகை அலங்கரித்து வரும் காட்சி கழிபெருவகையாயுள்ளது.

பழுமரம் பறிக்கப் பறவைக் குலம்
தழுவி நின்று ஒருவன் தனி தாங்குவான்
விழுதலும் புகல் வேறிடம் இன்மையால்
அழுதரற்றும் கிளைஎன ஆனவால். (இராமா சேது, 55)

ஆலமரத்தை இழந்த பறவைகள் குடித் தலைவனை இழந்த கிளைகள்போல் அழுது அரற்றின என்னும் இதுவும் ஈண்டு எண்ணத் தக்கது. குடும்பத்தை ஆதரித்து வருவது எத்துணை ஆண்மை என்பதை இவற்றால் உய்த்துணர்ந்து கொள்ளலாம்.

உறுதியாளனாய் உதவி புரிக என்பது கருத்து.

285. துள்ளித் துயர்கள் தொடர்ந்து நெருங்கினும்
உள்ளம் கலங்கி உளையற்க—உள்ளிநின்
ஆண்மை உலகம் அறிய அரண்செய்து
மாண்மை புரிக மகிழ்ந்து. (ரு)

இ-ள்

துன்பங்கள் பல தொடர்ந்து அடர்ந்தாலும் நெஞ்சம் கலங்கி நிலை குலையாதே; உனது ஆண்மைத் திறத்தை உலகம் உணர்ந்து புகழும்படி உயர் நலங்களை உறுதியாய் உவந்து செய்க என்பதாம்.

மனிதன் இன்பத்தையே எதிர் நோக்கி நிற்கும் இயல்பினன் ஆதலால் துன்பங்கள் நேர்ந்த போது அஞ்ச நேர்கின்றான். அங்ஙனம் அஞ்சலாகாது என இது அறிவுறுத்துகின்றது.

அல்லல்களோடு போராடும் பொழுதுதான் மனிதனுடைய உள்ளம் உரம் பெறுகின்றது. உபாயம் விளைகின்றது; உறுதி வளர்கின்றது. துன்பப் பயிற்சி இன்ப வளர்ச்சிக்கு ஏதுவாகின்றது.

உள்ளம் கலங்கலும், உளைதலும் அச்சத்தின் அடையாளங்கள்; அந்தக் கோழைத்தனம் மனிதனை ஏழையாக்கி இழிவு படுத்துகின்றது; அழிவு நிலையமான அதனை ஒழிய விடுக.

இடர்கள் கடுமையாக எதிர்ந்தால் மனங் கலங்காமல் பொறுத்துக் கொள்க; அப் பொறுமையாகிய பெரிய ஒளி முன் கரிய துயர இருள் தானக ஒழிந்து போம்.

"இடுக்கண் வருங்கால் நகுக; அதனை
அடுத்தூர்வது அஃது ஒப்பது இல்." (குறள், 621)

வருத்தங்கள் நேர்ந்தால் சிரித்துக் கொள் ; அவற்றை அது எரித்து விடும் என உணர்த்தியிருக்கும் இதன் உட் கருத்தை உய்த்துணர்ந்து உண்மை தெளிக. அழவேண்டிய இடத்தில் நகுக என வழி தூண்டி அருளினர்.

இடுக்கண்வந் துற்ற காலை எரிகின்ற விளக்குப் போல
நடுக்கம்ஒன் றானுமின்றி நகுக; தாம் நக்க போழ்தவ்
இடுக்கணை அரியும் எஃகாம்; இருந்தழுது யாவர் உய்ந்தார்?
வடுப்படுத் தென்னை ஆண்மை வருபவந் துறுங்கள் அன்றே.

(சீவக சிந்தாமணி)

அஞ்சினம் எனினும் மெய்யே அடைபவந்து அடையும்; ஆனால்
அஞ்சுத லதனில் என்னே பயன் நமக்கு? அதுவு மன்றி
அஞ்சுதல் துன்பம் தானே அல்லதும் அதனிற் சூழ்ந்த
நஞ்சன வினைகள் நம்மை நாடொறும் நலியும் என்றான்.
(யசோதர காவியம்)

மறிப மறியும்; மலர்ப மலரும்;
பெறுப பெறும்; பெற்றிழப்ப இழக்கும்;
அறிவது அறிவார் அழுங்கார்; உவவார்;
உறுவது உறும் என்று உரைப்பது நன்று. (குண்டலகேசி)

இவை ஈண்டு எண்ணத் தக்கன. வருவன வந்தே தீரும்; அழுதால் போய்விடாது; ஆண்மையுடன் அமர்ந்து நில்; அதுவே மேன்மையாம். நெருப்பு பொன்னை ஒளியாக்குதல் போல் துன்பம் மனிதனது திண்மையை வெளியாக்குகின்றது. இன்பத்தில் தோன்றாத நன்மை துன்பத்தில் தோன்றுகின்றது.

"Misery is a greater teacher than happiness." "சுகத்தைக் காட்டிலும் துக்கம்தான் நமது வாழ்க்கையில் நல்ல ஒரு ஞான போதகன்" என விவேகானந்தர் இவ்வாறு கூறியுள்ளார்.

அல்லலைக் கண்டு உள்ளம் தளராதே; நல்ல தீரனாய் நில்.

---

2867. வானுடைந்து வீழ்ந்தாலும் மண்ணிடிந்து தாழ்ந்தாலும்
ஊனடைந்த சீவன் ஒழிந்தாலும்—தானடைந்த
மான முடையார் மரபு நிலைகுன்றி
ஈனம் அடையார் இழிந்து. (சு)

இ-ள்

வானம் உடைந்து விழுந்தாலும், மண் இடிந்து பேர்ந்தாலும், உயிர் ஒழிய நேர்ந்தாலும் மானமுடைய ஆண்மையாளர் மரபு நிலை திரிந்து இழிந்து ஈனமடைய நேரார் என்பதாம்.

தான் அடைந்த என்றது ஆன்ம வுரிமையாய் அமைந்துள்ள மேன்மையை. மதிப்பும் மரியாதையும் சுதந்திர வுணர்ச்சியும் நிரந்தரமாக நிலைத்துள்ள நீர்மை மானம் எனும் பேரால் மருவியுளது. மனிதனுக்கு அது தனி மகிமையானது.

மரபு நிலை = தலைமுறையாகத் தழுவி வந்த மேலோரது நெறி முறை. பான்மை அளவே மேன்மை மிளிரும்.

எவ்வளவு துன்பங்கள் நேர்ந்தாலும் எத்தனை சோதனைகள் எதிர்ந்தாலும் உத்தம சீலர்கள் தமது நிலைமை குலையாமல் தலைமையுடன் நிலைத்து நிற்பர் என்பதை இது உணர்த்துகின்றது.

வான் உடைதல், மண் இடிதல் என்றது எவரும் அஞ்சி நடுங்கும்படியான கொடிய நெடிய அபாய நிலைகளை உபாயமாக அறிவுறுத்த வந்தது. உலகம் பிரளயமாய் உலைந்து படினும் உயர்ந்தோர் தம் உள்ளம் பிறழார் என்னும் உறுதி நிலையை உறுதியாகத் தெளிவுறுத்த மூன்று இறுதி நிலைகள் தோன்றி நின்றன.

"ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்கு
ஆழி எனப்படு வார்." (குறள், 989)

உயர்ந்த பெருந்தகையாளர் நிலைமையை வரைந்து காட்டியிருக்கும் இது நினைந்து சிந்திக்கத் தக்கது. ஆழி=கடல்.

உலக சிருட்டிகள் தலை தடுமாறினும் உயர்ந்தோர் நிலை தடுமாறார் என்றமையால் அவரது உள்ளப் பான்மையும் உறுதி நிலையும் அறியலாகும்.

பரிசுத்தமான சித்தமுடையவர் பரம ஆன்ம நிலையைப் பற்றி நிற்றலால் அவர் எது நேர்ந்தாலும் எவ் வழியும் கலங்காமல் செவ்விய நீர்மையில் சிறந்து நிற்கின்றார்

"உலகு கலங்கினும் ஊழி திரியினும் உள் ஒருகால்
விலகுதல் இல்லா விதியது பெற்றநல் வித்தகர் காண்
அலகில் பெருங்குணத்து ஆரூர் அமர்ந்த அரனடிக்கீழ்
இலகு வெண்ணீறுதம் மேனிக்கு அணியும் இறைவர்களே"

என்னும் இத் திருமுறைப் பாசுரம் உரவோர் நிலைமையை உணர்த்தியுள்ளது.

மண்பா தலம்புக்கு மால்கடல் மூடிமற்று ஏழுலகும்
விண்பால் திசைகெட்டு இருசுடர் வீழினும் அஞ்சல் நெஞ்சே!
திண்பால் நமக்கு ஒன்று கண்டோம் திருப்பாதிரிப்புலியூர்க்
கண்பாவு நெற்றிக் கடவுட் சுடரான் கழலிணையே. (1)

வானம் துளங்கில் என்? மண் கம்பம் ஆகில் என்? மால்வரையும்
தானம் துளங்கித் தலைதடு மாறில் என்? தண்கடலும்
மீனம் படில்என்? விரிசுடர் வீழில்என்? வேலை நஞ்சு உண்டு
ஊனம் ஒன்றில்லா ஒருவனுக்கு ஆட்பட்ட உத்தமர்க்கே. (2)

(தேவாரம்)

இவை திருநாவுக்கரசு நாயனார் பாடியன. தம் நெஞ்சை நோக்கியும் உலகை நோக்கியும் கூறியுள்ள இவ் வுரைகளால் அவருடைய உள்ளத்திண்மையும் உத்தம பத்தியும் ஞான வைராக்கியங்களும் நன்கு புலனாகின்றன.

ஞான சீலரும் மான வீரரும் யாண்டும் நிலை குலையாமலும், நெறி பிறழாமலும் நின்று விளங்குகின்றார்.

ஈனநிலைகளில் யாதும் இழியாமல் எவ்வழியும் மானம்பேணி மதிப்புடன் வாழ வேண்டும்; அதுவே உயர்ந்த மனிதத் தன்மையாம். அத் தன்மை தழுவி நன்மை யுறுக என்பது கருத்து.

---

287. மானம் அழியவரின் மன்னுயிரை முன்னீக
தானம் எனினறிந்து தந்திடுக—வானம்
வருவதே யானாலும் வாங்கற்க என்றும்
தருவதே நன்றதையே சார். (எ)

இ-ள்

மானம் அழிய நேர்ந்தால் உயிரை ஒழிய விடுக; யாரேனும் தானம் என்று வந்தால் ஆனதை அறிந்து தருக; சிறந்த துறக்கமே ஆயினும் பிறரிடம் இரந்து வாங்காதே; என்றும் யார்க்கும் தருவதே நல்லது; அதனையே உரிமையாக உவந்து வாழ்க என்பதாம்.

இது, உத்தம நிலைமைகளை உணர்த்துகின்றது.

மானம் என்பது உயிரின் இயல்பான உயர்வு. மணிக்கு ஒளி, மலர்க்கு மணம், தேனுக்கு இனிமை, பாலுக்குச் சுவை, வாளுக்குக் கூர்மைபோல் மனிதனுக்கு மானம் சீர்மையான நீர்மையாய்த் தேசு மிகுந்துள்ளது

மன நிலை மழுங்காது நிற்றல் மானம் ஆகின்றது; அதனைச் சிறந்த நிலையில் உடையவன் உயர்ந்த மானிடனாய் ஒளி வீசி நிற்கின்றான். மனிதனுக்குத் தனி மகிமையாய் இனிது அமைந்துள்ளமையால் அது உயிரினும் அருமையாயது.

> கூனொடு செவிடே பங்கு குருடுபே ரூமை ஆனோர்
> ஊனம தடைந்த புன்மை யாக்கையோடு ஒழியும் அம்மா
> மானம தழிந்து தொல்லை வலியிழந்து உலகில் வைகும்
> ஏனையர் வசையின் மாற்றம் எழுமையும் அகல்வதுண்டோ?
> (கந்த புராணம்)

குருடு ஊமை செவிடு முதலிய வெளி ஊனங்கள் உடலோடு ஒழியும்; மானம் கெடின் அது உயிர் ஊனமாய் என்றும் அழியாத பழியாம் என இது அறிவுறுத்தியிருத்தலறிக. வெதிர்=செவிடு.

மானம் அழிந்து வாழ்தல் ஈனம் ஆதலால் அது "அழிய வரின் உயிர் ஈக" என வந்தது. இன்னுயிரினும் இனியதாக அதனைப் பேணுக என்றபடி.

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின். (குறள், 969)

"உயிரினும் மதிக்கற்பாலது; உள்ளப்பேர் உறையின் உள்ளது;
அயிறரும் பனிக்கும் திண்மை மானம்." (சூளாமணி)

"மானம் அழிந்தபின் வாழாமை முன் இனிதே" (இனியவைநாற்பது)

"ஊனமேயான ஊனிடையிருக்கும் உயிரினைத்துறந்தும் ஒண்பூணும்
மானமே புரப்பதவனிமேல் எவர்க்கும் வரிசையும் தோற்றமும் மரபும்.
(பாரதம்)

மானம் எவ்வளவு அருமைப் பொருள் என்பது இவற்றால் அறியலாகும். உயிர்க்கு உயிராய் அது ஒளி புரிகின்றது.

தானம் அறிந்து தந்திடுக என்றது நல்ல பாத்திரமாகப் பார்த்துத்தருதல் உத்தமம்ஆகலான் அதனைஉய்த்துணர வந்தது.

வானம் வருவதே ஆனாலும் வாங்கற்க என்றது விண்ணுலக போகமே யாயினும் தனது புண்ணியப் பயனால் பெற வேண்டுமே யன்றிப் பிறரிடம் இரவலாகக் கொள்ளலாகாது என்க. எதையும் எவரிடமும் வாங்காதே; என்றும் எவர்க்கும் நீ தருவதே நல்லது.

தானம் என்பது தருமம் கருதிப் பொருள் பூமிகளைத் தாரை வார்த்துத் தருவது; ஈகை ஆவது யாதொரு பலனையும் எதிர் பாராமல் எவ்வுயிர்க்கும் இரங்கி யருள்வது. இரண்டிற்கும் உள்ள வேறுபாட்டை ஊன்றி உணர்ந்து கொள்க.

மானம் பேணுக; தானம் தருக; இரவு ஒழிக; என்றும் ஈக.

---

288. வெள்ளமென அல்லல் மிடைந்தெழினும் மேலோர்கள்
உள்ளம் கலங்கி உறுதியறார்—தள்ளரிய
கன்மழையும் காற்றும் கடுகி யடித்தாலும்
பொன்மலைக் கென்னும் புகல். (அ)

இ-ள்

அல்லல்கள் பல அடர்ந்து வந்தாலும் மேலோர் உள்ளம்

கலங்கி உறுதி குலையார்; கல் மழையும் கடுங்காற்றும் கடுத்து அடித்தாலும் பொன் மலையை அவை என்ன செய்யும்? என்பதாம்.

இது, உள்ளம் கலங்காமையே உயர் ஆண்மை என்கின்றது.

வெள்ளம் என்றது அல்லலின் எல்லை தெரிய வந்தது. மிடைந்து எழுதல்=நெருங்கி எதிர்தல்.

அளவில்லாத துன்பங்கள் அடுத்து அடுத்துக் கடுத்து வந்தாலும் உயர்ந்தோர் உள நிலை கலங்கார் என்றதனால் அவரது உறுதி நிலையும் பொறுதி அமைவும் ஊக்கப் பாடும் உணரலாகும்.

காற்று என்றது பெரும் புயலான சூறுவளியை.

துன்பத் தாக்குதல்களின் கடுமையும் கொடுமையும் காணக் கல் மழையும் காற்றும் காட்சிக்கு வந்தன.

வானிலிருந்தும் மண்ணிலிருந்தும் மாறுபாடுகள் கிளர்ந்து ஊறுபாடுகள் வளர்ந்து உருத்து மூண்டாலும் உறுதி குலையாமல் எதிர்த்து நின்று தம் கருத்தை யாண்டும் கடைபோகச் செலுத்தி ஆண்டகைமையாளர் யாண்டும் நிலைத்து நிற்பர்.

"மழையும் காற்றும் அடித்தாலும் பொன் மலைக்கு என்னும்? என்றது உவமை வாசகமாய் நின்று உபமேயத்தை ஊன்றி உணரச் செய்து பொருளைத் தெளிவு படுத்தியது.

மேலோரைப் பொன்மலை என்றது தன்மையும் தகவும் கருதி.

தோற்றத்தாலும் ஏற்றத்தாலும் எவரும் போற்ற நிற்கும் அது, பிறப்பாலும் சிறப்பாலும் உயர்ந்து அறப்பால்கள் நிறைந்து அரிய பண்புகள் பல சுரந்து எவ்வழியும் நிலை குலையாமல் தலைமையோடு நிலவி நிற்கும் தகுதியாளர்க்கு உவமையாய் வந்தது.

மனிதன் என்றும் சத்தியமான நித்திய நிலையினன்; உலக வாழ்க்கையில் அவன் எதிரே தடையாய்த் தோன்றுகின்ற இடையூறுகள் எல்லாம் வெறுந் தோற்றங்களே ஆதலால் விரைந்து மறைந்து போகின்றன. போகவே கரும வீரனாய் உறுதி கொண்டு நின்றவன் உயர்ந்த மேன்மையை அடைந்து திகழ்கின்றான்.

காற்றும் மழையும் என்றும் நிலைத்து நில்லா; கடுத்து எழுந்தபடியே அடுத்து மறையும்; அதுபோல் கால பேதத்தால் நேர்கின்ற அல்லல்களும் தாமாகவே ஒல்லையில் ஒழிந்து போம்;

அவற்றை நேர்க்கி உள்ளம் கலங்காதே; உறுதியாய் நில்; அந் நிலை பலவகை நலங்களும் தந்து உன்னைத் தலைவன் ஆக்கி யருளும்.

நேருகின்ற துயர்களுக்கு அஞ்சாமல் மேருமலை போல் தீரனாய் மனிதன் நிலைத்து நிற்க வேண்டும் என்பது கருத்து.

---

289. ஊக்கி விரைந்தே உறுகரியைக் கோளரிமுன்
தாக்கி அருந்தும் தகைமைபோல்—மேக்குயர்ந்த
ஆக்கமே நாடித்தன் ஆண்மையுடன் நிற்கும்மேல்
காக்கை பிடிக்கும் கடை. (கூ)

இ-ள்.

வலிய மதயானைமேல் விரைந்து பாய்ந்து அதனையே சிங்கம் அருந்தி வருதல் போல் சிறந்த ஆண்மையாளர் உயர்ந்த ஆக்கத்தையே நோக்கி ஊக்கி நிற்பர்; அல்லாதவர் இழிந்ததையே விழைந்து கழிந்து படுவர் என்றவாறு.

இது உயர்ந்த குறிக்கோளுடன் வாழவேண்டும் என்கின்றது.

உறுகரி என்றது வலிய பெரிய மத யானையை.

கோளரி = சிங்க ஏறு. எந்த மிருகத்தையும் கொன்று தொலைக்க வல்லது என்னும் குறிப்பில் வந்தது. கோள் = வலி.

மான் முதலிய எளிய பிராணிகளை விரும்பாமல் வலிய யானைகளையே சிங்கம் ஆய்ந்து பாய்ந்து அருந்தும்; அதுபோல் இழிந்ததை நாடாமல் உயர்ந்த நலங்களையே நோக்கி ஆண்மையாளர் அடைந்து கொள்வர் ஆதலால் அது இவர்க்கு உவமையாய் வந்தது.

"மூலமுதல் துறந்த அன்றே மூரித்தாள் ஆளி யானைத்
தலைநிலம் புரள வெண்கோடு உண்டதே போன்று தன்கைச்
சிலையிடம் பிடித்த ஞான்றே தெவ்வரைச் செகுத்த நம்பி
நிலவுமிழ் குடையின் நீழல் துஞ்சுக வையம் என்பார்."

(சிந்தாமணி)

சிங்கத்தின் இயல்பை விளக்கிக்காட்டி அத் தலைமையான நிலைமையுடையவன் என சீவக மன்னனை இவ்வாறு குறித்துள்ளனர்.

பிறந்திடும் சிங்கக் குட்டி பிறக்குமுன் குதித்துத் துள்ளி
மறந்தலைக் கொண்டு நால்வாய் மண்டையைப் பிளக்கச்செல்லும்
சிறந்திடும் தீர வீரச் சேவகர் சுபாவம் இவ்வாறு
இறந்திடும் ஆயுள் மூப்போடு இளமையும் குறித்திடாரே.

(பத்திரகிரியம்)

வயதில் இளையராயினும் ஆண்மையாளர் உயரிய காரியங்களை முடித்தருளுவர்; யாண்டும் பங்கம் அடையாத சிங்க நிலையினர் என இங்ஙனம் அவரை நூல்கள் புகழ்ந்திருக்கின்றன.

மேல் ஆண்மையுடன் நிற்கும்; கடை காக்கை பிடிக்கும்.

என்றது மேலோர் கீழோர் என்னும் இருவர் நிலைகளையும் ஒரு முகமாயுணர்த்தியது. உயர்ந்த எண்ணங்கள் இன்றி இழிந்து கடைப் பட்டுள்ளவர் கடை என நின்றார்.

காக்கை பிடித்தல் என்றது வஞ்ச நெஞ்சராய்ப் பிறரை வீணே புகழ்ந்து இச்சகம் பேசி வயிறு வளர்க்கும் கொச்சை வாழ்க்கையைக் குறித்தது.

ஆண்மையாளர் மேன்மை எய்தி நிற்கின்றார்; அல்லாதவர் கீழ்மை யுறுகின்றார். கடையனாய் இழிந்து படாமல் தலைமையாளனாய் மனிதன் நிலவி நிற்க வேண்டும் என வேண்டிய படியிது.

நல்ல எண்ணங்களை யுடையவனிடம் எல்லா வலிமைகளும் தாமாகவே வந்து சேருகின்றன; சேரவே அவன் அருந்திறலாளனாய்ச் சிறந்து எங்கும் சிங்கம் எனப் பொங்கிய சீர்த்தியுடன் பொலிவு மிகுந்து திகழ்கின்றான்.

"The righteous are bold as a lion" (Bible)

"நீதிமான்கள் சிங்கம் போல் தைரிய சாலிகள்" என்னும் இது இங்கே அறிய வுரியது. நரி நாய்கள்போல் இழிந்து நில்லாமல் அரிய சிங்கம்போல் உயர்ந்து வருக என இது உணர்த்தியருளியது.

---

290. எண்ணம் தளராமல் எண்ணியன யாவுமே
திண்ணமுடன் எய்தும் திறலோனை—மண்ணவள் தான்
ஈன்ற குலமகனென் றெண்ணி உளமகிழ்வள்
ஆன்ற தலைவன் அவன். (ம)

இ-ள்

யாண்டும் நெஞ்சம் தளராமல் கருதியன எல்லாம் உறுதியுடன் பெறுகின்ற ஆண்மையாளனைப் பூமிதேவி தான் பெற்ற குலமகன் என்று உவந்து கொள்வள்; அவனே எவர்க்கும் சிறந்த தலைவன் என்றவாறு. திறல்=தைரியம்.

மனிதனது உயர்வும் தாழ்வும் அவனுடைய எண்ணங்களைப் பொறுத்துள்ளன. மன நிலைக்குத் தக்க அளவே மேலோனாகவும் கீழோனாகவும் அவன் மேவி இருக்கிறான்.

தன் கருத்தை உயர்ந்த குறிக்கோளில் செலுத்தி வருபவன் உன்னத நிலையை அடைந்து உலகம் போற்ற விளங்குகின்றான்.

இத்தகைய உயர்ச்சியும் புகழ்ச்சியும் உள்ளத் திண்மையால் உளவாகின்றன ஆதலால் அந்த மனத்திட்பத்தின் மகிமையை இது உணர்த்துகின்றது.

எண்ணம் தளராமல் என்றது கருதித் தொடங்கிய வினைகளில் இடர்கள் எதிர்ந்தால் அவற்றைக் கண்டு கலங்காமல் துணிந்து முயலுதலை. இங்ஙனம் அயராது முயல்பவன் உயர்வினை அடைந்து கருதிய பலன்கள் கைவரப் பெறுகின்றான்.

உள்ளம் தளராமல் ஊக்கி முயலும் உறுதியாளன் எல்லாச் செல்வங்களையும் எளிதின் எய்துதலால் அவன் அரிய வலியுடையனாய்ப் பெரிய மதிப்பை அடைகின்றான்.

அரியன செய்யும் ஆண்மை அதிசய வென்றியாய் வருகின்றது; வரவே அவன் துதி செய்யப் பெறுகின்றான். மனித வாழ்க்கையில் அப் பேறு அவனுக்குப் பேரின்பம் ஆகின்றது.

"The great pleasure in life is doing what people say you cannot do." (Bagehot)

"செய்ய முடியாத அருமையுடையது என்று உலகம் சொல்வதைச் செய்வதே ஒருவனுக்குப் பெரிய இன்பமாம்" என வால்டர் பேஜாட் என்பவர் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

செயலினாலேதான் ஒருவனது இயல்பும் உயர்வும் தெரிகின்றன.

எண்ணியதை எண்ணியபடியே எய்தும் திண்ணியனை மண்ணவள் மகிழ்வள் என்றது, கரும வீரனாய்ச் சிறந்து நிற்கும் அந்த ஆண்மையாளன் தான் பிறந்த நாட்டிற்கு உயர்ந்த மேன்மையை விளைத்தலால் அவனைத் தனது குலமகன் என நில மகள் உளம் உவந்து கொள்ளும் உரிமையை உணர்த்தியது.

பிறந்த குடிக்குப் பெருமையை விளைக்கும் பிள்ளையைப்

பெற்றவள் மகிழ்ந்து போற்றுதல் போல் வெற்றி வினையாளனை உற்ற நாடும் மற்றவரும் உவந்து கொண்டாடுகின்றனர்.

உயர்ந்தோர் எல்லாரும் அவனது உறவினை நயந்து உரிமை புரிந்து வருகின்றனர்.

> "விளைபதச் சீறிடம் நோக்கி வளைகதிர்
> வல்சி கொண்டளை மல்க வைக்கும்
> எலிமுயன் றனையர் ஆகி உள்ளதம்
> வளன்வலி யுறுக்கும் உளமி லாளரொடு
> இயைந்த கேண்மை இல்லா கியரோ
> கடுங்கட் கேழல் இடம்பட வீழ்ந்தென
> அன்றவன் உண்ணா தாகி வழிநாட்
> பெருமலை விடரகம் புலம்ப வேட்டெழுந்து
> இருங்களிற்று ஒருத்தல் நல்வலம் படுக்கும்
> புலிபசித் தன்ன மெலிவில் உள்ளத்து
> உரனுடை யாளர் கேண்மையொடு
> இயைந்த வைகல்உளவாகியரோ." (புறம், 190)

இது சோழன் நல்லுருத்திரன் என்னும் வீரன் கூறியது. சிறுதானியத்தை வளையுள் பதுக்கி வைக்கும் எலி போலும் அற்பர் உறவு அணுகாது ஒழிக; என்றும் தளரா ஊக்கத்துடன் பெரிய யானை வேட்டையாடும் புலிபோல் யாண்டும் அரிய வினைகளை மூண்டு முடிக்கும் ஆண்டகைமையாளர் கேண்மை எனக்கு நாளும் உளவாக என அவன் விழைந்து வேண்டியிருக்கும் நிலை நினைந்து சிந்திக்கத் தக்கது.

உள்ளம் தளராத உரனுடையாளரை யாவரும் உவந்து கொள்ளுகின்றார். நாட்டுக்கும் மனித சமுதாயத்திற்கும் அவர் ஓர் எடுத்துக் காட்டாய் இலங்கி நிற்கின்றார்.

உள்ளத் திண்மையும் உணர்வும் வாய்ந்த நல்ல ஆண்மை யாளரால் ஒரு தேயம் மேன்மை அடைதலால் அவர் உலகிற்குத் தலை மக்களாய் நிலவுகின்றார்.

> "நாடா கொன்றோ காடா கொன்றோ
> அவலா கொன்றோ மிசையா கொன்றோ
> எவ்வழி நல்லவர் ஆடவர்
> அவ்வழி நல்லை வாழிய நிலனே," (புறம்)

"ஓ நிலமே! நீ நாடு ஆயினும், காடு ஆயினும், பள்ளமாயிருந்தாலும், மேடாயிருந்தாலும் எங்கு நல்ல ஆண்மக்கள் உளரோ அங்கே நீ நல்லவளாயிருக்கின்றாய்" எனப் பூமிதேவியை நோக்கி ஔவையார் இவ்வாறு கூறியிருக்கிறார். அவல்=பள்ளம். மிசை =மேடு. நிலத்திற்கு மதிப்பெல்லாம் அதில் உள்ள ஆண்மையாளர்களைப் பொறுத்திருக்கின்றன என்பது கருத்து.

"That country is the fairest which is inhabited by the noblest minds." (Heroism)

"பெருந்தகையாளர் நிறைந்துள்ள நாடு சிறந்த அழகுடையதாய் உயர்ந்து விளங்குகின்றது" என்னும் இது ஈண்டு எண்ணத்தக்கது.

வீட்டுக்குத் தூண்கள் போல நாட்டுக்கு நல்ல ஆண்கள் உறுதி புரிந்துள்ளனர். ஆள் என வந்துள்ள நீ அப் பெயரியல்புக்குத் தக்கபடி உயர் நிலையில் ஓங்கி நில். உள்ளத்தின் அளவே உயர்வு ஆதலின் எண்ணங்களை உயர்த்துக; இடர்களுக்கு அஞ்சற்க; இத நலங்களை இயற்றுக; யாண்டும் உண்மையும் திண்மையும் உடையனாய் உயர் மேன்மை அடைக.

ஆன்ம ஒளியை அவியாது பேணுக
மேன்மை விளையும் மிகுந்து.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

ஆண்மை யுடையான் ஆளன் ஆகின்றான்.
உற்றவரைப் பேணுவதே உயர்ந்த ஆண்மையாம்.
பேராண்மை பேணி ஊராண்மை பூணுக.
துன்பம் பொறுத்து இன்பம் புரிக.
அல்லலை அஞ்சாமையே ஆண்மை ஆகும்.
ஆண்டகைமையாளர் யாண்டும் தளரார்.
எங்கும் மானமே ஏந்தி வாழ்வார்.
மேருமலை போல் வீறுடன் விளங்குவார்.
உயர்ந்த நோக்கமே ஊக்கி நிற்பார்.
திண்மை யாளரே சீர்மை ஆளுவார்.

உ௯-வது ஆண்மை முற்றிற்று.

# முப்பதாம் அதிகாரம்

## மேன்மை.

அஃதாவது மேலான தன்மை. உயர்ந்த எண்ணங்களையும் சிறந்த செயல்களையும் உடையவரே மேலோர் ஆகின்றனர். அந்த மேன்மையாளரது பான்மையையும் நோன்மையையும் நேரே கூறுகின்றமையால் ஆண்மையின் பின் இது வைக்கப் பட்டது.

291. வீரனென வள்ளலென மெய்யொழுக்கம் மேவிநின்ற
நீரனென நூல்பலவும் நேர்ந்துகற்றுச்—சாரமெலாம்
ஆய்ந்த புலவனென ஆனவரே மானவருள்
வாய்ந்தமைந்த வானவரா வார். (க)

இ-ள்

வீரன் வள்ளல் சீலன் கல்விமான் என்னும் இவரே மனிதருள் சிறந்த தேவராய் மருவி யுள்ளனர் என்றவாறு.

உலகத் தோற்றத்தில் மனித சமுதாயம் உயர்ந்து நிலவுகின்றது; அந்த மக்கட் பரப்புள் தலைமையான நிலைமைகளை இது வகுத்துக் கூறுகின்றது.

வீரம் என்பது அஞ்சாமை நேர்மை ஆண்மை ஆற்றல் முதலிய உயர் இயல்புகள் ஒருங்கு மருவி வியனிலையில் விளங்கி நிற்பது. உலகத்தைப் பரிபாலித்து நலம் பல விளைக்க வுரிய அரசர்க்குக் குலம்படு தனமாக் குலாவி யுள்ளமையால் வீரம் அரச குணமாக வரிசை மிகப் பெற்றது.

விலங்கினங்களுள் சிங்கம் போல் மக்களுள் வீரன் மாண்புற்று நிற்கின்றான். உள்ளதை உவந்து கொடுப்பவன் வள்ளல் என வந்தான்.

ஒழுக்கம் மேவி நின்ற நீரன் என்றது ஆசார சீலனை.

சாரம் எலாம் ஆய்ந்த புலவன் என்றது கல்வி யறிவின் ஆழங்களையும் நீளங்களையும் பயன்களையும் நன்கு தெளிந்த மதிமானை. பல்வேறு வகைப்பட்ட நூல்களையெல்லாம் கூர்ந்து கற்றுத் தேர்ந்த அறிவு பெற்று ஆர்ந்த கலைச் சுவையுடன் மனப் பண்பும் சேர்ந்த போதுதான் உண்மையான புலவனாய் ஒருவன் ஒளி மிகப் பெறுகின்றான். நெஞ்சம் திருந்தின் நிலை உயர்கின்றது.

மேலே குறித்த இவ் வுத்தமர்கள் உலகில் உயர்ந்த மேன்மையாளராய்ச் சிறந்து தலைமையுடன் திகழ்கின்றார்.

மனித கோடிகளுள் தனி மகிமை வாய்ந்து புனிதம் எய்தி நிற்றலால் மானவருள் வானவர் என இவர் வாழ்த்த வந்தார்.

கல்வி வீரம் கொடை முதலிய உயர் தகைமைகள் உடையவரே உயர்ந்தவர் ஆகின்றார் என்றது அந் நிலைமைகளை யாவரும் அடைய வேண்டும் என்று கருதி.

கல்வி தறுகண் இசைமை கொடை எனச்
சொல்லப் பட்ட பெருமிதம் நான்கே. (தொல்காப்பியம்)

மேலான நீர்மைகளை ஆசிரியர் தொல்காப்பியனார் இங்ஙனம் வரைந்து காட்டி யிருக்கிறார். பெருமிதம் என்றது இங்கே வீரத்தைக் குறித்துள்ளது. பேர் எல்லையாய் ஓங்கி நிற்பது பெருமிதம் என வந்தது.

சிறந்த வீரன், உயர்ந்த கொடையாளி, நல்ல ஒழுக்க முள்ளவன், தேர்ந்த கல்விமான் என்னும் இந் நிலைகளுள் ஏதாவது ஒரு வகையிலாவது மனிதன் மருவி யிருக்க வேண்டும்; இல்லையானால் அவன் பிறப்புப் புல்லிதாம்.

"சடம் ஒன்று எடுத்தால் புவிக்கு நல்லவன் என்று
தன்பேர் விளங்க வேண்டும்;
சதிருடன் இது அல்லாது, மெய்ஞ்ஞானி என்றுஅவ
தரிக்கவே வேண்டும்; அல்லால்
திடமினிய ரணசூர வீரன்இவன் என்னவே
திசைமெச்ச வேண்டும்; அல்லால்
தேகினை வருபவர்க்கு இல்லை என்னாமலே
செம்பொன் கொடுக்க வேண்டும்;
அடைவுடன் பலகல்வி ஆராய்ந்து வித்துவான்
ஆகவே வேண்டும்; அல்லால்
அறிவான துரைமக்கள் ஆக வரவேண்டும்; இவர்
அதிக பூபாலர் ஆவார்." (குரு பாத தாசர்)

மனிதப் பிறப்புள் மகிமைப் பிறப்புகளாக இதில் குறிக்கப்பட்டுள்ள ஆறு நிலைகளையும் கூர்ந்து நோக்கி அவற்றின் தரங்களை ஓர்ந்து கொள்க. நீர்மை யுடையன சீர்மை அடைகின்றன.

வீரம் முதலிய உயர் நீர்மையுடையவர் பாரெல்லாம் புகழ்ந்து போற்றச் சிறந்து விளங்குகின்றார்; அல்லாதவர் புல்லராய்ப் பொலிவிழந்து நிற்கின்றார். நிலைகள் எல்லாம் அவரவருடைய இயல்புகளைப் பொறுத்து எழுகின்றன.

பேடி உலோபி அயோக்கியன் மூடன்என நின்று பாடழிந்து படாதே; அறிவு நூல்களைக் கற்று, நெறி முறையே ஒழுகி, உரிமையுடன் உதவி, அரிய ஆண்மை புரிந்து பெரிய மேன்மையாளனாய் உயர்ந்து இருமையும் அடைந்து கொள்க.

---

292. மேலான தன்மை மிகமேவி நின்றவரே
மேலோர் எனவே மிளிர்கின்றார்—ஞாலந்தான்
பெற்ற மனுக்குலத்துள் பேராத மேன்மையுடன்
உற்றார் அவரே உயர்ந்து. (உ)

இ-ள்

மேலான இயல்புகளையுடையவரே மேலோர் ஆகின்றார்; உலகில் தோன்றிய உயிரினங்களுள் அவர் சிறந்த மதிப்பினராய் உயர்ந்து என்றும் நிலையாய் நின்று விளங்குகின்றார் என்பதாம்.

குணங்களைக் கொண்டே பொன்னையும் மணியையும் மதிப்பிடுதல் போல் மனிதனும் மதிக்கப் படுகின்றான்.

சிறந்த பண்புகள் அமைந்த பொழுது மனிதன் உயர்ந்தவன் ஆகின்றான். மனப் பண்புடையவன் தானாகவே மகிமை அடைகின்றான். உள்ளம் கனிந்து வளர உயர்வு கிளர்ந்து நிமிர்கின்றது.

உடல் வளர்ச்சி, வயது முதிர்ச்சி, கையிருப்பு, வாழ்க்கை வளம் வனப்பு முதலியவற்றால் எவனும் உயர்ச்சியடையான்.

ஆறு அடி உயரம் வளர்ந்து நெட்டையாய் நிமிர்ந்து நிற்பவனை உயர்ந்தவன் என்றும், தொந்தி கனத்து உடல் பெருத்தவனைப் பெரியவன் என்றும் உலகம் யாண்டும் சொல்லுவது இல்லை.

மன நலம் கனிந்து இனிமைப் பண்புகள் நிறைந்து உள்ளம் உயர்ந்த போது தான் மனிதன் உயர்ந்தவனாய் ஒளி பெற்று நிற்கின்றான். உயர் தலைமை இயல் நிலைமையில் இசைந்து நிற்கின்றது. இதயம் இதம் உற ஏற்றம் உதயம் ஆகின்றது.

பெரிய மனிதனுக்கு உரிய அரிய தகைமைகள் பெருந்தன்மை என வந்தது. சிறியன சிந்தியாமல் இனிய நலங்களைச் செய்பவரே, பெரியவராகின்றார். பெருமை கருமங்களால் கனிகின்றது.

கனிகளின் இனிமையைக் கண்டு மாங்கள் மதிக்கப் படுகின்றன; செயல்களின் இதங்களைக் கொண்டு மனிதர் துதிக்கப் படுகின்றனர்.

நகைஈகை இன்சொல் இகழாமை நான்கும்
வகைஎன்ப வாய்மைக் குடிக்கு. (குறள், 953)

என்றும் முகம் மலர்ந்து, எவர்க்கும் இதம் புரிந்து, யாண்டும் இன்சொல் இயம்பி, யாரையும் இகழாமல் இருப்பவரே மேலோர் எனத் தேவர் குறித்துள்ள இந் நீர்மைகள் கூர்ந்து சிந்திக்கத் தக்கன. உயர்ந்த குலமக்களாகத் தம்மை நினைந்து களிப்பவர் இந்தக் குண நலங்கள் தம்மிடம் எவ்வளவு அமைந்துள்ளன என்பதைச் செவ்வையாக உணர்ந்து கொள்ள வேண்டும்.

பான்மை அளவே மேன்மை ஆகும்.

நல்ல தன்மைகள் நிறையவே கலைகள் நிறைந்த சந்திரன் போல் உலகில் அவர் உயர்ந்து திகழ்கின்றார். உடுக்களிடை ஒளிர்மதி என மனுக்களிடை மேலோர் மாட்சி யுறுகின்றார்.

புன்மையை இகழ்ந்து தள்ளி நன்மையை உவந்து கொள்க.

உள்ளத்தைப் பண்படுத்தி உணர்வை ஒளி செய்து உதவி புரிந்து வரின் உயர்ந்த மேன்மைகள் உன்னை நயந்து வருகின்றன.

பிறந்த படியே வளர்ந்து வீணே அழிந்து படாமல் சிறந்த தன்மைகளை அடைந்து உயர்ந்து கொள்ளுக.

---

293. உற்ற படைப்பில் உயர்ந்ததுமக் கட்பிறப்பே
மற்றதனுள் கற்றவரே மாண்புயர்ந்தோர்—முற்றவே
தேர்ந்தொழுகு சீலர் சிறந்தோர் எவரினும்
ஓர்ந்தடங்கி னார்மேல் உணர். (௩)

இ-ள்

உலக சிருட்டியில் மனிதப் பிறப்பு உயர்ந்தது; அம் மனிதருள் கற்றவர் சிறந்தவர்; அக் கல்விமான்களினும் சீல முள்ளவர் மேலானவர்; அவர் எல்லாரினும் மனம் அடங்கிய ஞானிகளே பெரியவர் என்றவாறு.

மிக்க பகுத்தறிவு மக்களிடம் அமைந்திருத்தலால் சீவ கோடிகளுள் அவர் சிறந்து நிற்கின்றூர். அங்ஙனம் சிறந்த பிறப் பினராய் வந்துள்ள மனிதர் குழுவில் கல்வியறிவு பெற்றவர் உயர்ந்து விளங்குகின்றூர்.

"விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றூரோடு ஏனை யவர்." (குறள், 410)

கற்றவருக்கும் கல்லாதவர்க்கும் உள்ள வேற்றுமையை அடிகள் இப்படி அளந்து காட்டியிருக்கிறூர். உருவத்தால் ஒத்த பிறப்பினராயினும் உணர்வினுல் தம்முள் அவர் ஒவ்வார் என்பதை இவ்வாறு விளக்கி யருளினூர்.

மிருகங்களினும் மனிதர் எவ்வளவு உயர்ந்துள்ளாரோ, அவ் வளவு கல்லாதவரினும் கற்றவர் உயர்ந்திருக்கின்றூர். உயர்வு தாழ்வுகளுக்கு உற்ற காரணத்தை ஊன்றி நோக்கும்படி இது உணர்த்தியுள்ளது. கல்வியால் அறிவுவளர்ந்து ஒளிபெறுகின்றது; அதனுல் மனிதன் உயர்ந்து மகிமை யுறுகின்றூன்.

கற்றவரே உயர்ந்தோர் என்றதில் ஏகாரம் மற்றவரது தாழ்வு நிலையை வெளிப்படுத்தி வீழ்வினை விளக்கியது.

அரிய பிறவியும் உரிய கல்வி இன்மையால் சிறுமை அடைய நேர்ந்தது; அதனைப் பருவம் தவறூமல் மருவிப் பெருமை பெறுக.

சிறந்த மனிதனுய்ப் பிறந்து உயர்ந்த கல்விமான் ஆயினும் ஒழுக்கம் இலனுயின் அவன் விழுப்பம் உறூன்; ஆகவே அந்தச் சீலமுடையவர் கற்றவரினும் மேலானவராய் மேன்மை பெற லாயினூர். ஒழுக்கம் உணர்வுக்கு ஒளியாய் உய்தி புரிகின்றது.

முற்றவே தேர்ந்து ஒழுகு சீலர் என்றது தாம் கற்ற கல்வியின் பயனை நன்றூக ஆராய்ந்து அறிந்து நெறி வழுவாமல் ஒழுகும் அமைதியாளர் என அவரது தகைமை தெரிய வந்தது.

விழிக்கு ஒளி போல் கல்விக்கு ஒழுக்கம் எழில் செய்துள்ள மையால் அதன் விழுமிய நிலைமையும் அதனையுடையவரது பெரு மையும் எளிது தெளிவாம். சீலம் அற்ற கல்வி ஒளி அற்ற விழி போல் பழியுற்று உழலும்.

ஓர்ந்து அடங்கினூர் என்றது ஞானிகளை.

"அறிவோர்க்கு அழகு கற்று உணர்ந்து அடங்கல்" என்றதனால் அறிவின் படிமுறைகளையும் பயன் நிலைகளையும் நன்கு உணர்ந்து கொள்ளலாம். பயன் அடைய எதுவும் வியன் அடைகின்றது.

ஞானம் என்பது உண்மையை உணர்தல். நித்திய அநித்தியங்களை அறிந்து, ஆத்தும தத்துவங்களைத் தெளிந்து, பரமுத்தி நிலையை அடைய உரியவர் தத்துவ ஞானிகள் என நின்றார்.

இந்த ஞானம் எளிதில் அமையாது. இனிமேல் இவனுக்குப் பிறவி இல்லை என்னும்படி முடிந்த சன்மத்தில்தான் ஒருவனுக்கு ஞானம் உண்டாகும்.

இனிப்பிறவா முடிவான பிறப்பிலே மெய்ஞ்ஞானம் எளிதில் உண்டாம்;
பனிச்சுடர்வெண் நித்திலங்கள் உத்தமமாம் மூங்கில் அல்லால் படுவ துண்டோ
செனித்தவரின் மேலோராய் நல்லோராய் மித்திரராய்த்தெளிந்தோராகி
அனித்தமறு முத்தராய் ஞானிகளாம் குணம்எல்லாம் அவரைச்சேரும்.
(ஞான வாசிட்டம்)

நல்ல சாதி மூங்கில்களில் முத்துக்கள் தோன்றுதல் போல் சித்தசுத்தியுடைய உத்தம சீலரிடமே ஞானம் உதயம் ஆகின்றது என்ற இதனால் அதன் அருமை புலனும். கோடி மூங்கில்களைக் கூர்ந்து நோக்கினும் ஒரு முத்துக் காண்டல் அரிதாம். முத்து உடையது எத்தனையோ கோடிகளுள் ஒன்று அரிதாக அமைகின்றது. அவ்வாறே சீவகோடிகளுள் ஞானமுடையாரும் அரிதாய் அமைகின்றனர்.

"திரிவித உலகத்து அரிது ஒரு ஞானி" என்றதனால் அவரது அரிய காட்சியும் பெரிய மாட்சியும் அறியலாகும்.

இத்தகைய ஞானிகள் மனிதப் பிறவியின் புனிதப் பேறாய் வருதலால் எவரினும் மேல் என அவர் ஏத்த நின்றார்.

"மக்கள் யாக்கையில் பிறத்தலே அரிது; மற்றதிலும்
துக்க கூன் குருடு ஊமையைத் துறத்தலும் அரிது;
நற்குலத்திடை வருதலும் அரிது; ஞானத்தால்
முக்கண் ஈசனுக்கு ஆட்படல் முற்றிலும் அரிதே."

அரிய மக்கட் பிறப்பை அடையினும், அது வழுவின்றி வாய்ந்து, ஞானம் தோய்ந்து முழுமுதலைப் பெறுதல் மிகவும் அரிது என்னும் இதனால் பிறவிப் பேற்றின் நிலைமை புலனும்.

புன்மரம் நெளிபுழுப் புள் விலங்கு எனும்
பன்மைய துயர்செயும் பவங்கள் தப்பியே
வன்மை கொள் நிலமிசை மக்கள் ஆகுதல்
நன்மைகொள் உயிர்க்கலால் அரிது நந்தியே.

(பிரபுலிங்கலீலை)

அரிதாம் பிறப்புள் உயர்மானிடத்தின் அடைவுற்று வைகல்; அதனின்
அரிதாகும் நல்ல குலனிற்பிறத்தல்; அறிவாளர் ஆதல் அதனின்
அரிதாகும்; வேதமுதலாய்ந்து முக்கண் அமலற்கலத்தல் அதனின்
அரிதாம்; உயர்ந்த குலனுற்றும் வீணில் அழிவார் இதென்கொல்அறிவே!

(தணிகைப் புராணம்)

உற்ற யோனிகள் தம்மில் உற்பவி யாமல் மானுட உற்பவம்
பெற்று வாழுதல் அரிது; மற்றது பெறினும் மாயைசெய் பெருமயக்கு
அற்ற ஞானிகளாய் விளங்குதல் அரிது; வீடுறும் அறிவுபின்
பற்று மாறரி திங்குனக்கிவை பண்பினோடு பலித்தவே. (பாரதம்)

அரிதே மனுடப் பிறப்பின ராய்வரல், அங்கதினும்
அரிதே பலகலை கற்றவர் ஆதல், அதனினுமற்
றரிதே கவிகள் அமைப்பவர் ஆதல், அதனினுமற்
றரிதே பலநூல் செயவல்லர் ஆதல் அவனியிலே.

(அக்கினி புராணம்)

உயர்குடி நனியுள் தோன்றல்; ஊனமில் யாக்கை ஆதல்;
மயர்வறு கல்வி கேள்வித் தன்மையால் வல்லர் ஆதல்;
பெரிதுணர்வறிவே யாதல்; பேரறம் கோடல் என்றாங்கு
அரிதிவை பெறுதல் ஏடா பெற்றவர் மக்கள் என்பார்.

(வளையாபதி)

அரியது கேட்கின் வரிவடி வேலோய்!
அரிது அரிது மானிடர் ஆதல் அரிது;
மானிட ராக மருவி வந்தாலும்
மூங்கையும் செவிடும் கூனும் குருடும்
பேடும் நீங்கிப் பிறத்தலும் அரிதே;
பேடு நீங்கிப் பிறந்த காலையும்
ஞானமும் கல்வியும் நயத்தல் அரிதே;
ஞானமும் கல்வியும் நயந்த காலையும்,
தானமும் தவமும் தரித்தலும் அரிதே;
தானமும் தவமும் தரித்தார்க் கல்லது
வானவர் நாடு வழிதிற வாதே. (ஔவையார்)

மக்கட் பிறப்பின் அருமையையும் அதன் படியேற்றங்களையும் குறித்து நூல்கள் இவ்வாறு உரைத்திருக்கின்றன. உரைகளின் கருத்துக்களை ஊன்றி நோக்கி உயர் நலங்களை உணர்ந்து கொள்க.

மனிதப் பிறவி, கல்வி அறிவு, சீலம், ஞானம் என்னும் இவை முறையே ஒன்றினும் ஒன்று உயர்ந்ததாய் ஒளி மிகுந்துள்ளது. இவ் வுண்மையை உணர்ந்து உறுதி நலம் பெறுக.

நல்ல பிறப்பை அடைந்துள்ள நீ சிறந்த கல்வி கற்று, உயர்ந்த ஒழுக்கம் உற்று, இயைந்த இதங்களைச் செய்து மேலான ஞான சீலனாய் மேன்மையுற வேண்டும் என்பது கருத்து.

---

294. சார்ந்த மனிதரெலாம் தம்முதல்வர் என்றுமகிழ்
கூர்ந்து புகழும் குணமருவி—நேர்ந்த
நிலைகளெலாம் நீதி நிலவி ஒளிர்வார்
தலைமை இயல்பார் தனி. (ச)

இ-ள்

தம்மை அடுத்தவர் எல்லாரும் உழுவலன்புடன் தொழுது துதிக்கும்படி விழுமிய குணநலங்கள் அமைந்து சிறந்த நீதி ஒழுக்கங்கள் நிறைந்து மேலோர் விளங்கி நிற்பர் என்றவாறு.

சார்ந்த மனிதர் என்றது உற்ற உறவிலும், பெற்ற நட்பிலும் உரிமையாக மருவி யுள்ளவரை.

திருந்திய பண்பும் விரிந்த நெஞ்சமுமுடைய பெருந் தகைமையாளர் எல்லா உயிர்களிடத்தும் தண்ணளி சுரந்து கண்ணியம் புரிந்து வருவர் ஆதலால் அவரை மருவினவர் எவரும் உரிமை மீதூர்ந்து உவந்து புகழ நேர்கின்றார்.

தம் முதல்வர் என்றது ஒவ்வொருவரும் தம்முடைய தலைவர் என்று தனித் தனியே கிழமை பாராட்டி அவரை விழைந்து போற்றி வரும் வளமை தெரிய வந்தது.

புனித மனமுடைய இனிய நீர்மை காணவே மனிதர் குழாம் அமுதம் கண்ட அமரர் கணம்போல் தமது உரிமை மண்டிப் பெரியோர்களை மகிழ்ந்து கொண்டாடுகின்றனர்.

ஒருவன் உள்ளம் உயர்ந்து கனியவே உலகம் அவனை விழைந்து கவிந்து உவந்து குவிகின்றது.

எல்லாரிடமும் கண்ணோடி இரங்கி அருள்பவர் யாண்டும் நல்லோர் ஆகின்றார்; ஆகவே பல்லோரும் அவரை ஈன்ற தாய் என ஆன்ற அன்புரிமையுடன் ஏத்தி நிற்கின்றார்.

"He is tender towards the bashful, gentle towards the distant, and merciful towards the absurd." (Newman)

"பேதைகளிடம் இரக்கமும், பொது மக்களிடம் மரியாதையும், தாழ்ந்தவர் பால் பரிவும் புரிவது உயர்ந்த மேன் மகனது இயல்பாம்" என நியூமன் என்பவர் இங்ஙனம் கூறி யிருக்கிறார்.

பண்பு வளர வளர மனிதன் இன்ப நிலையம் ஆகின்றான்.

மேன்மையாளரது பான்மைகளும் செயல்களும் சனசமுதாயத்துக்கு இனிமை சுரந்து தனி மகிமைகளாய்த் தழைத்து மிளிர்கின்றன. சீரியரால் உலகம் சிறந்து வருகின்றது.

நீதி நிலவி ஒளிர்வார் என்றதனால் அவரது செயல் இயல்கள் யாவும் செவ்விய நீர்மையும் திருந்திய சீர்மையும் உடையனவாய்த் தரும நலங்களை விளைத்து இருமை இன்பங்களையும் வளர்த்தருளும் என்பது பெறப்பட்டது.

உள்ளத்தை உயர்த்தி உயிர்களுக்கு இதம் செய்யும் அளவே மனிதன் உயர்ந்து விளங்குகின்றான்.

---

295. உள்ளம் கலங்கார் உரைதிறம்பார் ஒன்னலர்க்கும்
கள்ளம் புரிந்து கறைசெய்யார்—எள்ளலெனும்
புன்மைதனை யாதும் பொருந்தார் புறங்கூறார்
தன்மையுறு மேன்மக்கள் தாம். (ரு)

இ-ள்

நல்ல மேன்மக்கள் அல்லலுறினும் உள்ளம் நிலை குலையார்; சொல்லியசொல் தவறார்; பகைவரிடமும் கள்ளம் புரியமாட்டார்; சிறுமையை எவ் வகையும் கருதார்; யாரையும் புறம் பேசி இகழார் என்றவாறு.

மேலோர் நெறி முறையே ஒழுகும் மன வுறுதி யுடையர் ஆதலால் எது வரினும் அவர் நெஞ்சம் கலங்கி நிலை தடுமாறார்.

தாம் கூறிய உறுதி மொழிகளிலிருந்து எவ்வழியும் வழுவார் என்றமையால் அவரது வாக்கின் தூய்மை அறியலாகும்.

முன்னது மன நிலையைக் குறித்தது; பின்னது வாக்குநலனை உணர்த்தியது. திறம்பல்=பிறழ்தல், மாறுபடல்.

சத்துருக்களிடத்தும் உத்தமர் ஒழுங்கு தவறி நடவார் என்றது செயல் ஒழுக்கங்களை விளக்கியது.

ஒன்னலர்=பகைவர். கறை=குற்றம்.

ஒன்னலர் இன்னல் நிலையினர் ஆதலின் உம்மை அவர் வெம்மை தெரிய வந்தது. கொடிய விரோதிகளிடமும் பெரியோர் நெறி கடந்து யாதும் கரவு புரியார் என்றமையால் அவரது அருந் திறலாண்மையும் பெருந் தகைமையும் அறிந்து கொள்ளலாம்.

எள்ளல் எனும் புன்மை என்றது இகழத்தக்க இழி செயல்களை. யாண்டும் புகழத் தக்க நன்மைகளையே புரிந்து வருவ ரன்றிப் புன்மைகளை மறந்தும் அவர் கருதார்.

யாதும் பொருந்தார் என்றது தீமைகளையும் சிறுமைகளையும் அவர் அருவருத்து விலகும் அமைதி அறிய வந்தது.

பிறருடைய பிழைகளை எவ்வழியும் எவரிடமும் பேசாமல் இருப்பது உயர் பெருந் தகைமைக்கு ஓர் உறுதியான அளவு கோல் ஆதலால் அவ்வுளவு தெரிய அது இறுதியில் நின்றது.

பிறர் தீமை சொல்லா நலத்தது சால்பு என்ற தேவர் அருள் மொழியின் பொருள் நிலை ஈண்டு ஊன்றி உணர வுரியது.

உள்ளம் கலங்கலும், உரை திறம்பலும், கள்ளம் புரிதலும், கறை செய்தலும், புன்மை மருவலும், புறங் கூறலும், புல்லிய செயல்கள் ஆதலால் இவற்றையுடையவர் சிறியர் என நிற்கின்றார்; இவை இல்லாதவர் பெரியர் என மிளிர்கின்றார்.

மனவுறுதி, வாய்மை, நேர்மை முதலிய நீர்மைகள் தோய்ந்து யாவரும் சீர்மையுற வேண்டும் என்பது கருத்து.

---

296. ஆசில் புகழ்வருவ தாயின்தம் ஆருயிரும்
வீசத் துணிந்து விரைகுவார்—நீசப்
பழிஎனினோ வான்வரினும் பற்றார்உள் அஞ்சி
ஒழிவர் பெரியர் உணர். (சுா)

இ-ள்

சிறந்த பெரியோர்கள் புகழுக்காகத் தமது அரிய உயிரையும்

கொடுத்து விடுவர்; சுவர்க்க போகம் வருவதாயினும் பழிபட அவர் இசையார் என்பதாம்.

'ஆசு இல் புகழ் என்றது குற்றம் அற்ற நல்ல கீர்த்தியை. ஆசு=குற்றம். மாசுபடாமல் வருவது தேசுடையதாம்.

புகழ் என்பது சிறந்த நன்கு மதிப்பு. உயர்ந்தோரால் புகழ்ந்து பேசப்படுவது புகழ் என வந்தது. புண்ணியத்தின் மணமாய் மனிதரைக் கண்ணியப் படுத்தி வருதலால் புகழை எவரும் எண்ணி மகிழ்கின்றார்.

பழி என்பது இழிவான தீமையை. உலகத்தாரால் பழிக்கப் படுவது பழி என நேர்ந்தது. இது பாபத்தின் துணையாய் உயிர்களைப் பாழ்படுத்தி விடும்.

மேலோர் புண்ணிய சீலர் ஆதலால் யாண்டும் புகழையே பேணி ஒழுகுவார். அரிய உயிரினும் அதனை உரிமையாக அவர் கருதி வருகின்றார்.

புகழ் வருவது ஆயின் தம் உயிரும் வீச விரைகுவார் என்றது மேன்மையாளரது உள்ளப் பான்மையும் உறுதி நிலையும் உணர வந்தது. புகழும் புண்ணியமும் சீரியர் உரிமைகள் ஆகின்றன.

பிறர்க்கு உபகாரமான நிலைகளில் தமது உடல் பொருள் ஆவி முழுவதையும் உவந்து கொடுக்கும் கொடைப் பண்பு பெரியோர்களிடம் இயற்கையாக அமைந்திருத்தலால் உரிய சமையம் வரும்போது உயிரை அவர் எளிதே உதவி விடுகின்றார்.

பழி எனினோ வான் வரினும் பற்றார் என்றது தேவபோகங்கள் யாவும் ஒருங்கே தருகின்றேன்; பழியான சிறிய ஒரு பிழை செய்க என இந்திரனே நேரே வந்து இரந்து வேண்டினும் பெருந் தகையாளர் யாதும் இசையார் என்பதாம்.

அவரது ஆன்ம பரிபாகமும் அதிசய அமைதியும் எவரும் துதி செய்து தொழும்படி துலங்கி நிற்கின்றன.

"புகழ்எனின் உயிரும் கொடுக்குவர்; பழி எனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர்." (புறம், 182)

"வாணன் வைத்த விழுநிதி பெறினும்
பழி நமக்கு எழுக என்னாய் விழுநிதி
ஈதல் உள்ளமொடு இசை வேட்குவையே."

(மதுரைக்காஞ்சி)

மேன் மக்களுடைய பான்மைகளைக் குறித்து வந்திருக்கும் இவை இங்கே சிந்திக்கத் தக்கன.

பழி எனின் அஞ்சி ஒழிவர் என்றது அஞ்சாத ஆண்மையாள ரான அவர் அஞ்சி நிற்கும் இடம் தெரிய வந்தது.

கீழான பழியைக்கண்டபொழுது மேலோர் உள்ளம் குலைந்து அருவருத்து ஒதுங்குவர் ஆதலால் அந் நிலைமையை அச்சச்சொல் உச்சமாக உணர்த்தி நின்றது.

இசையை விழைந்தும், வசையை வெறுத்தும் அசையா ஆண்மையுடன் மேலோர் அமர்ந்து நிற்கின்றார். அந்நிலைமையைத் தலைமையாக உலகம் உவந்து கொண்டாடுகின்றது.

"The real poet, as he braves every hardship for fame, so is he equally a coward to contempt." (Goldsmith)

"உத்தமக் கவிஞன் கீர்த்திக்காக எதையும் துறக்கத் துணி கின்றான்; பழி எனினோ பதறி விடுகின்றான்" என்னும் இந்த ஆங்கில வாக்கியம் ஈங்கு ஊன்றி உணர வுரியது.

தீயபழியை வெறுத்து ஒதுங்கித் தூய புகழையே எவ்வழியும் போற்றிச் சிறந்த புண்ணிய சீலனாய் யாண்டும் உயர்ந்து வாழுக.

---

297. கண்ட ஒருபுறவைக் காக்கச் சிபிமன்னன்
கொண்ட உடம்பும் கொடுத்தானே—மண்டுபுகழ்
மெய்யுடம்பைப் பேணநின்ற மேலோர்கள் பேணுவரோ
பொய்யுடம்பை வீணே புனைந்து. (எ)

இ-ள்

தான் பார்த்த புறவுக்காக இரங்கிச் சிபி மன்னன் தனது மெய்யைக் கொய்து கொடுத்தான்; கீர்த்தியைப் பேணுகின்ற மேன்மக்கள் உடல் பொருள் ஆவி எதையும் பொருள் செய்யாது விடுவர் என்றவாறு.

புகழின் பொருட்டுத் தம் உயிரையும் மேன்மக்கள் வீசத் துணிவர் என முன்னம் குறித்ததற்கு எடுத்துக் காட்டாகச் சரித்திர புருடன் ஒருவனை உரிமையுடன் இது உணர்த்துகின்றது.

சிபி என்பவன் சூரிய குலத்து மன்னன். நீதியும் தருமமும்

நிறைந்த நெஞ்சினன். அருந்திறலாளன்; பெருந்தகைமை மிகுந் தவன். ஒரு நாள் மாலையில் அரண்மனை அருகே பூஞ்சோலையில் தனியே உலாவி வந்தான். அப்பொழுது ஒரு புறா பதறி வந்து இவன் எதிரே புகுந்தது. அடுத்து ஒரு வேடன் கடுத்து வந்தான். அவன் வேட்டையில் தப்பிவந்த அப் பறவையின் பதைப்பைக் கண்டு இம் மன்னன் இரங்கி அவ் வேடனை விலக்கினான். "என் குறியில் தவறிய பறவையைக் கொடுத்தருளுங்கள்" என அவன் மறுகி வேண்டினான். மன்னன் மறுத்தான். "நான் தின்னவுரியதை இன்னவாறு தடுப்பது நீதியா?" என்று அவன் நொந்து தவித்தான். உனக்கு எவ்வளவு பொருள் வேண்டுமாயினும் தருகின்றேன்; வேண்டியதைக் கேள் என இவ் வேந்தன் கூறினான்.

வேடன்:- நான் பசி தீர உண்ண இப்பறவையே வேண்டும்; வேறு யாதொன்றும் எனக்கு வேண்டியதில்லை.

சிபி:- உனக்கு நல்ல உணவுகள் தருகின்றேன்.

வேடன்:- ஊன் உணவே நான் உண்பது; வான் அமுதமாயினும் வேண்டேன்; இதனையே என் கையில் கொடுத்து விடுங்கள்; தடுத்தல் தகாது.

சிபி:- *தன்உயிரைப் போலவே தானறிந்து மற்றுள்ள*
*மன்உயிரைப் பேணார் மனிதரோ?—புன்னுனிமேல்*
*நீர்என்னத் தோன்றி நிலையாத நின் உடம்பின்*
*சீர்உன்னிப் பார்சிறிது தேர்ந்து.*

வேடன்:- அந்தப் பார்வை எல்லாம் உங்கள் போன்ற பெரியவர்களுக்கே; என் போல்பவர்க்கு அது இயலாது.

சிபி:- நான் சொல்லிய படியே செய்; இல்லையேல் நீ அல்லல் அடைவாய்.

வேடன்:- ஒரு பறவைக்கு இரங்கி அருள்கின்ற நீங்கள் மனிதனுக்கு இரங்காமல் இப்படித் தொல்லைப் படுத்துவது நல்லதா?

சிபி:- உருவில் மனிதனாயினும் அருள் இலனாயின் அவன் கொடிய மிருகமே.

வேடன்:- புலால் புசிப்பது எங்கள் குல தருமம்; அதனை விலக்குவது பாவம். என் இரையைக் கொடுத்து விடுங்கள்.

சிபி:- என்உயிரை ஈஎனினும் ஈந்திடுவேன்; இப்பறவை
தன்உயிரை ஈந்து தவியேன்காண்—உன்னுயிரை
ஓம்பாஈ தன்றிவே றுண்டிஒன்றும் கண்டிலேயோ
தேம்பல் எவனோ தெளி.

வேடன்:- எப்படியாவது எனக்குப் புலால்உணவு தந்து விடுங்கள்.

புலையையே விரும்பி அக் கொலை வேடன் இங்ஙனம் கூறவே அரசன் தன் தொடையிலிருந்து தசையை அறுத்து எடுத்து அப் புறாவின் எடைக்குத் துலையில் இட்டு நிறுத்துக்கொடுத்தான்.

ஒரு சிறிய பறவைக்காகத் தனது அரிய உயிரை உதவிய இப்பெரியவனை வானும் வையமும் என்றும் புகழ்ந்து வருகின்றன.

"பிறந்தநாள் தொடங்கி யாரும் துலைபுக்க பெரியோன்
பெற்றி, மறந்த நாள் உண்டோ?" (இராமாயணம்)

என இராமனும் தான் பிறந்த குலத்தின் பெருமையை வியந்து இங்ஙனம் மகிழ்ந்திருக்கிறான். துலை=துலாக்கோல், திராசு.

இந்த அருள் வள்ளலுடைய மன நிலையை வியந்து புகழ்ந்து மேலோர் பலரும் உவந்து கூறி யிருக்கின்றனர்.

"தன்னகம் புக்க குறுநடைப் புறவின்
தபுதி அஞ்சிச் சீரை புக்க
வரையா ஈகை உரவோன்." (புறம், 43)

"உடல்கலக்கற அரிந்து தசை இட்டும் ஒருவன்
ஒரு துலைப் புறவொடு ஒக்க நிறை புக்க புகழும்."
(கலிங்கத்துப்பரணி)

காக்கும் சிறுபுறவுக் காகக் களிகூர்ந்து
தூக்கும் துலைபுக்க தூயோன். (விக்கிரம சோழன் உலா)

யாவரும் இவ்வாறு வாயாரப் புகழ்ந்து போற்றச் சிபி உயர்ந்து திகழ்கின்றான். அரிய செயலால் பெரியனாயினான்.

புகழை மெய் உடம்பு என்றது என்றும் நிலையாக நின்று நிலவும் நிலைமை கருதி. புகழாகிய மெய்யுடம்பைப் பேணும் மேன்மையாளர் பொய்யுடம்பை ஒரு பொருளாகப் பேணார் என்பதை வையம் அறிய இவன் விளக்கி யருளினான்.

மனத் திண்மையும் வண்மையும் மனிதனை மகிமைப் படுத்தி வருகின்றன. அத் தன்மைகளை யுடையராய் மக்கள் நன்மையுற வேண்டும். புன்மையை ஒழித்து யாண்டும் நன்மையை வளர்த்து வருக. அரிய செயலைச் செய்து பெரிய புகழைப் பெறுக.

---

298. எள்ளள வேனும் இழிபழி எய்தாமல்
உள்ளம் கருதி ஒழுகுவார்—எள்ளும்
குறைசிறிது நேர்ந்தால் குலைகுலைந்து சோர்வார்
நிறைபெருகி நின்றார் நிலை. (அ)

இ-ள்

குண நலங்கள் நிறைந்த மேலோர் எவ் வகையானும் யாதொரு பழியும் அடையாமல் தன் உள்ளத்தைச் செவ்வையாகப் பாதுகாத்து ஒழுகுவார்; ஏதேனும் ஒரு சிறுகுறை நேர்ந்தாலும் பெரிதும் வருந்தி உளைந்து அயர்வார் என்பதாம்.

இது, உயர் தலைமையின் இயல்பு கூறுகின்றது.

இழிவான எண்ணங்களும் செயல்களும் பழிகளாய் வெளி வருகின்றன. அவை எவ்வழியும் யாதும் தம்மை அணுகாமல் பாதுகாப்பவரே நல்ல மேன்மக்க ளாகின்றனர்.

உயிரைப் பழுது படுத்தி விடுதலால் பழியைக் கொடிய விடமாகக் கருதி ஒழிக்க வேண்டும். வசை ஒழியவே இசை விளையும்.

புகழ் அமுதம் அனையது; உயிர்க்கு ஊதியமாய் உய்தி தருவது. இன்ப நிலையமான அதனை மருவி வாழ்பவரே எங்கும் மாண் புடையராய் மகிமை யுறுகின்றனர்.

"வானமும் திசையும் பொங்கும் புகழ்மையும், வானம்பேணும்
ஞானமும் பொறையும் குன்றா நன்றியும் ஊக்கப்பாடும்
தானமும் கொடையும் அன்பும் வரிசையும் தகைசால் நண்பும்
மானமும் தவம்செய் தீன்ற மகவுபோல் வளர்க்க வல்லார்."

என்றபடியே குணநலங்களை நல்லார் பேணி வருகின்றனர்.

குறை சிறிது நேர்ந்தால் குலைகுலைந்து சோர்வார்.

என்றது மேலோரது நிலை தெரிய வந்தது. குலை இரண்டனுள் முன்னது உள்ளம்; பின்னது நடுக்கம்.

புகழ் புண்ணியங்களையே யாண்டும் பேணி வருகின்ற கண்ணிய சீலர்கள் பழி தீமைகளைக் காண நேர்ந்தால் நஞ்சைக் கண்டதுபோல் அஞ்சி நடுங்குவர்; ஆகவே அவருடைய நெஞ்சின் தூய்மையும் நீர்மையும் நேர்மையும் நன்கு புலனாம்.

தீவினையார் அஞ்சார்; விழுமியார் அஞ்சுவர்
தீவினை என்னும் செருக்கு." (குறள், 201)

இழிந்த பழிபாவங்களை அஞ்சுகின்ற அளவே விழுமிய மேன்மை வெளியாகின்றது என்னும் இது ஈண்டு எண்ணத்தக்கது.

தம்மைப் பாழாக்கி யாண்டும் பழி துயரங்களை விளைக்கின்ற தீய எண்ணங்களை யுடைமையால் மனிதர் தீயராய் இழிந்து ஒழிந்து போகின்றார். தூய எண்ணங்களை யுடையவர் தூயராய் உயர்ந்து துலங்கி நிற்கின்றார்.

பழிகளைத் தழுவிப் பாழாகாமல் நல்ல வழிகளில் ஒழுகி மாண்புறுக; அதுவே அரிய பிறவியை எய்தி வந்துள்ள உனக்கு உரிய பயனைப் உய்தி புரியும்.

---

299. கற்றுயர்ந்த மேன்மக்கள் கண்ணன்றி மற்றையர்பால்
குற்றம் குறைகண்டு கூர்ந்துசொலார்—வெற்றிமிகப்
பூண்பரிபால் அன்றியே புன்கழுதை பால்சுழிகள்
காண்பர் எவர்காண் கனிந்து. (கூ)

இ-ள்

சிறந்த குதிரைக்குச் சுழிகள் பார்ப்பாரே யன்றி இழிந்த கழுதைக்கு ஒன்றும் பாரார்; அதுபோல் உயர்ந்த மேன்மக்களிடமே குற்றங்களைக் கூர்ந்து நோக்கி உலகத்தார் குறை சொல்லுவார்; மற்றையரிடம் யாதும் கூறார் என்றவாறு.

இது உயர்ந்தவன் நிலைமையை உணர்த்துகின்றது.

கல்வி அறிவால் ஆன்மஒளி மிகுகின்றது; அதனால் மேன்மை விளைகின்றது; அவ் விளைவுக்கு மூலகாரணமாய் நிற்றலால் கற்று என்னும் அடை உயர்வுக்கு உரிமை பெற்று வந்தது.

சிலர் கற்றிருந்தாலும் நல்ல ஒழுக்க நெறியில் நின்று உயராமல் இழிந்து கிடப்பர் ஆதலால் அத்தாழ்வில் வீழாமல் வாழ்வில் உயர்ந்த வகைமை தெரியக்கற்றலோடு உயர்தலும் கலந்து வந்தது.

கலை நலம் கனிந்து உலக நிலையில் தலைசிறந்து நிற்கும் பெரியோர் தமது நிலைமையை மிகவும் கண்ணூன்றிப் பாதுகாத்து வர வேண்டும்; சிறிது வழுவினும் பெரிய பழியாய் அது வெளி வர நேரும்.

மேலோரைப் பொதுமக்கள் கூர்ந்து கவனித்து ஓர்ந்து வருதலால் அவரிடம் சிறிய ஒரு குறை காணினும் அதனைப் பெரிது படுத்தி அவர் பேச நேர்கின்றார். அப் பேச்சுகள் ஏச்சுகள் ஆகின்றன; ஆதலால் உயர்ந்தவர் எவ்வழியும் பிழை நேராமல் தம்மைப் பேண வேண்டியவராய்ப் பெருகி நிற்கின்றார்.

மற்றையர் என்றது அறிவு நலம் குன்றிய இழிந்த மக்களை. இவரிடம் உள்ள குறைகளை உலகம் கவனிப்பதில்லை. இவரை எவரும் ஒரு பொருளாக மதியாமையால் இவருடைய குற்றங்கள் மறைந்து போகின்றன.

பெருவரை நாட பெரியார்கண் தீமை
கருநரைமேல் சூடேபோல் தோன்றும்—கருநரையைக்
கொன்றன்ன இன்னா செயினும் சிறியார்மேல்
ஒன்றானும் தோன்றாக் கெடும். (நாலடியார், 186)

பெரியோர் பிழை வெள்ளை மாட்டின் மேல் இட்ட சூடு போல் வெளியே தெளிவாய்த் தெரியும்; கொலை பாதகம் செய்யினும் சிறியோர் பழி யாதும் தெரியாது போம் என்னும் இது ஈண்டு உணர வுரியது. நரை = வெள்ளை எருது.

கன்றி முதிர்ந்த கழியப்பன் னாள்செயினும்
ஒன்றும் சிறியார்கண் என்றானும் தோன்றாதாம்
ஒன்றாய் விடினும் உயர்ந்தார்ப் படுங்குற்றம்
குன்றின்மேல் இட்ட விளக்கு. (பழமொழி, 80)

பல தீமைகளைச் செய்யினும் சிறியாரிடம் அவை தெரியாது மறையும்; பெரியோர் ஒரு சிறு பிழை செய்யினும் அது மலைமேல் விளக்குப் போல் நிலை ஓங்கி விளங்கும் என்ற இதனால் அவரது நிலைமை புலனாம்.

தூய வெள்ளை ஆடையில் கரிய புள்ளிபோல் நல்ல தூயரிடம் சிறிய வழுவும் பெரிதாய்த் துலங்கித் தெளிவாய்த் தெரிகின்றது.

"The fairer the paper, the fouler the blot"

"தெள்ளிய நல்லோர் குற்றம் ஒள்ளிய வெள்ளைக் கடிதத்தில் துள்ளி விழுந்த கருங்கறை போல்வதாம்" என ஆங்கிலப் பழமொழியும் இங்ஙனம் கூறியுள்ளது.

"கற்றுயர்ந்த மேன்மக்கள் கண் அன்றி மற்றையர்பால்
குற்றம் குறைகண்டு கூர்ந்து சொலார்"

என்றதனால் மேலோரது தலைமையும் கீழோரது நிலைமையும் வெளியாயின. நல்ல மாணிக்க மணிகளில் குற்றங்களைக் கூர்ந்து நோக்கிச் சோதிக்கின்றனர்; புல்லிய வெட்டுக் கற்களில் யாதும் பார்ப்பதில்லை.

மதிப்புடையதை உலகம் மதித்துப் பார்க்கின்றது. மதிப்பில்லதை மிதித்துத் தள்ளி விடுகின்றது.

மேன் மக்களைக் குதிரையோடு ஒப்ப வைத்தது அவரது காட்சியும் மாட்சியும் கருதி.

குதிரைக்குச் சுழி பார்ப்பது போல் மேலோரிடம் குற்றங்களைக் கூர்ந்து நோக்குகின்றார் என்றது அவருடைய குண நலங்களை ஓர்ந்து கொள்ள வந்தது.

நல்ல சுழியுள்ள குதிரையை வைத்திருப்பவனுக்கு எல்லா நலங்களும் உளவாம்; கெட்ட சுழியுடையது கேடு பயக்கும்.

அணிகிளர் கழுத்தில் வலம் சுழித்திருந்தால்அறிந்தவர் அதனையே தெய்வ
மணிஎன இசைப்பர்; முகம் தலை நாசி மார்பம் இந்நான்கும் இவ்விரண்டு
பணிதரு சுழியும்; நுதல் நடுப் பின்னைப் பக்கமும் ஒவ்வொரு சுழியும்
துணிதர இருப்பது இலக்கணம்உளது; இச்சுழியிலது இலக்கணவழுவே.

பிரிவுற உரத்தில் ஐஞ்சுழி யுளது பேர்சிரீ வற்சமாம்; நுதலில்
இருசுழி யாதல் முச்சுழி யாதல் இருக்கினும் நன்று; அதுவன்றேல்
ஒருவற நான்கு சுழிவலம் புரியாய் உள்ளது நல்லது; அன்றி
இருசுழி முன்னம் கால்களின் மூலத்திருக்கினும் நல்லது என்றிசைப்பார்.

களம்நடுவு இரட்டைச் சுழியுடைப் பரிதன்கருத்தனுக்கு அறமிடிகாட்டும்;
அளவறு துன்பம் மரணம் உண்டாக்கும்; அவைகளைக்கால் உளவாகில்
உளபயம் துன்பம் நிகளபந்தனம்; மேல் உதடு முற்காலடி கபோலம்
வளர்முழந்தாள் இந்நான்கினும் சுழிகள் மன்னினும் தலைவனை வதைக்கும்.

(திருவிளையாடற்புராணம்)

இதில் குறித்துள்ள சுழி நிலைகளைக் கூர்ந்து நோக்கிக் குதிரைகளின் பான்மை மேன்மைகளை ஓர்ந்து கொள்ளுக.

உயர்ந்தோர் புனித நிலையில் ஒழுகிவரின் அது மனித சமுதாயத்திற்கு இனிமை யாகின்றது. ஞாலம் போற்றி வரும் மேலோர் தம் சீலம் போற்றி வாழ வேண்டும் என்பது கருத்து.

---

300. பான்மை உயரப் படியில் ஒருவன்தன்
மேன்மை வெளியே விரியுமால்—ஆன்மஒளி
எல்லா ரிடமும் இனிதமைந் துள்ளததை
நல்லார் பெறுவர் நயந்து. (ம)

இ-ள்

உள்ளப் பண்பு உயரவே ஒருவன் மேலோன் என உலகில் உயர்ந்து விளங்குகின்றான்; ஆன்ம சோதி எல்லாரிடமும் நன்கு அமைந்துள்ளது; ஆயினும் நல்ல குண சீலர்களே அதனை உரிமை யாகப் பெற்றுப் பெருமை யுறுகின்றார் என்றவாறு.

இது பான்மை அளவே மேன்மை என்கின்றது.

மனிதர் எல்லாரும் உருவ நிலையில் ஒருமையுற்றிருந்தாலும் குண நலங்களின் அமைதிக்குத் தக்கபடியே உயர்வு தாழ்வுகள் உளவாகின்றன. பான்மை = தன்மை, குணம். படி = பூமி, உலகம்.

மேன்மை = நன்குமதிப்பு. எல்லாரும் மேலாக எண்ணித் துதிக்கும் நிலை மேன்மை என வந்தது.

மனம் மொழி மெய்கள் இனிய நீராய் யாண்டும் இதம் புரிந்து ஒழுகும் புனித முடையவர் மனித சமூகத்தில் உயர்ந்த மேன்மையாளராய்ச் சிறந்து திகழ்கின்றார். அந் நிலைமையாளரை உலகம் உவந்து வழிபட நேர்கின்றது.

சொல்லும் செயலும் இழிந்தனவாயின் அவர் இழி நிலை யாளராய்க் கழிந்து படுகின்றனர்.

உருவத் தோற்றத்தில் மனிதராயினும் இயல்பு குன்றவே உயர்வு பொன்றுகின்றது. செயல் உரைகள் அயல் அறிய விரிகின்றன. விரியவே இயல் நிலைகள் எளிது தெரிகின்றன.

நாய் குலைக்கும், கழுதை கத்தும், பன்றி உறுமும் என்பது போல் சிலர் வாய் திறந்தால் தீமை பழி வசை புன்மை முதலிய

இழி மொழிகளே வெளி வருகின்றன. அவ் வரவால் அவரது இருப்பும் பிறப்பும் தெளிவாகின்றன.

நல்ல குலமக்கள் தீய மொழிகளை மறந்தும் பேசார் ஆதலால் அங்ஙனம் பேசுபவரை அப் பேச்சே இன்னார் என்று வெளியே காட்டி விடுகின்றது.

செயல் இயல்களைக் கொண்டே மனிதரது நிலைமைகள் மதிக்கப்படுகின்றன. திருந்திய பண்பும் செவ்விய பயிற்சியுமுடையவன் ஒத்த மனிதருள் உத்தமனாய் ஒளிர்கின்றான்.

"One person primarily differs from another by fineness of nature, and, secondarily, by fineness of training."

(Ruskin)

"இனிய இயல்பும் நல்ல பழக்கமும் ஒரு மனிதனைப் பிறரினின்றும் வேறு பிரித்துத் தனி நிலையில் உயர்த்துகின்றன" என ரஸ்கின் என்பவர் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

பிறப்பினால் மட்டும் மனிதன் பெரியவன் ஆக மாட்டான்; சிறப்பான குண நலங்கள் படிந்த பொழுதுதான் அவன் சீர்த்தி மிகப் பெறுகின்றான்.

ஆன்ம ஒளி எல்லாரிடமும் இனிது உள்ளது.

என்றது மனிதரது இயல்பான புனித நிலைமையை நினைவுறுத்தியது. அந்த அரிய பொருளைப் பழுது படுத்தாமல் இனிது பேணி இன்பம் பெறுக என்பது கருத்து.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

வீரம் கொடைகளால் மேன்மை விளைகின்றது.
மேலான இயல்பினர் மேன்மக்கள் ஆகின்றார்.
மனிதருள் ஞானி மகிமை யுறுகின்றான்.
உதவி அளவே உயர்வு வருகின்றது.
திருந்திய நீர்மைகள் சிறந்த மேன்மையாம்.
புகழையே மேலோர் போற்றி ஒழுகுவார்.
உயிரையும் உதவி உயர்புகழ் பெறுவார்.
அழிதுயர் உறினும் பழிபட வாழார்.
மேலோரை ஞாலம் விழைந்து நோக்கும்.
பான்மை வளர மேன்மை மிளிரும்.

௩0 வது மேன்மை முற்றிற்று.

# முப்பத்தோராம் அதிகாரம்

## சீர்மை.

அஃதாவது சீர்த்திக்கு உரிய சிறந்த தன்மை. அரிய நிலைகளில் நின்று பெரிய காரியங்களைச் செய்தருளும் பேராண்மையாளர் உலகம் புகழ ஒளி மிகுந்து திகழ்கின்றார். அவ் வுயர் தகைமை யாவும் இயல்பாக அமைந்து நேர்மையுடன் நிறைந்தது சீர்மை என வந்தது. நீர்மை நிறைந்த மேன்மக்கள்பால் நிலவி நிற்பது ஆதலால் இது மேன்மையின் பின் வைக்கப்பட்டது.

301. சீரியர் என்னும் சிறந்த பெயரின்கண்
 பேரியல் எல்லாம் பெருகியுள—நேரியல்பு
 கூர்ந்து நினைந்து குறிப்பின் நிலைகளை
 ஓர்ந்து தெளிக வுணர்ந்து. (க)

இ-ள்

சீரியர் என்னும் பெயரில் அரிய பெரிய பொருள்கள் பல பெருகி யுள்ளன; அந்த இயல் நலங்களைக் கூர்ந்து ஓர்ந்து அப் பெயரின் உயர்நிலையை உணர்ந்து கொள்ளுக என்றவாறு.

இது சீர்மையின் சிறப்பு உணர்த்துகின்றது.

உயர்ந்த இனிய குண நலங்களை யுடையவர் சீரியர் என நின்றார். பெரியோர், மேலோர், விழுமியோர், என்பன போலச் சீரியர் என்பதும் மனித கோடிகளுள் தனி மகிமையாளரைக் குறித்து வருகின்றது. வரினும், சீரியர் என்னும் பெயரில் கூரிய பல பொருள்கள் குவிந்து கிடக்கின்றன.

சீர்மை யுடையவர் சீரியர் என வருதலால் அதன் நீர்மையும் நிலைமையும் நேர் தெரியலாகும். திருந்திய உள்ளப் பண்பே சீர்மை ஆதலின் இயற்கை மேன்மையை அது விளக்கி நின்றது. இயல்பான செம்மையில் உயர்வான நன்மைகள் எல்லாம் ஒருங்கே நிறைந்திருக்கின்றன.

மனிதன் முயற்சியால் பெறுகின்ற கல்வி செல்வம் அதிகாரம் முதலிய உயர்ச்சிகள் எல்லாம் சிறப்பு என அமையும். மனப் பண்பின் மேன்மையான பான்மை சீர்மை என நிலவும். புறத்தின்

மினுக்குகளும் அகத்தின் அமைதியும் மகத்துவங்களாய் மருவு கின்றன.

"சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின்." (குறள், 165)

'சீர்மைக்கும் சிறப்புக்கும் உள்ள வேற்றுமையை இதில் காண்க. இயற்கையில் உற்ற மாண்பும் செயற்கையில் பெற்ற மதிப்பும் இழி மொழியால் ஒழியும் என இது விழி தெரிய வைத்தது. விழுமம் மேன்மை சீர்மை சிறப்பு என்பன உயர்வின் வழிமொழிகளாய் அரிய இயல்புகளை இனிது விளக்கி யுள்ளன.

எவ்வழியும் பெருந்தகைமை நிறைந்த சிறந்த மேன்மக்களே சீரியர் என்னும் பேரினுக்கு உரியராகின்றனர். மனித இனத்தில் அவர் அரிய மாட்சி யுடையராய் இனிது திகழ்கின்றனர்.

*சீரியர் கெட்டாலும் சீரியரே; சீரியர்*
*அல்லாதார் கெட்டால் அங் கென்னுகும்?—சீரிய*
*பொன்னின் குடம்உடைந்தால் பொன்னுகும்; என்னுகும்*
*மண்ணின் குடம் உடைந்தக் கால்?* (மூதுரை, 18)

வறுமை முதலிய சிறுமைகள் அடையினும் சீரியருடைய பெருமை குறையாது என ஔவையார் இவ்வாறு கூறியிருக்கிறார். இதனால் அவரது தன்மையும் தகவும் அறியலாகும்.

மனித சமுதாயத்தில் சீரியர் பொன்னைப்போல் பொலிந்து விளங்குகின்றார்; சீரிய அத் தன்மையில்லாதவர் மண்ணைப்போல் மழுங்கிக் கிடக்கின்றனர். என்ன நிலையிலும் பொன் எல்லாராலும் போற்றப் பெறுகின்றது; அன்னவாறே சீரியரும் என்றும் எங்கும் எவ்வழியும் ஏத்தப் பெறுகின்றார்.

"பேர் இயல் எல்லாம் பெருகி உள" என்றது அரிய பெரிய மாட்சிகள் பல அப் பெயரில் மருவி யுள்ளமை கருதி.

சீர்மையால் திவ்விய மகிமைகள் விளைகின்றன.

விழுமிய குண நலங்களைப் பழகி மக்கள் எல்லாரும் மேலோராய் விளங்க வேண்டும் என்பது கருத்து.

---

302. ஆன்ம மணமாய் அறிவொளியாய் ஆர்ந்தொளிரும்
பான்மையே சீர்மை எனப்படிந்து—மேன்மைகள்
யாவும் விளையும் அருள்நிலைய மாமதனை
மேவி மகிழ்க விரைந்து. (உ)

இ-ள்

சீர்மை ஆனது உயிரின் மணமாய் உணர்வின் ஒளியாய் உருவாகி அரிய பல நலங்கள் விளையும் இனிய அருள் நிலையமாய்த் தனி அமைந்துள்ளது; அந்தப் புனித நிலையைப் பொருந்தி மகிழ்க என்பதாம்.

இது, இன்ப நலங்கள் விளையும் இயல்பு கூறுகின்றது.

சீர்மையை ஆன்ம மணம் என்றது அதன் மேன்மையை நினைந்து. மலருக்கு வாசனை போல் உயிருக்குச் சீர்மை உயர் உரிமையா யுள்ளது. அஃது இல்லையேல் மணம் இல்லாத மலர் போல் மனிதன் மழுங்கி மாண்பிழந்து படுகின்றான்.

எதையும் தெளிவாக விளக்கி உடலுக்கு விழிபோல் உயிர்க்கு ஒளி புரிந்து வழிசெய்து வருவது அறிவு. அந்த அரிய அறிவும் சீர்மையை உரிமையுடன் மருவாத பொழுது பெருமை யிழந்து சிறுமை யுறுகின்றது.

"அரம்போலும் கூர்மையர் ஏனும் மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர். (குறள், 997)

எவ்வளவு கூர்மை யுடையதாயினும் சீர்மை இலதாயின் அந்த அறிவு பாழாம் என இதில் குறித்திருக்கும் வேகத்தைக் கூர்ந்து நோக்குக. உள்ளத்தில் செம்மை யுள்ளவன் ஒள்ளியனாய் உயர்ந்து திகழ்கின்றான்; அஃது இல்லாதவன் தெள்ளிய அறிவுடையனாயினும் புல்லியனாய் இழிந்து கழிகின்றான்.

மேன்மைகள் யாவும் விளையும் அருள் நிலையம்.

சிறந்த மகிமைகள் எல்லாம் சீர்மையால் விளைந்து வருதலால் அது இங்ஙனம் புகழ்ந்து போற்றப்பட்டது.

உணர்வையும் உயிரையும் ஒளி செய்து உயர்த்தி எங்கும் எவர்க்கும் இனியராய் மிளிர்தலால அவர் சீராளர் ஏனச் சிறந்து திகழ்கின்றார். உயர் மேன்மைக்குச் சீர்மை உயிராயுள்ளது.

செல்வம் கல்வி குடிப் பிறப்புகள் ஓரளவு பெருமை தரும் ஆயினும் உண்மையான சீர்மை இல்லையாயின் அவை சிறுமையாய் ஒழியும்.

"ஐதுகுடியில் பிறந்து அருநூல் ஆய்ந்து செல்வத்துயர்ந்ததனல்
எய்தலரிது பெருமை; அஃது எய்தும் கொடை ஒப்புரவாதி
செய்தற்கரிய செய்து, பிறர் செயிர் கூறமல், செருக்காமல்
உய்தி நெறியில் பிறழாமல் ஒழுகுவார்க்குள் ளுதிமைந்தா."

(விநாயக புராணம்)

பெருமை பிறக்கும் வழிகளை இதனல் அறிகின்ரும்.

உள்ளப்பண்பாலும் நல்ல செயலாலும் மனிதன் உயர்கின்றுன்.

---

303. உண்ணும் உணவின்கண் உப்பென்ன உற்றவாழ்
வெண்ணும் நிலைகள் எவற்றினும்—நண்ணித்
திருந்தி வருபண்பே சீர்என் பெயரால்
பொருந்தி மிளிரும் புறம். (௩)

இ-ள்

உண்ணுகின்ற உணவின்கண் உப்பைப் போல எண்ணுகின்ற எண்ணங்கள் எல்லாவற்றிலும் இனிமை சுரந்து வருவதே சீர் எனப் பேர் அமைந்துள்ளது என்க.

மனிதனுடைய வாழ்க்கை பலவகை நிலைகளை யுடையது. அவை யாவும் திருந்திய பண்பும் சீர்மையும் உடையனவாய்ப் பொருந்தி யிருக்க வேண்டும் என இது உணர்த்துகின்றது.

சீர் என்பது செம்மை திருத்தம் செப்பம் முதலியவற்றைக் குறித்து வரும். காரியங்களைத் திருந்திய நிலையில் செவ்வையாக முடித்தருளும் நீர்மை சீர் என நேர்ந்தது. சீர் திருத்தம் என வழங்கி வரும் வழக்கு மொழியால் இந்தப் பேரின் இயல்பையும் உயர்வையும் அறியலாகும்.

எண்ணும் நிலைகள் என்றது மனிதன் கருதி எழுகின்ற கரும வகைகளை. எண்ணமும் செயலும் உரையும் எவ்வழியும் பின்னம் உறுமல் திருந்திய வகையில் சிறந்து வர வேண்டும்.

செப்பத்தின் நுட்பம் தெரிய உப்பு உவமையாய் வந்தது.

உணவுகளில் உப்பு இல்லையாயின் அவை சுவை கெட்டுச் சப்பென்று இருக்கும். காரியங்களில் சீர் இல்லையாயின் அவை வீரியம் குன்றி விளிந்து படும். எத் தொழிலைச் செய்தாலும் எதைப் பேசினாலும் அவை சீர்மையுடையனவாய் யாண்டும் நீர்மையுடன் நிலவி வரின் நிறைந்த பயன்கள் விளைந்து வரும்.

செய்யும் வினைகளை எவ்வகையும் செவ்வையாக நோக்கித் திருந்தச் செய்; பேசுகின்ற வார்த்தைகளை யாதும் பிழைபடாமல் அளந்து அறிந்து விழுமிய நிலையில் இதமாகவும் இனிமையாகவும் பேசு. அவ்வாறு ஆயின் நீ சீரியனாய்ச் சிறந்து திகழ்வாய்.

உறுதி நலங்களைக் கருதி உணராமல் காரியங்கள் செய்தலும், கண்டபடி பேசலும் அறிவுநலம் குன்றிய சிறியவர் செயல்களாம்; அவை பெரியவர்களால் மதிக்கப்படா.

பிழைபாடான அப் பழிவழிகளில் பட்டு இழியாமல் விழி தெளிந்து எழுந்து நயனும் பயனும் விளைய எதனையும் வியனாகச் செய்க. செயலின் அளவே உயர்நிலை உளதாம்.

உள்ளம் திருந்தி, உறுவினைகள் திருந்தி, உரைகள் திருந்தி உயர் நிலைகள் வளர்ந்து வருவோரே சீர்மையாளராய்ச் சிறந்து யாரும் புகழப் பாரில் விளங்கி நிற்கின்றார்.

தன்னைக் கைக் கொண்டவனைச் சீராளன் என்னும் பேராளனாக்கிப் பெருமைப் படுத்தி வருதலால் சீர்மையின் அருமை அறியலாகும். சீர் புரிந்தவன் சீர்த்தி பெறுகின்றான்.

---

304. எவ்வழியும் வாழ்வை இனிது புரந்துவரும்
செவ்விய நீர்மையே சீர்மையாய்—வெவ்வழி
யாதும் மருவா தறிவு நலங்கனிந்து
போதும் அழகு பொலிந்து. (௪)

இ-ள்

வாழ்க்கையை எவ்வழியும் செவ்விதாக்கி யாதொரு தீதும் நேராமல் யாண்டும் பெருமை புரிந்து அறிவு நலங்கள் கனிந்து அழகு மிகுந்து மிளிர்வதே சீர்மை என வெளியில் விளங்குகின்றது; அவ் வழியில் உயர்ந்து வருக என்பதாம்.

இது சிறப்புடையன எல்லாம் சீருடையன என்கின்றது.

வினை வயத்தராய் வந்துள்ள மனிதர் பல திறத்தராய் நிலவி நிற்கின்றனர். அவ்வாறே அவருடைய வாழ்வுகளும் சூழ்வுகளும் வேறு வேறு வகைகளாய் விரிந்திருக்கின்றன. விரிந்து பரந்துள்ள அவ் வாழ்க்கை நிலைகள் எல்லாம் திருந்திய பண்பும் செவ்வியும் உடையனவாய்ச் சிறந்திருக்க வேண்டும்; அங்ஙனம் அமைந்த போதுதான் உயர்ந்த மேன்மையும் உறுதி நலனும் அவை உதவியருளும். சீர் உற்ற வாழ்வு பேர் பெற்று உயர்கின்றது.

எவ்வழியும் என்றது குடும்ப காரியங்களிலும், பிறரோடு பழகிவரும் பழக்கவழக்கங்கள் முதலிய எல்லா நிலைகளிலும் என்க.

செவ்விய நீர்மையே சீர்மை.

மனக் கோட்டம் இன்றி யாண்டும் நேர்மையாய் நீதியும் நெறியும் மருவி வரும் நிலைமையே சீர்மையாம் என அதன் உருவக் காட்சியை இங்ஙனம் உணர்த்தியது, உரிமையான இயல்புகள் யாவும் தெரிய. அகமும் புறமும் தகவுறின் மிகவும் பெருமையாம்.

எவ்வகையிலும் இனிமை சுரந்து எதையும் செம்மை செய்து நன்மை புரிந்து வருதலால் சீர்மை தெய்வத் தன்மையாய் உய்வைத் தந்து ஒளி மிகுந்தருள் கின்றது.

"முன்னைஎன் வினையினாலே மூர்த்தியை நினைய மாட்டேன்;
பின்னைநான் பித்த னாகிப் பிதற்றுவன் பேதையேன் நான்;
என்னுளே மன்னி நின்ற சீர்மையது ஆயி னானை
என்னுளே நினைய மாட்டேன் என்செய்வான் தோன்றினேனே!"

(தேவாரம்)

சீர்மை வடிவமாய் இறைவன் என் உள்ளே எழுந்தருளியிருக்கிறான்; சீராளனை அப் பேராளனை நினைந்து மகிழாமல் மறந்து விட்டு உலக நிலைகளில் பறந்து உழல்கின்றேனே என அப்பர் உருகி உரைத்துள்ள இப் பாசுரம் ஈண்டு உணர வுரியது.

நினைவு சொல் செயல்களில் மனிதன் சீர்மை பேணிவரின் கடவுளை அவன் நேரே காணுவன் என்பது இதனால் காணலாகும்.

வெவ்வழி யாதும் மருவாது என்றது யாதொருகொடுமையும் இன்றி எங்கும் இனிமை சுரந்து நிற்பவரே மனித சமுதாயத்தில் சீரியர் ஆகின்றார் என்பது தெரிய வந்தது.

நல்லநீர்மைகளைப் பழகிச் சீரியன் என்னும் பேரினைப்பெறுக.

"சீர்மை மறவேல்" எனப் பாட்டி பரிந்து கூறி யுள்ளதை மறந்து விடாதே. சிறந்த குணநலங்களைச் சீர்மையுடன் அடைந்த பொழுதுதான் உயர்ந்த மனிதனாய் விளங்க முடியும்.

---

305. வஞ்சம் படியாமல் வாய்மை அருள்நீதி
நெஞ்சம் படிய நெறிசெய்து—அஞ்சும்
இனிய நிலையில் இயங்க இயங்கின்
கனியும் மகிமை கனிந்து. (ரு)

இ-ள்

நெஞ்சில் வஞ்சனை படியாமல் சத்தியம் கருணை நீதிகள் நிறைந்து நெறி முறை புரிந்து ஐம்பொறிகளும் இனிய வழிகளில் ஒழுகிவரின் விழுமிய மகிமைகள் பெருகி வரும் என்க.

வஞ்சம் என்பது நெஞ்சக் கரவு. உள் ஒன்று வைத்துப், புறம் ஒன்று பேசி, அயல் ஒன்று செய்யும் எள்ளற் பாடுகளுக் கெல்லாம் மூல காரணமாய் மூண்டுள்ளமையால் இது பொல்லாப் புன்மையாக எல்லாராலும் இழிக்கப் பட்டது. செம்மை நேர்மை களுக்கு இது நேர் விரோதமானது. தன்னைக் கொஞ்சி அணைத் தவரை வஞ்சகர் என வையம் பழித்து வெறுக்கும்படி செய்து விடுகின்றது. இவ் வெய்யது நெஞ்சு புகுந்தால் நேர்மை குன்றும்; சீர்மை பொன்றும்; நீர்மையின்றி நிலை தளர நேரும்.

தன்னை யுடையவரைச் சின்னவராக்கிச் சீரழிக்கின்ற இப் புன்மை புகாமல் காத்து நன்மைகளை வளர்க்க வேண்டும்.

நெஞ்சில் வஞ்சத்தைக் கொள்வது கண்ணில் மண்ணை வாரிப் போட்டது போலாம். எல்லா நன்மைகளுக்கும் உள்ளம் இடமாய் உள்ளது; அதனைப் பழுது படுத்தாமல் பண்படுத்த வேண்டும்.

"நெஞ்சப் புனத்து வஞ்சக் கட்டையை
வேரற அகழ்ந்து போக்கித் தூர்வை செய்து,
அன்புஎன் பாத்தி கோலி, முன்புற
மெய்எனும் எருவை விரித்து, ஆங்கு ஐயமில்
5. பத்தித் தனிவித்துஇட்டு, நித்தலும்
ஆர்வத் தெண்ணீர் பாய்ச்சி, நேர் நின்று
தடுக்குநர்க்கு அடங்காது இடுக்கண் செய்யும்

பட்டி அஞ்சினுக்கு அஞ்சி, உட்சென்று
சாந்த வேலி கோலி, வாய்ந்தபின்

10. ஞானப் பெருமுளை நந்தாது முளைத்துக்
கருணை இளந்தளிர் காட்ட, அருகாக்
காமக் குரோதக் களையறக் களைந்து
சேமப் படுத்துழிச் செம்மையின் ஓங்கி
மெய்ம்மயிர்ப் புளகம் முகிழ்த்திட்டு அம்மெனக்

15. கண்ணீர் அரும்பிக் கடிமலர் மலர்ந்து
புண்ணிய அஞ்செழுத்து அருங்காய் தோன்றி
நஞ்சுபொதி காள கண்டமும் கண்ணொரு மூன்றும்
தோளொரு நான்கும் சுடர்முகம் ஐந்தும்
பவளநிறம் பெற்றுத் தவளநீறு பூசி

20. அறுசுவை அதனினும் உறுசுவை உடைத்தாய்க்
காணினும் கேட்பினும் கருதினும் களிதரும்
சேணுயர் மருத மாணிக்கத் தீங்கனி
பையப் பையப் பழுத்துக் கைவர
எம்மனோர்கள் இனிதின் அருந்திச்

25. செம்மாந்து இருப்பச்; சிலர் இதின் வாராது,
மனமெனும் புனத்தை வறும் பாழாக்கிக்
காமக் காடு மூடித் தீமை செய்
ஐம்புல வேடர் ஆறலைத்து ஒழுக
இன்பப் பேய்த்தேர் எட்டாது ஓடக்

30. கல்லா உணர்வு எனும் புல்வாய் அலமர
இச்சை வித்து உகுத்துழி யான் எனப்பெயரிய
நச்சு மாமரம் நனிமிக முளைத்துப்
பொய்என் கவடுகள் போக்கிச், செய்யும்
பாவப் பல்தழை பரப்பிப் பூ எனக்

35. கொடுமை அரும்பிக் கடுமை மலர்ந்து
துன்பப் பல்காய் தூக்கிப் பின்பு
மரணம் பழுத்து நரகிடை வீழ்ந்து
தமக்கும் பிறர்க்கும் உதவாது
இமைப்பிற் கழியும் இயற்கையோர் உடைத்தே."

(திருவிடைமருதூர் மும்மணிக் கோவை)

வஞ்சம் களைந்து நெஞ்சத்தைப் பண்படுத்தி வாய்மை அருள் முதலிய குணநலங்களை மருவியுள்ளவர் பேரின்ப நிலையை எய்து கின்றார்: அங்ஙனமின்றி மனத்தைப் பாழ்படுத்தி இழிவழிகளில் களித்து நின்றவர் அழிநரகு அடைகின்றார் எனப் பட்டணத்துப் பிள்ளையார் இங்ஙனம் பரிந்து கூறியுள்ளார். பொருள் நிலைகளைக் கூர்ந்து ஓர்ந்து குண நலங்களைத் தேர்ந்து கொள்க.

உயர் கதியையும், இழி நிலையையும் விழி தெரிய விளக்கி, உருவக முறையில் பரிவுடன் உரைத்துள்ள இந்த அருமைப் பாடல் நாளும் நினைவில் வைத்துச் சிந்திக்கத் தக்கது.

அஞ்சும் என்றது கண் காது முதலிய ஐந்து பொறிகளை.

அவை இனிய நெறியில் புனிதமாக ஒழுகின் அரிய மேன்மைகள் யாவும் உரிமையுடன் அமையும்.

மெய் வாய் கண் மூக்குச் செவிஎனப் பேர்பெற்ற
ஐவாய வேட்கை அவாவினைக்—கைவாய்
கலங்காமல் காத்துய்க்கும் ஆற்ற லுடையான்
விலங்காது வீடு பெறும். (நாலடியார்)

புலன்களைப் போற்றி ஒழுகுபவர் இங்ஙனம் நலன்களைக் காண்கின்றார். சித்த சுத்தி வாய்ந்து சத்தியம் கருணை சாந்தம் முதலிய உத்தம நீர்மைகளைப் பேணி உத்தமராய் உயர்க.

---

306. வருங்காலங் கண்டு வரவறிந்து வாழ்வின்
மருங்கான யாவும் மதித்துச்—சுருங்கா
வகையோர்ந்து செய்யும் மதியுடையார் சீரின்
தொகையார்ந்து நின்றார் தொடர்ந்து. (சு)

இ-ள்

எதிர்காலநிலையைஎண்ணி, உரிய வரவின் அளவை உணர்ந்து, மனைவாழ்க்கையின் வகைகளையெல்லாம் நன்கு சிந்தித்து யாண்டும் குறைவு உறாமல் கூர்ந்து பேணி வருவோரே தேர்ந்த சீர்மையாளராய்ச் சிறந்து விளங்குவார் என்றவாறு.

இது எதையும் எதிர் நோக்கி வாழ்க என்கின்றது.

மனிதன் சிறந்த மதிநலம் உடையவன்; முன்னும் பின்னும் எண்ணி நோக்கும் இயல்பினன்; இறந்த காலம் நிகழ் காலம்

வருங்காலம் என்னும் கால நிலைகளைக் கருதி யுணர்ந்து உறுதி நாடும் நிலையினன்; இத்தகைய உயர்ந்த நிலையை அடைந்திருந்தும் தகுந்த பயனை அடையாமல் அயர்ந்து விடுகின்றான். அவ்வாறு அயர்ந்து வீழாமல் யாண்டும் விழிப்பாய் உயர்ந்து வாழவேண்டும் என இது உணர்த்துகின்றது.

வருங் காலம் கண்டு என்றது வந்த காலத்தின் அனுபவத்தைக் கொண்டு பின்பு நேர்கின்ற காலத்தின் நிலைகளை நன்கு தெரிதலை. இங்ஙனம் கருதி வாழ்பவன் வாழ்வு பெரும் பயனுடையதாய் உறுதி மிக அடைகின்றது.

*எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு இல்லை*
*அதிர வருவதோர் நோய்* (குறள், 429)

வருவதை முன் அறிந்து பேணும் அறிவுடையானுக்கு யாதொரு துன்பமும் நேராது; அவன் யாண்டும் மன அமைதியுடன் இனிது வாழ்வன் என்றமையால் கருதி வாழ்வது குடும்ப வாழ்க்கைக்கு எவ்வளவு உறுதி யுடையது என்பது உணரலாகும்.

வாழ்வின் மருங்கு என்றது குடிவாழ்க்கையின் பலவகையான நிலைகளை. மருங்கு=பக்கம், ஒழுங்கு.

தந்தை தாயரைப் பேணுதல், வந்த விருந்தினரை உபசரித்தல், மைந்தரை வளர்த்தல், மதி நூல் கற்பித்தல், தொழில் முறையில் நிற்பித்தல், ஊருடன் உழைத்தல், நாடுடன் நயத்தல் முதலாகப் பலவகை நெறிகளிலும் நிலை திரியாமல் நெடிது பேணி வருதல் குடி வாழும் குல மகனுக்கு உரிய கடமையாம்.

தனக்கு நேர்ந்துள்ள வாழ்க்கை வகைகளில் யாதொரு வழுவும் நேராமல் வளமும் வனப்பும் எவ்வழியும் பெருகி வரும்படி செய்து வருவோனே செவ்விய சீர்மையாளனாய்ச் சிறந்து நிற்கின்றான். அந் நிலையினை அடைதல் நிறை பெருந் திருவாம்.

சுருங்கா வகை ஓர்ந்து என்றது பொருளும் புகழும் குறையாது புரிதலை. செம்மையான நெறிகளில் பண்படுத்தி வாழ்க்கையை உயர்ந்த குறிக் கோளுடன் வளர்த்துவரின் அது சீரிய குடும்பமாய்ச் சிறந்து மிளிர்கின்றது.

தன் மதி நலத்தால் விதி விலக்குகளைத் தெளிந்து உலக ஒழுக்கையும் உணர்ந்து நிலையை உயர்த்தி ஒழுகலே நேரிய சீர்மையாம். செவ்விய ஒழுக்கு எவ்வழியும் இனிமை புரிகின்றது.

"எவ்வகை உலகத்துள்ளார் இயல்புடன் ஒழுகுகின்றார்
அவ்வகை ஒழுக்கின் நின்றே அழிவன வருமுன் காத்துத்
தவ்வெனும் பழிபாவங்கள் தபுதி எய்தாமை அஞ்சிச்
செவ்விய நெறியில் நாளும் செலுத்துக பொறிகள் ஐந்தும்."

இவ்வாறு நெறி புரிந்து வாழின் நிலையான புகழும் தலையான இன்பமும் தழைத்து வரும். அவ் வரவுகளை உரிமை செய்து கொள்க.

---

307. வெறும்புற்கை யாயினும் வேண்டும் எனக்கொண்
டெறும்பும் எதிர்நோக்கி வாழும்—ஒறும்பு
வராவகை நாடிநீ வாழ்க வழுவின்
இராவகை நீடும் இடர். (எ)

இ-ள்

எறும்பும் தனக்கு வேண்டிய சிறிய உணவை உரிமையோடு பாதுகாத்து ஒழுகும்; மனிதனாகிய நீ எவ்வழியும் இடர் நேரா வகை உரிய பொருள்களைப் பேணி உணர்வுடன் வாழ வேண்டும்; இலதேல் இழிதுயர்கள் நேரும் என்க.

வருவதை எதிர் அறிந்து வாழ்வதே சீரிய வாழ்வாம் என முன்பு குறித்ததைத் தெளிவுறுத்த ஒரு சிறிய பிராணியை எதிர் காட்டி உறுதி நலனை இது வலியுறுத்துகின்றது.

புற்கை = சிறிய சோற்றுப் பருக்கை.

எறும்பு மிகவும் சிறிய பிராணி. கூட்டம் கூட்டமாய்ச் சேர்ந்து வாழும் இயல்பினது. சுறுசுறுப்புடையது. தமக்கு வேண்டிய இரைகளை விரைந்து தொகுத்து வைத்துக் கொள்வதில் இவை சிறந்து நிற்கின்றன.

எறும்பும் எதிர் நோக்கி வாழும் என்றது அதன் சிறந்த இயல்பினை நினைந்து. மழை பெய்யும் என்பதை எதிர் அறிந்து தம் குட்டி குஞ்சிகளோடும் இட்ட முட்டைகளையும் கவ்விக் கொண்டு தாம் இருந்த இடத்தை விட்டு வெளியேறி மேட்டு நிலத்தை எறும்புகள் அடைந்து கொள்ளும்.

"பொய்யா எழிலி பெய்விடம் நோக்கி
முட்டை கொண்டு வற்புலம் சேரும்
சிறுநுண் எறும்பின் சில்ஒழுக்கு ஏய்ப்பச்
சோறுடைக் கையர் வீறுவீறு இயங்கும்
இருங்கிளைச் சிறாஅர்க் காண்டும்." (புறம், 173)

பண்ணன் என்னும் உபகாரி வீட்டில் உறவினர் எல்லாரும் பிள்ளைகளுடன் வந்து நல்ல உணவுகளை உண்டு சோறுடைக் கையராய் வெளியே செல்லும் காட்சி தம் முட்டைகளை வாயில் கவ்விக் கொண்டு எறும்புகள் போவது போல் இருந்தது எனக் கிள்ளிவளவன் என்னும் சோழ மன்னன் இவ்வாறு கூறியிருக்கிறான். வற்புலம்=மேட்டுநிலம். எழிலி=மழை.

மழை பெய்யும் காலத்தை முன்னுற அறிந்து தமக்கு அல்லல் உறாத நல்ல இடத்தை ஒல்லையில் தேடிக் கொள்ளும் வல்லமை எறும்புகளிடம் அமைந்திருத்தலை இதனால் உணர்ந்து கொள்கின்றோம்.

எறும்புகள் முட்டைகளை எடுத்துக் கொண்டு வேறிடம் செல்வதைக் கண்டால் கட்டாயம் மழை பெய்யும் என்பதை மக்கள் உறுதி செய்து கொள்ளுகின்றனர்.

பின் விளைவதை முன்தெளிவித்து மனிதர்க்கு அறிவுகாட்டும் நன்னய நாகரீகம் எறும்பிடை இசைந்துள்ளமை வியந்து கொள்ளவுரியது.

“வாராக் காலத்து வினைச்சொற் கிளவி
இறப்பினும் நிகழ்வினும் சிறப்பத் தோன்றும்
இயற்கையும் தெளிவும் கிளக்கும் காலை.”

(தொல்காப்பியம், வினை இயல், 48)

எதிர் காலத்திற்கு உரிய வினைச்சொல்லின் பொருள், தெளிவு குறித்து வருங்கால் இறந்த காலச் சொல்லானும், நிகழ் காலச் சொல்லானும் வழங்கலாகும் என்பது இச் சூத்திரத்தின் விதி. இதன் உரைக்கு உதாரணம் காட்டிய உரை ஆசிரியர் எல்லாரும் இந்த எறும்பையே விரும்பிக் குறித்திருக்கின்றனர்.

“எறும்பு முட்டை கொண்டு தெற்றி ஏறின் மழை பெய்தது; மழை பெய்யும் என்பது தெளிவு.” என இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் முதலிய அனைவரும் எழுதியுள்ளமையால் இதன் பழமையும் வழி முறைமையும் தெளிவாம்.

எதிர் நோக்கி வாழும் திறத்தில் எறும்பு இங்ஙனம் சிறந்திருத்தலால் அஃது ஈண்டு எடுத்துக் காட்ட நேர்ந்தது.

எறும்பும் என்பதில் உள்ள உம்மை அதன் உருவின் சிறுமை தெரிய வந்தது. சிறிய எறும்பின் சீர்மை கண்டாவது அரிய மனிதன் மேன்மை காண வேண்டும்.

இரைகளைச் சேகரிக்கும் திறத்தில் அதன் விரைவும் வேகமும் வியப்பு மிக வுடையன. Ant-like labour என மேல் நாட்டாரும் எறும்பின் உழைப்பை உவமை காட்டியுள்ளனர்.

சின்ன எறும்புழைக்கும் சீர்மையினை நேர்கண்டும்
மன்னு மனிதர் மடிமண்டிக்—கொன்னே
புவிக்குச் சுமையாய்ப் புலையாடி நிற்றல்
அவிக்கும் உளத்தை அது.

எறும்பின் சீரிய உழைப்பைப் பார்த்தும் மனிதன் சீர் திருந்தாமல் சோம்பித் திரிவது பரிதாபமாகின்றது.

"ஒறும்பு வரா வகை வாழ்க" என்றது பொருள் முட்டுப்பாடு யாதும் உண்டாகாதபடி சீருடன் வாழுக என உரிமையோடு வேண்டிய படியாம். ஒறும்பு=குறைவு.

குடி வாழ்க்கை படி ஒழுக்கம் முதலிய நிலைகளில் யாதொரு குறையும் நேராதவாறு ஓர்ந்து வாழ்தலே தேர்ந்த சீர்மையாம்.

---

308. நீதி நெறியில் நிலைத்துநின்றார் என்றும்
தீதிலராய் ஓங்கித் திகழுவார்—நீதி
தனையகன்றார் சாய்ந்து தளர்வார் தனிவேர்
மனையகன்றால் என்னும் மரம். (அ)

இ-ள்

நீதி ஒழுக்கங்களில் நிலைத்து நிற்பவர் என்றும் யாதொரு தீதும் இன்றி யாண்டும் உயர்ந்து விளங்குகின்றார்; நீதி முறை தவறினவர் வேர் அற்ற மரம்போல் நிலை குலைந்து இழிந்து படுகின்றார் என்பதாம். மனை = இடம், நிலம்.

நல்ல இன்பங்களையே எல்லாரும் விரும்புகின்றனர்; தீய துன்பங்கள் யாதும் தம்பால் சேரலாகாது என்று யாவரும் கருதுகின்றனர். இங்ஙனம் தாம் கருதிய படியே துயர் நீங்கி உயர் நலங்களை அடையும் வழி வகையை இது உணர்த்துகின்றது.

வழி தவறி நடந்தால் முள்ளும் கல்லும் தொல்லைப்படுத்தும்; நெறிதவறி நடந்தால் அல்லலும் அவமானமும் அடர்ந்து வருத்தும். அல்வழி செல்லாதே; நல்வழி நட.

நீதி நெறி என்பது உயிர்கள் உயர்நிலை அடைதற்குரிய ஒழுக்க முறைகளே. வேத விதியாய் வந்துள்ள அவற்றை விழைந்து பேணி வருபவர் உயர்ந்த மேன்மக்களாய் விளங்கி நிற்கின்றனர்.

மனித சமுதாயம் புனிதம் உடையனவாய் இனிது உயரும் படியான வழிகள் முன்னோரால் எந்நாட்டிலும் வகுக்கப்பட்டுள்ளன. அந்நெறி வழுவாமல் ஒழுகி வருபவரை நீதிமான்கள் தருமவான்கள் என உலகம் உவந்து கொண்டாடுகின்றது.

தருமநெறியில் ஒழுகுகின்றவனுக்கு எல்லாப்பெருமைகளும் தாமாகவே வந்து சேருகின்றன. புகழும் புண்ணியமும் பெருகி வருதலால் அவன் என்றும் நிலையான பேரின்ப நலனை அடைந்து கொள்கின்றான்.

நீதியைத் தழுவி ஒழுகிய பொழுதுதான் மனிதன் உண்மையான உயிர் வாழ்க்கையை உடையவனாகின்றான். தழுவாது வழுவின், அது செத்த வாழ்க்கையாய்ச் சீரழிந்து ஒழிகின்றது.

"In the way of righteousness is life; and in the pathway thereof there is no death." (Bible)

"நீதி நெறியில் உயிர் ஒளி பெறுகின்றது; அவ் வழியில் மரணம் இல்லை" என்னும் இது ஈண்டு எண்ணத்தக்கது.

தருமம் தவறின் அவ் வாழ்வு பரிதாபமாய் இழிந்து படுகின்றது.

"அறத்தினது இறுதி வாழ்நாட்கு இறுதி; அஃது உறுதி."
(இராமாயணம்)

என இராமன் சுக்கிரீவனுக்கு இவ்வாறு போதித்திருக்கிறான்.

வேர் அற்ற மரம் அடியோடு வீழ்ந்து படுதல் போல் தருமம் அற்றவன் குடியோடு தாழ்ந்து கெடுகின்றான்.

நீதியை வேர் என்று குறித்தது உயிர் வாழ்க்கைக்கு உறுதி பயந்து நிற்கும் அதன் தகுதி கருதி. தரும வழி ஒழுகி இருமை நலனும் பெறுக.

309. ஒத்த மனிதர் உயர்வாக எண்ணுவது
சித்தம் உயர்ந்த செயலேகாண்—சித்தம்
புனிதமாப் பேணிப் புரந்து வருக
இனியசீர் எய்தும் இவண். (௯)

இ-ள்

மக்கள் குழுவில் ஒருவனை உயர்ந்தவன் என எண்ணுவது அவனுடைய உள்ளத்தின் தகுதியை நோக்கியே ஆதலால் மனத்தைப் புனிதமாகப் போற்றிவரின் அரிய பல மேன்மைகள் உரிமையுடன் தாமாகவே விரைந்து வந்து சேரும் என்பதாம்.

இது உயர்ச்சி விளைகின்ற மூல நிலையை உணர்த்துகின்றது.

உருவத் தோற்றம் முதலிய பிறப்பு நிலைகளில் ஒரு நிகரனவாய் அமைந்துள்ள மனிதர் சில சிறப்பு நலங்களால் வேறுபாடு பெற்று மேன்மையான மகிமைகளை மேவியுள்ளனர்.

அங்ஙனம் உயர்ந்துள்ளமைக்குக் காரணம் அவருடைய உள்ளப் பண்பேயாம். புறத்தில் விரிந்துள்ள ஆடம்பரங்களால் ஒரு மனிதனுக்கு உண்மையான மதிப்பு வருவதில்லை. எண்ணத்தின் தூய்மை அளவே அவன் ஏற்றமாய் மதிக்கப் படுகின்றான். மனம் உயர மனிதன் உயர்கின்றான்.

பெரியோர், மேலோர் என்னும் புகழ்ச்சிமொழிகள் எல்லாம் உள்ளத்தின் பரிபக்குவங்களை நோக்கி எழுந்தன. பெருமை மேன்மை என்னும் பண்புரிமைகளை மருவி வந்துள்ளமையான் அவர்தம் அருமையும் அமைதியும் அறியலாகும்.

"சித்தம் உயர்ந்த செயலே காண்" என்றது உயர்ச்சியின் மூலகாரணத்தை உய்த்துணர வந்தது. உன் உள்ளத்தைத் தூய்மை ஆக்கு; உலகம் உன் கைவசமாகும். தூய்மையுள் எல்லா மகிமைகளும் தோய்ந்திருக்கின்றன. அது வர யாவும் வருகின்றன.

மனம் புனிதமாய் உயர்ந்தபொழுது மனிதன் மகான் ஆகின்றான். அது மலினமாய் இழிந்துபடின் அவன் இழிமகனாய்க் கழிந்து போகின்றான். பெருமையும், சிறுமையும், இன்பமும், துன்பமும் மனத்தின் நலம் தீங்குகளால் முறையே மருவி வருதலால் அதன் நிலைமையும் தலைமையும் நீர்மையும் அறியலாகும்.

"நல்ல செய்து நரரை உயர்த்தவும்,
அல்ல செய்து அங்கு அளற்றிடை ஆழ்ப்பவும்,
வல்லது இந்த மனம் அலது ஐயனே
இல்லை என்ன இயம்பும் மறை எலாம்."

(பிரபுலிங்க லீலை)

மனத்தின் ஆற்றலையும், அதனால் விளையும் ஏற்றத்தாழ்வுகளையும் இது உணர்த்தி நிற்றல் அறிக. அளறு=நரகம். மனிதனை முத்தியில் உயர்த்தவும், நரகத்தில் தள்ளவும் மனம் வல்லதாயுள்ளது. அதனை நல்லதாக நயந்து பேணின் நலம் பல உளவாம்; இல்லையேல் அல்லலை விளைத்து அவகேடுகள் செய்து விடும்.

"The mind is its own place, and in itself
Can make a Heaven of Hell, a Hell of Heaven."

(Paradise Last)

"மனம் தன் நிலையில் நின்றுகொண்டே சுவர்க்கத்தை நரகம் ஆகவும், நரகத்தைச் சுவர்க்கம் ஆகவும் ஆக்க வல்லது" என மில்டன் Milton என்னும் ஆங்கில மகா கவி இங்ஙனம் கூறியுள்ளார்.

இத்தகைய அரிய மனத்தைப் புனிதமாக்கிக் கொண்டவன் எல்லா மகிமைகளையும் எளிதில் அடைகின்றான்.

சிறந்த சீர்மையாளனாய் நீ உயர்ந்து திகழ வேண்டின் உன் மனத்தில் யாதொரு தீங்கும் படியாமல் பாதுகாத்து அதனை நல்ல நீர்மையில் பேணி வருக.

இவண் இனிய சீர் எய்தும்.

என்றது இம்மையில் உளவாகும் புகழ் நலங்களை. இவண் என்றது இந்த உலக வாழ்க்கையை. இங்கே இனிய சீர்த்தியை அடைந்து மறுமையில அரிய இன்ப நலனையும் பெறுவன் என்க.

இருதயம் பண்புற இருமையும் இன்புறுகின்றான்.

---

310. எல்லா இளிவும் எளிதுறுத்தி ஈரவல்ல
பொல்லா வறுமை புகுந்தாலும்—நல்லார்சீர்
குன்றார் ஒளியேமீக் கொண்டுநிற்பர் தீப்புகினும்
பொன்றுமோ என்றுமே பொன். (ய)

இ-ள்

சிறுமைகள் பல நிறைந்த வறுமை புகுந்து வாட்டினும்

மேலோர் தம் அருமை குலைந்துபடார்; நெருப்பில் இட்ட பொன் போல், மேலும் பெருமை மிகுந்தே பெருகி நிற்பர் என்றவாறு.

இது சீரியர் எவ்வழியும் செவ்வி சிதையார் என்கின்றது.

பொல்லா வறுமை என்றது எவரையும் அல்லல் உறுத்தி அவம் படுத்தும் அதன் கொடுமை உணர வந்தது.

சிறுமை பல செய்து இருமையும் சிதைக்கும் இயல்பினதான வறுமை புகுந்து வருத்தினும் மேலோர் தம் பெருமை குலையாது நிற்பர் என்றதனால் அவரது அருமை நிலை அறியலாகும்.

நல்லார் என்றது குணநலங்களையுடைய மேலோரை.

சீர் குன்றார்; ஒளியே மீக்கொண்டு நிற்பர்.

அல்லல்கள் அடர்ந்த பொழுதும் நல்லவர் தம் நிலைமை குலையார்; மேலும் தேசு மிகுந்து மேன்மை மீதூர்ந்து திகழ்வர் என்றது புனிதமான அவர்தம் உள்ளப்பான்மையை உணர்த்தி நின்றது. ஆன்ம பரிபாக முடையவரது நீர்மை யாண்டும் மேலோங்கி வருகின்றது.

தீ வறுமைக்கும், பொன் நல்லவர்க்கும் ஒப்பாம்.

நல்லாரைப் பொன் என்றது பண்பும் பயனும் கருதி.

"அரும் பொன்னே! மணியே! என் அன்பே!" எனக் கடவுளைக் கருதித் துதிக்குங்கால் பொன்னை முன்னதாகக் குறித்துள்ளார். அருமை பெருமைகள் உரிமையில் உயர்கின்றன.

பொன் எல்லாராலும் விரும்பிப் போற்றும் அருமைப் பாடு உடையது; அவ்வாறே நல்லோரும் பெருமை பெற்றுள்ளனர்.

கல் மண் இரும்பு பித்தளை செம்பு வெண்கலம் வெள்ளி என உள்ளி உணரும்படி பல வகை நிலைகளில் பரவியுள்ள மனிதர் திரளில் குண சீலரான மேலோர் சிறந்த பொன்னைப் போல் பொலிந்து விளங்குகின்றார்.

உள்ளப் பண்புடைய நல்லவனைக் குறித்துப் பேசுங்கால் அது சோக்கத் தங்கம் என வழங்கிவரும் உலக வழக்கமும் ஈண்டு உணர்ந்து கொள்ளவுரியது.

வறுமைத் துயரம் வாட்டி வதக்கினும் நெருப்பில் இட்ட பொன்னைப் போல் சிறந்த தேசுடன் சீரியர் உயர்ந்து ஒளிர்கின்றார்.

தீப்புகினும் பொன்றுமோ என்றுமே பொன்?

இந்த உவமை வாக்கியம் உபமேயத்தை ஊன்றி நோக்கி உணர வந்தது. எதையும் எரித்து ஒழிக்கின்ற நெருப்பு பொன்னை யாதொரு தீதும் செய்யாமல் நல்ல ஒளியாக்கி இனிது வெளி விடுகின்றது; எவரையும் ஈனமாக்கி இழித்தொழிக்கும் வறுமை நல்லோரை அல்லலில் ஆழ்த்தாமல் செல்லமாகப்போற்றி உயர்ந்த சீரியராக்கி ஒளி செய்தருள்கின்றது.

இழிந்த உலோகங்களைப் போல் கழிந்து படாமல் சிறந்த பொன்னைப் போல் மனிதன் உயர்ந்து வர வேண்டும்.

குணம் பெருக மனிதன் மணம் பெறுகின்றான்.

ஆற்றுமின் அருள் ஆருயிர் மாட்டெலாம்;
தூற்றுமின் அறம்; தோம்நனி துன்னன்மின்;
மாற்றுமின் கழி யாயமும் மானமும்
போற்றுமின் பொருளாயிவை கொண்டு நீர். (வளையாபதி)

அறிவ தறிந்தடங்கி அஞ்சுவ தஞ்சி
உறுவ துலகுவப்பச் செய்து—பெறுவதனால்
இன்புற்று வாழும் இயல்புடையார் எஞ்ஞான்றும்
துன்புற்று வாழ்த லரிது. (நாலடியார்)

---

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

சீர்மை என்பது சிறந்த மேன்மையது.
அது ஆன்ம மணமாய் அமைந்துள்ளது.
உணவுக்கு உப்புப் போல் உயிர் வாழ்க்கைக்குச் சீர்மை.
வாழ்க்கையை அது அழகு செய்கின்றது.
அதனால் புனிதமும் இனிமையும் உளவாகின்றன.
அதனை யுடையவர் சீரியர் எனச் சிறந்து நிற்கின்றார்.
செம்மை புரிந்து திகழ்கின்றார்.
சீராளர் பேராளர் ஆகின்றார்.
உள்ளம் புனிதராய் ஒளி மிகப் பெறுகின்றார்.
பொன்போல் என்றும் பொலிந்து மிளிர்கின்றார்.

௩௪ வது சீர்மை முற்றிற்று.

---

# முப்பத்திரண்டாம் அதிகாரம்.

## சீலம்.

---

அஃதாவது நல்ல ஒழுக்கம். மனம் மொழி மெய்கள் புனிதமாய் இனிது ஒழுகும் மனிதன் சீலன் எனச் சிறந்து நிற்கின்றான். திருந்திய பண்பும் பெருந்தகைமையு முடைய சீரியர்பால் நிகழும் பேரியல்பு ஆகலான் சீர்மையின் பின் இது வைக்கப்பட்டது.

311. சீலமெனும் தெய்வத் திருவுடைமை யேயிந்த
ஞாலந் தனிற்சிறந்த நற்பொருள்காண்—மூலம்
தெரிந்ததனைக் கைக்கொண்டார் தேவரெலாம் போற்றும்
விருந்தினராய் மேவிநிற்பர் மேல். (க)

இ-ள்

உலகில் உயர் பெருந் திருவாய் ஒளி பெற்றுள்ளது சீலமே; அம் மூல நிலையை உணர்ந்து அதனை உரிமையாக உவந்து கொண்டவர் தேவரும் போற்றும் மேன்மையாளராய்ச் சிறந்து அரிய பல இன்ப நலங்களை அடைந்து பெரிய நிலையில் திகழ்வர் என்பதாம்.

ஒழுக்கம் உணர்வு குணம் தருமம் புனிதம் முதலிய இனிய இயல்புகள் எல்லாம் சீலம் என்னும் ஒரு சொல்லில் அடங்கியுள்ளன. சீவனின் இனிய கனிவாய் அது இலங்கியுள்ளது.

சீலத்தை தெய்வத் திரு என்றது இம்மையிலும் மறுமையிலும் பெருமகிமைகளை நல்கி இறுதியில் உயிர்க்கு அது உய்வைத் தருதல் கருதி. சீலமுடையானே திருவாளன் என்க.

உடம்பை மட்டும் ஓம்பி உலக ஆடம்பரங்களை வளர்த்து விட்டு விரைந்து ஒழிந்து போகின்றதே யாண்டும் இயல்பாக வுடைய பொய்ம்மைத் திருவினும் வேறுபாடான மாறுபாடு தெரிய ஈண்டு மெய்ம்மையான தெய்வத் திரு மேவி வந்தது.

தன்னையுடையானைத் திவ்விய நிலையினன் ஆக்கி எவ்வழியும் சீலம் செவ்விய சீர்த்திகளை விளைத்தருள்கின்றது. தீது யாதும் மருவாமல் நீதி நெறியில் நிலைத்து ஒழுகும் ஒழுக்கமே சீலம் ஆதலால் அது விழுப்பங்களுக்கெல்லாம் விளை நிலமாய் வளம் மலிந்து நிலவி நலம் மிகுந்து திகழ்கின்றது.

சீலம் உடையவர் மனித சமூகத்தில் அதிசய நலங்களை அடைந்து துதி செய்யப் பெறுகின்றார். தரும தேவதையும் அவர் கருதியபடியெல்லாம் கருணைபுரிந்து வருகின்றது. கொடியவரும் அவர்முன் அடியவராய் அடங்கி இனிய நீர்மையுடன் அமர்ந்து இதம் புரிகின்றனர்.

காலம் இன்றியும் கனிந்தன கனி; நெடுங்கந்தம்
மூலம் இன்றியும் முகிழ்த்தன; நிலனுற முழுதும்
கோல மங்கையர் ஒத்தன கொம்பர்கள்; இன்பச்
சீலம் அன்றியும் செய்தவம் வேறும் ஒன்று உளதோ?

(இராமாயணம்)

தரும குண சீலன் ஆன இராமன் புகுந்தமையால் வெய்ய பாலைவனமும் இனிய சோலையாய்க் கனி காய் கிழங்குகளை உதவி நின்றது என இஃது உணர்த்தியுள்ளது. சீலத்தின் மகிமையை விளக்கி நிற்கும் இதன் அழகை ஆய்ந்து நோக்குக. அற்புத நலங்களை அளித்தருளுதலால் சீலமே செய்தவம் என நேர்ந்தது.

தெய்வீக நிலையில் செழித்து நிற்றலால் சீலம் உடையவர் மேலான நலன்களை எளிதே அடைந்து கொள்கின்றனர். அஃது இல்லாதவர் வறிதே இழிந்து படுகின்றனர்.

"சீலம் இல்லவர்க்கு உணர ஒண்ணாத சிற்பரன்."

(கந்த புராணம்)

என முருகக் கடவுளை இங்ஙனம் குறித்திருக்கின்றனர். சீலம் உடையவர்க்கே கடவுட் காட்சி எளிதின் உண்டாம் என்னும் உண்மையை இதனால் உணர்ந்து கொள்கின்றோம்.

சீலம் என்பது செய்தவமாய்ச் சிறந்துள்ளமையின் தெய்வம் அதன் கைவசமாய்க் கனிந்து நிற்கின்றது. சத்தியம் முதலிய உத்தம நீர்மைகள் தோய்ந்து சித்தசுத்தி வாய்ந்து சீவ சத்தி பாய்ந்திருத்தலால் சீலவான் தெய்வ தரிசனத்திற்குத் தனி உரிமையாளனாய் இனிதமைந்து நிற்கின்றான். சீலம் தெய்வ நிலையமாயுள்ளமை இதனால் தெளிய வந்தது.

சீலமும் அவைதரும் திருவுமாய் உளன்
ஆலமும் வித்தும்ஒத்து அடங்கும் ஆண்மையான்'

(இராமாயணம், உயுத்த; இரணியன் வதை, 74)

ஆலம் வித்துப்போல் அடங்கியுள்ள திருமால் சீலத்தின் உருவமாய் நின்று ஞாலம் காத்து அருள்கின்றான் என இது காட்டியுள்ளமை காண்க.

தவம், தருமம், கடவுள் எனச் சீலம் புகழ்ந்து போற்றப் படுதலால் அதன் அருமையும் பெருமையும் அமைதியும் அறிய லாகும். அரிய பல உறுதி நலங்கள் அதில் மருவி யுள்ளன.

சீலமும், தருமமும், செம்மையும் ஆகிய இம் மூன்றையும் மூல மூர்த்திகளான மூவரும் முறையே தம் கோலங்களாகக் கொண்டுள்ளனர் என்று வசிட்ட முனிவர் இராமனுக்கு உபதே சித்திருக்கின்றார். முனிவர் மொழி இனிய ஒளி யுடையது.

தேவதேவர்களுடைய திவ்விய குணமாய்ச் சீலம் இங்ஙனம் சிறந்து நிற்கின்றமையால் அதன் நிலைமை தலைமைகள் நினைந்து சிந்திக்கத்தக்கன.

சீலத்தால் மனம் புனிதம் ஆகின்றது; அதனால் மனிதன் தெய்வீகம் பெறுகின்றான். பெறவே அது தெய்வ சம்பத்தாய்ச் சிறந்து மிளிர்கின்றது. அவ் வுண்மையை உய்த்துணர்ந்து நன்மை யுறவே தெய்வத் திரு என ஈண்டு அது செப்ப நேர்ந்தது.

தவம் தானம் ஞானம் முதலிய எவற்றினும் முத்திப் பேற்றிற்குச் சீலமே முதன்மையாக நிற்றலால் அதனை மேலோர் தலைமையாகப் போற்றுகின்றனர்.

"சீலமோடு தவ விரதம் ஒரு கனவி லாயினும்
தெரிசனம் கண்டும் அறியேன்."

எனச் சீலத்தை முதலில் நினைந்து தாயுமானவர் ஏங்கி யிருக்கிறார். ஞான மூலமாய் அது மோன முற்றுள்ளது.

சீலம்இன்றி நோன்பின்றிச் செறிவேஇன்றி அறிவின்றித்
தோலின்பாவைக் கூத்தாட்டாய்ச் சுழன்றுவிழுந்து கிடப்பேனை
மாலும்காட்டி வழிகாட்டி வாராவுலக நெறிஏறக்
கோலம்காட்டி ஆண்டானைக் கொடியேன் என்றோ கூடுவதே?

(திருவாசகம்)

சீலத்தை இங்ஙனம் தலைமையாகக் கருதிப்பேணி மாணிக்க வாசகர் உருகி யிருக்கிறார். மேலான பதவிக்குச் சீலம் முதல் உரிமையாயுள்ளமையை இவற்றால் உணர்ந்து கொள்ளுகின்றோம்.

"சீலம் இல்லாச் சிறியனேன்" என நம்மாழ்வார் கவித் திருக்கிறார். பெரியன் ஆக விரும்பின் சீலம் மருவியாக வேண்டும்.

சீலம் தாங்கித் தானம் தலைநின்று
மேல்என வகுத்த ஒருமூன்று திறத்துத்
தேவரும் மக்களும் பிரமரும் ஆகி
மேவிய மகிழ்ச்சி வினைப்பயன் உண்குவர். (மணிமேகலை 24)

உயிர்கள் உயர்ந்து சிறந்த தெய்வ போகங்களை நுகர்தற்குச் சீலமே மூல காரணம் என இதில் குறித்திருக்கும் நிலையைக் கூர்ந்து நோக்குக.

கருணை முதலியன கனிந்து புனிதம் மருவி வருதலால் சீல முடையவர் பிறவி தீர்ந்து பேரின்பம் அடைகின்றனர்.

தோடார் இலங்கு மலர்கோதி வண்டு
வரிபாட நீடு துணர் சேர்
வாடாத போதி நெறிநீழல் மேய
வரதன் பயந்த அறநூல்
கோடாத சீல விதமேவி வாய்மை
குணனாக நாளும் முயல்வார்
வீடாத இன்ப நெறி சேர்வர்; துன்ப
வினைசேர்தல் நாளும் இலவே. (வீரசோழியம்)

சீலம் உற்று உயர்ந்தவர்ச் சேரின் வீடுறும்
மாலையுற்று அறிவிலார் மருங்கடைந்திடின்
வேலையுற்று அலைதரும் பென்ன வெம்பவக்
கோலமுற்று இறந்திறந் துழலல் கூடுமே. (பாகவதம்)

சீலம் முத்தியில் உய்த்தருளும்; சீலமுடையவரைச் சேர்ந் தவரும் மேலான பதவியை அடைவர்; அதனை அடையாதவர் கடையராய் இழிவர் என இவை உணர்த்தி யுள்ளன.

இவ்வாறு பேரின்ப சாதனமாய்ப் பெருகி யிருத்தலால் சீலத்தை யாவரும் விழைந்து கொண்டாடுகின்றனர்.

பவழவாய்ச் செறுவு தன்னுள் நித்திலம் பயில வித்திக்
குழவி நாறு எழுந்து காளைக் கொழுங்கதிர் ஈன்று பின்னைக்
கிழவுதான் விளைக்கும் பைங்கூழ்; கேட்டிரேல் பிணிசெய்பன்மா
உழவிர்காள் மேயும் சீல வேலி உய்த்திடுமின் என்றான்.

(சீவக சிந்தாமணி)

கருப்பையுள் விதைத்த சுக்கில வித்திலிருந்து மனிதன் பிறக்கின்றான்; பாலன் குமரன் கிழவன் என வளர்கின்றான்; அவ் விளைவு பழுது படாதபடி சீலம் ஆகிய வேலியை இட்டுப் பாதுகாத்துக் கொள்ளுங்கள் என இது உரைத்திருக்கிறது. உருவகமாய் வரைந்துள்ள உரையின் உட்கோள் ஊன்றி உணரத் தக்கது. பயிருக்கு வேலிபோல் உயிருக்குச் சீலம்.

சீலத்தால் மனித வாழ்வு புனிதம் அடைந்து இனிது வளர்ந்து இன்பம் சுரந்து வருகின்றது. அவ் வரவு நிலையை உணர்ந்து அதனை உறவுரிமையா உவந்து கொள்க என நூல்கள் இன்னனம் ஆவலோடு நன்கு உணர்த்தி வருகின்றன.

ஆன்ம பரிபாகம் எய்தி எல்லா மேன்மைகளையும் ஒருங்கே பெற்றுச் சீலமுடையார் உயர்ந்து போதலால் மேல் மேவி நிற்பர் என அவரது மெய்யான நிலைமை தெரிய வந்தது.

> சீலன் சிவன்கண்டான் சீலமிலான் என்றுமே
> காலன்கண் காணக் கழிந்தொழிந்தான்—ஞாலம்
> பிறந்த பயனைப் பெறுதான் பெறுமே
> இறந்த பயனை எதிர்.

சீலம் உடையவன் தெய்வக் காட்சி எய்தி முத்தியின்பம் அடைகின்றான்; அதனை இழந்தவன் காலன் கைப்பட்டுக் கடுந் துயரம் காண்கின்றான். உறுவதை உணர்ந்து உறுதி நலனை உவந்து கொள்வது உற்ற பிறவியின் உயர் பயனாகும்.

பேரின்ப மூலமான சீலத்தைப் பேணி ஒழுகுக.

---

> 312. உற்ற ஒழுக்கம் உயரறிவென் றிவ்விரண்டும்
> கற்ற கலையின் கவின்மகவாம்—மற்றவற்றைப்
> பெற்றவரே கல்விப் பெரும்பயனைப் பெற்றின்பம்
> உற்றவராய் நிற்பர் உயர்ந்து. (உ)

இ-ள்

ஒழுக்கமும் அறிவும் கல்வியின் அழகிய பிள்ளைகளாம்; இந்த அருமைத் திருமக்களைத் தகுதியாகப் பெற்றவரே கலையின் உரிய பயனைப் பெற்றவராய் உயர்ந்து திகழ்வர் என்க.

கல்வி மனிதனுக்கு நல்ல பெருமை தருகின்றது; அத்தகைய கல்வியின் பயனை நயமாக இது வகுத்துச் சொல்லுகின்றது.

கலை என்றது பலவகையான அறிவின் நிலையை. இலக்கணம் தருக்கம் கணிதம் முதலிய வித்தைகள் பல உள்ளன. அவை யாவும் கலை என்னும் பேரால் நிலவி வருகின்றன. மனிதனுடைய இயற்கை அறிவு கலைகளோடு கலந்தபொழுது தான் தெளிவடைந்து ஒளி மிகப் பெறுகின்றது. கலைகள் மருவிக் கனிந்து வரவே ஒளி நிறைந்த மதிபோல் மனிதன் உயர்ந்து விளங்குகின்றான்.

தெளிந்த மேலோர்களுடைய சிறந்த அனுபவங்களே கல்வியாய் விளைந்து நிற்றலால் அது நல்லஅறிவை நல்கி அருளுகின்றது.

மையலும் மயக்கமும் மடமையும் நிறைந்துள்ள உலகில் கல்வியறிவு கலங்கரை விளக்காய் நலம் பல புரிகின்றது.

அறிவை வளர்த்து உறுதிநலங்களைக் கல்வி உணர்த்தி யருளுதலால் ஒழுக்கமும் அறிவும் அதன் பிள்ளைகள் என வந்தன. “ஓதாதார்க்கு இல்லை உணர்வோடும் ஒழுக்கம்” என்றதனால் ஓதலின் பயன் உணர்வும் ஒழுக்கமும் என்பது பெறப்பட்டது.

அறிவு உலக மேன்மைகளை உதவுகின்றது; ஒழுக்கம் ஆன்ம நலனை அருளுகின்றது. ஆகவே இம்மை மறுமை என்னும் இருமைக்கும் அறிவும் ஒழுக்கமும் முறையே உரிமையாகின்றன.

இருளே உலகத்தியற்கை; இருளகற்றும்
கைவிளக்கே கற்ற அறிவுடைமை; கைவிளக்கின்
நெய்யேதன் நெஞ்சத்து அருளுடைமை; நெய்பயந்த
பால்போல் ஒழுக்கத் தவரே பரிவில்லா
மேல்உலகம் எய்து பவர். (அறநெறிச்சாரம்)

இந்தக் கீழ் உலகத்திலிருந்து மேல் உலகத்தை அடைதற்கு நன்கு அமைந்துள்ள நான்கு படிகளைப் பாங்காக உருவகித்து உரைத்திருக்கும் இதன் குறிப்பைக் கூர்ந்து நோக்கிப் பொருள் நிலைகளை ஓர்ந்து கொள்க. உறுதிநலனை உரைகள் அழகுற விளக்குகின்றன. உணர்வு கனிய உவகை விளைகின்றது.

பால் நெய் திரி விளக்கு என்னும் இந் நான்கும் ஒழுக்கம் அருள் அறிவு கல்விகளுக்கு உவமைகளாயின. விளக்கிற்குத் திரியும், திரிக்கு நெய்யும், நெய்க்குப் பாலும் மூல ஆதாரங்களாம். பாலை ஒழுக்கம் என்றதனால் அதன் தலைமை நிலைமை புலனும்.

எல்லா நலங்களுக்கும் சீலம் மூல காரணமாயுள்ளமையான் மேலோர் அதனைச் சாலவும் போற்றி வருகின்றனர்.

சீலம் உடையவரே மேல் உலகம் அடைவர் என்றதனால் அதன் திவ்விய மகிமை ஈண்டுத் தெளிவாய் நின்றது.

மனித வாழ்க்கையை மாண்புறுத்திச் சிறந்த முத்தி நிலையிலும் உய்த்தருளுதலால் ஒழுக்கம் உயிரினும் ஓம்பத் தக்கதாய் உரிமை எய்தி யுள்ளது.

"The Crown and glory of life is character." (Smiles)

"உயிரின் மகிமையான மணிமுடி ஒழுக்கமே" என்னும் இந்த ஆங்கில வாக்கியத்தின் பொருட்குறிப்பை ஊன்றி உணர வேண்டும். சீலம் ஆன்ம ஒளி; அதன் பான்மை தெளிக.

கல்வியின் பயனாகிய அறிவையும் ஒழுக்கத்தையும் தகுதியாகப் பெற்றவரே பிறவியின் பயனை உரிமையுடன் உற்றவராகின்றார். மனிதரைப் புனிதராக்கி அவை மாட்சி புரிகின்றன.

இன்பம் உற்று உயர்ந்து நிற்பர் என்றது ஒழுக்கத்தின் சிறந்த பலன்களை உணர்ந்து கொள்ள வந்தது.

---

313. செல்வம் அழகு சிறந்த குடிப்பிறப்பு
கல்வி உரைவன்மை கட்டாண்மை—எல்லாம்
உடையான் எனினும் உயர்வோ ஒழுக்கம்
படையானேல் அத்தனையும் பாழ். (ந)

இ-ள்

செல்வம் அழகு குடிப்பிறப்பு கல்வி சொல்வன்மை ஆண்மை முதலிய நலங்கள் பல உடையனாயினும் ஒழுக்கம் ஒன்று இலனாயின் அவ்வளவும் பாழாம் என்க.

மனிதனுக்கு மதிப்பை நல்க வல்லன ஆதலால் செல்வம் முதலியன இங்கே தொகுத்து எண்ண வந்தன. சிறப்பு நலங்களை விரைவில் விளைத்து எவரும் வியந்து நோக்கச் செய்யும் விசித்திரம் மிகவுடைமையால் செல்வம் முதலில் நின்றது.

செல்வம் கல்வி குடிப் பிறப்பு முதலிய மாட்சிமைகள் எல்லாம் எய்தியிருப்பினும் சீலம் இலனாயின் மனிதன் கோலம் குறைகின்றான். ஞாலம் அவனை நன்கு மதியாது.

பிற மாண்புகள் யாவும் உடல் உறுப்புக்கள் போல்வன; ஒழுக்கம் உயிர் போல்வது ஆதலால் இஃது இல்வழி அவை அனைத்தும் நவை அடைய நேர்கின்றன.

"Character is human nature in its best form."

"மனித இயல்பில் ஒழுக்கம் மிகவும் உன்னதமானது" என்னும் இது ஈண்டு எண்ணத்தக்கது. ஒழுக்கத்தைக் குறித்து மேல் நாட்டார் கருதியுள்ளமையை இதனால் அறிகின்றோம்.

ஒழுக்கம் உயிரைப் புனிதப் படுத்தி வருதலால் அதனை யுடையவன் மனிதருள் தெய்வமாய் இனிது விளங்குகின்றான்.

உயர்ந்த குடியில் பிறந்தவன் ஆயினும் ஒழுக்கம் இலனேல் அவன் இழிந்து படுகின்றான். தாழ்ந்த குடியில் பிறந்திருப்பினும் ஒழுக்கமுடையனாயின் அவனை உலகம் உவந்து கொண்டாடுகின்றது. ஒழுக்கம் உயர்குலம் என்னும் பழமொழியாலும் அதன் விழுமிய நிலைமை வெளியே தெளிவாயுள்ளது.

ஒழுக்கம் உடைமை குடிமை; இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும். (குறள், 133)

இழுக்கத்தின் மிக்க இழிவில்லை; இல்லை
ஒழுக்கத்தின் மிக்க உயர்வு. (பழமொழி, 64)

தாழ்ந்த வருணத் துதித்தவரும் தக்கோராவர் ஒழுக்கத்தால்;
வீழ்ந்த ஒழுக்கத் தாரிழிவர் மேலாம் வருணத் துதித்திடினும்;
சூழ்ந்து துணையாம சிறப்பின்பம் சுரக்கும்; அதனால் உயிர்தனினும்
வாழ்ந்த ஒழுக்கம் ஓம்பிடுக வழுக்கின் இடும்பை யேதருமே.

(விநாயக புராணம்)

ஒழுக்கத்தின் உயர்வும், அதில் வழுவினல் உளவாகும் இழிவுகளும் இவ்வாறு விழி தெரிய நூல்கள் விளக்கியுள்ளன.

ஒழுக்கம் படையானேல் அத்தனையும் பாழ்.

என்றது இதன் தத்துவத்தை உய்த்துணர வந்தது. ஒழுக்கம் இன்மையால் பாவம் புகுகின்றது; அதனால் நண்ணியிருந்த நலன்கள் எல்லாம் நாசம் அடைந்து போகின்றன.

ஒழுக்கத்தால் புண்ணியம் வளர்ந்து வருகின்றது; வரவே அதனை உடையவனுக்கு எல்லாச் செல்வங்களும் பல்வகைச் சிறப்புக்களும் எளிதில் வந்து கைகூடுகின்றன.

"பிறப்பு நெடுவாழ்க்கை செல்வம் வனப்பு
நிலக்கிழமை மீக்கூற்றம் கல்வி நோயின்மை
இலக்கணத்தால் இவ்வெட்டும் எய்துப என்றும்
ஒழுக்கம் பிழையாதவர்." (ஆசாரக் கோவை)

ஒழுக்கமுடையவர் எட்டு ஐசுவரியங்களையும் ஒருங்கே எய்தி இன்புறுவர் என இது உரைத்திருத்தல் அறிக. இங்ஙனம் உயர்ந்த நலங்களை அருளி உயிர்க்கு உய்தி புரிந்து வருதலால் ஒழுக்கத்தை மேலோர் உவந்து போற்றிப் புகழ்ந்து வருகின்றார்.

---

314. படித்தாலும் உள்ளம் படிந்துநற் சீலம்
பிடித்தானே பீடு பெறுவான்—பிடித்திலனேல்
செல்லாப்புன் காசென்னத் தேம்பி அலமந்து
பொல்லாப் பழியே புகும். (௲)

இ-ள்

உள்ளம் நல்ல ஒழுக்கத்தில் தோய்ந்திருந்தவனே கல்வியின் பயனை நன்கு பெறுகின்றான்; அல்லாதவன் செல்லாத காசுபோல் மதிப்பிழந்து இழிந்து தொலைகின்றான் என்க.

இது ஒழுக்கம் படிய வேண்டும் என்று உணர்த்துகின்றது.

பல நூல்களை நன்கு படித்திருந்தாலும் மனம் பண்பட இல்லை ஆயின் அப் படிப்பால் யாதும் பயன் இல்லை. உள்ளம் திருந்தி உயர்நலம் அடைவதே கல்வியின் நல்ல பயனும். பலன் அடையாவழி ஒருவன் பட்டபாடுகள் எல்லாம் பாழாய் இழிக்கப் படுகின்றன. உற்றபயனை ஓர்ந்து கற்றல் வேண்டும்.

உள்ளம் படிதலாவது செருக்கு திமிர் துடுக்குகள் ஒழிந்து அடக்கம் அன்பு அமைதிகள் அமைந்து நிற்றல்.

இந்த அமைதியான இனிய நெஞ்சமே புனிதமும் சீலமும் பொருந்தித் தனி மகிமை அடையும் தகுதியை உடையதாம்.

சீலம் பிடித்தானே பீடு பெறுவான்.

என்றதில் ஏகாரம் பிரிநிலை. பீடு=பெருமை, மேன்மை.

சீலம் பிடியாதான் நூல்கள் பல படித்திருந்தாலும் பீடு பெறுனைப் பிழைபட்டு இழிவான் என்பது பெறப்பட்டது.

பிடித்தலாவது யாண்டும் எவ் வழியும் நிலை குலையாமல் உறுதியாகக் கைக் கொள்ளுதல். சோதனைகள் பல எதிர்ந்தாலும் சாதனையில் தளராமல் சீலம் பேணும் சீர்மை தெரிய வந்தது. ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும் என்று தேவர் கூறியுள்ளதனால் அதன் உரிமையும் அருமையும் உணரலாகும்.

படிப்பின் பயனாகிய ஒழுக்கத்தைக் கைக் கொள்ளாமல் செருக்கை மேற்கொண்டு நிற்பவர் சிறியராயிழிந்து சீரழிய நேர்கின்றனர். நீர்மை அளவே சீர்மை விளைகின்றது.

படித்தான் என்பதில் உள்ள வல் ஒற்று மெல் ஒற்று ஆகும் போது படிந்தான் என வருகின்றது. கல்விச் செருக்கு நீங்கி மனம் பண்பட்டபோது அவன் இனிய நீர்மையனாய் இன்புற்று நிற்கின்றான். மென்மையில் நன்மைகள் பல விளைகின்றன.

உள்ளப்பண் பில்லான் உயர்கல்வி நல்லோர்முன்
எள்ளப் படுமால் இழிந்து.

என்றதனால் மனப் பண்பின் மகிமை புலனாம்.

அறிவின் பயனை ஆத்துமாவுக்கு உரிமை ஆக்கினவர் பெருமை மிகப் பெற்று இருமையும் இன்புறுகின்றார். அதனை வீண் ஆக்கினவர் சிறுமை மிகப்பட்டுச் சீரழிந்து போகின்றார். நல்ல கல்வியும் புல்லர்பால் இழிந்து புலைப்படுகின்றது.

யாம் கற்றுள்ளோம் என்று அவர் களித்து நின்றாலும் சீலம் இல்லாதவரை ஞாலம் மதிப்பதில்லை. மதியாமையோடு இகழவும் செய்கின்றது.

"எழுத்துச் சொற்பொருள் யாப்பு அலங்காரம் என்று
இவற்றைக் கற்று இறுமாப்புறும் பேய்சில." (பரணி)

பஞ்ச இலக்கணங்களை நன்கு படித்துப் பெரிய பண்டிதராய் இருந்தாலும் நெஞ்சம் பண்பட்டு நிறைசீலம் இலர் ஆயின் அவர் இங்ஙனம் எள்ளி இளிக்கப் படுகின்றார்.

ஒழுக்கம் இல்லாதவரை உலகம் உண்மையாக மதித்து மரியாதை செய்யாது ஆதலால் அவர் செல்லாப் புன் காசு எனப் பொல்லாப் பழியுற்றுப் புன்மையாய்ப் போகின்றார்.

சீலம் உடையவர் செல்லுங் காசாய் எங்கும் சிறந்து விளங்குகின்றனர்; அஃது இல்லாதவர் செல்லாக் காசாய் யாண்டும் எள்ளப் படுகின்றனர். வடிவம் ஒத்திருந்தாலும் உரிமையும் தகுதியும் இல்லையாயின் அக் காசு நாணயம் அற்றதாய் வீணே கழிக்கப் படுகின்றதுபோல் ஒருவன் மிக்க கல்வி கற்றிருந்தாலும் தக்க சீலம் இல்லையாயின் அவன் தகுதி அற்றவனாய் இழிக்கப் படுகின்றான். கல்வியும் சீலமும் அறிவுக்கு முகமும் அகமும் ஆய் மருவியுள்ளன. புதிய புனிதம் அகம் புக அதிசய அழகுடையதாய் முகம் இனிது பொலிந்து ஒளி திகழ்கின்றது.

புத்தகம் படித்துப் புத்தகம் பிடித்து வித்தக முடையனாய் வியன் பயன் அடையின் நித்திய நலனில் நிலை பெறலாகும்.

---

315. ஓர்ந்துபல கற்றாலும் ஊர்க்குமிகச் சொற்றாலும்
நேர்ந்த தலைவனென நின்றாலும்—ஆர்ந்த
ஒழுக்கம் இலனேல் உயிரிழந்த மெய்போல்
விழுப்பமுறான் மேதினியில் மெய். (ரு)

இ-ள்

ஒருவன் பல நூல்களை ஆராய்ந்து கற்றிருந்தாலும், உலகம் வியப்பப் பிரசங்கங்கள் செய்து வந்தாலும், சிறந்த தலைவன் என உயர்ந்து நின்றாலும் ஒழுக்கம் இலனாயின் உயிரிழந்த உடல்போல் அவன் இழிக்கப் படுவன் என்றவாறு.

சீலம் இல்லாதவன் செல்லாக் காசு என முன் சொல்லப் பட்டான்; இதில் அவன் செத்த சவம் என்று சொல்லப் படுகின்றான். அவமான நிலைகளை உவமானம் விளக்கி நின்றது.

இப்படிக் கடுமையாகக் கூறியது, உயிர்க்கு உயிர்நிலையமாயுள்ள ஒழுக்கத்தின் உயர்நலனை உணர்ந்தும், அதனை இழந்து விடுவதால் நேரும் இழவுகளை நினைந்தும் என்க. தனக்கு உறுதியாக அதனை உரிமை செய்து மனிதன் புனிதனாய் உயர்ந்து கொள்ள வேண்டும் என்னும் பரிவினால் இவ்வாறு கூற நேர்ந்தது.

ஓர்ந்து கற்றல் ஆவது சிறந்த கலைகளை ஆராய்ந்து பயின்று கூர்ந்து உணர்ந்து தேர்ந்து தெளிதல். ஊர்க்கு—ஊரில் உள்ள மக்களுக்கு. ஊர்க்குப் பேசுமுன் உன் உயிர்க்குப் பேசுக.

சேர்ந்த தலைவன் என்றது சன சமுதாயத்தால் தேர்ந்து எடுக்கப்பட்ட சிறப்புத் தோன்ற வந்தது. நின்றாலும் என்றது அந்த அதிகார பதவியில் நிலையாக நிலைத்து வருதலை. சிறந்த கல்வி, உயர்ந்த சொல்வன்மை, பெரிய தலைமை என்னும் இந் நிலைமைகள் ஒருவனிடம் நன்கு அமைந்திருந்தாலும் அவனிடம் ஒழுக்கம் இல்லையாயின் அவன் இழிக்கப் படுகின்றான்.

உள்ளே தன் உயிர்க்கு நன்மை புரியாதவன் வெளியே பிறர் வியந்து புகழ ஆடம்பரங்கள் பல ஆற்றி வந்தாலும் உண்மையான அறிவாளிகள் அவனை நன்கு மதியார்; புன்மையாளனாகவே அவன் புலைப்பட்டு ஒழிகின்றான்.

குண நலங்கள் பல நிறைந்துள்ளமையால் சீலம் ஆர்ந்த ஒழுக்கம் என வந்தது. உயிரைப் புனிதப் படுத்தி உயர் நிலையில் உய்த்தருளுதலால் சீலம் ஆன்ம சஞ்சீவியாய் யாண்டும் மேன்மை யுடன் மதித்துத் துதிக்கப் படுகின்றது.

கல்வி அறிவு முதலிய பலவகையான உயர்வுகளும் உயிர் ஊதியம் ஆகியஒழுக்கத்தை மருவியபொழுது ஒளி பெறுகின்றன; மருவாவழி அவை யாவும் இழுக்காய் இழிவுறுகின்றன. ஒழுக்கம் இல்லாதவன் தனக்கே பொல்லாதவன் ஆகின்றான்.

> ஒழுக்கம் இலனாகி ஓர்த்துடையன் என்னும்
> புழுப்பொதிந்த புண்ணிற கொடிதாங்—கழுக்கிரையை
> ஓம்பிமற்று என்னை? உறுதிக்கண் நில்லாக்கால்
> தேம்பி விடுதலே நன்று. (அறநெறிச்சாரம்)

உணர்வுடையன் எனினும் ஒழுக்கம் இலன் ஆயின் அவன் புழுப் பொதிந்த புண் என இது இழித்திருத்தல் அறிக.

வெறும் வெளி மினுக்குகளால் உயிர் ஒளி பெறாது ஆதலால் அவை இளிவுறலாயின. ஆன்ம உரிமையிலேயே உண்மையான மேன்மைகள் விளைகின்றன. அவ் விளைவே பேரின்ப போகமாம்.

ஒழுக்கம் விழுப்பம் தரும் என்றமையால் அஃது இன்மை யால் இழப்பம் வரும் என்பது பெறப்பட்டது. அங்ஙனம் இழி வுறாது விழுமியராய் எழுக. விழுப்பம்=சிறப்பு, மேன்மை.

ஒழுக்கம் இழந்தவனை உயிர் இழந்த உடல் என்றது அவ னது வாழ்க்கையின் இழுக்கமும் இழவும் கருதி. உயிர்க்கு உயி ரான ஒழுக்கத்தை இழந்தவன் செத்த பிணத்தோடு ஒத்து எண்ண நின்றான். சீவகளையை மேவி மிளிர்க.

அவன் உயிர் வாழ்க்கை பயன் அற்றதாய்ப் பாழ் பட்டமையின் இங்ஙனம் பழிக்கப் பட்டான். பெற்ற வாழ்வைப் பெருமைப் படுத்தி உற்ற நலனை அடைந்தவர் உயர்ந்தவ ராகின்றார்.

சிறந்த ஒழுக்கமே பிறந்த பிறவியின் பெரும் பயனாகும்; அதனை மறந்தும் கைவிடாமல் மருவி வாழ்க.

---

316. உன்னுயிர்க்குட் சீலம் உறாமல் உலகிலுள
மன்னுயிர்க்குச் சொல்லநீ வாய்திறத்தல்—இன்னுயிர்ப்பின்
நாதமிலா யாழை நலிந்திழுத்தல் போல்நகைக்கே
ஏதுவாய் ஏதம் எழும். (௬)

இ-ள்

உனது உயிர்க்குள் ஒழுக்கம் இல்லாமல் உலகில் உள்ள உயிர்களுக்கு நீ உபதேசம் செய்யப் புகுதல் நாதம் இல்லாத வீணையை நலிந்து இழுப்பது போல் நகைப்புக்கே இடமாய் நவை உண்டாகும் என்றவாறு.

சீலம் உடையவன் சொல்லையே ஞாலம் நயந்து கேட்கும்; அவனே உறுதி நலங்களைச் சொல்ல உரியவன்; அல்லாதவன் பேச விழைவது பிழையாம் என இது உணர்த்துகின்றது.

ஒழுக்கத்தால் உள்ளம் திருந்தியுள்ளவன் சொல்லே உலகத்தைத் திருத்த வல்லது ஆதலால் அது யாண்டும் சீவ களையுடன் சிறந்து திகழ்கின்றது.

இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல். (குறள், 415)

உயர்ந்த கல்வியுளர் எனினும் ஒழுக்கம் இல்லார் வாய்ச் சொல் கேட்கப் படாது; எவ்வகை ஆயினும் ஒழுக்கம் உடையார் வாய்ச் சொல்லே யாண்டும் கேட்கத்தக்கது; அதுவே உணர்வைத் தட்டி எழுப்பி உயிரை உயர்த்தியருளும் எனத் தேவர் இதில் குறித்திருக்கும் நுட்பம் கூர்ந்து சிந்திக்கத் தக்கது. சொல் வன்மைக்குக் கல்வி அவசியமாயினும் அதனைச் சொல்லத்தக்க தகுதி சீலர்க்கே தனி உரிமையாகின்றது.

தான் சீலம் இல்லாமல் இருந்து கொண்டு பிறர்க்குப் போதனை செய்யத் துணிவது பேதைமையாம். அதனைத் தெளிவாக விளக்க உவமை வந்தது.

நாதம் இலா யாழ் என்றது நரம்பு இல்லாத வீணையை.

நரம்பு யாழ் உடன் இசைந்திருந்த பொழுதுதான் இனிய இசை எழும்; இசையாவழி யாதொரு கீதமும் எழாது.

நரம்பு ஒழுக்கத்திற்கும், வீணை கல்விக்கும் ஒப்பாம்.

நரம்போடு பிணைந்து தோய்ந்து நன்றாக இணைந்துள்ள வீணையே இனிய கானம் உடையதாய் எவர்க்கும் இன்பம் தரும்; அதுபோல் ஒழுக்கத்தோடு கலந்த கல்வியே சிறந்த சொல் வன்மையுடையதாய் யாண்டும் உவகை சுரந்து அருளும் என்க. சீவ நாதம் உள்ளமையால் அச் சொல்லைக் கேட்டவர் யாவரும் ஆனந்தம் அடைகின்றனர்.

சீலம் இல்லாதவன் பேசுகின்ற பேச்சு நரம்பு இல்லாத வீணையை வலிந்து இழுப்பதுபோல் சிரிப்புக்கே இடமாய்ப் பழிக்கப்படுகின்றது.

"நகைக்கே ஏதுவாய் ஏதம் எழும்" என்றது அவ்வகைக்கே போகாதே என்று போதித்தபடியாம். உன் உள்ளம் திருந்தாமல் எதையும் சொல்ல விரும்பாதே என்றது அச் சொல்லால் நல்ல பயன் இல்லாமை கருதி.

தாம் குற்றம் உடையவராய் இருந்துகொண்டு மற்றவரைத் திருத்தப் புகுதல் முற்றும் பிழையாய் முடிந்து விடுகின்றது.

தங்குற்றம் நீக்கல ராகிப் பிறர்குற்றம்
எங்கெங்கும் தீர்த்தற் கிடைபுகுதல்—எங்கும்
வியனுலகில் வெள்ளாடு தன்வளி தீராது
அயல்வளி தீர்த்து விடல். (பழமொழி 124)

தமது பிழையை முதலில் நீக்காமல் பிறருடைய பிழையை நீக்கும் பொருட்டு வெளியே தரும உபதேசம் செய்யப் போதல் வாத நோயுடைய வெள்ளாடு அயலார் வாதத்தைத் தீர்க்கப் போனது போலாம் என இது பரிகாசம் செய்திருத்தலைக் கருதிப் பார்க்க. வளி = காற்று. அது இங்கு வாத நோயைக் குறித்து நின்றது. அயல் வளி என்றது பிறரது வாதநோயை.

வெள்ளாட்டுப் பால் வாத நோயைப் போக்க வல்லது.

"வெள்ளாட்டுப் பாலுக்கு மேவியநற் றீபனமாம்
தள்ளாடு வாதபித்தம் சாந்தமாம்." (அற்புதசிந்தாமணி 96)

என்றதனால் அதன் தன்மையும் நன்மையும் அறியலாகும்.

நோய்க்கு மருந்தாயுள்ள இப் பால் நல்ல ஆட்டிலிருந்து கறந்து வரின் நலமாம்; வாத நோயுடைய வெள்ளாட்டிலிருந்து வரின் அந்த நோயை மேலும் அதிகப் படுத்தி அல்லலையே விளைத்து அழிவை உண்டாக்கிவிடும்.

மனப் புன்மையை நீக்கி நன்மை செய்யவுரிய நீதி உபதேசம் நல்ல ஒழுக்கமுடையவர் வாயிலிருந்துவரின் உயிர்கட்கு உயர்ந்த பயனும்; அல்லாதார் சொல்லின் அவலமே விளையும் என்க.

தாம் கற்றபடி ஒழுக்க நெறியில் நில்லாதார் நல்லதைச் சொல்லினும் அது பொல்லாததாய் முடிகின்றது.

கற்றுப் பிறர்க்குரைத்துத் தாம்நில்லார் வாய்ப்படூஉம்
வெற்றுரைக்கு உண்டோர் வலியுடைமை—சொற்றநீர்
நில்லாத தென்என்று நாணுஉறைபப நேர்ந்தொருவன்
சொல்லாமே சூழ்ந்து சொலல். (நீதி நெறி விளக்கம், 21)

நெறியில்லார் சொல்லைப் பிறர் மதித்துக் கேளார்; எதிர்த்து இகழுவர் என இதில் குறித்திருக்கும் அழகைக் கூர்ந்து பார்க்க.

ஓதி உணர்ந்தபடி தாம் அடங்கி நடவாதார் நீதி நலங்களைச் சொல்லச் செல்வது பேதைமையோடு பிழையாய் முடிதலால் அது ஏதம் என வந்தது. ஏதம் = குற்றம், கேடு.

ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்
பேதையிற் பேதையார் இல். (குறள், 834)

பல நூல்களையும் கற்று அதிமேதையாய் இருந்தாலும் ஒழுக்கம் இல்லையாயின் அவன் பெரும் பேதையே என இதில் இழித்திருத்தல் காண்க.

விரிந்தநல் வேத புராணங்கள் ஆகமம் மிக்ககலை
தெரிந்து படித்துப் பொருள் செப்பித் தாம்நிலை சேர்ந்துநில்லா
திருந்த சண்டாளரின் ஏற்றம் கழுதை எழிற்குங்குமம்
பரிந்து சுமந்துபின் வஞ்சம் பண்ணுத பயன்எழிலே.

(அறிவானந்த சித்தியார்)

கல்வி கற்றும் ஒழுக்கம் இல்லாதவர் குங்குமம் சுமந்த கழுதையினும் இழி தகையர் என இதில் பழித்திருக்கும் பழி நிலையை விழியூன்றி நோக்கி ஒழுக்க நலனை ஓர்ந்து கொள்க.

வேதம் ஆகமங்கள் மிருதிநூல் புராணம்
மிக்களக் கலைகளும் பயின்று
போதமே சொல்லிப் போதம்அங்கு உணராப்
புலையரும் கழுதையும் நிகராம்;
கோதிலா ஆரம் குங்குமம் பளிதம்
குலவிய புழுகுஅடை பாணி
ஏதமே சுமந்த கழுதையீங்கு இவரின்
ஏற்றமாம் வஞ்சம் இன்மையினால். (சிவஞானசாரம்)

தாம் கற்றபடி ஒழுகாதவர் கழுதையினும் கடையர் என்றது என்னை? எனின், தான் சுமந்துவந்த குங்குமத்தைப் பிறர் உவந்து கொள்ளக் கொடுத்தோம் என்னும் செருக்கும் வஞ்சமும் அதனிடம் இல்லை; கல்விச் செருக்கும், பலரும் வியந்து புகழ நாம் பிரசங்கம் செய்கின்றோம் என்ற வீண் கருவமும், உயர்வு தாழ்வு கூறும் சிறுமையும் புன்மையும் நெஞ்சிடங் கொண்டுள்ளமையால் இக் குறைபாடுகள் யாதும் இல்லாத அக் கழுதையினும் கோதுகள் நிறைந்ததீதுடைய இவர் கடையர் என நேர்ந்தார் என்க.

சிறந்த கல்வியும் சீலம் இல்வழி இவ்வாறு இழிந்து படுகின்றது; இங்ஙனம் பழிபட்டு ஒழியாமல் எவ்வழியும் நல்ல ஒழுக்கத்தை நயந்து பேணி உயர்ந்த புகழுடன் உய்தி பெறுக.

---

317. உருவுடையான் கல்வி உயர்வுடையான் செல்வம்
பெரிதுடையான் என்னினுமென் பீடோ—அருளமைந்த
சீலம் இலனேல் சிறியன் வறியனென
ஞாலம் பழித்து நகும். (எ)

இ-ள்

அழகு கல்வி பெருமை செல்வம் முதலியன எல்லாம் உடையனாயினும் கருணை நிறைந்த ஒழுக்கம் இல்லை ஆயின் அவனைச் சிறியன் என இழித்து உலகம் பழிக்கும் என்றவாறு.

உயர் நலங்கள் பல ஒருவனிடம் ஒருங்கே அமைந்திருந்தாலும் அவன் ஒழுக்கம் இலன் ஆயின் அவை இழுக்கம் உறும் என இது உணர்த்துகின்றது.

உருவுடைமையை முதலில் குறித்தது வடிவழகு பிறவிப் பேறாய் அமைவது ஆதலின் அப் பேற்றின் அருமை கருதி. செல்வத்தினும் சிறப்புடைமையின் கல்வி அதன் முன் நின்றது.

நல்ல அழகன், உயர்ந்த கல்விமான், சிறந்த செல்வன் எனப் பிறந்து பேர் பெற்று நிற்பது பெருமையே எனினும், இம் மேன்மைகள் யாண்டும் குன்றாமல் மேலும் விளங்கி ஒளிர வேண்டுமாயின் உறுதியான சீலம் உரிமையாக வேண்டும். அருள் அமைந்த என்றது சீலத்தின் பொருள் பொதிந்து வந்தது. தயையும் தண்ணளியும் சீலத்தின் வண்ணங்களாய் வளர்ந்திருக்கின்றன. அருள் கனிய விழுமிய சீலனாய் வெளி மிளிர்கின்றான்.

ஒழுக்கம் ஆன்ம ஒளியாய்ப் பான்மை படிந்திருத்தலால் அது மற்ற மாட்சிகளுக்கெல்லாம் காட்சி தந்தருள்கின்றது. வெற்றியும் புகழும் விழுமிய இன்பமும் அதனால் விளைந்து வருகின்றன. அதன் ஆற்றலும், பயனும் அளவிடல் அரியன.

உடலுக்கு உயிர் போல் உயர்நலங்கள் எவற்றிற்கும் ஒழுக்கம் ஆதாரமாய் அமைந்திருக்கிறது.

அதனை உள்ளுற மருவியுள்ள அளவுதான் கல்வி செல்வம் அதிகாரம் ஆட்சிகள் யாவும் மாட்சியும மதிப்பும் வலிமையும் மகிமையும் வாய்ந்து நிற்கின்றன.

"The strength, the industry, and the civilisation of nations-all depend upon individual character." (Smiles)

"தேசத்தின் நாகரீகம், தொழில், வலிகள் எல்லாம் மனித ஒழுக்கத்தைச் சார்ந்தே இனிது செழித்திருக்கின்றன" என ஸ்மைல்ஸ் என்பவர் இங்ஙனம் கூறி யிருக்கின்றார்.

விளைவுக்கு வித்தைப் போல் சனசமூதாயத்தின் மேன்மைகளுக்கு ஒழுக்கம் மூலகாரணமா யுள்ளது. அதில் இழுக்கம் அடையின் அம் மரபு பழிக்கப்படும்.

கல்வியில் பெரியன், செல்வத்தில் சீமான் என வெளியே பெருகி நிற்பினும் சீலம் இல்லையேல் சிறியன் வறியன் எனச் சீரழிய நேர்கின்றான். பண்பு இன்றேல் பலவும் பாழாகின்றன.

சிறந்த பண்டிதன், நிறைந்த செல்வன், உயர்ந்த குலத்தன், பெரிய அதிகாரி என்பதை விட நல்ல சீலவான் என ஞாலம் சொல்லப் பெறுவது ஒருவனுக்கு மேலான மகிமையாம்.

அறிவையும் செல்வத்தையும் பிறப்பையும் அதிகாரத்தையும் பற்றி வருகின்ற மதிப்பினும் ஒழுக்கத்தால் உளதாகும் மதிப்பு விழுப்பம் மிக வுடையது.

கல்விமானை வாயால் மட்டும் புகழ்ந்து விடுகின்றார்; ஒழுக்கம் உடையானை உள்ளன்பால் உருகி உரிமையுடன் பின்பற்றுகின்றார்.

கல்வி வெள்ளி; ஒழுக்கம் தங்கம். பொன்னை விழைந்து போற்றுதல் போல் சீலவானை ஞாலம் உவந்து போற்றுகின்றது.

காந்தம் இரும்பைக் கவர்ந்து கொள்ளுதல்போன்று சாந்த குணசீலர் மாந்தரைத் தம் வயமாக்கிக் கொள்ளுகின்றனர்.

அரிய பொருள்கள் எவற்றினும் ஒழுக்கம் பெரிய செல்வம்; அதனை உரிமையுடன் பேணி உறுதி நலம் பெறுக.

---

318. நூலொன்றுஞ் னாலும் நுனித்தறிமின் நுண்ணுணர்வோர்
பாலன்பு கொண்டு பணிந்துறைமின் — சீலமென்ப
தொன்றே கலைபலவும் உற்றபயன் உண்மையென்று
நன்றே கடைப்பிடிமின் நன்கு. (அ)

இ-ள்

ஒரு நூலை ஆவது கருத்து ஊன்றி அறிக; நல்ல அறிவுடையாரிடம் அன்புகொண்டு பழகுக; ஒழுக்கம் ஒன்றே கலைகள் பலவும் கற்ற தலையாய பலனும்; இவ் வுண்மையை உறுதியாக நம்பி உயர் நலம் உறுக என்றவாறு.

இது பயிற்சி ஒழுக்கங்களை உணர்த்துகின்றது.

மனிதனுடைய உள்ளம் திருந்தி ஒளி பெறுதற்குக் கல்வி பெருந்துணையாய் வழி புரிகின்றது. அந்த அறிவு நலன் நல்ல நூல்களில் நன்கு நிறைந்துள்ளமையால் அந் நிலைகளை ஓர்ந்து உணர்ந்து கூர்ந்து பயின்று தேர்ந்து கொள்ள வேண்டும்.

நூல் ஒன்று ஆனாலும் என்றது சாரமுடைய ஒரு நூலை வழுவறத் தெளிவாகத் தெரிந்து கொண்டால் அது பல நூல்களையும் படித்த பலனைக் கொடுத்தருள்கின்றது. ஒன்றின் தெளிவு பலவும் எளிதாக அறிதற்கு வழியாகின்றது. வெள்ளாடு போல் நுனிப்புல் மேய்ந்து ஒழியலாகாது. அன்னம் பாலை நுகர்தல் போல நூலை ஆய்ந்து தோய்ந்தவன் அறிவின் சுவையை மாந்தி மகிழ்கின்றான்.

நுனித்து அறிமின் என்றது கருத்து ஊன்றி உணர்தலை.

நுணுகி உணரும் அளவே அறிவு நலங்கள் பெருகி எழுகின்றன. கூரிய நுழைமதி சீரிய கலைநிதி ஆகின்றது.

நாளும் பயிலுதல், நன்கு சிந்தித்தல், ஆழம் காணல், அமைதியாய் ஓர்தல், பயின்றதை மீளவும் அயின்று சுவைத்தல் என்னும் இவை கலை பயில் வழிகளின் தலைசிறந்த நிலைகளாம்.

"சிலநாள் பழகின் சிலவும் பலியா
பலநாள் பழகின் பலிக்கும் என்க;
விரைவால் பார்க்கின் தெரியாது ஒன்றும்
விரையாது ஏற்கின் கருகாது என்க;
வருவதில் கருத்தினை மட்டுப் படுத்தி
வந்ததில் சிந்தையைச் சிந்தாது இறக்குக."

(இலக்கணக் கொத்து)

நூல் பயிலும் முறைகளை இவ் வுரைகளில் காண்க.

"An hour a day with a wisely chosen volume will clarify mind and invigorate spirit." (Living Creatively)

"நன்கு தேர்ந்தெடுத்த ஒரு நல்ல புத்தகத்தோடு நாளும் அரைமணி நேரம் ஒருவன் பழகிவரின் அவன் உணர்வும் உள்ளமும் உறுதியும் தெளிவும் பெற்று உயர்ந்து விளங்கும்" என பேஜ் என்னும் அமெரிக்க அறிஞர் இங்ஙனம் கூறி யிருக்கிறார்.

நுண் உணர்வோர்பால் உறைமின் என்றது சேர்க்கையின் சீர்மையை உணர்த்தியது. தனியே இருந்து நல்ல நூல்களை ஆழ்ந்து படி. வெளியே எழுந்தால் சிறந்த அறிவாளிகளோடு சேர்ந்து பழகு. அகமும் புறமும் அறிவு நலம் வளர மருவி வருக.

அறிவில்லாதவர்களோடு பழகின் மடமையும் தீமையும் விரவிவரும் ஆதலால் அவருடன் பழகலாகாது. உணர்வுடையாரது கூட்டுறவு உணர்ச்சியை வளர்த்தருள்கின்றது; அதனால் மகிழ்ச்சியும் உயர்ச்சியும் மாட்சியும் விளைகின்றன.

நுண் ணுணர்வி னாரோடு கூடி நுகர்வுடைமை
விண் ணுலகே ஒக்கும் விழைவிற்றால்—நுண் ணூல்
உணர்வில ராகிய ஊதியம் இல்லார்ப்
புணர்தல் நிரயத்துள் ஒன்று.

(நாலடியார்)

உணர்வுடையார் நட்பு துறக்க இன்பம்; உணர்விலிகள் உறவு நரக துன்பம் என இஃது உணர்த்தியுள்ளமை அறிக.

சீலம் என்பது கலை பலவும் உற்ற பயன்.

கலைகள் பல வகையான அறிவுகளின் பெருக்காய்ப் பெருகி யுள்ளன. அந்தப் பெரிய வெள்ளப் பெருக்கின் இனிய சாரமாய் ஒழுக்கம் உள் அமைந்துள்ளது.

தண்ணீர்க்கு உள் நீர்மை போல் கலைகளுக்குச் சீலம் என்ற தனால் அதன் நிலைமை தெளியலாம். சீலம் தோய்ந்த கலையறிவே இனிய சுவையுடையதாய் இன்பம் தருகின்றது.

அமுத மயமாய் ஆத்தும சாந்தியை அளித்தருளுதலால் சீலத்தை எவற்றினும் மேலாகப் போற்றி ஒழுக வேண்டும்.

நல்ல நூலை நாடி உணர்க; மேலோருடன் கூடி உறைக; சீலம் உடையனாய்ச் சிறந்து திகழ்க என்பது கருத்து.

---

319. ஒத்தவியல் பில்லார் உறவும் ஒருவன்வாய்
வைத்த மனைவாய் வருசுகமும்—சித்தசுத்தி
இல்லான் உடலொழுக்கும் ஈயான் பொருளுயர்வும்
பொல்லா தனநில்லா போம். (௯)

இ-ள்

உள்ளத்தில் ஒத்த இயல்பு இல்லாதவரது நட்பும், பிறனுடைய மனைவியிடம் வருகின்ற இன்பமும், சித்தசுத்தி அற்றவனது ஆசாரமும், ஈயாத உலோபியின் பொருள் வளமும் இழிவுடையனவாய் விரைந்து ஒழிந்து போம் என்றவாறு.

இது இழுக்கான சில நிலைகளை உணர்த்துகின்றது.

உறவு கொள்ளும் இருவர் தம்முள் ஒத்த பண்பு உடைய ராயின் அந் நட்பு கெடிது நீண்டு நிலைத்து உவகை சுரந்து நிற்கும். தன்மை இசைய வில்லை ஆயின் அவ்வுறவு புன்மையாய்ப் பொன்றி ஒழியும். பண்பு ஒத்த நண்பே இன்பம் உடையதாம்

ஒவ்வாத இயல்புடைய உறவு எவ் வழியும் செவ்வையா யிராது; சிறுமையாய்ச் சிதைந்து தொலையும் ஆதலால் உரிமையை ஓர்ந்து உறுதியாயுள்ளதைத் தேர்ந்து உணர்ந்து சார்ந்து கொள்க.

தன் தன்மைக்கு மாறுபட்டவரோடு கூடாதே; கூடின் துன்பமும் வெறுப்பும் தொடர்ந்து வருத்தும்.

"Disproportioned friendships ever terminate in disgust."
(Goldsmith)

"ஒவ்வாத நட்புகள் என்றும் அருவருப்பில் முடிகின்றன." என்னும் இது ஈண்டு எண்ணத் தக்கது.

உன் இயல்புக்கு ஒத்த உத்தமரோடு பழகுக; மற்றவரை மருவற்க என்பது இதனால் உய்த்துணர வந்தது.

"ஒருவன் வாய் வைத்த மனை" என்றது பிறனுடைய மனையாளை. வாய் வைத்த என்னும் குறிப்பால் அவன் சுவைத்துக் கழித்த எச்சில் என்பது பெறப்பட்டது. அந்த மிச்சிலை நச்சுதல் மிகவும் இளிவாம். மானமும் மரியாதையும் அதனால் அழியும்.

அம் மனைவாய் வரு சுகம் பொல்லாது என்றது பகை அச்சம் பழி பாவம் முதலிய எல்லாத் தீமைகளும் உளவாதல் கருதி.

காணின் குடிப்பழியாம்; கையுறின் கால்குறையும்;
ஆணின்மை செய்யுங்கால் அச்சமாம்—நீணிரயத்
துன்பம் பயக்குமால் துச்சாரி நீகண்ட
இன்பம் எனக்கெனைத்தாற் கூறு. (நாலடியார்)

அயல்மனை விழைந்து நுழைவானுக்கு விளையும் துயர நிலைகளை ஓரளவு இதனால் அறிந்து கொள்ளலாம்.

"உணர்வறும்; செல்வமும் உயர்வுமே அறும்;
குணம் அறும்; குலம் அறும்; கொடிய நோயெலாம்
அணவுறும்; நரகுறும்; ஆயுள் தேயுமால்
கணமறு மாதர் தோள் கலக்கும் தூர்த்தர்க்கே."

இவ்வாறு அலக்கண்கள் பல வருதலால் மறு மனைவாய் வரு சுகம் பெரு நரகம் எனப் பேச நேர்ந்தது.

உடலின் சிறுதினவுக் காக உயிரை
அடர்நரகில் தள்ளல் அவம்.

என்பதை உள்ளி உணர்ந்து உய்ய வேண்டும்.

உள்ளே சித்த சுத்தி இல்லாதவன் வெளியே தேக சுத்தியுடையனாய் ஆசாரம் செய்து நடிப்பது அகத்தே மலம் பொதிந்த

பாண்டத்தைப் புறத்தே மினுக்கிக் காட்டுவது போன்றதோர் புலையாட்டமேயாம்.

நெஞ்சத்தைத் தூய்மை ஆக்காமல் வீணே குளித்து முழுகிக் கோலம் கொள்வன எல்லாம் உலகத்தை வஞ்சிக்கச் செய்யும் புன்செயல்கள் ஆதலால் அவை வஞ்ச வேடங்களாய் வசையுற வந்தன.

"தூசுநீர்க் காவி யுறப்புனைந்து அணிந்து
துளசிதா மரைமணி தோள்மேல்
ஆசில்மூப் பிளமை சாதிவேற் றுமைகள்
அகன்றெவர்க் காயினும் அடியேன்
தாசன்என்று இறைஞ்சிப் பிறர்பொருட் கவர்ந்து
சாத்திமேல் முத்திரா தானம்
மாசிலா தவர்போல் இருந்தனர்; இவர்போல்
வஞ்சனை யாவரே வல்லார்? (1)

சுவடியும் கயிறும் கம்பையும் நெடுவெண்
சோமன்உத் தரிகமும் துலங்கப்
பவுரிடப் பொருள்தாம் உணர்த்துவார் போல்பொற்
பவித்திரம் அணிவிரற் செங்கை
அவணபி நயம்போல் அடிக்கடி நீட்டி
அணிந்தகுண் டலம்அசைத்து அம்பொன்
கவருதற்கு இனியர் கற்றசூது எந்தக்
கள்வரே உலகினில் கற்றார்?" (2)

(மெய்ஞ்ஞான விளக்கம்)

உள்ளத்தில் உண்மையான ஒழுக்கம் இல்லாமல் போலி ஆசாரங்களை மேற்கொண்டு புலையாடி நிற்பவரைக் குறித்து இவை கேலி செய்துள்ளமை காண்க.

"ஆத்மசுத்தி லேநி ஆசாரமதி ஏல?
பாண்டசுத்தி லேநி பாகம் ஏல?
சித்தசுத்தி லேநி சிவபூஜலு ஏலரா?"

"ஆத்துமசுத்தியில்லாத ஒழுக்கமும், பாத்திர சுத்தியில்லாத பாகமும், சித்த சுத்தி யில்லாத சிவ பூசையும் வீண்" என ஞான சீலரான வேமநயோகி தெலுங்கில் இவ்வாறு கூறி யிருக்கிறார்.

ஒன்றும் உதவாத உலோபியின் செல்வம் பழியாய்இழிவுறும் ஆதலால் "ஈயான் பொருள் உயர்வு பொல்லாது" என வந்தது.

நில்லா போம் என்றது ஒரு நலனும் இன்றி விரைவில் அழிந்து ஒழியும்; அங்ஙனம் ஒழிந்து போகாமல் நல்ல வழியில் பயன் படுத்திச் செல்வப் பயனை விரைந்து பெறுக.

ஒத்த இயல்பினரோடு உறவு கொள்; உரிமை மனைவியுடன் மருவி வாழ்; சித்த சுத்தி யாயிரு; அடுத்தவர்க்குக் கொடுத்தருள் என்னும் ஒழுக்க முறைகள் இதில் உரைக்கப் பட்டன.

---

320. சீலம் உடையார் சிறிதே வழுவினுமுட்
கோலம் அழிந்து குலைவரால்—சீலமிலார்
என்னபிழை நேர்ந்தாலும் எண்ணார் புளியுறின்பால்
பின்னமுறும் மோராமோ பேசு. (ம)

இ-ள்

புளி சிறிது படின் பால் முழுதும் கெடும்; மோர் யாதும் கெடாது; அது போல் நல்ல சீலம் உடையவர் சிறிய பிழை நேரினும் நிலை குலைந்து அயர்வர்; சீலம் இல்லாதவர் எவ்வளவு வழுக்கள் நேர்ந்தாலும் கலக்கம் இன்றி நிற்பர் என்பதாம்.

இது ஒழுக்கததைப் பாதுகாக்கும் பான்மை கூறுகின்றது.

புகழ் புண்ணியங்களுக்கு ஏதுவான தரும நலங்களைத் தழுவி ஒழுகும் தகைமையாளரையே சீலம் உடையவர் என ஞாலம் குறித்து வருகின்றது. அந்தப் புனித சீலர் மனித சமுதாயத்தில் தனி நிலையில் உயர்ந்து நிற்றலால் அவர் நிலைமை தலைமையாய் ஓங்கி உலகக் காட்சியில் ஒளி மிகுந்துள்ளது.

பொறி புலன்களுக்குரிய போக நுகர்வுகள் எங்கும் பொங்கி வெறி மண்டியுள்ளமையால் பிழையான வழிகளில் எவரும் எளிதாக நுழைய நேர்கின்றனர். புல்லிய இந்த இன்பப் பொறிகளில் வீழாமல் ஐம்புலன்களையும் நல்ல நெறிகளில் செலுத்தி ஒழுகுதல் அரிய சீலத்தின் பெரிய பயனும். வழுப்படாமல் வளர்ந்து வரும் அளவே விழுப்ப முடையராய் விளங்கி வருகின்றனர்.

ஒழுக்கக் கேடுகள் வழுக்கள் என வந்தன.

"ஒழுக்கமே அன்றித் தங்கள் உள்ளுணர் வழிக்கு மட்டும்
புழுப்பயில் தேனும அன்றிப் பிறவற்றின் புண்ணும் மாந்தி
விழுப்பயன் இழக்கு மாந்தர் வெறு விலங்கு என்று மிக்கார்
பழித்தன ஒழிததல் சீலம் பார்மிசை யவர்கட்கு என்றான்."

(சீவக சிந்தாமணி முத்தியிலம்பகம் 224)

ஒழுக்கம் இன்றி இழுக்கங்கள் புரிந்து வாழ்பவர் மிருகங்களே என இதில் பழித்திருத்தல் அறிக. மட்டு—கள். பிறவற்றின் புண் என்றது புலாலை. அறிவை மயக்கிச் சிறுமை விளைக்கும் பழி உணவுகளை ஒழித்தலே ஒழுக்கத்தின் முதல் படி என இது உணர்த்தியுள்ளது.

"மயக்கும் கள்ளும் மன்னுயிர் கோறலும்
கயக்கறு மாக்கள் கடிந்தனர் கேளாய்!
பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும்
உறங்கலும் விழித்தலும் போன்ற துண்மையின்
நல்லறம் செய்வோர் நல்லுலகு அடைதலும்,
அல்லறம் செய்வோர் அருநரகு அடைதலும்,
உண்டு என உணர்தலின் உரவோர் களைந்தனர்,"

(மணிமேகலை, 16)

புலை கொலைகளைத் தவிர்ந்து ஒழுகுவதே தலையாய ஒழுக்கம் என்பதை இதனால் அறிந்து கொள்ளுகின்றோம்.

தன் உயிர்க்கு இன்பம் தேடுகின்ற மனிதன் எவ்வுயிர்க்கும் யாதொரு துன்பமும் நேராமல் ஓர்ந்து ஒழுக வேண்டும் என்பது தேர்ந்த விதியாம். பழித்தன ஒழித்தல் சீலம் எனச் சீலத்திற்கு இலக்கணம் வகுத்திருக்கும் அழகை ஆய்ந்து பார்க்க.

ஒழுக்கத்தைத் தம் உயிரினும் அருமையாக விழுமியோர் போற்றி வருவர் ஆதலால் ஏதேனும் பிழை நேரின் அவர் உள்ளம் துடித்து விடுகின்றார்.

"சிறிதே வழுவினும் குலைவர்" என்றதனால் அவரது விழுமிய நிலைமை வெளியாய் நின்றது.

சீலம் உடையாரைப் பால் என்றது அவரது தன்மையும் நன்மையும் தெரிய. பால் போல் ஒழுக்கத்தவர் என மேல் வந்துள்ளதையும் இங்கே சிந்தனை செய்து கொள்க.

பாலில் ஒரு துளி புளி விழுந்தாலும் அது நிலை திரிந்து போம்; மோரில் எவ்வளவு படினும் ஏதும் திரியாது.

சீலமுடைய மேலோர் சிறு வழு உறினும் குலை குலைந்து விடுவர்; அஃது இல்லாத கீழோர் எவ்வளவு பிழைகள் நேர்ந்தாலும் யாதும் கவலாமல் அகங்கரித்து நிற்பர். அந் நிலைமைகளைக் காட்சிப் படுத்தித் தெளிவாக விளக்க உவமைகள் வந்தன.

பால் மேலோர்க்கும், மோர் கீழோர்க்கும், புளி வழுவுக்கும் ஒப்பாம். சீலமுடையார் தலைமையும் அஃது இல்லாரது நிலைமை யும் இதில் ஒருங்கு கூறப்பட்டன.

கல்வி செல்வம் அதிகாரம் முதலிய நலங்கள் எவற்றி னும் சீலமுடைமையே மேலான உடைமையாம்; அதனை யுடை யவரே சிறந்த மேலோராய் உயர்ந்து நிற்கின்றார்; அதனை இழந் தவர் என்ன வளங்கள் எய்தியிருந்தாலும் சினனவராய் இழிந்து படுகின்றார். அந்த இழிவு நேராமல் சிறந்த சீலனாய் உயர்ந்து வாழ வேண்டும்.

மனிதனைத் தெய்வமென மாண்புறுத்த வல்ல
புனித ஒழுக்கம் பொருந்தார்—பனிமலைபோல்
செல்வமிகப் பெற்றுச் சிறந்திருந்தார் ஆனாலும்
நல்லோர் மதியார் நயந்து.

சீலம் அறிவான் இளங்கிளை; சாலக்
குடிஓம்பல் வல்லான் அரசன்—வடுவின்றி
மாண்ட குணத்தான் தவசிஎன் றிம்மூவர்
யாண்டும் பெறற்கரி யார். (திரிகடுகம்)

சீலம் திவ்விய மகிமை யுடையது; சீவ ஒளியாய் உள்ளது; அதனை உரிமையுடன் பேணி இருமையும் காணுக.

---

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

சீலம் தெய்வத் திரு.
ஒழுக்கமும் உணர்வும் கலையின் கனிகள்.
உயர் நலங்கள் பலவும் அதனால் உளவாம்.
ஒழுக்கம் இன்றேல் உயர்வு குன்றும்.
சீலம் இல்லா வாழ்வு செத்த வாழ்வாம்.
ஒழுக்கம் இல்லான் சொல் இழிக்கப்படும்.
உலகம் அவனைப் பழித்து நகும்.
சீலம் உடையான் சீர் பல அடைவான்.
சித்த சுத்தியே சிறந்த சீலமாம்.
உயிரினும் சீலம் ஓம்ப உரியது.

௩௨ வது சீலம் முற்றிற்று.

---

# முப்பத்து மூன்றும் அதிகாரம்.

## நீர்மை.

அஃதாவது உள்ளப் பண்பு. தண்மை செம்மை உண்மை வண்மை முதலிய நன்மைகள் எல்லாம் நன்கு அமைந்து எங்கும் இனிய நீரராய்த் தனி அமைந்திருக்கும் தகைமையை உணர்த்து கின்றமையால் நீர்மை என வந்தது. அரிய சீலத்தின் சாரமாய் மருவியுள்ள அவ்வுரிமை கருதி அதன் பின் இது வைக்கப்பட்டது.

321. புண்ணிய நீர்மை பொருந்தி உயிர்களிடம்
தண்ணளி வாய்ந்து தகவமைந்து—கண்ணியமே
எவ்வழியும் பேணி இனிது வருவதே
செவ்விய நீர்மை தெளி. (க)

இ-ள்

தரும குணங்களை மருவி, எல்லா உயிர்களிடத்தும் கருணை புரிந்து, யாண்டும் நடுவு நிலைமையுடன் நடந்து எவ்வகையும் பெருந் தன்மையைப் பேணி வருவதே செவ்விய நீர்மையாம் என்றவாறு.

இது நீர்மையின் நிலைமை கூறுகின்றது.

நீருக்குத் தண்மை, நிலத்திற்குத் திண்மை, தேனுக்கு இனிமை, பூவுக்கு மணம் போல் உலகப் பொருள்களுக்குக் குணங்கள் இயற்கையாக அமைந்திருக்கின்றன. அந்த அமைப்பு களின் அளவுக்குத் தக்கபடியே யாவும் மதிக்கப் படுகின்றன.

இயல்பு இனியது ஆயின் அதனையுடைய பொருளை நல்லது என்கின்றோம்; கொடியது எனின் அதனைத் தீயது என்கின்றோம். நல்லதை உவந்து கொள்ளுகின்றோம்; தீயதை இகழ்ந்து தள்ளு கின்றோம்.

நன்மையான தன்மையுடையதே என்றும்எங்கும்எவராலும் நயந்து நோக்கிப் புகழ்ந்து போற்றப் படுகின்றது.

இனிய குண நலங்களை எய்தியபொழுது மனிதன் தனி மகி மையாளனாய் உலகம் தொழுது வணங்க உயர்ந்து நிற்கின்றான்.

உடலை மருவி இயங்கும் உயிர் பலவகை இயல்புகளையுடையது.

"அறிவு அருள் ஆசை அச்சம் மானம்
நிறை பொறை ஓர்ப்புக் கடைப்பிடி மையல்
நினைவு வெறுப்பு உவப்பு இரக்கம் நாண் வெகுளி
துணிவு அழுக்காறு அன்பு எளிமை எய்த்தல்
துன்பம் இன்பம் இளமை மூப்பு இகல்
வென்றி பொச்சாப்பு ஊக்கம் மறம் மதம்
மறவி இனைய உடல்கொள் உயிர்க்குணம்." (நன்னூல்)

இதில் குறித்துள்ள முப்பத்திரண்டு குணங்களுடன் மேலும் பல இயல்புகள் உயிர்ப் பண்புகளாய் மேவி இருக்கின்றன.

சீவ சுபாவங்களாய் மேவியுள்ள இவற்றுள் நல்ல இயல்பு களையே பழகி உரம் ஏறியுள்ளவர் நல்லவர்களாய் வெளியே விளங் குகின்றார். தன்மை அளவே நன்மைகள் வளர்கின்றன. தகைமை களால் வகைமைகள் காணப் படுகின்றன.

குணம், தன்மை, இயல்பு, என்பன உயர்ந்த பண்புகளையே குறித்து வரினும் நீர்மை என்னும் சொல்லில் சீர்மைகள் பல நிறைந்துள்ளன. உரிய பெயரில் அரிய தகைமைகள் மருவி ஒளிர் கின்றன. இனிய பண்புகள் பெரிய இன்பங்களாகின்றன.

புண்ணியம் பொருந்தி, உயிர்களிடம் தண்ணளி வாய்ந்து, தகவு அமைந்து, எவ்வழியும் கண்ணியம் பேணி வருவதே நீர்மை என்றதனால் அதன் நிலைமையை நிறை தூக்கி உணர்ந்து கொள்ளலாம்.

கூர்மை அறிவின் அரிய நுட்பத்தைக் குறித்து வருதல் போல் நீர்மை உயிரின் இனிய தகைமையை உணர்த்தி வரு கின்றது. தூய ஆன்ம அமைதியின் பான்மை காண வந்தது.

சிறந்த பெருந்தன்மையின் பரிபூரண நிலைமையாய் இது நிலவியுள்ளது. தரும குண சீலமும், அருள் நலனும், தகவுடை மையும், மன அமைதியும், மதி மாண்பும் அதி மேன்மையாய் ஒருவனிடம் அமைந்த பொழுது அவன் பெரு நீர்மையாளனாய்ப் பெருகி ஒளிர்கின்றான்.

கண்ணியம்=மரியாதை, மதிப்பு, மேன்மை. எவரும் எண்ணி மதிக்கும் தன்மை கண்ணியம் என வந்தது. குணம் வளர மணம் வருகின்றது. கண்ணல்=கருதல், குறித்தல்.

தகவு என்பது உறவினர், அயலினர் என்று பாராமல் யாண்டும் எவரிடமும் நெறிபுரிந்து நெஞ்சம் கோடாது நிற்கும் நேர்மை.

சிறந்த குணங்கள் எல்லாம் உயர்ந்த மனிதனுடைய இயல்புகளாய் அமைந்திருக்கின்றன. அவனுடைய செயல்களும் மொழிகளும் நீதி நலங்கள் ததும்பி வேத விதிகளாய்ப் பொலிந்து மிளிர்கின்றன.

"நின்செய்கை கண்டு நினைந்தனவோ நீள்மறைகள்
உன்செய்கை அன்னவைதான் சொன்ன ஒழுக்கினவோ?"
(இராமாயணம், கவந்த, 49)

இராமபிரானுடைய செயல் முறைகளும் குண நீர்மைகளும் இவ்வாறு புகழ்ந்து போற்றப் பட்டுள்ளன.

அன்பு தயை அருள் இரக்கம் என்பன புனிதமான உயிரின் கனிவுகளாய் விளைந்திருத்தலால் அவை எவ் வுயிர்க்கும் இனிமை சுரந்து வருகின்றன.

புண்ணிய நீர்மையை முதலில் குறித்தது எல்லா நன்மைகளுக்கும் மூல காரணமா யுள்ள அதன் முதன்மை கருதி.

தரும சுபாவம் இருதயத்தில் மருவிய பொழுது அம் மனிதன் எவர்க்கும் இனியனாய்த் தனி மகிமை அடைகின்றான்.

அறவிய மனத்தர் ஆகி ஆருயிர்க்கு அருளைச் செய்யின்
பறவையும் நிழலும் போலப் பழவினை உயிரோடு ஆடி
மறவிஒன் றானும் இன்றி மனத்ததே சுரக்கும் பால
கறவையிற் கறக்கும் தம்மால் காமுறப் பட்ட எல்லாம்.
(சிந்தாமணி, முத்தி, 279)

புண்ணிய மனத்தனாய் அருள் புரிகின்றவன் எண்ணிய பேறுகளை எல்லாம் எளிதில் பெறுவன் என இது உணர்த்தியுள்ளது. மனத்ததே சுரக்கும் பால கறவை என்றது கருதியதை உடனே உரிமையுடன் அருளுகின்ற தெய்வப்பசுவாகிய சுரபியை. இப் பாசுரம் மனனம் செய்து நாளும் சிந்திக்க உரியது.

இனிய நீர்மை தரும நலம் உடைமையால் அது தெய்வத் தன்மையாய்ச் சிறந்து எவர்க்கும் உய்வைத் தருகின்றது.

"நீர்மையால் நெஞ்சம் வஞ்சித்துப் புகுந்து என்னை
ஈர்மை செய்து என்னுயிராய் என்னுயிர் உண்டான்."
(திருவாய்மொழி

திருமாலின் நீர்மையை நினைந்து நம்மாழ்வார் இங்ஙனம் உருகியிருக்கிறார். நீர்மை எவ்வளவு அருமை பெருமைகளையுடையது என்பது இதனால் அறியலாகும். அரிய பல குண கணங்களின் நிறைவே நீர்மை; அதனை உரிமையாகப் பெற்றவர் இருமையும் மகிமையுடையராய் இன்பம் பெறுகின்றனர்.

---

322. உண்ணீர்போல் எவ்வுயிர்க்கும் யாண்டும் உதவியாய்
ஒண்ணீர்மை உள்ளே உறவமைந்து—தண்ணீர்மை
தாங்கி இயங்கும் தகவுடையார் தம்புகழ்மேல்
ஓங்கி ஒளிரும் உயர்ந்து. (உ)

இ-ள்

உண்ணும் நீர் போல் யாண்டும் எவ்வுயிர்க்கும் உதவியாய் அமர்ந்து ஒள்ளிய தன்மை அமைந்து என்றும் குளிர்ந்த நீர்மையாளராய் இனிது ஒழுகி வரும் புனிதருடையார் புகழ் வானஒளி போல் உலகம் எங்கும் ஓங்கி ஒளிரும் என்றவாறு.

இது, நீரின் இயல்பாய் ஆருயிர்க்கு உதவுக என்கின்றது.

உயிர்களுக்குப் பயன்படும் அளவே பொருள்களுக்கு மதிப்பும் மாண்பும் மகிமையும் பிரியமும் உளவாகின்றன. இதம் உடையன இனியனவாய்த் தனி உயர்வு அடைகின்றன. இதம் இல்லாதன இழிவாய்க் கழிந்து எளிதாய் ஒழிந்து போகின்றன.

இதமாய் உதவி புரிவது தெய்வ குணம் ஆதலால் உபகாரி தெய்வீக மனிதனாய்ச் சிறந்து திகழ்கின்றான்.

அந்த உதவி நலங்களையும் இதங்களின் விதங்களையும் தெளிவாக விளக்குதற்கு உண்ணீர் இங்கே உவமையாய் வந்தது.

தண்ணீர் உயிர்களுக்குப் புரிந்துவரும் நன்மைகளால் அது அமுதம் எனவும், தெய்வம் எனவும் புகழ்ந்து போற்றப்படுகின்றது. பேருபகாரிகளை நீரோடு நேர் வைத்து நூலோர் துதிக்கின்றனர்.

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு. (குறள், 215)

ஊருணி நிறையவும், உதவு மாடுயர்
பார்கெழு பழுமரம் பழுத்தற் றாகவும்,
கார்மழை பொழியவும், கழனி பாய்நதி
வார்புனல் பெருகவும், மறுக்கின்றார்கள் யார்?
(இராமா. மந்திர, 82)

இராமன் அரசு பெறும் தகைமையைக் குறித்து இந்த நான்கு உவமைகள் வந்திருக்கின்றன. ஊருணி நீர் நிறைவது, இனிய மரம் கனிகள் கனிவது, மேகம் மழை பொழிவது, நதி புனல் பெருகுவது போல் அக் குலமகன் அதிபதியாய் வருவது என மதி மந்திரிகள் இவ்வாறு மகிழ்ந்து மொழிந்துள்ளனர்.

உண்ணும் நீரினும் உயிரினும் அவனையே உவப்பார்

என வசிட்டரும் அப் புண்ணியனை இப்படிப் போற்றி யுரைத்திருக்கிறார். இனிய பண்பினை எவரும் எண்ணி இன்புறுகின்றனர். இதனால் இராமனது நீர்மையும் நிலைமையும் நிலை தெரியலாகும்.

குண நலனுடைய மனிதனை உலகம் உவந்து தொழுது புகழ்ந்து போற்றுகின்றது. மன்னுயிர்க்கு இதம் செய்யத் தன் உயிர் உயர்ந்து தனி மகிமை அடைகின்றது.

தண் நீர்மை தாங்கி = இனிய பண்புகளைத் தனி உரிமையாக் கொண்டு. இனிமையும் இதமும் மனித வசியங்களாகின்றன.

நீர் பலவகை நிலைகளில் நின்று எவ்வுயிர்க்கும் நன்கு பயன் படுகின்றது. அழுக்கு நீங்கக் குளிக்க உதவுகின்றது; உணவுகளைச் சமைத்து உண்ண உதவுகின்றது; பருகுதற்கு இனிய பானம் ஆகின்றது; இவ்வாறு பல்லாற்றானும் நலம் பயந்து வருதலால் எல்லார்க்கும் இதம் புரியும் நல்லார்க்கு உவமானமாக அதனை ஈண்டு எடுத்துக் காட்ட நேர்ந்தது.

நன்மை புரிய மனிதன் தன்மை உயர்கின்றது. அவ் வுயர்ச்சியே பிறவிப்பேறும்; இவ் வுண்மையை உணர்ந்து அதனை உறுதி செய்து கொள்ளுக.

எவ்வழியும் இனியனாய் இதம் புரிந்தருளுக என்பது குறிப்பு.

---

323. வாக்கில் இனிமை மனந்தூய்மை யாரிடமும்
நோக்கில் உரிமை நுதலியே—போக்கெங்கும்
அன்பு கனிய அருள்புரியின் அவ்வாழ்வு
இன்பம் உடைய திவண். (ந)

இ-ள்

வாயில் இனிய சொல்லும், மனத்தில் தூய எண்ணமும், பிறர்பால் குளிர்ந்த பார்வையும், எங்கும் அன்பு கனிய அருள்

புரிந்து வரின் அவ் வாழ்வு இன்பம் சுரந்து ஈண்டு இசை மிகுந்து உள்ளது என்றவாறு.

இது, சொல் செயல் எல்லாம் சுகநீர்மை தோய்க என்கின்றது.

வாக்கு என்றது வாயினால் பேசுகின்ற வார்த்தையை.

மனிதனுடைய எண்ணங்களையும் நிலைகளையும் வெளியே தெளியச் செய்வது வாய்மொழியே. வாழ்க்கைகள் யாவும் வாய்ச் சொல்லால் நடந்து வருகின்றன. சீவியத்தின் ஆதரவாயுள்ள அதன் பொறுப்பும் சிறப்பும் நுனித்து நோக்கத் தக்கன.

யாகாவார் ஆயினும் நாகாக்க; காவாக்கால்
சோகாப்பர் சொலலிழுக்கப் பட்டு. (குறள், 127)

நாவைப் பாதுகாத்து ஒழுக வேண்டிய உறுதி நிலைமை இதனால் உணர்ந்து கொள்ளலாம். ஒரு சொல் கொல்லும்; ஒரு சொல் வெல்லும் என்னும் பழமொழி வாக்கின் வரவு செலவுகளை நன்கு உணர்த்தியுள்ளது.

"Whoso keepeth his mouth and his tongue, keepeth his soul from troubles." (Bible)

"தன் வாயையும் நாவையும் காக்கின்றவன் தன் உயிரை யாதொரு துயரமும் அடையாமல் பேணுகின்றான்" என்னும் இது ஈண்டுக் காணத்தக்கது.

நாவைக் காத்தலாவது தீய மொழிகள் பயிலாமல் யாண்டும் அமைதியாய் நல்லன பேசி வருதல். எவர்க்கும் இன்பம் விளைத்து வருதலால் அன்பு நலம் கனிந்த இனிய மொழியில் தரும நலங்கள் தழைத்து வருகின்றன.

"இனியமொழி பேசும் எழில்நா புகழின்
புனித மனையாய்ப் பொலிந்து—தனியறங்கள்
யாவும் விளையும் அருள்நிலைய மாம்அதனை
மேவினார் தேவினார் மேல்,"

நல்ல நாவினால் இவ்வாறு நலங்கள் பல உளவாகின்றன.

நாவின் இனிமை மனத்தின் புனிதத்தை மருவி வரும் பொழுதுதான் அது உண்மையான உயர் சுவையுடையதாய் ஒளி வீசுகின்றது. இனிய சொல் புனித மனத்தின் தனி ஓசையாகின்றது. தூய்மை மணம் வாய்மையில் பரிமளிக்கின்றது.

நோக்கில் உரிமை நுதலி என்றது எவரிடமும் அளி புரிந்து குளிர்ந்த நோக்கோடு கனிந்து பார்த்தலை. நுதலுதல் = சொல்லுதல். ஆருயிர்கள்பால் அருள் புரிந்துள்ளமையை மேலோர் பார்வையே காட்டி விடும் ஆதலால் அக் காட்சியின் மாட்சி காண வந்தது.

> கண்நோக்கு அரும்பா, நகைமுகமே நாள்மலரா,
> இன்மொழியின வாய்மையே தீங்காயா—வண்மை
> பலமா, நலம் கனிந்த பண்புடையார் அன்றே
> சலியாத கற்ப தரு. (நீதி நெறி விளக்கம், 37)

இனிய நீர்மையுடையவர்களது இயல்பை உருவகித்து அவரைக் கற்பக தருவாக இது வருணித்திருக்கிறது.

மனம் மொழி மெய்கள் இனிமை ஆயபோது மனிதன் அமுதம் ஆகவும் கற்பகமாகவும் மாறி அற்புத நிலையை அடைகின்றான். நீர்மை விளையச் சீர்மைகள் வளர்கின்றன.

ஒருவன் உள்ளத்தில் அன்பும் அருளும் கனியவே அவனுடைய வாழ்க்கையில் இன்பமும் மகிமையும் பெருகி எழுகின்றன.

இன் சொல் இயம்புக; நெஞ்சத்தைத் தூய்மை ஆக்குக; எங்கும் அன்பு செய்க; எவ்வுயிர்க்கும அருள் புரிந்து ஒழுகுக.

---

324. உள்ளம் கனியின் உலகம் கனிந்துன்னை
வள்ளலென வாழ்த்தி வணங்குமால்—உள்ளம்
கடிதாயின் யாரும் கடிந்து வெறுப்பர்
கொடிதாகும் வாழ்வு குறி. (௪)

இ-ள்

உனது மனம் புனிதமாய் இனிது கனியின் உலகம் உன்னை உரிமையுடன் உவந்து வாழ்த்திப் புகழ்ந்து போற்றும்; கடினமாயின் கொடியன் என வெறுத்துத் தூறும; உன் வாழ்க்கையும் துயரமாம் என்றவாறு.

இது, மனம் போல் உலகம் என மதி நலம் கூறுகின்றது.

உள்ளம் கனிதல் ஆவது நெஞ்சில் கருணைப் பண்பு சுரந்திருத்தல். எவ்வுயிர்க்கும் இரங்கி யருளும் தண்ணளியுடையவர்

புண்ணிய சீலர் ஆகின்றார்; ஆகவே கருமவுலகினர் அவரைத் தரும மூர்த்தி எனக் கருதி மகிழ்ந்து உருகி வணங்குகின்றனர்.

தாயைப் பிள்ளைகள் மதித்துப் போற்றுதல் போல் தூய வுள்ளமுடைய கருணையாளரை மக்கள் உவந்து போற்றுகின்றனர். மாக்களும் கனிந்து நோக்குகின்றன.

உள்ளம் கனிய உலகம் கனிகின்றது.

உலகம் என்றது உயிர் இனங்களை. பாவ உலகில் பயிலும் சீவ கோடிகள் யாவும் பெரும்பாலும் தங்கள் நலங்களையே கருதி அல்லும் பகலும் ஆவலித்து உழலுகின்றன. அந்த ஆவலினால் பிறருடைய இதங்களை எண்ணி இரங்காமல் பிழைபடுகின்றன. தந்நலம் விழைந்தன நன்னலம் ஒழிந்தன.

அன்பின் பண்பாகிய சுவை இன்மையால் அவை நவையுறுகின்றன. அன்புடையது பிறர்க்கு என்பும் உதவும் இயல்பில் இன்பம் புரிகின்றது. புரியவே அவ்வுயிர்வாழ்வு தெய்வ நலம் சுரந்து திவ்விய மகிமை பெறுகின்றது. உயிர்களுக்குச் செய்வது கடவுளுக்கு உரிமை ஆகின்றமையால் அந்த அன்பாளரை உவந்து இறைவன் அருளை பொழிகின்றான்.

எங்கும் நிறைந்து யாரும் அறியாமல் இன்ப நிலையமாயுள்ள பரமன் அன்பின் வழியே அருள் செய்து ஒளிர்கின்றான்.

"அன்பினில் விளைந்த ஆரமுதே!"
"அருளுடைச் சுடரே! அளிந்தது ஓர் கனியே!"
(மாணிக்க வாசகர்)

"அருள் பழுத்த பழச் சுவையே" (தாயுமானவர்)

"அன்புஎனும் பிடியுள் அகப்படும் மலையே!
அன்புஎனும் குடில்புகும் அரசே!
அன்புஎனும் வலைக்குள் படுபரம் பொருளே!
அன்புஎனும் கரத்தமர் அமுதே!
அன்புஎனும் கடத்துள் அடங்கிடும் கடலே!
அன்புஎனும் உயிர்ஒளிர் அறிவே!
அன்புஎனும் அணுவுள் அமைந்த பேர்ஒளியே!
அன்புஉருவாம் பர சிவமே!" (இராமலிங்கர்)

கடவுளை அன்பர்கள் இங்ஙனம் உருகித் துதித்துள்ளனர். இதனால் அவர்தம் உள்ளக் கனிவும், உலகம் அவரை உள்ளன்புடன் உவந்து கொண்டாடும் நிலையும் உணர்ந்து கொள்ள வந்தன.

தன்னுயிர் கனிந்து உருகிய பொழுது அம் மனிதனை மன்னுயிர்கள் மகிழ்ந்து தொழுகின்றன. தன் உள்ளம் கனியாமல் வன்கண்ணனாய் இருப்பின் வெய்யவன் என வையம் அவனை வைய நேர்கின்றது. புறத்தே எவ்வளவு வசதிகளை யுடையனாயினும் அகத்தே பண்பு இல்லையாயின் அவன் வாழ்க்கை சுவையற்றதாய இழிந்து படுகின்றது. "வாழ்வு கொடிது ஆகும்" என்றதனால அவனது தாழ்வு நிலை தெளிவாம்.

தயை உயர் நலங்களை உளவாக்குகின்றன; அதனை எவ்வழியும் பேணிச் செவ்விய நீர்மையனாய்ச் செழித்து வாழுக.

---

325\. கண்ணோடி யாண்டும் கருணை புரிந்துவரின்
விண்ணோடி நீண்டு வியனாகி—எண்ணோடு
தேவர் மகிழும் திருவுடைமை யாமதனை
மேவினார் மேவாத தில். (ரு)

இ-ள்

யாண்டும் கண்ணோட்டம் கனிந்து கருணை புரிந்து வரின் அந்தப் புண்ணிய மணம் விண்ணும் பாந்து விரிந்து தேவர் மகிழும் தெய்வத் திருவாய்ச் சிறந்து விளங்கும்; அதனையுடையவர் அடையாத பாக்கியம் யாதும் இல்லை என்றவாறு.

இது, சீவ கருணை தேவ அமிர்தம் என்கின்றது.

வியன்=மேலான உயர் நிலை. நயனால் விளையும் பயனை உணர்த்தியது. மனம் உருக மாண்பு பெருகுகின்றது.

கண் ஓடி என்றது பிற உயிர்களுக்கு நேர்கின்ற அல்லலைக் காணும் பொழுது உள்ளம் உருகுதல். இந்த உருக்கம் உயர்ந்த பண்பாடுடைய சிறந்த ஆன்ம குணமாய் அமைந்திருக்கின்றது.

மனித உருவில் கண் அரிய மகிமை யுடையது. உலகப் பொருள்களை எல்லாம் கண்டு களிக்கும் காட்சி மிகுந்து மாட்சி அமைந்துள்ளது. தன் பார்வையில் பரிவு தோன்றி அருள் புரியும் பொழுதுதான் மனிதன் உண்மையான கண்ணாளனாய் ஒளி

சிறந்து நிற்கின்றான். கண் ஓடி அருளானாயின் அவன் பிறப்பு மண்ணாகவும் மரமாகவும் இழிக்கப் படுகின்றது.

"மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர்." (குறள், 576)

உயர்ந்த மனிதனைப் பிறந்திருந்தாலும் இரங்கி அருளாதவன் இழிந்த மரமே என இது இகழ்ந்திருத்தல் அறிக. சிறந்த பிறவிப் பயனை இழந்து போதலால் இங்ஙனம் இழிந்து பட நேர்ந்தான்.

பிறருடைய இடர் கண்ட பொழுது இரங்கி இதம் புரிவது கண்ணோட்டம் என வந்தது. இந்தச் சீவ தயையால் மனிதன் திவ்விய மகிமைகளை அடைகின்றான். சர்வ சீவ தயாபரன் என்பது கடவுளுக்கு ஒரு பெயர். இதனால் தயை யுடையவனது உயர் நிலையை உணர்ந்து கொள்ளலாம்.

கண்ணோட்டம், அன்பு, ஆதரவு, அருள் என்பன தலை சிறந்த பண்புகள். புனிதமான உயர் நிலைகளை இனிது அருளுத லால் இவை இனிய நீர்மைகள் என நின்றன. இந் நீர்மைகளின் அளவே சீர்மைகள் விளைகின்றன.

உள் உருக்கமான உயர்ந்த உயிர்ப்பண்பு குன்றிய பொழுது புறத்தில் புரிகின்ற நல்ல செயல்களும் புல்லியனவாய்ப் புலைப் படுகின்றன.

"அன்பிலாதநல் அறங்களும் ஐவகை வேள்வியும் பிணமேயாம்;
அன்பில் வாய்மையும் தானமும் ஒழுக்கமும் விரதமும் பிணமேயாம்;
துன்பில் ஞானமும் துகளில்லச் சமயமும் சொல்லிடில் பிணமேயாம்;
அன்பிலாதியல் அறம் பொருள் இன்பம் வீடு அனைத்திற்கும் உயிர் உண்டோ"?
(அனுபவசாரம்)

இனிய நீர்மையான அன்பின் பெருமை இதனால் அறிய லாகும். உள்ளக் கனிவே எல்லா நல் வினைகளுக்கும் உயிராதார மாயுளது.

கருணையைத் திருவுடைமை என்றது எல்லாப் பெருமை களையும் இன்ப நலங்களையும் ஈண்டு இனிது நல்கி முத்திப் பேற் றையும் அருளுதல் கருதி.

"அருட் செல்வம் செல்வத்துட் செல்வம்" எனத் தேவர் அறிவுறுத்தியுள்ள பொருள் நிலை தெரிக. என்றும் அழியாமல் யாண்டும் நிலையாய் நின்று உயிர்க்கு உறுதி புரிந்து உயர் பேரின் பம் தருதலால் அருள் பரம பாக்கியம் ஆயது.

சீவதயை புண்ணியமாய்ப் பொங்கி வருகின்றது; வரவே அதனையுடையவனை விண்ணவரும் விழைந்து கொண்டாடுகின்றனர். மன்னுயிர்க்கு இதம் புரியத் தன் உயிர் உயர்ந்து ஒளி பெறுகின்றது.,

உண்டியால் உடல் வளர்ப்போன் உயிரினை வளர்த்தோன் ஆகான்;
மண்டிய அருளால் வைய மன்னுயிர்க்கு இரங்கி வாழ்வோன்
கொண்டதன் பிறவிப் பேறும் குலவிய உயிரும் பேணிக்
கண்டபே ரின்பம் என்னும் கதிநிலை கண்டான் அன்றே.

கண் ஓடிக் கருணை புரிவதால் உளவாகும் பெரும் பேறுகளை இங்ஙனம் கருதி உணர்ந்து உறுதி நலங்களை உவந்து கொள்ளுக.

பிறர் நலம் பேணும் பெரியோர்களைப் பேரின்ப நலம் தானாகவே தனக்கு உரிமை செய்து கொள்ளுகின்றது. ஈண்டு மன்னுயிர்க்கு இரங்குகின்றவன் ஆண்டுத் தன் உயிர்க்குத் தனி நாயகன் ஆகின்றான். வித்திய விளைவு துய்த்து மகிழ வருகின்றது.

---

326. முத்தி அருளும் முதன்மைத் திருவான
பத்தியருள் அன்பென்னும் பான்மையெலாம்—சித்தம்
உருகி இறையை உணர்ந்து கரைந்து
வருகை தெரிக வரவு. (சு)

இ-ள்

முக்தி இன்பத்தை அருள வல்ல தலைமைத் திருவான அன்பு அருள் பத்தி என்பன எல்லாம் இறைவனை நினைந்து உள்ளம் கரைந்து உருகிவரும் இயல்புகளை என்றவாறு.

இது, ஆன்ம உருக்கத்தின் மேன்மை கூறுகின்றது.

அன்பு = ஒத்த மனிதரிடம் உரிமை புரியும் உள்ளக் கனிவு.

அருள் = எளிய பிராணிகள்பால் இரங்கி நிற்கும் தயை.

பத்தி = கடவுளை நினைந்து உருகும் உயர் நீர்மை.

இந்த உயிர் உருக்கங்கள் பேரின்ப நிலையங்களாய்ப் பெருகியிருக்கின்றன. உள்ளம் கனிய உணர்வு கனிந்து உயிர் ஒளி பெறுகின்றது. அவ்வொளி பர வெளியில் எளிது கலந்து முழுதும் ஆனந்தம் ஆகின்றது. சீவ தயை சிவ மயமாய்த் திகழ்கின்றது.

மனம் கனியக் கனிய மனிதன் புனிதனாய் இனிய தெய்வத் தன்மையை அடைகின்றான்; கனியாமல் கடிதாயிருந்தால் கல் இரும்பு மரம் மண் என இழிந்து வறிதே ஒழிந்து போகின்றான்.

"வெள்ளம்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
பெருமானே எனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளம்தாழ் உறுபுனலிற் கீழ்மேல் ஆகப்
பதைத்துருகும் அவர்நிற்க என்னை ஆண்டாய்க்கு
உள்ளம்தாள் நின்றுச்சி அளவும் நெஞ்சா
உருகாதால் உடம்பெல்லாம் கண்ணாய் அண்ணா!
வெள்ளம்தான் பாயாதால் நெஞ்சம் கல்லாம்
கண்ணிணையும் மரமாம்தீ வினையி னேற்கே."

(திருவாசகம்)

பத்தியின் பரவச நிலைகளை இது உணர்த்தியுள்ளது. பள்ளம் பாயும் வெள்ளம் போலப் பரமனை நோக்கி உள்ளம் உருகிக் கரையும் அனுபவத்தைத் தாம் அடைந்திருந்தும் ஆராமையால் மாணிக்கவாசகர் இங்ஙனம் அலறி யிருக்கிறார்.

நெஞ்சம் கல்லா? கண் மரமா? என்றது உள்ளம் உருகா நிலையில் உள்ள தன்மைகளை உணர்த்தி நின்றது. கல்லும் மரமு மாயிருப்பவர் இன்னார் என்பதைச் சொல்லாமல் சொல்லினார்.

"இரும்புதரு மனத்தேனை ஈர்த்து ஈர்த்துஎன் என்புருக்கிக்
கரும்புதரு சுவைஎனக்குக் காட்டினை உன் கழலிணைகள்."

அன்பு நலனில் விளையும் ஆனந்த நிலையை இதனால் அறிந்து கொள்கின்றோம். உயர்ந்த பொருளை நினைந்து உள்ளம் உருகவே உயிர் அதன் மயமாய் விரிந்து உயர் பரமாகின்றது.

பத்தி அருள் அன்புகளை முத்தி அருளும் முதன்மைத் திரு என்றது அவற்றின் உத்தம நிலைகளை உய்த்துணர வந்தது.

தன் உள்ளம் கரைந்து உருகிய பொழுதுதான் மனிதன் பேரின்ப வெள்ளத்தில் மூழ்கி மகிழும் உரிமையைப் பெறுகின்றான். வேறு வழியில் அதனைப் பெறுதல் அரிது.

என்பே விறகாய் இறைச்சி அறுத்திட்டுப்
பொன்போல் கனலில் பொரிய வறுப்பினும்
அன்போடு உருகி அகம் குழைவார்க் கன்றி
என்போன் மணியினை எய்த ஒண்ணாதே. (திருமந்திரம்)

நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னார்சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவும் நீரும் கண்டு
நக்கு நிற்பன் அவர்தமை நாணியே. (தேவாரம்)

நீர்மையில் நூற்றுவர் வீய ஐவர்க்கு அருள்செய்து நின்று
பார்மல்கு சேனை அவித்த பரஞ்சுடரை நினைந்து ஆடி
நீர்மல்கு கண்ணினராகி நெஞ்சம் குழைந்து நையாதே
ஊர்மல்கி மோடு பருப்பார் உத்தமர்கட்கு என்செய்வாரே?
(திருவாய்மொழி)

அன்பினால் நெஞ்சம் உருகி நின்றவரே இன்ப மூர்த்தியான இறைவனை எய்துகின்றார்; அல்லாதவர் அயலாராய் மயலார் கின்றார் என இவை குறித்து நிற்கும் இயல்பினைக் கூர்ந்து நோக்குக. இனிய நீர்மை பிறவிதீர்கின்ற சீர்மை ஆகின்றது.

மாடு ஆடு முதலிய இழி பிறவிகளில் வீழாமல் அறிவுடைய இந்த உயர் பிறவியை அடைந்துள்ளோம்; பல படிகள் ஏறி மனிதராய் உச்ச நிலையை எய்தி வந்துள்ள நாம் நன்றி யறிவுடன் இறைவனைக் கருதி வணங்கும் கடப்பாடுடையராய் மருவியிருக்கிறோம்; அறிவு மயமான பரமனை உரிமையுடன் நினையாவழி இந்த அறிவுப் பிறப்பால் யாதும் பயன் இல்லை. உரிய கடமையை மறந்து நன்றி கொன்றவராய்க் குன்றி நிற்றலால் தெய்வம் கருதாப் பிறவி வெய்யது என வையம் வைய நேர்ந்தது.

அருள்பழுக்கும் கற்பகமே! அரசே! முக்கண்
ஆரமுதே! நினைப்புகழேன்; அந்தோ வஞ்ச
மருள்பழுக்கும் நெஞ்சகத்தேன்; வாளா நாளை
வாதமிட்டுக் கழிக்கின்றேன்; மதியிலேனை
வெருள்பழுக்கும் கடுங்காட்டில் விடினும், ஆற்று
வெள்ளத்தில் அடித்தேக விடினும், பொல்லா
இருள் பழுக்கும் பிலம்சேர விடினும் அன்றி
என்செயினும் போதாதே எந்தாய்! எந்தாய்! (1)

பெருங்கருணைக் கடலே! என் குருவே! முக்கட்
பெருமானே! நினைப்புகழேன் பேயேன் அந்தோ
கருங்கல்மனக் குரங்காட்டி வாளா நாளைக்
கழிக்கின்றேன் பயனறியாக் கடையனேனை

ஒருங்குருள உடல் பதைப்ப உறுங்குன்று ஏற்றி
உருட்டுகினும் உயிர்நடுங்க உள்ளம் ஏங்க
இருங்கழுவில் ஏற்றுகினும் அன்றி இன்னும்
என்செயினும் போதாதே எந்தாய்! எந்தாய்! (2)

(அருட்பா)

எப்பொழுதும் தெய்வ சிந்தனை யுடையராய் உள்ளமும் உயிரும் உருகி யாண்டும் பரவசராயிருந்தும் இராமலிங்கர் இவ்வாறு மறுகி யிருக்கிறார். இந்த மறுக்கத்தாலேயே அவரது உண்மையான உருக்கத்தை நாம் உணர்ந்து கொள்கின்றோம்.

சித்த சுத்தி வாய்ந்த பரிசுத்த ஆத்துமாக்கள் பரமாத்துவைப் பலவகையாகக் கருதிப் போற்றி மருவி மகிழ்கின்றன.

சித்தம் உருகி வருகை என்றது பத்தியின் பான்மை தெரிய வந்தது. பத்தியும் அருளும் நேரே முத்தி நிலையில் உய்த்தருளுதலால் இவை உத்தம நீர்மைகளாய் ஒளி சிறந்துள்ளன.

இவ் விழுமிய பண்புகளை மேவி எழுமையும் இன்புறுக.

---

327. வான மழையென்ன வையமெலாம் உய்யவே
ஞானநீர் நல்கி நலம்புரிந்து—போன
பெரியார் இயல்பெலாம் பேணி உணரின்
உரிய அருளாய் உறும். (எ)

இ-ள்

உலகிற்கு வான மழை போல் உயிர்களுக்கு ஞான மழை பொழிந்து நலங்கள் பல புரிந்து மறைந்து போயுள்ள பெரியார்களுடைய குணகணங்களை உணர்ந்து வரின் உயர்ந்த கருணை பெருகி வரும் என்றவாறு.

இது, நீர்மையாளரை நினைக என்கின்றது.

உயர்ந்தவர், பெரியவர் என உலகம் சிலரை வியந்து பாராட்டுவது எல்லாம் அவருடைய இனிய இயல்புகளாலும் கனிவான செயல்களினாலுமே விளைந்து வந்திருக்கின்றன. அவ் விளைவுக்கு மூல வித்து அருளே. அருள் உள்ளமாகிய ஊற்றிலிருந்து தான் ஆதாரவான ஆனந்த வெள்ளம் பெருகி எழுகின்றது.

மனிதன் பெரிய உபகாரியாய் மருவிய பொழுது எவரும் அவனை உவந்து துதிக்கின்றார்; யாண்டும் விழைந்து போற்றுகின்றார். அவன் புதியதொரு புனித ஒளியாய்ப்பொலிந்து திகழ்கின்றான்.

நன்மை செய்வது தெய்வத் தன்மை ஆதலால் வண்மையாளனைத் தெய்வமாக எண்ணி வையம் வாழ்த்தி வருகின்றது. அவனது கீர்த்தியை ஆர்வத்தோடு புலவர்கள் புனைந்து பாடுகின்றனர், சீரும் பேரும் பாரில் பரவி மிளிர்கின்றன.

"பாரி பாரி என்றுபல ஏத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்டீண்டு உலகுபுரப் பதுவே." (புறம், 107)

பாரி என்னும் பேருடைய வள்ளலைக் குறித்துக் கபிலர் இவ்வாறு பாடியிருக்கிறார். மழை எவ்வாறு உலகம் செழிக்க உதவி புரிந்து வருகிறதோ அவ்வாறே பாரியும் கைம்மாறு கருதாமல் கருணையுடன் உதவி செய்து வருகிறான் என்பதை இங்ஙனம் அதிவிநயமாக விளக்கியிருக்கிறார். மாரி = மழை, மேகம்.

பாரியும் மாரியும் இவ்வுலகிற்கு உயிராதாரமாயுள்ளனர் என உள்ளம் உருகிப் போற்றியிருத்தலால் அவ் வள்ளலின் உபகார நிலைமையையும் உயர் தலைமையையும் உணர்ந்து கொள்கின்றோம்.

இனிய நீரனாய் உபகரிப்பவன் அரிய சீருடையனாய்ப் பெருமகிமை அடைகின்றான். தானம் தவம் ஞானம் என்னும் இவை ஆன்ம ஊதியங்களாய் மேன்மை புரிந்து வருகின்றன.

ஞான நீர் நல்கி நலம் புரிந்து போன பெரியார்.

என்றது புத்தர் முதலிய உத்தம சீலர்களை. அவர் இயல்பு எல்லாம் அருளாய் உறும் என்றது செயல் நிலைகளை நினைந்து.

எவ்வுயிர்க்கும் இரங்கி இதம் புரிந்தருளுவதே இந்த அரிய மனிதப் பிறவியின் பெரிய பயன் என அவர் போதித்துப் போயிருக்கின்றார். உயிர்க்கு உய்தியான உறுதிநலங்களைத் தம் செயல் உரைகளால் உணர்த்தியிருத்தலால் மேலான ஞான வள்ளல் என ஞாலம் அவரைப் போற்றி வருகிறது.

"மாண்பொடு தோன்றி மயக்கம் களைந்து
பிறர்க்கு அறம் அருளும் பெரியோன்." (மணிமேகலை)

என்றமையால் வையம் உய்ய அவர் செய்துள்ளமை புலனும்.

"அருள்புரி திருமொழி அமரரும் அரசரும்
மருள்வரு மனிதரும் மகிழ்வுற இயம்பினை."

என இன்னவாறு அவர் வழங்கிய வாய்மொழிகள் துலங்கியுள்ளன. அவரது அருள் நலம் உலகம் தெருள் நிலை யாயது.

இந் நாட்டில் தோன்றிய நம் முன்னோர் அருள் ஒழுக்கத்தையே பொருளாகப் பேணி யாவரும் உய்தி பெற உணர்த்தி வந்துள்ளனர்.

இனிய இத நலங்கள் யாவும் கருணையில் கனிந்திருத்தலால் அது புண்ணிய நிலையமாய்ப் பொலிந்து திகழ்கின்றது.

அல்லல் இன்மை அருளில் உள்ளது; ஆகவே அருளுடையார் யாண்டும் துயரம் இலராய் உயர் நிலை அடைகின்றார்.

தயா தருமம் வயாவும் வருத்தமும் காணாது என்றமையால் கருணைப் பண்பு பிறவியை நீக்கிப் பேரின்பத்தில் உய்க்கும் என்பது பெறப்பட்டது.

கருணை கடவுளுக்கு வடிவம். அருள் வாரி, கருணைக் கடல், கிருபா சமுத்திரம், தயாசிந்து எனக் கடவுள் துதிக்கப் பட்டுள்ளமையால் அருளுக்கும் அப் பொருளுக்கும் உள்ள உறவுரிமை உணரலாகும்.

பிற உயிர்களுக்கு நீ கருணை செய்துவரின், கடவுள் கருணை உன்னிடம் வருகின்றது. இவ் வுண்மையை உறுதியாக உணர்ந்து உயர் தயை யாளனாய் உயர்ந்து கொள்க.

---

328. பதவி உயரப் பணிவுடைய னாகி
இதமாய் எவர்க்கும் இரங்கி—உதவி
புரிந்து வருக புகழறங்கள் எல்லாம்
பரிந்து வருமுன் பணிந்து. (அ)

இ-ள்

நீ அதிகார பதவியில் உயர்ந்த போது உன் உள்ளம் பணிவும் பண்பும் உடையதாய் இனிது அமைந்து எவர்க்கும் இரங்கி இதம் புரிந்து வர வேண்டும்; அங்ஙனம் வரின் புகழ் புண்ணியங்கள் எல்லாம் உன்னை விழைந்து வந்து உவந்து கொள்ளும் என்றவாறு.

இது, எவ்வழியும் உதவுவதே உய்வழி என்கின்றது.

பதவி என்றது அதிகாரம் அரசு முதலிய உயர் நிலைகளை.

மனிதன் உயர்ந்த பதவிகளை அடைந்தபொழுது அவன் உணர்ந்து செய்ய வேண்டிய கடமைகள் பல தொடர்ந்து நிற்கின்றன. அந் நிலைமைகளை நினைந்து செய்யும் அளவே அவனது தலைமை சிறந்து நிற்கின்றது.

ஒத்த மனிதருள் ஒருவனை இறைவன் உயர்த்தி வைத்தது மற்றவரை ஆதரித்து வரும் மாட்சி கருதியே. தகுதி நோக்கி ஆதரிக்கும் தகைமையுடையானை உலகம் மிகுதியும் நோக்கி வருகின்றது.

இதமாய் இரங்கி உதவி புரிக.

என்றது உயர்ந்தவன் செய்ய வேண்டிய உரிமை உணர வந்தது.

பதவியில் இறுமாப்பும் களிப்பும் கொண்டவன் இழிந்து படுகின்றான்; அடக்கமும் அமைதியும் உடையனாய் இதம் புரிகின்றவன் உயர்ந்து திகழ்கின்றான்.

அற்பனுக்குச் சிறிய பதவியும் பெரிதாய்த்தோன்றுகின்றது; அதனால் தருக்கி நிற்கின்றான். செருக்குகள் சிறுமையை விளக்குகின்றன. மனப் புன்மையால் மனிதன் புல்லியனாகின்றான்.

அப் பொல்லாப் புன்மையைப் போக்கி நல்ல தன்மையை நாளும் பழகிவரின் அது எல்லாநன்மைகளுக்கும் ஏதுவாகின்றது.

"Always cultivate the heart. Through the heart the Lord speaks." "எப்பொழுதும் இதயத்தைப் பண்படுத்து; அவ்வுள்ளத்தில் கடவுள் பேசுகின்றார்" என விவேகானந்தர் இவ்வாறு உணர்த்தியிருக்கிறார்.

"Where the heart is, there the muses, there the gods sojourn." (Heroism)

"எங்கே நல்ல இதயம் உள்ளதோ, அங்கே கலைகளும் தெய்வங்களும் குடி யிருக்கின்றன" என்னும் இது இங்கே அறிய உரியது.

எல்லா இன்பங்களுக்கும் எல்லா மகிமைகளுக்கும் இடமாயுள்ள உள்ளத்தை இதமாக நன்கு பண்படுத்திக் கொண்டவன் உயர் நலங்களை எல்லாம் ஒருங்கே அடைந்தவனாகின்றான்.

புகழ் அறங்கள் எல்லாம் பணிந்து வரும்.

என்றது புனித இதயமும் இனிய இதமும் உடைய மனிதன் அடைகின்ற மகிமைகளை நினைந்து. புகழும் புண்ணியங்களும் உயர்ந்த நலங்கள் ஆதலால் சிறந்த குண சீலனை விழைந்து வந்து அவை அடைந்து கொள்ளுகின்றன.

"ஆறுகள் கடலினை அடைதல் போலநற்
பேறுகள் ஈகையில் பெருகி யுள்ளன."

என்றமையால் உபகாரியின் உயர்நிலைகள் உணரலாகும்.

உயிர்களுக்கு இரங்கி உதவுகின்றவன் புகழ்க் குரிசிலாய்ச் சிறந்து புண்ணியவானாய் உயர்ந்து திகழ்கின்றான்.

பணிவும் பண்பும் இதமும் ஈகையும் மனிதனைத் தனி நிலையில் உயர்த்துகின்றன. அந்த இனிய நீர்மைகளை மருவி எவரும் உயர வேண்டும் என இது உணர்த்தி நின்றது.

---

329. எளியர் மெலியர் எவரிடமும் அன்பாய்
அளிபுரிந் தாதரவே செய்வார்—இளிவரவை
எவ்வழியும் காணார் எடுத்த பிறவியின்
வெவ்வழி தீர்ந்து விடும். (௯)

இ-ள்

எளியவர் மெலியவர் முதலிய யாரிடமும் அன்புடன் அளி புரிந்து ஆதரவு செய்கின்றவர் யாதொரு இளி வரவும் காணாமல் யாண்டும் இன்பமே கண்டு பிறவி தீர்ந்து பேரின்பம் அடைவர் என்றவாறு.

இது, யாண்டும் தயையுடன் ஒழுகுக என்கின்றது.

எளியர்=வறுமையால் வாடி யிருப்பவர்.

மெலியர்=வலிமை குன்றி மறுகி நிற்பவர்.

செல்வம் அதிகாரம் முதலிய செழிப்புகள் யாதும் இன்றி அல்லலில் உழந்து அலமந்துள்ள மக்களிடம் உள்ளம் இரங்கி உதவி புரிக; அந்த ஆதரவு மிக்க பசியுடையார்க்கு உணவு இட்டது போல் தக்க புண்ணியமாய்த் தழைத்து வருகின்றது.

அன்பு எல்லாரிடமும் யாண்டும் செய்ய வேண்டியதே ஆயினும் தலைமையாக முன்பு செய்ய உரிய நிலைகள் வரைந்து காட்டப் பட்டன. ஏழைகளுக்கு அருளுவதில் இறை அளி ஒளிர்கிறது.

இயல்களும் செயல்களும் இனியனவாய்க் கனியின் அவை சிறந்த தெய்வத் தன்மைகளாய் உயர்ந்து திகழ்கின்றன.

பிற உயிர்கள்பால் உள்ளம் இரங்கி உதவி புரிபவனே அருமை மனிதனாய்ப் பெருமை பெறுகின்றான்.

தண்ணளியும் ஆதரவும் மனிதனைப் புண்ணிய சீலனாக்கி யாண்டும் கண்ணியம் மிகச் செய்கின்றது.

பிறர் இதங்களை யாதும் எண்ணாமல் என்றும் தன்னலமே கருதி நிற்பவர் சின்னவராகியே சிறுமை யுறுகின்றனர்.

"The man who has never wept over the sorrows of his people is blind to the taller peaks of life." (Kirby Page)

"ஏழைகளுடைய துயரங்களைக் கண்டு உருகி அழாதவனது உயிர் வாழ்வு உயர் நிலை காணாது இழிவுறுகின்றது" என்னும் இது ஈண்டு உணர வுரியது.

அருள் நலம் தோய்ந்து ஆதரவு அமைந்த அளவுதான் உயிர் ஒளி மிகுந்து உயர்ந்த சீவன் ஆய்ச் சிறந்து திகழ்கின்றது.

இனிமைப் பண்புகள் தனி மகிமையை வளர்த்து வருதலால் அந் நீர்மைகளை யுடையவர் பெரிய மனிதராய்ப் பேர் மிகப் பெறுகின்றார். அப் பண்பாளர்பால் இயல்பாகவே அன்பு நலங்கள் பெருகி இன்ப இதங்கள் மருவி யுள்ளன.

இளிவரவை எவ்வழியும் காணார்.

என்றது அவரது செவ்வி தெளிய வந்தது. கனிவான இனிய நீர்மையுடையவரது மனம் மொழி மெய்கள் எங்கும் புண்ணிய கருமங்களையே பேணி என்றும் புகழ் வளர்த்து வரும் ஆதலால் அவர் பழி வரவு காணாராயினர்.

பிறவியின் வெவ்வழி தீர்ந்து விடும்.

என்றது தரும குண சீலராய் இவ்வாறு ஒழுகி வருபவர் இருமையும் பெருமை யுடையராய் இறுதியில் பிறவி தீர்ந்து பேரின்பம் பெறுகின்றமை கருதி.

எளியவர்க்கு இரங்கி உதவுக; மெலியவர்க்கு ஆதரவு செய்க; எவ்வழியும் எவ் வுயிர்க்கும் இனியனாய் அருள் புரிந்து வருக.

330. அழியாத இன்பம் அடைய விரும்பின்
ஒழியா தருளை யுறுக—வழியாதும்
புன்மை புகாமல் புரந்து புனிதமுடன்
நன்மை புரிக நயந்து. (ய)

இ-ள்

என்றும் நிலையான பேரின்ப நலனை நீ பெற விரும்பின், எவ்வழியும் இரங்கி அருளைச்செய்க; சிறுமை சிறிதும் புகாமல் இனிது பேணிப் புனிதமுடன் நன்மையைப் புரிந்து வருக என்றவாறு.

உயிர்கள் இன்ப நலங்களை விழைந்து மகிழ்கின்றன; துன்ப நிலைகளை வெறுத்து அஞ்சுகின்றன. இவை இயற்கை நியமங்களாய் எங்கணும் பரந்து விரிந்துள்ளன. உயர்விலும் சுகத்திலும் இயல்பாகவே இங்ஙனம் பிரியம் மீதூர்ந்து நின்றும் இழிவிலும் துயரிலும் தோய்ந்து வழி தெரியாமல் அவை வறிதே உழலுகின்றன.

இன்பம் கருணையில் உண்டாகின்றது; துன்பம் கொடுமையில் விளைகின்றது. இவ் விளைவின் மூலங்களை உணர்ந்து ஒழுகாமையால் சீவர்கள் வினைத் துயரங்களை அடைய நேர்கின்றனர்.

இன்பம் அடைய விரும்பின் அருளை உறுக.

என்றது மனிதன் கருதிய இன்ப நலனை உறுதியாகப் பெறுதற்கு உரிய வழியினை விழி தெரிய விளக்கியது.

புன்மை ஆவது மனிதனைப் புல்லியனாக்கிப் புலைப்படுத்துகின்ற பொல்லாத் தன்மைகள். களைகளை ஒழித்துப் பயிர்களை வளர்த்தல் போல் சிறிய கீழ்மைகளை நீக்கிப் பெரிய நீர்மைகளைப் பேணி வந்த அளவே மனித வாழ்வு இனிதாய் மாண்புறுகின்றது.

புனிதம் = மனத் தூய்மை. அரிய நலங்களுக் கெல்லாம் இனிய மூலமாய் இது மருவியுள்ளது. சித்த சுத்தியுடன் நல்ல இதங்களைச் செய்துவரின் அது உத்தம வாழ்க்கையாய் ஒளி சிறந்து உயர்கின்றது. புனித எண்ணங்கள் போகங்களாகின்றன.

புன்மை புகாமல் புரந்து நன்மை புரிக.

என்றது நல்ல வழிகளை விலகிப் புல்லிய பழிகளில் புகுந்து உழலுவதே சீவர்களின் இயல்பாய்ப் பெரும்பாலும் பெருகியிருத்தலால் அங்ஙனம் பாழ் போகாமல் பயன் உணர்ந்து நயனடைந்து கொள்ளும்படி வியன் வகை குறித்து வந்தது.

இனிய சுகங்களை விரும்புகின்ற மனிதர் கொடிய தீமைகளைச் செய்து வருவது பெரிய மடமைகள் ஆகின்றது. தம் செயல்களால் விளையும் விளைவு நிலைகளை உணராமையால் பாழான வழிகளில் வீழ்ந்து படு துயரடைகின்றனர். உறுதி கூறினும் தெரியாமல் வறிது மாள்கின்றனர்.

"மறத்துறை நீங்குமின், வல்வினை யூட்டும் என்று
அறத்துறை மாக்கள் திறத்திற் சாற்றி
நாக்கடிப் பாக வாய்ப்பறை அறையினும்
யாப்பறை மாக்கள் இயல்பிற் கொள்ளார்;
தீதுடை வெவ்வினை உருத்த காலைப்
பேதைமை கந்தாப் பெரும்பே துறுவர்."

(சிலப்பதிகாரம், 14)

"பிற உயிர்கட்குத் துயர் செய்யாதீர்; அதனால் கொடிய துன்பங்கள் உளவாம்; வினைப் பயன் விடாது" எனத் தரும சீலர்கள் எவ்வளவு சொன்னாலும், பாவகாரிகள் கேட்க மாட்டார்; வினைத்துயர் வந்து பிடித்த பொழுது அந்தோ! என்று அலறி அழுது அலமந்து அழிவர் என இது உணர்த்தி யுள்ளது

மானிடரது இயற்கைகளையும், நிகழ்ச்சிகளையும் பரிவுடன் கூர்ந்து குறித்துள்ள இதனை ஓர்ந்து சிந்திக்க வேண்டும்.

தமக்கு நேர்கின்ற கேடுகளை உணராமல் பாழான வழிகளில் இழிந்து மனிதர் படுகின்ற பாடுகள் பரிதாபங்கள் ஆகின்றன.

"காடுவெட்டி நிலந்திருத்திக் காட்டெருவும் போட்டுக்
கரும்பைவிட்டுக் கடுவிரைத்துக் களிக்கின்ற உலகீர்!
கூடுவிட்டுப் போயினபின் எதுபுரிவீர்! எங்கே
குடி இருப்பீர்? ஐயோ நீர் குறித்தறியீர்! இங்கே
பாடுபட்டீர் பயன் அறியீர்! பாழ்க்கிறைத்துக் கழித்தீர்!
பட்டதெலாம் போதும்இது பரமர்வரு தருணம்
ஈடுகட்டி வருவீரேல் இன்பமிகப் பெறுவீர்
எண்மைஉரைத் தேன்அலன்நான் உண்மைஉரைத்தனனே."

(அருட்பா)

இந்தப் பாட்டை ஊன்றிப் படித்துப் பொருட் குறிப்புகளை ஓர்ந்து கொள்ளுங்கள். அருள் நலங்கனிந்த பெரியோர் உள்ளங்கள் மருள் நிறைந்த மக்கள் நிலைகளை நினைந்து எப்படி உருகி

யிருக்கின்றன! எவ்வாறு உரிமையுடன் உறுதி கூறி உணர்வு காட்டுகின்றன! பிறந்த பிறவிப்பயனைப் பருவம் தவறாமல் விரைந்து பெறுவதையே மேலோர் விளக்கி யுள்ளனர்.

தன் உயிர்க்கு நல்லதை நாடுகின்றவன் அல்லல் வினைகளை யாதும் கருதலாகாது. நல்ல செயலில் நலம் பல விளைகின்றன.

அழியாத ஆனந்த வாழ்வை அடைய வேண்டின், எவ்வழியும் ஒழியாத கருணையை ஓம்பி வர வேண்டும்.

அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு என்றமையால் அருளுடையாரது இயல்பும் செயலும் தெளிய நின்றன. தனக்கு என வாழாப் பிறர்க்கு உரியாளன் எனப் புத்தர் பெருமான் பேர் பெற்றுள்ளமையால் அவரது உயிர் உருக்கம் உணரலாகும். தயா மூர்த்தி, உத்தம சீலன், புண்ணிய போதகன் என உலகம் இன்றும் அவரை எண்ணி உவந்து கொண்டாடுகின்றது.

உத்தமன், மத்திமன், அதமன் என்னும் இம் மூத் திறத்தார் நிலைகள் எத்திறத்தும் உய்த்துணர உரியன.

தனக்குச் சுகத்தை நாடாமல் பிறர்க்கு இதத்தை நாடுகின்றவன் உத்தமன். இவன் மனிதருள் தெய்வமாய் மகிமையுறுகிறான்.

தனக்குச் சுகம் கண்டு பிறர்நலம் காண்பவன் மத்திமன்.

தன்னலம் அன்றிப் பிறர் நலம் காணாதவன் அதமன்.

இந்த மூன்று நிலைகளுக்கும் புறம்பாய்ச் சில பிராணிகள் உள்ளன. அவை என்றும் பிறர்க்கு இடர் செய்யும் இயல்பின.

> தன்னலம் துறந்து பிறர்க்கிதம் புரியும்
> தன்மையன் உத்தம சீலன்;
> தன்னலம் கருதிப் பிறர்க்கிதம் புரியும்
> தன்மையன் மத்திம நிலையன்;
> தன்னலம் அன்றிப் பிறர்க்கிதம் புரியாத்
> தன்மையன் தாழ்ந்தஓர் அதமன்;
> தன்னிலை யெல்லாம் பிறர்க் கிடராகத்
> தரணிவாழ் கின்றவன் ஈனன்.

இறுதியில் உள்ளவனை ஈனன் என்று சுட்டி, அவனது கொடுமையும் தீமையும் மடமையும் இதில் குறிக்கப் பட்டுள்ளன.

பிறர்க்கு அகிதம் செய்கின்றவன் கொடிய தீமையாளனாய் நெடிய துயரங்களை அடைகின்றான். இதம் செய்கின்றவன் இனிய தருமவானாய் என்றும் இன்பங்களை நுகர்கின்றான்.

யாண்டும் எவ்வுயிர்க்கும் எவ்வழியும் நல்லது செய்; அதுவே திவ்விய மகிமையாய் உய்வகை அருளும்.

"He prayeth well, who loveth well
Both man and bird and beast." (Coleridge)

"பறவை மிருகம் மனிதன் முதலிய எவ் வுயிர்க்கும் இரங்கி அருள்வதே சிறந்த கடவுள் வழி பாடாம்" என கோலரிட்ஞ் என்பவர் இங்ஙனம் கூறி யிருக்கிறார்.

இறைவன் எங்கும் நிறைந்து உளன். உயிரினங்கள் எல்லாம் அவனுக்கு உடல்களாய் உலாவுகின்றன. இந்த உண்மையை உறுதியாய் நம்பி எந்த உயிர்களிடமும் அன்பாய் இதம் புரிந்து ஒழுகுக. இந்த மனப் பண்பு எல்லா மகிமைகளையும் விளைத்துப் பேரின்ப நிலையையும் பயந்தருளும்.

"அறிவு மிகப்பெருக்கி, ஆங்காரம் நீக்கிப்,
பொறிஐந்தும் வெல்லும்வாய் போற்றிச்—செறிவினால்
மன்னுயிர் ஓம்பும் தகைத்தேகாண் நன்ஞானம்
தன்னை உயக்கொள் வது." (அற நெறிச் சாரம்)

---

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

நீர்மை என்பது நிறைந்த பெருங் குணம்.
இனிய நீர் போல் எவர்க்கும் இதம் செய்.
மனம் மொழி மெய்கள் புனிதம் ஆகுக.
உள்ளம் கனியின் உலகம் கனியும்.
கருணைப் பண்பு கதியினை நல்கும்.
அன்புறும் வாழ்வில் இன்பம் பெருகும்.
வையம் மகிழ வாழ்வு புரிக.
மன்னுயிர்க்கு உதவின் தன்னுயிர் உயரும்.
தண்ணளி புரியின் புண்ணியம் விளையும்.
சீரிய அருளே பேரின்பம் ஆகும்.

கஉ-வது நீர்மை முற்றிற்று.

---

# முப்பத்து நான்காம் அதிகாரம்.

## நெறி.

அஃதாவது நீதி நியமம். மதிநல முடைய மனிதன் விதி முறையே ஒழுகும் விழுமிய நிலைமையைக் குறித்து நிற்றலால் இது நெறி என வந்தது. உத்தம சீலத்தின் உயர் நீர்மையாய்த் தலை சிறந்துள்ளமையின் இது அதன் பின் வைக்கப் பட்டது.

331. நெறியுடையான் என்பான் நெறிகடந்து செல்லா
அறிவுடையான் ஆகி அமர்வான்—நெறிமுறைதான்
உள்ளம் திரியா துறுதியாய் எவ்வழியும்
கள்ளம் புரியாமை காண். (க)

இ-ள்

நீதி நெறி கடந்து தீது புரியாத அறிவுடையவனே நெறி யுடையான் என்னும் பெருமைக்கு உரியவன்; நெறி என்பது உயிர்க்கு உறுதியான நல்ல வழியில் கள்ளம் யாதும் புரியாமல் உள்ளம் ஓர்ந்து ஒழுகுதல் என்றவாறு.

இது, நெறியின் நிலைமை கூறுகின்றது.

நெறி என்னும் சொல், வழி ஒழுங்கு நீதி முறை முதலிய பல பொருள்களைக் குறித்து வரினும் சிறப்பாக உயர்ந்த குறிக் கோளையே உணர்த்தி நிற்கின்றது. நிறைந்த பொருளுடையது ஆதலின் இது சிறந்த மொழியாய் உயர்ந்தோர்களால் புகழ்ந்து போற்றப் படுகின்றது.

நேரான வழியில் நடப்பவன் ஓர் ஊரை அடைதல்போல் சீரான நெறியில் செல்பவன் பேரின்ப நிலையை அடைகின்றான். முத்திநெறி, சன்மார்க்கம் என்பன நெறியின் பொருளைத் தெளிவு செய்துள்ளன.

நீதியும் வழியும் ஒழுக்கமும் நெறி எனல். (பிங்கலந்தை)

பிங்கல முனிவர் இங்ஙனம் குறித்திருக்கிறார். ஒழுங்கும் நியமமும் நீதியும் நெறி என்றதனால் அதன் நிலை தெரிய நின்றது.

வழி விலகின் அயர்வும் துயரும் நேரும்; நெறிதவறின், பழி யும் பாவம் சேரும். பறவை விலங்குகள் போல் அல்லாமல் மனி தன் அறிவுநலம் மிகப் பெற்றவன். இழிவும் துயரும் நேராமல்

உயர்வும் சுகமுமே சேர வேண்டும் என்று யாண்டும் மூண்டு நிற்பவன். இத்தகைய நிலையில் உள்ள அவன் நிலையான செவ்விய நெறியில் எவ்வழியும் விலகாமல் ஒழுகக்கடமைப் பட்டிருக்கிறான். நெறியுடையான்என்பான் நெறிகடந்து செல்லா அறிவுடையான் என்றது அறிவின் தலைமையும் நெறியின் நிலைமையும் அறிய வந்தது. நெறி முறை ஒழுகும் அளவே அறிவு ஒளி பெறுகின்றது.

மிருகங்களினும் மனிதன் பெரியவன் என்பது அறிவுடைமையினாலேயாம. அந்த அறிவுக்குப் பயன் நெறிகடவாது ஒழுகுதலே. நெறி வழுவின் அவன் அறிவிலியாய் இழிந்து படுகின்றான். அறிவினால் பெரியவன் என்பது எல்லாம் நெறி வழுவாமல் ஒழுகி நிற்கும் நிலையையே பொறுத்துள்ளது.

"அறிவினால் பெரிய நீரார் அருவினை கழிய நின்ற
நெறியினைக் குறுகி இன்ப நிறைகடல் அகத்து நின்றார்;
பொறிஎனும் பெயர ஐவாய்ப் பொங்கழல் அரவின் கண்ணே
வெறிபுலம் கன்றி நின்றார் வேதனைக் கடலுள் நின்றார்."

(சிந்தாமணி, 375)

நெறியுடையார் இன்ப நிறைகடல் அடைந்தார்; அதில் வழுவினார் துன்பக் கடலில் விழுந்தார் என்னும் இதனை விழியூன்றி உணர்க. ஐவாய் அரவு என்றது ஐம்புலன்களையுடைய உடலை.

விடயங்களில் வெறிமண்டி நெறி கடந்து பொறிவழி ஓடி உழல்பவர் இறுதியில் அடையும் இடர் நிலையை உணர்ந்து உறுதி தெளிந்து உய்ய வேண்டும்.

அரிய அறிவு படைத்த பயன், உரிய நெறி ஒழுகி உய்தி பெறுதலே ஆதலால் மனிதனுக்கு அது இனிய கடமை ஆயது.

வாழ்த்துமின் தில்லை; நினைமின் மணி மன்றம்;
தாழ்த்துமின் சென்னி தலைவற்கு;—வீழ்த்த
புறநெறி ஆற்றுது அறநெறி போற்றி
நெறி நின்று ஒழுகுதிர் மன்ற
துறையறி மாந்தர்க்குச் சூழ்கடன் இதுவே.

(சிதம்பரச் செய்யுட் கோவை 84)

நெறி வழுவாது ஒழுகுவோனே மனிதன்; அவனுக்குத் தெய்வப் பேறு தனி உரிமையாம்; உய்தியும் இன்பமும் ஒருங்கே உளவாம் என இன்னவாறு நூல்கள் பல குறித்துள்ளன.

"பாஅல் புளிப்பினும் பகல் இருளினும்
நாஅல் வேதம் நெறி திரியினும்." (புறம், 2)

பாலுக்கு இனிமையும் பகலுக்கு ஒளியும் போல் வேதத்திற்கு நேறி தனி உரிமை என்பது இதனால் அறிகின்றோம். அறியவே நெறியின் நீர்மையும் நிலைமையும் தெளிவாகின்றன.

தன்னை உடையானை உயர்ந்த உத்தமன் ஆக்கி நிலையான முத்தியின்பத்தில் உய்த்தருளுதலால் முத்திநெறி, மெய்ந்நெறி, செந்நெறி, நன்னெறி, சன்மார்க்கம் என நெறி நிலவியுள்ளது.

நெறி கேடுகளே நிரம்பியுள்ள இவ்வுலகில் நெறி கோடாமல் நடந்து செல்லும் நீதிமானே நிறை பேரின்பத்தை அடைந்து கொள்கின்றான்.

கண்டதெலாம் அநித்தியமே; கேட்டதெலாம் பழுதே;
கற்றதெலாம் பொய்யே; நீர் களித்ததெலாம் வீணே;
உண்டதெலாம் மலமே; உட்கொண்டதெலாம் குறையே;
உலகியலீர்! இது வரையும் உண்மை அறிந்திலீரே!
விண்டதனால் என் இனி நீர் சமரச சன்மார்க்க
மெய்ந் நெறியைக் கடைப்பிடித்து மெய்ப்பொருள் நன்குணர்ந்தே
எண்டகுசிற் றம்பலத்தே எந்தை அருள் அடைமின்
இறவாத வரம் பெறலாம் இன்பம்உற லாமே. (அருட்பா)

இறைவன் அருள் எய்தும்; பிறவி நீங்கும்; பேரின்பம் வரும் என நெறியின் பயன்களை நினைவுறுத்தி உறுதிநலனை உரிமையுடன் இஃது உணர்த்தியுள்ளமையை ஊன்றி உணர்ந்து கொள்க.

"நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைவேனைச்
சிறுநெறிகள் சேராமே திருவருளே சேரும் வண்ணம்"

தமக்கு அருள் புரிய வேண்டும் என்று மாணிக்கவாசகர் உருகியிருக்கிறார். நெறியே பெரியோர்க்கு அரிய நிதியாயுள்ளது.

"புள்ளுவர் ஐவர் கள்வர் புனத்திடைப் புகுந்து நின்று
துள்ளுவர்; சூறை கொள்வர்; தூநெறி விளைய ஒட்டார்;
முள்ளுடை யவர்கள் தம்மை முக்கணான் பாத நீழல்
உள்ளிடை மறைந்து நின்றங்கு உணர்வினால் எய்யலாமே"
(தேவாரம்)

ஐம் புலன்களாகிய வேடுவர் இடையே புகுந்து அல்லல் புரிதலால் நெறியே செல்ல முடியவில்லை என்று அப்பர் இப்படி அலமந்திருக்கிறார்.

பொறி வழியே புலன் அழிந்து போகாமல், நல்ல நெறி முறையில் நேரே ஒழுகுதலை மேலோர் எவ்வாறு கருதிப் பேணி உறுதி செய்து வந்துள்ளார் என்பதை இவற்றால் உணரலாகும். முன்னோர்களுடைய வாழ்க்கை நியமங்கள் நமக்கு இன்னுயிர்த் துணைகளாய் இசைந்திருக்கின்றன.

"Lives of great men all remind us
We can make our lives sublime." (Longfellow)

"பெரியாருடைய சரிதங்கள் எல்லாம் நம்முடைய உயிர் வாழ்க்கைகளை உன்னத நிலையில் உயர்த்தி ஒளி செய்து வர உதவி புரிகின்றன" என்னும் இது ஈண்டு உணர வுரியது.

உள்ளம் திரியாமை, கள்ளம் புரியாமை நெறி என்றது உள்ளும் புறனும் பரிசுத்தனாய் உத்தம விதி முறை வழுவாமல் ஒழுகும்வகை தெரிய வந்தது. நெறி நின்று ஒழுகுக என்பது கருத்து.

---

332. உலகம் அறிய உவந்து மணந்த
குலமனையாள் உள்ளம் குலையப்—பலமனையை
இச்சித் துழலும் இழிநிலையார்க் கில்லையோ
ஒச்சம் அறியும் உணர்வு. (உ)

இ-ள்

உலகம் அறியத் தான் விரும்பி மணந்து கொண்ட மனையாள் மனம் வருந்தி நைய, அயலார் மனைவியரை நச்சி அலையும் கொச்சை மாக்களுக்கு அப் பழி நிலையை உணர்ந்து விழி தெளிந்து திருந்தி உய்யும் வழி யாதும் இல்லையோ? என்றவாறு.

நெறியின் நீர்மை சீர்மைகளை முன்னர் உணர்ந்தோம்; நெறி கேடு இன்னது என்பதை இஃது உணர்த்துகின்றது.

மனித சமூகம் சிறந்த பகுத்தறிவு உடையது; பலவகையான வசதிகளைத் தன் வாழ்க்கைக்கு நலமாக அமைத்துக் கொண்டுள்ளது. அமைதிகள் யாவும் வரம்பு அமைந்து வரன் முறையாக அற நெறி தழுவி வந்திருக்கின்றன. அவ் வரவில் திருமணம் என்பது வாழ்வின் பெருமணமாய்த் தலை சிறந்து விளங்குகின்றது.

ஆடவன் பருவம் அடைந்தவுடனே தனக்கு உரிமையான ஒரு பருவ மங்கையை மணந்து கொள்கின்றான். அதிலிருந்துதான் மனித வாழ்க்கை இனிது தொடங்குகின்றது.

கண்டபடி கலந்து களிப்பது மிருகங்களின் நிலை ஆதலால் அங்ஙனம் இழிந்து படாமல் கொண்ட மனைவி ஒருத்தியைக் கூடி மகிழ்ந்து மனிதன் பீடு பெறலாயினன். அந்த விதிமுறையின்படி ஒழுகி வருவதே மதி நலமுடைய மாந்தர் மரபாய் மருவியுள்ளது.

உலகம் அறிய உவந்து மணந்த குலமனையாள்.

என்றது சதி பதிகளின் நிலைமை தெரிய வந்தது. ஊரும் நாடும் அறிய அக்கினி சாட்சியாகப் பெற்றோரும் மற்றோரும் குழுமிய கூட்டத்தில் விதி முறையே மணந்து, மனைவி கணவன் என்னும் உரிமை யுடையராய்த் தம்பதிகள் இன்ப நிலை எய்துகின்றனர்.

இங்ஙனம் நெறியே மணந்த மனையாளைத் தனியே விட்டு அயலானுடைய மனைவியை நச்சிச் செல்வது நெறி கேடாயது.

பழி பாவங்கள் படர்ந்து அழி துயர்கள் தொடர்ந்து வரும் அந்த இழி நிலையில் வீழ்ந்தார் இழி நிலையார் என நேர்ந்தார்.

ஒச்சம் அறியும் உணர்வு இல்லையோ? என இங்ஙனம் நெஞ்சோடு உள்ளுற உளைந்து வினவியது, பிறன் இல்லை இச்சித்து உழல்வதால் விளையும் இழி துயர்களுக்கு இரங்கி.

அயல் மனையை விழைந்து நுழையின், மானம் மரியாதைகள் அழிந்து படுகின்றன; ஈனமும் வசையும் இடர்களும் துயர்களும் எழுந்து அடர்கின்றன. சிறிது அறிவு இருந்தாலும் இந்தப் பழி கேடுகளில் பாழாய் வீழானே! என்று பரிதபித்து நொந்த படியிது.

ஒச்சம் அறியும் உணர்வு இல்லாமல் போயது பொல்லாத பாவமேயாம். ஒச்சம்=பழுது, குறைவு, குற்றம். பகை பழி பாவம் அச்சம் முதலிய இழிவுகள் பல விளைவதையும் உணராமல் அயல் மனையுள் மயலோடு நுழைவதால் முழுமூடன் ஆயினன்.

"தன்மனை யாளைத் தனிமனை இருத்திப்
பிறர்மனைக்கு ஏகும் பேதையும் பதரே." (நறுந்தொகை)

பிறன் மனை விழைபவனைப் பேதை பதர் என இதில் இங்ஙனம் இளிவாக வைதது அவன் அடையும் பழியும் ஏதமும் கருதி.

குல மனையாள் உள்ளம் குலைய என்றது, அவளது பரிதாப நிலை கருத வந்தது. இவன் நெறி அழிந்தது போல் அவள் அழியாமையால் குல மனையாள் என நின்றாள். அயல் மனையை இவன் நச்சியது போல் பிறன் ஒருவனை அவள் நச்சி யிருந்தால் உள்ளம் குலைந்திராள். பழி வழியில் இழியும்படி இவன் வழி காட்டியும் அவள் இழியாது ஒளியுடன் உறைந்திருக்கிறாள்.

அத் தகைய உத்தமி உரிய போகத்தை நினைந்து தனியே தவித்திருக்க விட்டு ஒருவன் பிறன் மனையை விழைந்து போவது எவ்வளவு பாதகம்! காதலிக்கு ஏதம் புரிவது காதக மாயது.

> "காதலாள் கரிந்து நையக் கடியவே கனைந்து கன்றி
> ஏதிலான் தாரம் நம்பி எளிதுஎன இறந்த பாவத்து
> ஊதுலை உருக வெந்த ஒள்ளழற் செப்புப் பாவை
> ஆ! தகாது என்னப் புல்லி அலறுமால் யானை வேந்தே."
>
> (சீவக சிந்தாமணி, 2769)

> "வம்புலாம் கூந்தல் மனைவியைத் துறந்து
> பிறர் பொருள் தாரம்என்று இவற்றை
> நம்பினார் இறந்தால் நமன்தமர் பற்றி
> எற்றி வைத்து எரி எழுகின்ற
> செம்பினால் இயன்ற பாவையைப் பாவீ!
> தழுவு என மொழிவதற்கு அஞ்சி
> நம்பனே! வந்து உன் திருவடி அடைந்தேன்
> நைமிசா ரணியத்துள் எந்தாய்!" (திருமொழி, 1-6-4)

இந்த இரண்டு பாசுரங்களும் ஒருங்கே படித்து ஈண்டு ஊன்றி உணர வுரியன. மையல் விளைவு வெய்ய துயரமாய் விரிந்தது.

தன் மனைவி தனியே வருந்த அயல் மனைவியை மருவி மகிழ்ந்தவன் இறந்து போனால், அந்த உயிர் யாதனா சரீரத்தை அடைந்து நரகத்தில் படுகின்ற துயரங்களை இவை வருணித்திருக்கின்றன. இங்கே தான் கலந்து களித்தவளைப் போல் செம்பினால் ஒரு உருவம் செய்து, அதனை நெருப்பில் பழுக்கக் காய்ச்சி அனல் வீசுகின்ற அச் செப்புப் பாவையைத் தழுவும்படி அயலவளைத் தோய்ந்தவனை எமபடர்கள் இரும்புச் சவுக்கால் அடித்துத் தள்ளுகின்றார்கள்; இவன் அதனை அணுக அஞ்சித் துடித்து அலறுகின்றான்; அவர் எற்றி மிதித்து, "அன்று விழைந்து தழுவி நுகர்ந்து

களித்தாயே! இன்று என்ன கொள்ளை? பாவீ! தழுவு தழுவு" என இழி மொழிகள் பேசி ஏசி எள்ளிப் பழித்து துள்ளித் துடிக்க அடிக்கின்றார்கள் என்றால் பிறர் மனை விழைவால் விளையும் துயர்கள் எவ்வளவு கொடியன! இந்த நரக வேதனையை எண்ணும் பொழுது எவன் நெஞ்சம்தான் கலங்காது?

துரியோதனன் மகன் பெயர் இலக்கண குமரன். அவனைப் பதின்மூன்றாம் நாள் போரில் அபிமன்னன் வென்று பிடித்துத் தன் தேரில் கட்டி விட்டான். அதனை நினைந்து துரியோதனன் வருந்தினான். சேனாதிபதியான துரோணனிடம் பரிவுடன் கூறினான். அந்த அவமானத்திற்குப் பதிலாக மறு நாட் போரில் தருமனைப் பற்றித் தன் தேரில் சிறிது போதேனும் பிணித்து விடவேண்டும் என்று வலிந்து வற்புறுத்தினான். அது முடியாத காரியம் என்று தானைத் தலைவன் தடுத்தும் மன்னன் கேட்கவில்லை. இறுதியில் ஓர் உபாயம் சூழ்ந்து உறுதி மொழிந்தான். முன்னே விசயன், பின்னே வீமன், வலம் இடங்களில் நகுல சகாதேவர் என்னும் இன்ன பாதுகாவலோடு தருமன் மன்னி யுள்ளான். முன்னும் பின்னும் உள்ள அந்த வீரர் இருவரையும் சிறிது பொழுது அருகு அணுகாவகை தடுத்து நிறுத்தினால் நான் பிடித்துக்கொடுக்கிறேன் என்று அதி வினயமாய் அம் மதிமான் உரைத்தான். அந்த உரையைக் கேட்ட அரவக் கொடியோன், அயல் இருந்த சிற்றரசர்களை நோக்கினான். அவருள் திகத்த தேசத்தவர் எழுந்து அவ் வுதவியைச் செய்வதாகச் சபதமுடன் உரைத்தார். ஆணையிட்டு அன்று அவர் சொன்னது அயலே வருவது.

மறனிற் சிறந்த புயவலியால் வரைபோன்று அனிலன் மைந்தன்எனப்
புறம் நிற்பானைத் தம்முனிடைப் போகா வண்ணம் தகைந்திலமேல்
அறனிற் கொண்ட தன்மனையாள் அமளித் தலத்தின் அழுது இரங்கப்
பிறன்இல் தேடும் பெரும்பாவி பெறும்பேறு எமக்கும் பேறு என்றார்.

(பாரதம், பதின்மூன்றாம் போர், 42)

வீரசபதமாய் வந்துள்ள இச் சூள்மொழியின் ஆழ் பொருளை ஆய்ந்து கொள்க. பிறர்மனை நயத்தல் இவ்வாறு பேரிழிவாய் எவ் வழியும் பெருங்கேடு விளைத்தலால் அது பெரும் பாவம் என நேர்ந்தது. இந்தப் பழிபாதகத்தைச் செய்து படுபாதகன் ஆகாதே.

"தருமனை அணுகாமல் வீமனை அமரில் யாம் தடுத்து நிறுத்தோமாயின், தன் மனையாளை அமளியில் அழுது இரங்க விட்டுப் பிறன் மனையாளைத் தேடிப் போகும் அப் பெரும்பாவி அடையும் கதியை நாங்கள் அடைவோமாக" எனத் தம் ஆண்மை தோன்ற அவ் வீரர் சபதம் கூறியிருத்தலால், நெறிகேடான இதனை மானமுடையவர் எவ்வளவு ஈனமாக எண்ணியுள்ளனர் என்பது இனிது வெளியாயது. ஆகவே அதன் தீமை தெளிவாய் நின்றது.

"ஒல்லா முயக்கிடைக் குழைக என்தாரே" (புறம், 73)

போரில் இன்று பகைவரை நான் நேரில் வெல்லேன் ஆயின், அயலாளை முயங்கிய பழியாளனாய் இழிவேனுக எனச் சோழன் நலங்கிள்ளி இங்ஙனம் ஆணை கூறி யுள்ளான்.

"பிறர்மனை அஞ்சுமின்; அறமனை காமின்." (சிலப்பதிகாரம்) என்னும் உறுதி மொழிகளை உணர்ந்து ஒழுகுக. கண்டவர் எவரையும் காதலியாதே; கொண்ட மனைவியோடு கூடி வாழுக.

---

333. உற்ற மனையிருக்க ஓர்மனையுள் புக்கின்பம்
பற்ற முயலும் பதடிகாள்—பெற்றிருக்கும்
கைத்தேனை விட்டுக் கடுவருந்தல் போலாமிப்
பித்தேன் உமக்குப் பிழை. (ந)

இ-ள்

உரிமையுடன் மணந்து கொண்ட மனைவியை இகந்து அயலான் மனையுள் புகுந்து இன்பம் அடைய முயலும் ஓ பதர்களே! கையில் இருக்கின்ற இனிய செந்தேனைத் தள்ளிவிட்டுக் கொடிய நஞ்சை அள்ளிக் குடிக்கும் இழி மடமையான இந்தப் பைத்தியம் உமக்கு ஏன் வந்தது? அழி கேடான இப் பழியை ஒழிய விடுக என்றவாறு.

மேல், அயல் மனையை இச்சித்து உழலல் ஈனம் என்றது; அந் நீசம் நாசம் உடையது என ஓர் உவமம் காட்டி இது உணர்த்துகின்றது. உறுதி நலனை ஓர்ந்து உணர வேண்டும்.

உற்ற மனை என்றது, தன் உயிர் வாழ்க்கைக்கு இனிய துணையாய் அமைந்துள்ள அவளது அருமை அமைதியையும், உரிமை

ஆதரவையும் உணர வந்தது. உரிமையில் உற்றது பெருமையில் உயர்ந்தது. இருமையும் இனியது.

தன் மனைவியோடு கலந்து அனுபவிக்கும் இன்பத்தில் நலங்கள் பல விளைகின்றன. அன்பு வளர்கின்றது; ஆதரவுகிளர்கின்றது; புகழும் போகமும் பொங்கி மிளிர்கின்றன; நல்ல சந்ததிகள் உளவாகின்றன. இல்லற வாழ்வுகள் இனிது பெருகி இசைகள் உலாவுகின்றன. குடிப் பெருமை படிப்படி உயர்கின்றது.

அயல்மனை முயக்கத்தில் பகையும் பயமும் பழியும் பாவமும் இயல்பாய் எழுகின்றன. எவ்வழியும் துயரமான அவ் இழிவில் விழுவது வெவ்விய பழியாய் விளிவுறுகின்றது.

நெறியே பெற்றது; நீதிமுறை உற்றது; அற நலம் தோய்ந்தது; உழுவலன்பு வாய்ந்தது; இத் தகைய விழுமிய மனைவியை விட்டு வேறுமனை புகுவது அமுதத்தைப் பருகாமல் ஒதுக்கி நஞ்சைக் குடிப்பது போன்ற ஓர் நாசமே யாம்.

பதடிகாள்! என்றது அறிவு பாழ்போயுள்ள வறுநிலை கருதி. உள்ளீடு இல்லாத பேதைகள் புரியும் ஏதம் என அப் பாதகம் காண இப் பெயர் அமைந்தது. பதடி=பதர்.

கைத்தேனை விட்டுக் கடு அருந்தல் போல் ஆம்.

என்னும் இவ் வுவமை உரிய பொருளை உய்த்துணர வந்தது. கடு=நஞ்சு. கையில் இருக்கும் தேன் என்றது, தன் வீட்டில் இருக்கும் மனைவியை. சொந்த உரிமையும், சிந்தை மகிழ்வும், இனபச் சுவையும், இனிமையும் எளிமையும் தெளிய வந்தது.

கருதிய போதெல்லாம் யாதொரு தடையுமின்றி மருவி மகிழ உரிய இனிய மனைவி அருகு இருக்க அவளை அகன்று அல்லல் பல மிடைந்த அயலை நாடி ஓடுவது தொல்லை மிக வுடையதாம்.

ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே
காத்த மனையாளைக் காமுறும் காளையர்
காய்ச்ச பலாவின் கனிஉண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக்கு இடர்உற்ற வாறே, (திருமந்திரம்)

தான் தாலி கட்டிய மனைவி வீட்டில் இருக்க அரிய பல கட்டுக் காவலுடன் வேலியிட்டுக் காத்துள்ள வேறு மனையை நாடி

ஓடும் வீணருக்கு ஓர் உவமை காணக் காட்டித் திருமூலர் இவ்வாறு உறுதி நலனை உணர்த்தி யிருக்கிறார்.

புகழை அழித்துப், புண்ணியத்தை ஒழித்து, நரக வேதனையை விளைத்து உயிர்க்குக் கொடிய கேடு புரிதலால் மறு மாதரை மருவுதல் கடு என நேர்ந்தது. கடு உண்டால், உயிர் உண்டா?

விளைகின்ற பழிகேடுகளை உணராமல் வெறியனாய் அறிவிழந்து போதலால் அப் போக்கு பித்து என்று இழிக்கப் பட்டது. அப் பிழையில் விழுந்து அழியாதே; நல்ல நெறியில் நின்று ஒழுகுக. அறிவு பாழாய் வெறி கொண்டலையாமல் உறுதி நாடி உய்ய வேண்டும். தனது உரிமை மனைவியை மருவுகின்றவன், இனிய தேனைப் பருகி மகிழ்கின்றான்; அயலானுக்கு உரியவளை அவாவித் தோய்கின்றவன் கொடிய விடத்தைக் குடித்தவன் ஆகின்றான். கள்ளத் தோய்வு அப்பொழுது இன்பமாய்த் தோன்றினும், பின்பு கொடிய துன்பங்களுக்கு ஏதுவாய் நிற்றலால் அதனை நஞ்சு என அறிஞர் அஞ்சுகின்றனர்.

"பிறர் மனைக்குரிய பேதையர் இடத்து விழைவாய்க்
குறுகு காலிணை குறைத்திடுதி; கொம்மை முலைமேல்
இறுகுறத் தழுவு கையிணையை ஈர்தி; அவர்மேல்
உறுசினத்தி னெடும் ஊசிகள் நிறுத்திடுதியால்."

(காசிகாண்டம்)

அயல்மனைவியரைத் தழுவினவர் இவ்வாறு நரக துன்பங்களை அடைகின்றனர்; எனவே அது எவ்வளவு தீமை என்பது எளிது தெளிவாகின்றது. அப் பழியில் விழாமல் ஒழுகி உயர்க.

மணந்த மனைவியை அன்றி மறுமுகம் பாராதே.

---

334. குலமகன் என்பான் குடிவாய் ஒருவன்
நிலமனை யாளை நினையான்—புலமகனே
நச்சி யிழிந்து நவையுழந்து ஞாலந்தான்
சிச்சி எனத்திரிவன் செத்து. (ச)

இ-ள்

பிறனுடைய மனையாளைத் தழுவ நினையாதவனே நல்ல குலமகன் ஆவான்; அவளை நச்சி இழிந்தவன் புலமகன் ஆகிப் பிழை

கள் பல செய்து செத்த சவம் என உலகம் இகழ்ந்து வெறுக்க ஈனமாய் அலைந்து திரிவன் என்றவாறு.

இது, பிறனில் விழையாதவனே குலமகன் என்கின்றது.

மனிதருள் மேன்மக்கள் கீழ்மக்கள் உயர்ந்தோர் தாழ்ந்தோர் பெரியோர் சிறியோர் என்பன எல்லாம் செயல் இயல்களைத் தழுவியே விளைந்துள்ளன. "அரிய செய்வார் பெரியர்" என்றார் தேவர். அரியது எது? கருதி உணருக. பொய்யாமொழியின் பொருள் உணர்வு உய்தியை அருள்கின்றது; ஓர்ந்து தெளிக.

பிறருடைய மனைவியரை விழைவது பழி பாதகமான இழி செயல் ஆதலால் அதனையுடையவன் இழி மகன் ஆகின்றான்.

எளிதுஎன இல்இறப்பான் எய்தும்எஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி. (குறள், 145)

என்றதனால் அவ் விழைவின் விளிவு தெளிவாம். நெறியுடைய தன் இல்லைத் துறந்து நெறி கேடாக அயல் இல்லை அவாவிச் செல்கின்றவனை இல் இறப்பான் எனச் சுட்டியிருக்கும் வினைப்பெயர் நினைப்புறற் பாலது. இறத்தல் = நெறி கடந்து செல்லல். அந்த இறப்பு இறப்பாகவே முடிகின்றது.

"குடிவாய் ஒருவன் நிலை மனையாள்" என்றது, ஒருவனுடைய குடிவாழ்க்கைக்கு உயிராதாரமாய் அமைந்து உறுதி புரிந்துள்ளவள் என அவளது இயலும் செயலும் அயலும் அறிய வந்தது.

ஒருவன் நெறி கடந்து சென்றால் பிறனுடைய குடி குலைந்து படுகின்றது. சதியைச் சதி செய்யவே பதி பதிதனாகின்றான்.

பதிவிரதை என்னும் பெயரைக் கெடுத்து ஒரு குலமகளைப் பழி படச் செய்து இல்லறத்தை இழிவுறுத்தலால், இவன் பொல்லாப் பாதகனாய்ப் புலை யுறுகின்றான்.

தானும் இழிந்து அயலான் குடியையும் இழிவாக்கி அழிவு செய்வது, கொடிய தீமையாய் நெடிது ஓங்கி நிற்கின்றது.

இந்த இழிவைச் செய்யாதவன் உயர்ந்த குலமகனாய் ஒளி மிகுந்து திகழ்கின்றான். உத்தமன், யோக்கியன், சுத்தன், சீலன், மேலோன் என்னும் இச் சிறப்பு நிலைகள் எல்லாம் அயல் மனைவியரை நயவாத உயர் தலைமையாளரையே இயல் உரிமையாய்க் குறித்து வருகின்றன. சீலமும்கற்பும் இருபாலின் இனிய உயிர்கள்.

"இந்த இப்பிறவிக்கு இருமாதரைச்
சிந்தையாலும் தொடேன்"

என இராமன் இந்தவாறு தனது அருமை மனைவியிடம் உறுதி கூறியிருக்கிறான். அமுத மயமான இப் புனித மொழியை நினைந்து நினைந்து சீதை உள்ளம் உருகியுள்ளாள். இலங்கைச் சிறையில் தன்னை அரிதின் வந்து கண்ட அனுமானிடம் இதனைத் தலைமையாகப் பரிந்து சொல்லித் தன் நாயகனைக் கருதிக் கரைந்து கண்ணீர் சொரிந்து அப் பெண்ணரசி அழுதிருக்கிறாள்.

"வந்துஎனைக் கரம் பற்றிய வைகல்வாய்
இந்த இப்பிறவிக்கு இருமாதரைச்
சிந்தையாலும் தொடேன் என்ற செவ்வரம்
தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்."

(இராமா; சூளாமணிப்படலம், 34)

என அத் தலைமகள் கூறியுள்ள இதில் இக் குலமகன் நிலைமையை நினைந்து வியந்து நாம் உவந்து கொள்கின்றோம்.

"மறு மங்கையருக்கும், மறு மன்னவருக்கும்
மார்பும் முதுகும் கொடாதவன்"

என இக் கோமகன் சீர் பெற்றுள்ளது போல் பார் பெற்ற மக்களுள் யார் பெற்றுள்ளார்? சீலமும், வீரமும் சீராமனுடைய கோலங்களாய்க் குலாவி ஞாலம் புகழ ஒளி வீசி நிற்கின்றன.

ஏகபத்தினி விரதன் என்னும் அருமைப் பெயரைத் தனக்கே தனி உரிமையாக்கி இவ் வுத்தம சீலன் உயர்ந்து நிற்கின்றான். இப் புனித ஒழுக்கத்தை உலக மக்கள் எவ்வளவுக்கு எவ்வளவு மருவி நிற்கின்றனரோ அவ்வளவுக்கு அவ்வளவு இராமனைப் போல் அவர் குலமக்கள் ஆகின்றனர்.

குலமகன் என்பான் அயல் மனையாளை விழையான் என்றதனால் விழைபவன் இழிமகன் என்பது வெளியாய் நின்றது.

கீசகன் துரோபதையைக்கண்டு ஆசைமீக்கொண்டான். ஒரு நாள் அருகு நெருங்கி மறுகி வேண்டினான். அப் பதிவிரதை உள்ளம் பதறி அவனை எள்ளி நோக்கி ஒதுங்கி ஒழியும்படி உணர்வுரைத்தாள். சீறி மொழிந்த அத் தீர மொழிகள் நெறி கேட்டின் நீசங்களை நேரே விளக்கி அறிவூட்டி ஆர்த்து ஒளி நீட்டி வந்தன.

"ஏறு கின்ற பழிகளும் பாவமும்
இம்மைதானும் மறுமையும் பார்த்திலே!
ஆறு கின்ற குடைநிழல் வேந்தனுக்கு
அழிவு செய்தி அறிவிலி போலும் நீ?"

என இவ்வாறு அறிவுரை கூறினள். கூறியும் அவன் மீறினன். மீறவே பாஞ்சாலி அவனைச் சீறி வைது செயிர்த்து இகழ்ந்தாள்.

"மார சாயகத்தால் உயிர் மாளினும்
வசையி லாத மரபில் வந்தோர் பிறர்
தாரம் ஆனவர் தம்முகம் பார்ப்பரோ?
தக்கவர்க்குத் தகவுஇவை யேகொலாம்?
சோரன் ஆதலிற் சொற்றாய்! இனித்தவிர்;
சுரேசர் ஐவர்தம் காவல்என் தோளிணை
வீர போ! என் அருகுறில் ஆவிபோம்;
விழித்திமைக்கு முன் என்று விளம்பினள்."

(பாரதம், கீசகன்வதை, 7)

உயர்ந்த குல மரபில் பிறந்தவர் உயிர் போக நேர்ந்தாலும் அயல் முகம் பாரார் என இக் குலமகள் அப் புலை மகனுக்குப் போதித்திருக்கும் வேகத்தையும், விவேகத்தையும் பார்க்க.

நிலை திரிந்து புலையான இழி செயலை விழைந்து களித்தவன் புலைமகன் என நின்றான். "நச்சி இழிந்து நவை உழந்து" என்றது பிறர் மனை விழைவால் உளவாகும் இழிவுகளையும் பழி துயரங்களையும் தெளிய வந்தது. நவை=குற்றம், தீமை.

மடத்தகைய நல்லார் மனம்கரிய மாற்றார்
பிடர்த்தலை ஒள்வாள்போல் பிறர்மனைகள் சேரின்
எடுப்பரிய துன்பத்து இடைப்படுவர் இன்னா
நடுப்புடைய காமம் விடுத்திடுதல் நன்றே, (சிந்தாமணி)

தன் கழுத்தில் பகைவன் வைத்த வாள் போல்வது பிறர் மனைவி தோள். அதனைச் சேராதே; சேரின் தீராத் துயரங்கள் நேரும் என நேர்வதை நினைவுறுத்தி இது உணர்த்தி யுள்ளது.

அம்பல் அயல் எடுப்ப அஞ்சித் தமர்பரீஇ
வம்பலன் பெண்மரீஇ மைந்துற்று—நம்பும்
நிலைமையில் நெஞ்சத்தான் துப்புரவு பாம்பின்
தலைநக்கி அன்ன துடைத்து, (நாலடியார், 87)

அயலான் மனைவியை மருவுதல் பாம்பின் தலையை நக்குவது போலாம் என இது உரைத்திருக்கின்றது. கொடிய அபாயம்; உயிர்க்கேடுவிளையும்; அதனை ஒழியவிடுக என உணர்த்தியபடியிது.

பெண்ணின் ஆகிய பேரஞர் பூமியுள்
எண்ணம் மிக்கவர் எண்ணினும் எண்ணிலார்;
பின்னி நின்ற பெருவினை மேல்வரும்
என்ன தாயினும் ஏதில்பெண் நீக்குமின். (வளையாபதி

பரதார கமனம் அளவிடலரிய துயரங்களை யுடையது; அதனை யாதும் காதலியாதே என இது போதித்திருக்கிறது. ஏதில் பெண் = அயலான் மனைவி. அஞர் = துன்பம்.

பழியும் துயர்களும் நெடிது விளைத்துக் குடிகேடு செய்தலால் பிறர்மனை நயத்தல் கொடிய தீது என மேலோர் இங்ஙனம் கடிது விலக்கி யிருக்கிறார். விதி விலக்குகள் கதி விளக்குகளாயுள்ளன.

சிச்சி என்றது இகழ்ச்சிக் குறிப்பு. சீ என இகழ்ந்து ஓட்டுவது நாயையே ஆதலால் அந்த இகழ் நிலைக்கு நீ போயழியாதே என்று புலனுறுத்தியது. நலன் அறிந்து தெளிக.

---

335. இன்பம் தருமனைவி இல்இருப்ப அன்னவளைத்
துன்பமுற விட்டுச் சுணங்கனெனப்—பின்பொருவன்
இல்லையெதிர் நோக்கிநிற்கும் ஏழைபோல் எஞ்ஞான்றும்
தொல்லை எவருறுவார் சொல். (ரு)

இ-ள்

இன்ப நிலையமான தனது அருமை மனைவியைத் துன்பம அடையும்படி தனியே விட்டு, வேறுஒருத்தியை நனிவிரும்பி நாய் போல் ஓடும் பேதை போல அல்லலும் அவமானமும் அடைவார் யாரும் இல்லை என்றவாறு.

உடையவன் காணுமல் கள்ளமாய் நுழையும் எள்ளல் காண நாய் உவமை வந்தது. உள்ளம் கெடவே உயர்வு கெட்டது.

பசியும் காமமும் உயிரின் இயற்கை நியமங்களாய் அமைந்திருக்கின்றன. உணவால் பசி அடங்குகின்றது; கலவியால் காமம் தணிகின்றது. இவை நிரந்தர நேமமாய்ச் சுழன்று வருகின்றன.

அருந்தலும் பொருந்தலும் திருந்திய நிலையில் செறிந்திருக்கும்படி சனசமுதாயம் தெரிந்து வைத்துள்ளது. வரன் முறையாக வாழ்க்கைகள் இனிது நடந்து வருமாறு வரம்புகள் அமைந்தன.

அவ் வரம்புகள் திறம்பாமல் ஒழுகுவன அறம்புகழுடையன வாய்ச் சிறந்து வருகின்றன. உரிமை யுடைய ஒரு மகளைத் தரும முறையில் மணந்து வாழும் மகன் இல்லற தருமியாய்த் திகழ்ந்து நிற்கின்றான். இந் நிலையிலேதான் கணவன், மனைவி என்னும் இனிய பெயரை அடைந்து இருபாலும் இன்பம் நுகர்ந்து அன்பு புரிந்து பண்பு கனிந்து நண்புடன் மனை வாழ்க்கை செய்கின்றன.

இருபாலும் ஒருபாலும் கோடாமல் நெறி முறையே மருவி வரும் அளவே பெருமையும் இன்பமும் பெருகி வருகின்றன.

இன்பம் தரும் மனைவி இல் இருப்ப

என இங்ஙனம் அன்பு கனியச் சொல்லியது தனக்குத் தனி உரிமையாய் அமைந்துள்ள இனிய வகைமையை உணர்ந்துகொள்ள.

உனக்கு வேண்டியது தேக போகம். அது ஏக போகமாய் உன் வீட்டிலே இருக்கின்றது; அங்ஙனம் இருக்க அதனை விட்டு அயலே போவது மயலான ஓர் மதி கேடேயாம்.

இன்பம் தரும் மனைவி என்றது ஐம்புலன்களும் ஆர நுகர்ந்து களிக்கும் சீர்மை நிறைந்துள்ள நிலைமை கருதி. இன்பம் உடையதைத் துன்பம் அடையச் செய்து விடுவது கொடிய மடமையோடு படுபாதகமும் ஆயது. பருவம் கனிந்த உரிமையைப் பாழ் படுத்திப் பழிபடப்போவது விழிகண் குருடான விளிவேயாகும்.

பிறனுடைய மனையாளை நெறி கடந்து விரும்பிச் செல்லுகின்றவன் மானம் மரியாதைகளை இழந்து போகின்றான் ஆதலால் சுணங்கன் என நேர்ந்தான். சுணங்கன் = நாய்.

> மிக்க மென்தசை இருந்திட வெற்றெலும் பதனைத்
> தக்க தென்றுபுன் ஞமலிகள் கறித்தன தளர்ந்து
> துக்கம் ஒன்றுமில் தம்மனை துறந்து போய்ப் பிறரில்
> புக்கு வெந்துயர்க் கடற்படும் இழுதைகள் போல.

(திருக்கூவப்புராணம்)

பிறர்மனையை விழைந்து நுழைபவனை நாயோடு உவமித்து இது குறித்திருக்கும் நிலையைக் கூர்ந்து உணர்ந்து கொள்க.

ஞமலி=நாய். உயர்ந்த மனிதனும் இழிந்த இச்சையால் ஈனமாய்க் கழிந்து படுகின்றான். இழுதைகள்=மூடர்கள்.

தனக்கு நேர்கின்ற பழிபாவங்களை உணராமல் அயல் மனை வியரை விழைந்து இழிந்து படுதலால் ஏழை என நேர்ந்தான். ஆவதை அறியாதவன் அறிவிலி யாயினன்.

பிறன் ஒருவனுக்கு உரிமையா யுள்ளவளைக் கள்ளமாய் நுகர்ந்து கொள்ளக் கரந்து புகுகின்றமையால் அவன் உள்ளத்தில் அச்சமும் திகிலும் எப்பொழுதும் நிறைந்திருக்கின்றன.

புக்க இடத்து அச்சம்; போதரும் போது அச்சம்;
துய்க்கும் இடத்து அச்சம்; தோன்றாமல் காப்பு அச்சம்;
எக்காலும் அச்சம் தருமால் எவன் கொலோ
உட்கான் பிறனில் புகல். (நாலடியார்)

நெறிகடந்து பிறன் இல்லில் நுழைகின்றவனது பரிதாப நிலைகளை இது குறித்துக் காட்டியிருக்கிறது. அச்சம் அவலங்கள் உச்ச நிலையில் ஓங்கி உள்ளன; அந்த ஈன இச்சையில் இழிந்து மானம் மதிப்புகளை இழந்து வீணே அழிந்து படாதே.

பிறன்வரை நின்றாள் கடைத்தலைச் சேறல்
அறன் அன்றே ஆயினும் ஆக—சிறுவரையும்
நன்னலத்த தாயினும் கொள்க நலமன்றே
மெய்ந்நடுங்க உள்நடுங்கும் நோய். (நீதி நெறி விளக்கம்)

பிறர்மனை விழைபவனுக்கு அறம் புகழ் அழிந்ததோடு அவன் கருதிய இன்பமும் இல்லையே என இது இரங்கியுள்ளது. உண்மை நிலைகளை உணர்ந்து சிந்தித்து மனிதன் நன்மை யுற வேண்டும். ஊனம் உறாமல் மானமுடன் வாழுக.

---

336. போமே பெருமை புகுமே சிறுமையெலாம்
ஆமே பழிபாவம் ஐயகோ—தோமாக
வீணே பிறர்மனையை வேட்டு விளிகின்றீர்
ஆணோநீர் ஆய்மின் அகத்து. (சு)

இ-ள்

பிறர் மனைவியரை விரும்பினால் பெருமை போம்; சிறுமை புகும்; பழியும் பாவங்களும் விளையும்; அந்தோ! அந்த ஈனத் தீமையில் அழுந்தி அழிவது ஆண்மை ஆகாது; சிறிது கருதி ஆராய்ந்து உறுதியை ஓர்ந்து உணர்ந்து கொள்க என்றவாறு.

நிலை தவறாமல் நெறிமுறையில் ஒழுகிவரும் அளவு தான் மனிதன் தலைமையுடையனாய் நிலவி நிற்கின்றான். நிலை தவறினால் தலையிலிருந்து விலகிய மயிர் போல் அவன் புலையுறுகின்றான். பெருமை என்பது அருமை மிக வுடையது.

பிறர் மனைவியரை விழைந்து விழுவது இழிவு ஆதலால் அந்த இழிவுடையானிடம் உயர் நலங்கள் உறாமல் ஒழிகின்றன.

போமே பெருமை; புகுமே சிறுமை; ஆமே பழிபாவம்.

என்னும் இதில் ஏகாரங்கள் பரிதாப நிலைகளை ஒலி செய்துள்ளன. வினைகளை முன் நிறுத்தியது தெளிவு துணிவுகளை வலியுறுத்தியது.

பெருமை போம் என்றதோடு அமையாமல் சிறுமை புகும்; பழி பாவங்கள் ஆம் என்றது, பிறதார விழைவால் நேரும் அழிவுகளும் இழிவுகளும் அவலங்களும் எளிது தெளிவுற.

பகைபாவம் அச்சம் பழிஎன நான்கும்
இகவாவாம் இல்இறப்பான் கண். (குறள்)

அறம்புகழ் கேண்மை பெருமைஇந் நான்கும்
பிறன்தாரம் நச்சுவார்ச் சேரா;—பிறன்தாரம்
நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவம்என்று
அச்சத்தோடு இந்நாற் பொருள். (நாலடியார்)

பகையே பழியே பாவமே பயமே நான்கும் தினம் கொடுக்கும்:
தகையார் பெருமை முழுதழிக்கும் சார்ந்தபிறனில் விழைவு ஒழிந்தோர்
தொகையார் அறமே பொருள்இன்பம் தோலாப்பெருமையுடன்வாழ்வர்
நகையால் அதனைக் கனவிடத்தும் நவிற்றி யிடினும் தீங்காமே.
(விநாயக புராணம்)

அறனும், அறனறிந்த செய்கையும், சான்றோர்
திறனுடையன் என்றுரைக்கும் தேசும்,—பிறனில்
பிழைத்தான் எனப்பிறரால் பேசப் படுமேல்
இழுக்காம் ஒருங்கே இவை. (அறநெறிச்சாரம்)

பிறர் மனைவியரை விழைந்தவர் அடையும் பிழை பாடுகளை இவை ஒரு முகமாய்த் தொகுத்து உணர்த்தியுள்ளன.

புகழ் புண்ணியங்களை இழந்து பழி பாவங்களை அடைந்து படுதுயர்கள் உறுவர் எனவே அவரது பரிதாப நிலைமைகள் வெளியாகி நின்றன. நெறிவழுவ நெடியதுன்பங்கள் கடிதுவிளைகின்றன.

இவ்வாறு வெய்ய துயரங்கள் விளைந்து வருதலை அறிந்தும் மையலால் மதி மருண்டு வீணே மயங்கி உழல்கின்றனர்.

ஐயகோ! என்றது அவரது அறியாமைக்கு இரங்கிப் பரிவு மீதூர்ந்து வந்தது. பிழைகள் பல நுழைய விழைவு கொள்வது அழிவு கொள்வதாம். பாழான அதில் வீழாது விலகுக.

வேட்டு விளிகின்றீர் என்றது மேலோருடைய நெறி முறைகளைக் கேட்டுத் தெளியாமலும், கெடு நிலை உணராமலும், மாட்டு மதியாய் மடிந்து படுதலை நினைந்து இரங்கியது.

பிறர்மனை விழைவால் நாணம் இழந்து நவை யுறுதலால் ஆணோ நீர்? என வினவ நேர்ந்தது. தலையில் முக்காடிட்டு அஞ்சி ஒதுங்கிப் பஞ்சையாய்ப் பதுங்கிப் படு பழிகளில் இழிந்து உழலுதலால் ஆண்மை மேன்மைகள் அவரை அணுகாது போயின.

பெரியவாட் டடங்கட் செவ்வாய்ப் பிறர்மனை பிழைக்கு மாந்தர்
மரீஇய வாய்ப் புறஞ்சொற் கூர்முள் மத்திகைப்புடையும் அன்றி
ஒருவர்வாய் உமிழப்பட்ட தம்பலம் ஒருவர் வாய்க் கொண்டு
அரியவை செய்ப வையத்து ஆண்பிறந்தார்கள் அன்றே.

(சீவக சிந்தாமணி, 2821)

அயல் மனையாளை அவாவி அலைபவருடைய இயல்பையும் இளிவையும் விளக்கி அவரது பிறப்பை இது பழித்திருத்தலறிக. நெறிகேடான இச்சையால் நாணம் அழிகிறது; ஆண்மை ஒழிகிறது; அவமானம் விளைகிறது.

இச்சைத் தன்மையினில் பிறர் இல்லினை
நச்சி நாளும் நகையுற நாணிலன்
பச்சை மேனி புலர்ந்து பழி படூஉம்
கொச்சை ஆண்மையும் சீர்மையில் கூடுமோ?

(இராமா, சுந்தர, பிணி வீட்டு படலம், 69)

இராவணனை நோக்கி அனுமான் இவ்வாறு கூறியிருக்கிறான். பிறர் இல்லினை நச்சி நிற்பவன் இலச்சை கெட்டவன்; ஆண்மையும் மேன்மையும் இலனாய் அவன் அவமதிப்புறுவன்; அவனுடைய பிறப்பு ஈனமாம் என இடித்து அறிவுறுத்தி எதிரி தேற உரைத்துள்ள மாருதியின் சீரிய உரைகள் வீரியம் மிக வுடையன.

பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறன்ஒன்றோ ஆன்ற ஒழுக்கு. (குறள், 148)

பேராண்மையாளன், புண்ணிய சீலன் இன்னவனே எனத் தேவர் இதில் உணர்த்தியிருக்கும் உண்மையினை ஊன்றி உணர்க.

செம்மைஒன் றின்றிச் சிறியார் இனத்தராய்க்
கொம்மை வரிமுலையாள் தோள்மரீஇ—உம்மை
வலியால் பிறர்மனைமேல் சென்றாரே இம்மை
அலியாகி ஆடியுண் பார். (நாலடியார்)

முற்பிறப்பில் பிறர் மனைவியை விரும்பினவன் பிற் பிறப்பில் பேடியாய் இழிந்து உழலுவன் என இது குறித்துள்ளது. நெறி கடந்து கொழுத்துத் திரிந்தமையால் இழி பிறவியை அடைந்து பழியுற நேர்ந்தான். வினைவகை விழி அறிய வெளிசெய்துள்ளனர்.

அயல் மனை விழைவால் பழி துயரங்கள் பல விளைந்து இழி பிறவிகள் உறுகின்றன; அப் படு பழியில் விழுந்து பாழாகாமல் நெறியோடு திருந்தி ஒழுகி நிறை நலம் உறுக.

பண்டு ஓர் ஆண் பெண் அமைத்து அவ்
இருவருக்கும் மணம் இயற்றிப் பரன் இரக்கம்
கொண்டளித்த முறைகடந்து கள்ள வழிப்
புணர்ச்சி செயும் கொடியோர் தம்மை
மண்டலமே வாய்பிளந்து விழுங்காயோ
அவர்தலை மேல் வான் உலாவும்
கொண்டலே பேரிடியை வீழ்த்தாயோ
இது செய்யில் குற்றம் உண்டோ? (நீதிநூல்)

நெறிகடந்து பிறன் இல் விழைவது எவ்வளவு பெரிய பாவம்! என்பது இதனால் அறியலாகும்.

ஆண்டகையார் என்பார் அயல்மனையை நோக்காரே
நாண்டகைந்து நோக்கி நயந்திடினே—தூண்டிலிரை
நன்றென்று கவ்விமீன் நாசமுறல் போலந்தோ
பொன்றி ஒழிவர் பொரிந்து.

என்பதை ஒன்றி உணர்ந்து உய்தி பெறுக.

337. உன்னுடைய இல்லாளை உற்றொருவன் பார்த்தாலும்
தின்னும் படிசினந்து சீறுகின்றாய்—அன்னபடி
கண்டும் பிறர்மனையைக் காதலிக்கின் உய்தியுனக்
குண்டோ சிறிதுள் ளுணர். (எ)

இ-ள்

உன்னுடைய மனைவியை அயல் ஒருவன் விரும்பினால் நீ உள்ளம் கொதித்து உருத்துச் சீறுகின்றாயே! இந்த அனுபவத்தை நன்கு கண்டும் என்ன மதியால் பிறர் மனைவியரை விழைகின்றாய்! அவ் விழைவால் விளையும் இழிவு அழிவுகளைக் கருதி உணர்ந்து உறுதி தெளிந்து ஒழுகுக என்றவாறு.

அயல் மனைவியரை விழைவது மனித இயல்புக்கு மாறுபட்டது; மானக் கேடு ஆனது; ஈனம் மிகவுடையது என உலக அனுபவத்தை எடுத்துக்காட்டி மானசநிலைமைகளை விளக்கி ஞான நலம் தெளிய இஃது உணர்த்துகின்றது.

மனிதன் யான் எனது என்னும் இயல்பினை இயல்பாக உடையவன். என்னுடைய உடைமைகள் என்று உரிமை பாராட்டி ஒவ் ஒரு மனிதனும் பெருமை பேசி நிற்கின்றான். உடைமைப் பொருள்கள் பல வகை நிலைகளில் பரந்து விரிந்துள்ளன. பொன் நிலம் மணி அணி மாடு ஆடு வீடு மனைவி மக்கள் என உறவுரிமைகள் பரவி யிருக்கின்றன.

தனக்கு உரியன என்று தான் கருதியுள்ள பொருள்களைப் பிறர் வந்து கவர நேரின் எவனும் சினந்து எதிர்க்கின்றான். சீறி விலக்குகின்றான். வேறு எதைக் கவர்ந்து கொள்ளினும் ஓரளவு பொறுத்து வழக்காடுகின்றான். தன் மனைவியை மாத்திரம் அயலான் நச்சி நோக்கின், அதனைப் பொறுக்க மாட்டான். உள்ளம் கொதித்துத் துடிக்கின்றான்; கூடுமானால் அவனைக் கொல்லவும் துணிகின்றான். கொலைகளும் நிகழ்ந்திருக்கின்றன.

தன் பெண்டாட்டி மீது மனிதன் கொண்டிருக்கும் ஆர்வமும் அபிமானமும் தனி நிலையின. அந்தப் புரத்தில் இருந்த தன் மனைவியைக் கண்ணாரக் கண்ட ஒருவனுடைய கண்களைப் பண்டு ஓர் அரசன் களைந்து எறியும்படி கொடுந்தண்டம் இட்டான்.

தன் உயிரினும் இனியளாகத் தன் காதலியை உவந்து பாதுகாத்து இன்னனம் உரிமை பூண்டு வருதலால் அவளை அயலான் விழைந்து காதலிப்பது பாதகமாய் மூண்டு விடுகின்றது.

உன் மனைவியைப் பிறன் ஒருவன் மருவ விரும்பினால் நீ சகிக்க மாட்டாய்; நெஞ்சம் கொதித்துத் துடிக்கின்றாய்; அவ்வாறே எல்லாரும் தம் தம் மனைவியரைக் கருதிப் பேணிக் காதலித்து நிற்பர் ஆதலால் அயல் மனையார் எவரையும் நீ விரும்பலாகாது; விரும்பின் நெடும் பழியும் கொடுந் துயரமுமாம்.

உன்மனையாள் தனைஒருவன் உறவிரும்பின்
உளம் கொதித்தே உயிர்துடித்து
முன்முனையாய்ச் சீறுகின்றாய்! முடியுமேல்
கொலைசெய்ய மூளுகின்றாய்!
நின்மனத்தின் அனுபவத்தை இவ்வாறு
நேர்கண்டும் நெறிகடந்து
புன்மனத்தனாய்ப் பிறனில் புகுவாயேல்
புலையாடிப் போவா யன்றே,

உன் நிலைமையை நடுவு நிலைமையுடன் ஓர்ந்து உணர்ந்து யாண்டும் நெறியோடு ஒழுக வேண்டும் என வேண்டிய படியிது.

பிறர்மனையைக் காதலிக்கின் உனக்கு உய்தி உண்டோ? என்றது அந்த ஆசையால் விளையும் நீசங்களை நினைந்து கொள்ள வந்தது. உய்தி இல்லாத பழியைச் செய்து அழியாதே.

சிறிது உள் உணர் என்றது கொஞ்சம் நெஞ்சை நிதானம் செய்து நேர்வதை நேர்மையாய் நினைந்து பார் என்றவாறு. அயல் மனைமேல் மயலாய் உள்ளம் விழையின் உணர்வால் அதனை ஓர்ந்து தள்ளுக. ஓராது ஒழியின் தீராத பழியாம்.

ஆசை பிறர்மனைமேல் ஆயின் அதுகோடிய
நீசம் எனவே நினை.

அயல் மனை விழைவு உயிர் நிலை அழிவு; அஃது ஒழிக.

---

338. கொண்ட மனையாள் குணந்திரிவள் மக்களுமே
கண்ட படிதிரியக் காலெழுவர்—மண்டுபழி
பாவம் படரும் பகைதுயராம் மற்றொருவன்
காவல் மனைவிழையின் காண். (அ)

இ-ள்

பிறனுடைய மனையாளை நீ விழைந்து போனால் உன் மனைவி குணம் மாறி நிலை கெடுவாள்; பிள்ளைகளும் மனம் போனபடி

பிழையான வழிகளில் இழிந்து திரிவர்; பழியும் பாவமும் பகையும் துயரும் எவ்வழியும் விளைந்து வரும் என்றவாறு.

இது, பிறர்மனை விழைவின் தன்மையை அழியும் என்கின்றது.

தாம் சார்ந்த இனத்தின் வண்ணமே சீவர்கள் யாண்டும் நேர்ந்து இயங்குகின்றன. அயலே வாய்ந்த வகையின் அளவே இயல்பாகச் சாயம் தோய்ந்து மிளிர்கின்றன. எங்கும் என்றும் இவை இயற்கை நியமங்களாய்ப் பொங்கி வருதலால் செயற்கைச் சூழல்கள் சீர் தூக்கி நோக்கப் படுகின்றன.

அரசன் எப்படி, குடிகள் அப்படி என்னும் பழமொழி சேர்க்கையின் இயற்கை நிலையைத் தெளிவுறுத்தி யுள்ளது.

ஒரு குடித் தலைவன் ஒழுக்கம் கெட்டு இளி நிலைகளில் இழிந்து திரியின் அவன் குடும்பத்தில் உள்ளவர்களும் அவனைப் பின்பற்றி நிலை குலைந்து படுவர். வழி காட்டியாய் உள்ளவன் பழி காட்டலாகாது; காட்டின் யாவும் இழிவாய்ப் பழிபட நேரும்.

தந்தையும் தாயும் நல்லவராயின், அவர் வழி வந்தவர் ஒளி மிகுந்து உலாவுகின்றனர். அல்லராயின் இளி புரிந்து உழலுகின்றனர்.

"தூயராய்ச் சிலர்புவி துதிக்க வாழ்தலும்,
தீயராய்ச் சிலர்பழி சேர்ந்து வீழ்தலும்,
தாயர் தந்தையர்நிலை சார்ந்து மேவலால்
ஆயவர் சேயவர்க்கு அரணம் ஆவரால்."

என்னும் இது ஈண்டு உணர வுரியது. நேர்ந்த தலைவன் நிலைமையே அவன் நிழல் வழி வாழ்வார்க்குப் படிகின்றது.

"ஓர் பிழை குருவே செய்யின், ஒன்பது சீடன் செய்வான்" என்பது செயற்கைக் கேட்டை விளக்கி நிற்கின்றது.

நிலத்தியல்பால் நீர்திரிந்து அற்றாகும் மாந்தர்க்கு
இனத்தியல்ப தாகும் அறிவு. (குறள், 452)

என்றது பொய்யாமொழி. மனித சுபாவம் இவ்வாறு மருவி யுள்ளமையால் தன்னைச் சார்ந்தவரை ஒரு தலைவன் எவ்வாறு பாதுகாத்து வர வேண்டும்? என்பதை அவன் ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். சிந்தனை இல்லாத வாழ்வு நிந்தனையாய்த் தாழ்கின்றது.

பிறனுடைய மனையாளை ஒருவன் விழைந்து போனால் அவனுடைய மனைவி தவறுபட நேர்வள். புதல்வரும், புதல்வியரும் அவனைப் பார்த்துப் பழிவழியில் இறங்குவர். இங்ஙனம் குடும்பம் இழிந்து படவே அவன் வாழ்க்கை மதிப்பும் மரியாதையும் இழந்து அவமானமாய் அழிந்து படுகின்றது.

கொண்ட மனைவி குணம் திரிவள் என்றது அவள் பதிவிரதையாய் இருக்கும் பான்மை குலைவள் என்றவாறு.

மக்களுமே கண்டபடி திரிவர் என்றது சந்ததிகளும் நிந்தை வழிகளில் இழிதல் கருதி. ஒருவன் நெறி கேடு பலர்க்கும் பழி கேடுகளாக வழி புரிகின்றது.

பிறர் மனைவியரை விழைந்து உழலும் ஒரு பேயனை அவன் மனைவி திருத்த முயன்றாள். "நான் இங்கு இருக்க நீங்கள் அங்கே போவது ஏன்?" என நாளும் இதமாகச் சொல்லிப் பார்த்தாள். அவன் யாதும் கேட்கவில்லை. ஒரு நாள் அவள் துணிந்து ஒரு வேலை செய்தாள்: இரவில் அவன் எழுந்த பொழுது அவளும் உடனே கதவை மூடிவிட்டு வெளி ஏறி வேறு ஒரு வழியாய் நடந்தாள். அவன், "எங்கே போகின்றாய்?" என்றான். "நீங்கள் செய்யும் வேலையை நானும் இன்று முதல் செய்யப் போகின்றேன்" என்றாள். அவனுக்கு மானமும் அறிவும் வந்தன. உடனே திரும்பி வீட்டுக்கு வந்தான்; அன்று முதல் அப் பழக்கத்தை விட்டான். அவளோடு அன்புடன் அமர்ந்து இன்பாய் வாழ்ந்தான்.

அயல்மனை நாடி அவாவுடன் எழுந்தான்;
அவன்மனை கதவினை மூடி
இயலுடன் வெளியே நடந்தனள்; எங்கே?
என அவன் வினவினன்; தங்கள்
செயலினை நானும் செய்யஎன்று உரைத்தாள்;
சிந்தையுள் நாணிமீண்டு அந்த
மயலினை அன்றே ஒழிந்துதன் மனையை
மருவிவாழ்ந் திருந்தனன் மகிழ்ந்தே.

தன் மனைவி விபசாரியாய் இருக்க எவனும் சம்மதியான் என்பது இதனால் தெரிகின்றது. தனது அனுபவம் இங்ஙனம் இருப்பதை ஓர்ந்து உணராமல் ஒருவன் பிறர் மனையைப் பழுது

படுத்திப் பாழாக்கப் போவது எவ்வளவு மதியீனம்? எத்துணைப் பழி பாவம்! உய்த்துணர வேண்டும்.

நீ அயல் மனையை விரும்பினால் உன் மனைவி விபசாரியாவள்; பிள்ளைகளும் பிழைபட்டு இழிவர்; குடும்பம் குன்றி ஒழியும்; இப் பழி கேடுகள் நேராத படி ஓர்ந்து நெறி கோடாமல் வாழுக.

---

339. ஈசன் கயிலை எடுத்தானும் கீசகனும்
ஆசை பிறர்மனைமேல் ஆயன்றே—நாசமாய்ப்
போயினரப் போக்கறிந்தும் போதமின்றி ஏதிலனில்
ஆய்கின்றாய் என்னே அவம். (௯)

இ-ள்

ஈசன் எழுந்தருளியுள்ள கைலாச மலையை வேரோடு எடுத்த இராவணனும், மகா தீரனான கீசகனும் பிறர் மனைவியர் மேல் ஆசை கொண்டதனாலேயே நாசமாய்ப் போயினார்; அந்த நாச நிலையை அறிந்தும் அயலான் மனைவியை நீ விரும்புகின்றாயே அந்தோ! இது எவ்வளவு நீசம்? என்றவாறு.

பிறன் இல் விழைவு பிழை; பழி; பாவம்; என இதுவரை உணர்ந்து வந்தோம். அங்ஙனம் விழைந்து இழிந்து அழிந்து ஒழிந்தவர்களுள் சிலரை இதில் உணர வருகின்றோம்.

நீதி முறை தவறி நெறிகேடு செய்யின், அவர் எவராயினும் கெடுவர் என்பதற்குச் சரித்திர ஆதாரங்களோடு இரண்டு சாட்சிகளை இது குறித்துக் காட்டுகின்றது. சரிதச் சான்றுகள் உண்மையைத் தெளிவுறுத்தி உறுதி புரிகின்றன.

ஈசன் கயிலை எடுத்தான் என இராவணனை இங்கே இவ்வாறு இசைத்துக் காட்டியது, அவனது அசையாத ஆண்மையையும் திசை வென்ற ஆற்றலையும் தீர பராக்கிரமங்களையும் கருதிக் காண. யாரும் செய்ய முடியாத அதிசயத்தைச் செய்து முடித்தமையான் செய்தவரனைவரும் அவன் மெய்வலியை வியந்து பாராட்டியுள்ளனர்.

மங்கலக்குடி யான்கயி லைம்மலை
அங்கு அலைத்தெடுக் குற்ற அரக்கர்கோன்
தன்க ரத்தொடு தாள்தலை தோள் தகர்ந்து
அங்க லைத்தழுது உய்ந்தனன் தானன்றே. (தேவாரம்)

000917



இங்ஙனம் வெள்ளியங்கிரியை எடுத்து இறைவன் அருள் பெற்றுப் பரம பாக்கியங்களை அடைந்து மூன்று உலகங்களையும் ஏக சக்கராதிபதியாய்த் தனி அரசு ஆண்டு திசைகள் தோறும் இசைகள் பரவச் சிறந்திருந்த தசமுகன் சீதை மேல் நசை புரிந்தமையால் தன் குலத்தோடு நாசமாய் அழிந்து போயினன்.

"ஓராசை ஒருவன்மேல் உயிராசைக்
குலமகள்மேல் உடைய காதல்
தீராசை பழி என்றேன்; எனைமுனிந்த
முனிவு ஆறித் தேறினையோ?
போராசைப் பட்டெழுந்த குலமுற்றும்
பொன்றவும்தான் பொங்கி நின்ற
பேராசை பேர்ந்ததோ? பேர்ந்து ஆசைக்
கரிஇரியப் புருவம் பேர்ந்தோய்!"

(இராமாயணம்)

இராவணன் இறந்து பட்டபொழுது இரணகளத்தில் நின்று விபீடணன் இவ்வாறு அவனை நோக்கி அழுதிருக்கிறான். அவனுடைய பெருந் திருவும் அருந்திறலும் பேரரசும் ஆருயிரும் பிறர் மனை விழைவாகிய ஒரு பிழையினால் அழிந்து ஒழிந்தன என அலறியிருத்தலால் அவ் விழைவின் தீமை தெளிய வந்தது.

"வெற்புஎடுத்து உயர்ந்த திண்டோள் இராவணன் விரகத்தெய்திப்
பொற்புடைச் சீதை நெஞ்சம் மெலிவுறப் புன்மை செய்து
கற்புஎனும் கனலி பற்றக் கிளையொடும் கரிந்தான் என்னின்
அற்புடை யவர்க்குத் தீமை புரிவரேல் நரகின் ஆழ்வார்."

(கூர்மபுராணம்)

தன் நெறி கேட்டினால் இராவணன் நிலை குலைந்து அழிந்தமையை நூல்கள் பல இங்ஙனம் பரிந்து குறித்திருக்கின்றன.

கீசகன் என்பவன் விராட தேசத்து மன்னனுடைய மைத்துனன். சிறந்த சேனாதிபதி. உயர்ந்த போர் வீரன். துரோபதையை விழைந்து இழிந்து அழிந்தான்.

இந்திரன் எவ்வளவு பெரியவன்? அவனது சீரும் சிறப்பும் எத்துணை உயர்வின! அகலிகையை விரும்பியதனால் அவன் பெருமை முழுதும் இழந்து சிறுமை அடைந்தான்.

கற்ற கல்வியும், அவுணர்கள் கருந்தலை உருட்டிப்
பெற்ற செல்வமும், விண் அரசாட்சியும், பிறவும்
உற்ற காமத்தின் ஒருதமுற்பொறியின் ஊர் அவிந்தாங்கு
அற்றவோ! என அழிந்தனன், கரைந்தனன், அழுதான்.

(விநாயக புராணம்)

அயலான் மனைவியை விழைந்ததனால் தனக்கு நேர்ந்த அல்லலையும் அவமானத்தையும் நினைந்து அவன் இவ்வாறு அழுதிருக்கிறான். அரிய பல பெருமைகளும் இவ் விழைவுறின் அழிவுறும் என்பது தெளிவுற வந்தது.

எனைத்துணையர் ஆயினும் என்னாம் தினைத்துணையும்
தேரான் பிறனில் புகல். (குறள், 144)

மேலே குறித்தவர் எல்லாரையும் கருதி வந்துள்ளது போல் இது உருவமைந்துள்ளது. எனைத் துணையர் ஆயினும் என்னாம்? இந்த வினாவின் வேகத்தையும் விறலையும் கருதி நோக்குக. கல்வி செல்வம் அதிகாரம் ஆற்றல் முதலியவற்றால் எவ்வளவு சிறந்திருந்தாலும் பிறர் மனைவியரை விழைவராயின் அவ்வளவும் நாசமாய் இழிந்துபட அவர் அழிந்து கெடுவர் என்னும் ஓசை இதில் உள்ளே ஒலித்துள்ளது. அவ் வுண்மையை நுண்மையாக உள்ளச் செவியால் உற்று ஓர்ந்து கொண்டு தேர்ந்து ஒழுக வேண்டும்.

தினைத் துணையும் தேரான் என்றது நுனித்துணர வந்தது.

தன் மனைவியை அயலான் ஒருவன் தழுவ விழைந்தால் தன் மனம் என்ன பாடுபடும்! என்னும் இன்ன உணர்வு ஒரு தினை அளவு ஆவது இருந்தால் பிறன் இல்லை விழைந்து ஒருவன் நுழைவானா? எனத் தேவர் இதில் உளைந்து இரங்கியிருக்கும் நிலை உருகியுணர வுரியது.

தன்னைப் போல் பிறரை எண்ணி ஒழுகுவதே நல்ல மனிதத் தன்மையாம். அத் தன்மை இல்லையேல் அவன் புன்மையாளனாய்ப் புலைப்படுகின்றான்.

தன் அனுபவத்தாலும், நூலறிவாலும், சரிதக் காட்சிகளாலும் பிறர்மனை விழைவு பெரும்பிழை என்பது பெறப்படுகின்றது. அப்பிழையில் வீழாமல் விலகி வாழ்வதே விழுமிய நலமாம்.

ஏதிலன் இல் ஆய்கின்றாய் என்னே அவம்! என்றது அதனால் விளையும் தீதுகளை நினைந்து. ஏதிலன் = அயலான். இல் = மனையாள்.

**அவம்** = கேடு. அயலார் மனைவியர்மேல் ஆசை யுற்றதனாலேதான் இராவணன் முதலாயினோர் நாசமாய்ப் போயினர்; அந்த நாச நிலையை உணர்ந்து நீசம் புரியாமல் நெறியே வாழுக.

---

340. எத்திக்கும் கீர்த்தி எழுந்துலவும் இன்பமுயர்
முத்தித் தலத்து முதன்மையுறும்—ஒத்த
பிறனில் விழையாப் பெருந்தகையான் என்றும்
அறனில் உயரும் அமர்ந்து. (ம)

இ-ள்

பிறன் மனையாளை விரும்பாத பெருந்தகையாளன் சிறந்த புண்ணிய சீலனாய் உயர்ந்து, யாண்டும் புகழ் ஒளி பரப்பி முத்தித் தலத்திலும் தலைமை எய்தி நிலவியிருப்பன் என்பதாம்.

நெறி கேடாய்ப் பிறர் மனைவியரை அவாவினார்க்கு உள வாகும் பழி கேடுகளை மேலே கண்டு வந்தோம்; இதில் அங்ஙனம் விழையாதவரது பெரு மேன்மைகளைக் காண வந்துள்ளோம்.

நிறையால் பெண்பிறப்பு பெருமை பெறுதல்போல், நெறியால் ஆண்பிறப்பு மகிமை யுறுகின்றது. நிறை இல்லையாயின் பெண்மை புன்மையாம்; நெறி இல்வழி ஆண்மை கீழ்மையாம். பெண்மைக்கும் ஆண்மைக்கும் நிறையும் நெறியும் முறையே உயிர் நிலைகளாய் ஒளி புரிந்துள்ளன.

கற்புடைய பெண் அற்புத நிலையளாய் அகிலமும் துதிக்கப் பெறுகின்றாள். கற்பு பெரும் பேறாக மதிக்கப் பட்டுள்ளது.

கற்பு என்னும் திண்மை உண்டாகப்பெறின் அப் பெண்ணின் பெருமை விண்ணினும் பெரிது; அவளைத் தனக்கு மனைவியாகப் பெற்றவன் பெரும் பாக்கியவான்; அப் பேற்றினும் ஏற்றமான பேறு வேறு யாதும் இல்லை எனத் தேவர் கூறியுள்ளார்.

கற்புக் கடம்பூண்ட இத்தெய்வம் அல்லது
பொற்புடைத் தெய்வம் யாம்கண்டில மால்;
வானம பொய்யாது; வளம் பிழைப்பு அறியாது;
நீணில வேந்தன் கொற்றம் சிதையாது;
பத்தினிப் பெண்டிர் இருந்த நாடு, (சிலப்பதிகாரம், 15)

மழைவளம் தரும் பெண்டிர். (மணிமேகலை)

கற்பில் நின்றன கால மாரியே. (இராமாயணம்)

பத்தினிகளை மேலோர் இவ்வாறு புகழ்ந்து வியந்து துதித்திருக்கின்றனர். நிறையுடைய பத்தினிகளைப் போலவே நெறியுடைய உத்தமர்களும் இங்ஙனம் துதிக்கத் தக்கவர். பெண்மைக் கற்பினும் ஆண்மைக்கற்புக்குச் சோதனைகள் அதிகம். அரிவையர் அரிய பாதுகாவலுடன் இல்லுள் ஒதுங்கி இருக்கும் இயல்பினர். ஆடவர் தன்னம் தனியராய் வெளியே உலாவிவரும் நிலையினர்.

நிறைக்காவலோடு புறக்காவலும் அவர்க்கு அமைந்துள்ளது.

சிறைகாக்கும் காப்புஎவன் செய்யும்? மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை. (குறள், 57)

நிறையான் மிகுகில்லா நேரிழை யாரைச்
சிறையான் அகப்படுத்தல் ஆகா. (பழமொழி, 30)

மகளிர்க்கு நிறை சிறை என்று இரண்டு பாதுகாப்புகள் உள. அவற்றுள் நிறைக்காவல் சிறப்புடையது; அஃது இல்வழி சிறைக் காவலால் பயன் இல்லை என இவை உணர்த்தியுள்ளன.

"That virtue which requires to be ever guarded is scarcely worth the sentinel." (Goldsmith)

"என்றும் புறக்காவலிலுள்ள கற்பு அப் பாதுகாப்பால் யாதும் பயன்படாது" என மேல் நாட்டு அறிஞரும் இங்ஙனம் கூறியுள்ளனர்.

தன் நெஞ்சே சான்றாய் நெறி அமர்ந்து ஒழுகிய பொழுது தான் அது உண்மைக் கற்பாய் ஒளி சிறந்து திகழ்கின்றது.

இந் நிலையில் இருபாலும் நிறை ஒத்து ஒரு பாலும் கோடாமல் நெறியே ஒழுகி வருமாயின், அச் சமுதாயம் பரம புனிதமுடையதாய்ப் பெரு மகிமை அடையும்.

"ஆசலம்புரி ஐம்பொறி வாளியும்,
காசலம்பு முலையவர் கண்எனும்
பூசல் அம்பும், நெறியின் புறம் செலாக்
கோசலம்" (இராமாயணம், ஆற்றுப்படலம், 1)

என இரு பாலாருடைய கற்பு நிலையை ஒரு முகமாய் உணர்த்தியிருக்கும் இந்த அற்புதப் பாடல் * நுட்பம் மிக வுடையது. அரிய உறுதிநலங்கள் நிறைந்தது. ஆழ்ந்து சிந்திக்கத்தக்கது.

---

* இக் கவியின் பொருள் நயங்களை புலவர் உலகம் 84ம் பக்கம் காண்க.

ஆணும் பெண்ணும் யாண்டும் நெறி வழுவாமல் ஒழுகி வந்தனர்; அதனால் ஈசனும் தன்பால் வந்து பிறக்கும்படி கோசல தேசம் தேசு மிகுந்து விழுமிய நிலையில் விளங்கி யிருந்தது என நம் கவிச் சக்கரவர்த்தி இவ்வாறு சுவையாக விளக்கி யிருக்கிறார்.

கற்பும் ஒழுக்கமும் அற்புத நிலையங்களா யுள்ளன.

வானும் வையமும் ஏவல் செய்யும்படி கற்பு பெண்மைக்குப் பெருமை தருதல் போல் நெறி ஆண்மைக்கு அருள் புரிகின்றது.

எத்திக்கும் கீர்த்தி எழுந்து உலவும்

என்றது ஏக பத்தினி விரதனான உத்தமன் புகழ் உலகம் எங்கும் பரவி உயர் நலம் பெருகி ஒளி வீசுதல் கருதி.

பொறி புலன்களை இழி வழிகளில் விடாமல் நெறியே ஒழுகலால் அது அரிய தவம் ஆகின்றது; ஆகவே பெரு மகிமைகள் விளைந்து இருமை நலங்களும் இனிது வளர்கின்றன.

எத்திறத்தோர் எவ்வனமாம் இடையூற்றைக்
  கடந்து எளிதின் ஏற வல்லோர்
அத்திறத்தோ ரேபுருடர்; அவர்களே
  தொழற்கு உரியோர்; அவரே சான்றோர்;
மெய்த்திறத்தோர் சேரிடமாய் வினயநிதி
  படைத்தருளால் விளங்கா நிற்கும்
சுத்தகுண எவ்வனம்இவ் உலகில் உளதோ?
  விசும்பில் சூழ்காடு உண்டோ? (ஞானவாசிட்டம்)

காளைப் பருவத்தைப் புனிதமாகப் பேணி ஒருவன் நெறியே ஒழுகுவனாயின் அவனே திவ்விய புருடன்; செவ்விய சான்றோன்; எவரும் தொழுதகு தகைமையன்; அத்தகைய உத்தம சீலன் இவ் வுலகில் ஒருவன் உளன் ஆயின் வானில் ஒரு குளிர்ந்த பூஞ் சோலையைக் கண்டது போலாம் என வியந்து கூறி யிருத்தலால் நெறியுடைய நீதிமான் எவ்வளவு அருமை பெருமைகளை யுடையவன்! என்பது எளிது தெளிவாம்.

முத்தித் தலத்தில் முதன்மை உறும் என்றது இங்கே நெறி கடந்து சிற்றின்பத்தில் சீரழியாதவன் அங்கே பேரின்பத்தைப் பெற்று மகிழும் உண்மை உய்த்துணர வந்தது.

இவ் வுலகத்தில் எல்லா நன்மைகளுக்கும் தனி உரிமையாளன் யார்? மோட்சத்தில் முதல் ஆசனமும், முதல் மரியாதையும் யாருக்கு உண்டு? என மாதவர் கூடிய சபையில் ஒரு முறை வாதம் நிகழ்ந்தது; அதில், தன் கற்பைக் காத்து ஒழுகும் உத்தமனையே முத்தர்கள் எல்லாரும் முதன்மையாய்த் தேர்ந்து குறித்தனர்.

நலக்குரியார் யார்? எனின், நாமநீர் வைப்பிற்
பிறற்குரியாள் தோள்தோயா தார். (குறள், 149)

பிறன் ஒருவனுக்கு உரிமையானவளுடைய தோளைத் தோயாதவனே அரிய நலங்களுக்கெல்லாம் இனிய உரிமையாளன் என இந்தப் புனித வேதமும் உறுதி செய்துள்ளது.

நெறி முறை பிறழாத இவ் வரம்பும் ஒழுங்கும் மனித சமுதாயத்தில் நிரந்தரமாய்த் திருந்தியிருக்கவேண்டும் என மேலோர் பலரும் பேணி வந்திருத்தலால், ஏக பத்தினி விரதத்தை உயர்ந்த ஒழுக்கமாக நூல்கள் எல்லாம் புகழ்ந்து போற்றியிருக்கின்றன.

இந்த ஒழுக்கம் தவறின், அவன் எவனுயினும் இழுக்கமுடையனுய் இழிக்கப் படுகின்றுன். எந்தப் பிழைகளைச் செய்ய நேர்ந்தாலும் மனிதன் இந்தப் பழியைச் செய்யலாகாது எனச் சிந்தை தெளிந்த மேதைகள் இரங்கி வேண்டியிருக்கின்றனர்.

அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று. (குறள், 150)

தருமம் என்பதைக் கனவிலும் கருதாமல் எங்கும் ஒருவன் பாவங்களையே செய்யினும், பிறன் மனைவியை மாத்திரம் விரும்பானுயின் அவன் அற நலங்களுக்கு உரியனுய் நன்மையை அடைகின்றுன் என்னும் இதனுல் இவ் ஒழுக்கத்தின் உயர்வும் உண்மையும் உணரலாகும்.

"அறம் திறம்பல் அருங்கடி மங்கையர்
திறம் திறம்பல் தெளிவுடையோர்க் கெலாம்."
(இராமாயணம்)

பாவம் என்றுல் என்ன? பிறனுடைய மனைவியை விரும்புவதே; அதை விடக் கொடிய பாவம் வேறு யாதும் இல்லை என

இராமர் வாலியை நோக்கி இவ்வாறு உறுதியாய் ஓதியிருக்கிறார். இப் பழி பாவங்கள் யாதும் படியாமல் உயர்குண சீலனாய் நீ ஒளி பெற வேண்டின் அயல் மனைவியை விழையாதே.

பிறனில் விழையாப் பேருந்தகை அறனில் உயரும் என்றது புகழ் புண்ணியங்கள் எல்லாம் அவன் எளிதடைந்து ஒளி பெறுதல் கருதி. இழி விழைவு நீங்கவே உயர் வினைவுகள் ஓங்கின.

விழுப்பம் மிகவுடைய இந்த ஒழுக்கத்தை எந்த நாடும் உயர்ந்த மதிப்புடன் வியந்து கொண்டாடியுள்ளது.

Thou shalt not commit adultery. (Bible)

"விபசாரம் செய்யாதே" என மேல் நாட்டு வேதமும் இவ்வாறு விதித்து உள்ளது. பொதுவாக உரைத்திருக்கும் இவ் விதிக்கு மேல் ஏசுநாதர் குறித்துள்ளது ஈண்டு அறியத்தக்கது.

Whosoever looketh on a woman to lust after her, hath committed adultery with her already in his heart. (Matt5.28)

"ஒரு பெண்ணைக் காம இச்சையோடு எவன் கருதி நோக்குகின்றானோ அவன் தன் இருதயத்துள் முன்னதாகவே அவளுடன் விபசாரம் செய்தவனாயினான்" என இங்ஙனம் அத் தீர்க்கதரிசி தீர்ப்பளித்திருக்கிறார்.

இற்றைக்கு ஆயிரத்துத் தொளாயிரத்து நாற்பத்தாறு ஆண்டுகளுக்கு முன்னர் மேல் நாட்டில் இந்த நீதி இப்படிப் போதிக்கப் பட்டுள்ளது. போதனை அரிய சோதனை வாய்ந்தது.

சோரம் புரிவதை மேல் நாட்டார் ஒரு குற்றமாகக் கருத மாட்டார்; அதில் தாராளமாகவே நடந்து கொள்வார் என இக் காலம் ஈண்டு வழங்கி வரும் பழி மொழிக்கும் முற்காலம் ஆண்டு விளங்கியுள்ள நெறி முறைக்கும் எவ்வளவு வேறுபாடு உள்ளது! என்பதை யாரும் செவ்விதின் அறிந்து கொள்ளலாம்.

மனித சமுதாயம் புனிதமாய் மேன்மை யடையும்படி மேலோர் யாண்டும் சீலங்களை வகுத்துச் செவ்விய நெறிகளில் செலுத்தி யருள்கின்றனர்.

பிறர் மனை நோக்காதே என்றார் நாயனார். பார்த்தாலும் பழி என்றார் ஏசுநாதர். இழி நோக்கம் ஒழிந்து உயர் நோக்கில் எழுக என்பதாம். அவருடைய நோக்கங்களை நோக்கி ஒழுகுதல் ஆக்கமாம்.

தீர்க்க தரிசிகள் மார்க்க சகாயிகளா யுள்ளமையால் அவருடைய வார்த்தைகள் வேத வசனங்களாய் வெளியே ஒளிசெய்து நிற்கின்றன. அவ் வழி ஒழுகி வாழும் மாந்தர் எவ்வழியும் ஒளி எய்தி இன்பம் உறுகின்றனர்.

நெறி முறைகளில் நில்லாமல் பொறி வழிகளில் வெறியாய் இழிபவர் யாண்டும் அவலம் மிக அடைகின்றனர். எவ்வளவு உயர் நிலைகளை எய்தியிருந்தாலும் நெறி கேடு நேரின் அவ்வளவும் பாழாகின்றன.

*யானைமேல் ஏறி அமரர் தொழுவரூஉம்*
*வானவர்கோன் காமம் மருவியதால்—பூனைஎன*
*ஓடி இழிவுற்றான் உள்ளத்தே புன்காமம்*
*கூடினுயர் வுண்டோ குறி.*

நெறி கெட்டவர் நிலை கெட்டு அழிவர் என்பதை ஞாலம் அறிய மேலோர் வெளி செய்துள்ளனர்.

*பெற்ற தாய்எனப் பிறர்மனை எண்ணுவோன்; பிறர்கை*
*உற்ற ஒண்பொருள் ஓடுஎன உணருவோன்; உலகில்*
*மற்றை யாவையும் தன்னுயிராம் என மதிப்போன்;*
*கற்றவன்; அவன் கருதரும பேரின்பம் கண்டான்.*

(வீரபாண்டியம்)

---

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

நெறி என்பது நீதி நியமம் உடையது.
நெறி யுடையவன் பிறர் மனைவியரை விரும்பான்.
தன் மனைவியை விடுத்து அயல் மனை விழைவது பிழை.
அவ் விழைவால் பழியும் பாவமும் விளையும்.
துன்பங்கள் பல உளவாம்.
மதிப்பு அழிந்து போம்.
மறுமையில் நரகமாம்.
குடும்பம் குலைந்து படும்.
அந் நீசம் யாரையும் நாசப் படுத்தும்.
அப் பிழை யில்லாதவர் பெரு மகிமைகளை அடைவர்.

௩௪-வது நெறி முற்றிற்று.

---

# முப்பத்தைந்தாம் அதிகாரம்.

## நேர்மை.

அஃதாவது மனச் செம்மை. வஞ்சம் கபடு கரவுகள் புகாமல் நெஞ்சைச் செவ்வையாகப் பாதுகாத்து வைத்திருக்கும் சீர்மை நேர்மை என வந்தது. யாண்டும் எவ் வழியும் யாதும் கோடாமல் நீதி முறைமையில் நிலைத்திருக்கும் நிலைமையை உரிமையாக உணர்த்துகின்றமையால் நெறியின் பின் இது வைக்கப் பட்டது.

341. செம்மை யுடைய திருவுடையார் தேசுடனே
எம்மை நலனும் இனிதெய்தி—இம்மை
மறுமை எனுமிரண்டின் மாண்பும் ஒருங்கே
பெறுவர் பெருமை பெரிது. (க)

இ-ள்

மனச் செம்மையாகிய திருவினையுடையவர் அரிய புகழுடன் இனிய நலங்கள் பலவும் அடைந்து இருமையினும் பெருமை மிகப் பெறுவர் என்பதாம்.

இது, நேர்மையால் விளையும் சீர்மைகளை விளக்குகின்றது.

மனிதன் மனத்தால் விளங்குகின்றான். நல்லவன் தீயவன் மேலோன் கீழோன் என்பன எல்லாம் மனப் பண்பின் உயர்வு தாழ்வுகளிலிருந்து கிளைத்து விளைந்திருக்கின்றன. விளைவுக்கு வித்து மூல காரணம் ஆதல்போல் ஒருவனுடைய நிலைமைகளுக்கு அவன் மனம் மூல முதலாயுள்ளது.

இத்தகைய மனத்தை ஒருவன் பண்படுத்திவரின் அவன் எல்லா இன்ப நலங்களையும் எளிதே அடைந்து கொள்கின்றான்.

மனிதன் பெறத்தக்க பேறுகள் எவற்றிற்கும் மனமே இனிய துணையாய் உரிமையுடன் அமைந்திருத்தலின் அதனை எவ்வழியும் செவ்வையாக அவன் பேணி வர வேண்டுவது காணியாயது.

ஊனுடம்பு எடுத்திவ் வுலகிடை உதித்த
மானுடம் எல்லாம் மனநிலை அளவே
வானிடை ஏகலும் வையகம் வாழ்தலும்
தாமுடை யனவாய்த் தழைத்தமர்ந் துள்ளன.

ஆன்ம ஊதியங்கள் யாவும் மனத்தின் தகுதி அளவே மருவி வருகின்றன என இஃது உணர்த்தியுள்ளமை காண்க.

கருதிய உறுதி நலங்கள் கைவர வேண்டின் மனத்தைச் செம்மையாக மனிதன் செய்து கொள்ள வேண்டும்.

நேர்மை ஓர் அங்குலம் விலகின் சீர்மை உன்னை விட்டு ஒரு காதம் ஒதுங்கிப் போய் விடும்; அங்ஙனம் சீரழிந்து போகாமல் செம்மை நலம் பேணி நன்மை பெறுக.

செம்மை=செவ்விய தன்மை. அஃதாவது கோட்டமின்றி யாண்டும் நேர்மையாய் நிற்கும் நீர்மை. சிறந்த பெருந்தகையாளரது உயர்ந்த பண்பாய் ஒளி மிகுந்துள்ளமையால் இத் தன்மையை உலகம் உவந்து கொண்டாடுகின்றது.

செம்மையின் ஆணி எனப் பரதனைக் குறித்து இராமன் வியந்து கூறியிருத்தலால் இக் குண நீர்மையின் மேன்மையை அவ் வீரக் குரிசில் விழைந்து பேணியுள்ளமை விளங்கி நின்றது.

"அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கிச்
செற்றமும் உவகையும் செய்யாது காத்து
ஞெமன்கோல் அன்ன செம்மைத் தாகி" (மதுரைக்காஞ்சி)

"அகம்புரி செம்மை அன்பிற்காட்டி" (பெருங்கதை)

"செம்மை மாதவர் செய்தவப் பள்ளியே." (சிந்தாமணி)

செம்மையின் இயல்பும், அதனை யுடையவரது உயர்வும், தகவும் இவ் வுரைகளால் உணர்ந்து கொள்ளலாம்.

எல்லா நன்மைகளையும் இனிய செல்வங்களையும் தனியே நல்கி அருளுதலால் செம்மை திருவுடைமை என வந்தது.

மனிதனது மாண்பு மனத்தில் உள்ளது; அம் மனத்தின் மேன்மை செம்மையில் நிலைத்து நிற்கின்றது. நேர்மை குன்றிய பொழுது மனம் நீர்மை இன்றி நிலை தளர்ந்து படும்: படவே மனிதன் சீர்மையிலனாய்ச் சிறுமை அடைய நேர்கின்றான்.

உயர்ந்த சீலத்தின் உயிர் நிலையமாய்ச் செம்மை சிறந்திருத்தலால் அரிய பல நலங்களை எளிதில் அது பயந்தருளுகின்றது.

"Integrity in word and deed is the backbone of character."
(Smiles)

"சொல்லிலும் செயலிலும் நேர்மையாய் நிற்பது ஒழுக்கத்தின் முதுகெலும்பாயுள்ளது" என்னும் இது ஈண்டு உணரத் தக்கது. நேர்மை சீலத்தின் உயிர்நிலை என்றதனால் அதன் நீர்மை நிலை தெரியலாம். கள்ளம் கரவு கபடுகள் நேர்மைக்கு நேர் விரோதிகள். அவை உயிரைப் பழுது படுத்தி விடும்.

அந்த இழிவுகள் உள்ளத்தைப் பற்றாமல் பாதுகாத்து இந்த விழுமிய தகைமையை யாண்டும் மேவி ஒழுகின் மேன்மைகள் யாவும் விரைந்து பெருகி வியன் பயன் தரும்.

மெய்ம்மையாம் உழவைச் செய்து,
விருப்பெனும் வித்தை வித்திப்,
பொய்ம்மையாம் களையை வாங்கிப்,
பொறைஎனும் நீரைப் பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு
தகவு எனும் வேலி இட்டுச்
செம்மையுள் நிற்பர் ஆகில்
சிவகதி விளையும் அன்றே. (தேவாரம்)

பேரின்ப விளைவுகளுக்கு உரிய சாதனங்களை இது குறித்துள்ளது. செம்மையுள் நின்றால் சிவகதி விளையும் என்றது இம்மையும் மறுமையும் அது ஈந்தருளும் என்பது ஓர்ந்து கொள்ள வந்தது. தேசு—கீர்த்தி.

புகழ் பொருள் புண்ணியம் முதலிய எல்லா இன்ப நலங்களுக்கும் மன நலமே காரணமாயுள்ளது; அதனைப் புனிதமாக இனிது பேணுகின்றவன் மனிதருள் தெய்வமாய் மருவி மிளிர்கின்றான்.

கரவு முதலிய ஈனங்களால் பழுது படாமல் உள்ள நெஞ்சு விழுமிய நிலையை அடைகின்றது. அடையவே அது கடவுள் நிலையமாய்ச் சிறந்து அளவிடலரிய மகிமைகளைப் பெறுகின்றது.

"O spirit! that dost prefer before all temples the upright heart and pure." (Paradise Lost)

"நேர்மையான தூய உள்ளத்தையே எல்லாக் கோயில்களினும் இனியதாக உவந்து குடி கொண்டுள்ள ஓ கடவுளே!" என ஆங்கில மகா கவியாகிய மில்ட்டன் கூறியுள்ளது ஈண்டு அறிய உரியது. செவ்விய இதயம் திவ்விய தெய்வ ஆலயமாயது.

உள்ளம் கரவு படியாமல் நேர்மையாகப் பேணிவரின் எல்லா நன்மைகளையும் இனிது விளைத்து அது தனி மகிமை தருகின்றது.

---

342. உள்ளம் கரவா யுறினோ உயிரவமே
எள்ளும் படியா யிழியுமே—கொள்ளும்
நினைவும் உரைசெயலும் நேர்மையேல் உன்னைப்
புனையும் உலகம் புகழ்ந்து. (உ)

இ-ள்

மனம் கரவுடையதாயின் உயிர் ஒளி குறைந்து இழிவுறுகின்றது; எண்ணுகின்ற எண்ணமும் பேசுகின்ற பேச்சும் செய்கின்ற செயலும் யாண்டும் நேர்மையுடன் நிலவின் உன்னை உலகம் புகழ்ந்து போற்றி உவந்து கொண்டாடும் என்றவாறு.

கரவு என்பது உள் ஒன்று வைத்து, அயல் வேறு பேசி, செயல் மாறு படுவது. இது பெருமையைக் குலைத்து மனிதனைச் சிறுமைப் படுத்தும் ஆதலால் சின்னத் தனமா எண்ணப்பட்டது. இந்த வஞ்சக்கரவை நெஞ்சத்தில் உடையவன் நேர்மை இலனாய்ச் சீர்மை அழிகின்றான்.

உள்ளம் கரவாய் உறின் உயிர் அவமே இழியும்.

என்றது அந்த இரண்டிற்கும் உள்ள உற வுரிமையை இனிது உணர்த்தி உறுதி நிலையை ஊன்றி உணர வந்தது.

கருவிழியில் மறு விழுந்தது போல் நல்ல உள்ளத்தில் கரவு படுதல். அது கண்ணைக்கெடுத்துக் குருடு ஆக்கும்; இது கருத்தைக் கெடுத்து முருடு ஆக்கி விடும்.

கண் கெட்ட மனிதன் போல் உள்ளம் கெட்ட பொழுது உயிர் ஒளி இழந்து இழிவுறுகின்றது.

புகழ் புண்ணியங்கள் எல்லாம் நல்ல எண்ணங்களால் உளவாகின்றன. அந்த எண்ணங்களுக்கு இடமான உள்ளம் இழிந்தபடின் எல்லா நலங்களும் ஒருங்கே ஒழிந்து போகின்றன.

அவமே இழியுமே என்றது நல்ல தவ நலங்களை அடைந்து உயர் போகங்களை அனுபவிக்க உரிய ஒள்ளிய உயிர் புல்லிய கரவால் புலைப் படுதலை நினைந்து இரங்கி இனைந்து கூறியவாறு. ஏகாரம் இளி வரவைத் தெளிவுறுத்தி இரக்கம் தோய்ந்து வந்தது.

பிறரை வஞ்சிக்க நேர்ந்தவன் நேர்மையான தன் நெஞ்சத்தைப் பாழ்படுத்தித் தனது இனிய உயிரைக் கெடுத்தவன் ஆகின்றான். அக் கேடு நேராமல் பீடு பெறுகின்றவனே உண்மையான ஆடவன்; அவனே உயர்ந்த பிறவிப் பேற்றை அடைந்து மகிழ்கின்றான். மனம் செம்மையுறின் நன்மைகள் வருகின்றன.

ஏற்றமான ஆற்றல்கள் எல்லாம் மனிதனது உள்ளத்தையே ஊற்றமாய்க் கொண்டு ஊன்றி நிற்கின்றன; நெஞ்சம் நிலை குலையின் யாவும் புலையாய் இளிவடைகின்றன.

தஞ்சமும் தருமமும் தகவு மேயவர்
நெஞ்சமும் கருமமும் உரையு மேநெடு
வஞ்சமும் பாவமும் பொய்யும் வல்லநாம்
உஞ்சுமோ? அதற்கு ஒரு குறை உண்டாகுமோ?

(கும்பகருணன் வதைப்படலம், 85)

இது இராவணனை நோக்கிக் கும்பகருணன் உரைத்தது. இராமனது தன்மைகளையும், தம் மரபின் புன்மைகளையும் சுட்டிக் காட்டி அப் போர் வீரன் கூறியிருக்கும் இவ் வார்த்தைகளை நாம் ஊன்றி நோக்கி ஓர்ந்து சிந்திக்க வேண்டும்.

“நம் எதிரி தரும குண சீலன்; நேர்மையாளன். நாமோ, நெஞ்சில் வஞ்சம்; உரையில் பொய்; செயலில் பாவங்களையுடையோம்; நமக்கு இனி உய்தி உண்டோ? நாம் இனி விளங்க மாட்டோம்; அடியோடு அழிந்தே தொலைவோம்” என மனம் உடைந்து வயிறு எரிந்து இவ்வாறு அவன் பேசியிருக்கிறான். இப் பேச்சில் அவனுடைய உள்ளத்தையும் உணர்ச்சியையும் உறுதியான உண்மை நிலையையும் ஒருங்கே காண்கின்றோம்.

எவ்வளவு வல்லமைகளையும், எத்துணைச் செல்வங்களையும் புறத்தே ஒருவன் எய்தியிருந்தாலும் அகத்தே நல்ல தன்மை இல்லை ஆயின் அத்தனையும் பாழாய் இழந்து அவன் அழிந்தே போவான் என்பதை இவ் வுரையால் உணர்ந்து கொள்கின்றோம்.

நெஞ்சம் பாழ்படின் மனிதன் சுகமாய் வாழ முடியாது; தாழ்வடைந்து தளர்ந்து வீழ் நிலையனாய் விளிந்தே தொலைவான் என்பது தெளிந்தோர் மொழிகளில் விளங்கி நிற்கின்றது.

வெற்றியும் புகழும் விழுமிய வாழ்க்கையும் உள்ளத்தின் நீர்மையைப் பற்றியே நிலைத்து வருகின்றன; அதனை மாசு படுத்தாமல் மாண்பு செய்து கொண்டவன் ஈசன் அருளை எய்தி இன்பம் மிகப் பெறுகின்றான்.

நினைவும் உரை செயலும் நேர்மையேல்.

என்றது மனம் மொழி மெய்கள் யாண்டும் செம்மையாகப் பேண வேண்டும் என்னும் தன்மை தெரிய வந்தது.

அகமும் புறமும் யாதொரு கரவும் சேராமல் யாரிடமும் நேர்மையாய் ஒழுகி வருபவனே சிறந்த சீர்மையாளனாய் உயர்ந்து திகழ்கின்றான்.

"Clear and round dealing is the honour of man's nature."
(Bacon)

"தெளிவான நேர்மை மனித இயல்பில் மிகவும் கண்ணியமானது" என பேக்கன் என்பவர் இங்ஙனம் கூறி யிருக்கிறார்.

தன் நெஞ்சில் ஒருவன் கரவு கொண்டால் தொத்து வியாதி போல் பலர் நெஞ்சங்களிலும் அது பரவ நேர்கின்றது; வஞ்சம் படிந்து பல உள்ளங்கள் பாழ் படுவதற்கு இவன் மூல காரணமாகின்றான். அவ்வாறே தான் நேர்மையாளனாயின் அந் நீர்மை பலரும் நேர்மையுறும்படி சீர்மை புரிந்தருள்கின்றது.

தன் உள்ளம் செவ்விதாய்த் திருந்திய பொழுது அம் மனிதனுக்குத் திவ்விய மேன்மைகள் தாமாகவே உளவாகின்றன. ஆகவே எல்லாரும் அவனைப் போற்றி மகிழ்கின்றார்.

உன்னை உலகம் புகழ்ந்து புனையும்.

என்றது தன்னைச் செம்மையாகத் திருத்திக் கொண்டவனுக்கு இம்மையில் விளைகின்ற நன்மைகளை விளக்கிக் காட்டியது.

வஞ்சமும் சூதும் கரவும் கள்ளமும் மலிந்த உலகத்தில் செம்மையான உள்ளமுடையானைக் காணவே எல்லா உயிர்களும் உவந்து கொண்டாடி உறவாய் விழைந்து கொள்ளுகின்றன.

உன் நெஞ்சம் கோடாமல் யாண்டும் நேர்மையாய் ஒழுகுக; பஞ்ச பூதங்களும் உன்னைப் பாராட்டி மகிழும் என்பது கருத்து. உள்ளம் தகவுற உயிர் உயர்வுறுகின்றது.

---

343. உள்ளத்தில் உண்மை உருமல் உலகத்தே
வெள்ளத் தனைய விதமாகத்—துள்ளித்தான்
செய்தாலும் சீர்தான் சிறிதேனும் சேருமோ
வெய்தாவ தன்றி வினை. (௩)

இ-ள்

உன் உள்ளத்தில் உண்மை இல்லாமல் உலகத்தில் உயர்ந்தவன் போல் பலவகை ஆரவாரங்களைப் பரப்பித் தலைமையாகப் பிலுக்கி நின்றாலும் அந் நிலையால் யாதொரு நலனும் அடையாது; தீதே பெருகிச் சிறுமையே விளையும் என்றவாறு.

தன் நெஞ்சமே மனிதனுக்கு என்றும் இனிய தஞ்சமாய் அமைந்துள்ளது; அதனை வஞ்சிக்கலாகாது. உள்ளமே சான்றாய் யாண்டும் ஒழுகி வரவேண்டும். அங்ஙனம் ஒழுகிய பொழுதுதான் விழுமிய நீர்மையாளனாய் அவன் ஒளி மிகப் பெறுகின்றான்.

தனது அகத்தே உண்மையான தகுதி இல்லாமல் வெளியே உயர்ந்தவன் போல் வழி செய்து நடித்து வந்தாலும் நல்ல மதிப்பு வராது. உள்ளத்து அளவுதான் யாவும் உளவாகின்றன.

வெள்ளத்து அனைய விதம் என்றது புகழ் அடைய விழைந்து அவன் உழந்து படும் விரிவுகள் அறிய வந்தது.

எவ்வளவு ஆடம்பரங்களைப் படைத்துக் காட்டிக் குதித்துத் திரிந்தாலும் செவ்விய உள்ளம் இல்லாதவனுக்கு அவ்வளவும் எள்ளலாய் இழிந்துபட அவன் ஏங்கி ஏமாந்தே வீழ்கின்றான்.

தன் நெஞ்சைச் சாட்சி வைத்து நேர்மையுடன் நடப்பவனுக்கே தெய்வ அருள் கை வருகின்றது; வையமும் அவனை மதித்துப் போற்றி மாண்பு செலுத்தி யருள்கின்றது.

வஞ்சம் புரிவதால் யாதொரு இசையையும் அடைய முடியாது; வசைதான் வரும். வரவுநிலை தெரியாமல் காவுபுரிவது பரிபவமேயாம். உறுதியான உண்மையைக் கருதிஉணர வேண்டும்.

வெள்ளைக்கு இல்லை கள்ளச் சிந்தை என்னும் பழமொழி உயர் பொருளுடையது. ஓர்ந்து சிந்திக்க வுரியது.

இறைவன் எல்லாம் அறிய வல்லவன்; எங்கும் என்றும் நிறைந்துள்ளவன். எத்தகைய கள்ளத்தையும் அவ் வள்ளல்

அறிந்து கொள்ளுவான் ஆதலால் அதனை உள்ளி உணர்ந்து உண்மையாய் ஒழுகுவதே எவர்க்கும் நன்மையாம்.

> கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க்
> காலத்தைக் கழித்துப் போக்கித்
> தெள்ளியேன் ஆகி நின்று
> தேடினேன் நாடிக் கண்டேன்
> உள்குவார் உள்கிற்று எல்லாம்
> உடன் இருந்து அறிதி என்று
> வெள்கினேன்; வெள்கி நானும்
> விலாவிறச் சிரித்திட்டேனே, (1)

> உடம்பு எனும் மனையகத்துள்
> உள்ளமே தகளி ஆக
> மடும்படும் உணர்நெய் அட்டி
> உயிர் எனும் திரி மயக்கி
> இடம்படு ஞானத் தீயால்
> எரிகொள இருந்து நோக்கில்
> கடம்பமர் காளை தாதை
> கழலடி காண லாமே. (தேவாரம்)

திருநாவுக்கரசர் தமது அனுபவங்களை இதில் விளக்கி யிருக்கிறார். எவருடைய எண்ணங்களையும் கடவுள் உடனிருந்து அறிகின்றார் என்னும் உணர்வுடன் யாண்டும் யாரும் நேர்மையாய் ஒழுகி வர வேண்டும் என அடிகள் இங்ஙனம் உணர்த்தியுள்ளார்.

கள்ளம் செய்வதால் நல்லது காண இயலாது; அல்லலே விளையும்; அவமானமே வளரும் ஆதலால் அதனை ஒழித்து உன் உள்ளத்தைச் செம்மை செய்து உயர் நலம் காணுக.

---

344. உள்ளம் கெடின்ஞே உனைக்கடவுள் காத்தாலும்
எள்ளல் அடைந்தே இழிந்தழிவாய்—உள்ளம்
கெடாதேல் உலகமெலாம் கேடுசெய் தாலும்
படாதுன் எதிரே பயம். (ச)

இ-ள்

உன் உள்ளம் கெட்டது ஆயின் கடவுள் வந்து உன்னைக் காத்து அருளினும் நீ இழிவடைந்து அழிந்து ஒழிவாய்;

கெடாதாயின் உலகம் எல்லாம் கூடிக் கேடு செய்தாலும் உன் எதிரே யாதொரு துயரும் அணுகாது என்பதாம்.

இது, உள்ளத்தின் உண்மை கூறுகின்றது.

உயிர்களின் உயர் நலங்களுக்கும், இழிநிலைகளுக்கும் மனமே தனி நிலையமாயுள்ளது. அதனைப் புனிதமாகப் போற்றி வருகின்ற மனிதன் அரிய பல உறுதி நலங்களை எளிதில் அடைந்து தனி மகிமையாளனாய்த் தழைத்து நிற்கின்றான். அங்ஙனம் போற்றாதவன் ஏற்றம் இழந்து தூற்றப் படுகின்றான்.

உள்ளம் கெடுதலாவது தீய எண்ணங்களால் தீது படுதல். கேடான நினைவு நினை அளவு எழினும் அம் மனம் பாழாய் விடும்; விடவே பழுதடைந்த விதைபோல் நல்ல விளைவு யாதும் பலியாமல் அது வீணே இழிவடைந்து போகின்றது.

நெஞ்சம் கேடின் அஞ்சும் கேடேம் என்னும் பழமொழியால் ஐம்பொறிகளுக்கும் அது ஆதாரமாயுள்ளமை அறியலாகும்.

மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐந்தும் உயிர் வாழ்வின் நெறிகளாய் அமைந்திருக்கின்றன. புறத்தில் உள்ள இந்த ஐந்து பொறிகளும் அகத்தில் உள்ள மனத்தின் வழியே இயங்கி வருகின்றன. அது நல்லது ஆயின் யாவும் நல்லனவாய் நலம் புரிகின்றன; தீயது ஆனால் எல்லாம் தீயனவாய்த் தீங்கு படுகின்றன.

உலகில் காணப் படுகிற நலம் தீங்குகள் யாவும் உள்ளம் ஆகிய மூல வித்திலிருந்தே துள்ளி வந்தன ஆதலால் அதன் நிலைமையும் தலைமையும் நீர்மையும் உள்ளி உணரற்பாலன.

மனம் சிறிது கோடினும் கேடு பெரிது நீடும்.

கெடுவல்யான் என்பது அறிகதன் நெஞ்சம்
நடுவொரீஇ அல்ல செயின். (குறள், 116)

இந்த அருமைத் திருக்குறளை யாண்டும் நெஞ்சில் வைத்து யாவரும் சிந்தித்து வர வேண்டும். நேர்மை குன்றித் தன் நெஞ்சம் சிறிது மாறுபடின் அது ஒரு பெரிய கேட்டுக்கு அறிகுறியாம் என வள்ளுவப் பெருந்தகை இங்ஙனம் உணர்த்தியுள்ளார். இந்த மானச உண்மையை மானிடன் ஊன்றி உணர்ந்துகொண்டு யாதும் ஊனம் உறாவகை ஒழுகிவரின் அவன் ஞான சீலனாய்ப் பெருகி வருகிறான். புன்மை ஒழியவே நன்மைகள் விளைகின்றன.

மனம் வழுவுறின் மனிதன் இழிவும் துயரும் மருவி அழி வுறுகின்றான். உள்ளக்கேடு வெள்ளக்கேடாய் விரிந்து எழுகின்றது.

உடம்புக்குக் கண்கள்போல் உயிர்க்கு உள்ளம் கண். இந்த அருமை விழி பழுதுபடின் ஆன்ம வாழ்வு இருள் அடர்ந்து மருள் படர்ந்து அழி துயரங்கள் அடைகின்றன.

சூரியன் ஒளி எங்கும் பிரகாசமாய் இருந்தாலும் ஒளி இழந்த விழிக்கு யாதும் பயன் படாது. பரஞ்சோதியாகிய இறைவன் அருள் யாண்டும் நிறைந்திருந்தாலும் பழுது பட்ட உளத்துக்கு ஓர் உதவியும் பயவாது.

கடவுள் காத்தாலும் இழிந்து அழிவாய்.

என்றது உள்ளம் கெடின் உளவாகும் இழிவையும் அழிவை யும் தெளிவாக வலியுறுத்த வந்தது. உறுதியைக் கருதி உணருக.

மனம் இருந்தபடி குரு இருந்தருளும் என்பது பழமொழி. மனத்தின் புனித நிலைக்குத் தக்கபடியே தெய்வங்கள் சகாயம் செய்கின்றன. அது கெடின் யாவும் கைவிட்டு விடுகின்றன.

குருட்டுக் கண்ணுக்குக் கதிரவனும் உதவி செய்ய முடியாது; தீய நெஞ்சுக்குக் கடவுளும் கைதர இசையாது.

தன் நெஞ்சம் புனிதமாக அமையின் அம் மனிதன் அதிசய ஆற்றலுடையனாய்த் தனி மகிமை அடைகின்றான்.

பள்ளத்தில் வெள்ளம் வந்து பெருகுதல் போல் நல்ல உள் ளத்தில் எல்லா நலங்களும் இனிது நிறைகின்றன.

உலகம் எலாம் கேடு செய்தாலும் உள்ள திரே பயம்படாது.

என்றது செவ்விய நல்ல உள்ளத்தின் திவ்விய நிலைமை தெரிய வந்தது. மனம் நீதியும் நேர்மையும் தோய்ந்திருப்பின், அது ஆதி பகவனது நிலையம் ஆகின்றது; ஆகவே யாதொரு தீதும் அதனை அணுகாமல் ஒழிகின்றது.

தன் நெஞ்சம் நல்லதாயின் அம் மனிதன் யாண்டும் அஞ்ச வேண்டியதில்லை. உலகம் எல்லாம் ஒருங்கு திரண்டு இடர் செய்ய நேர்ந்தாலும் அவனுக்கு யாதொரு துயரும் நேராது.

நயமுடைய நெஞ்சம் பயம் அடையாது. எங்கும் அஞ்சாமல் நின்று அருந்திறல் புரிந்து பெருந்தகைமை காணும். இக் காட்சி யைக்கண்டு மனிதன் மாட்சி அடைய வேண்டும். பயம்=அச்சம்.

உன் உள்ளம் பழுதானல் கடவுள் காத்தாலும் நீ விளங்க மாட்டாய்! அது நல்லது ஆயின் யாரும் உன்னை வெல்லமுடியாது; எல்லா நன்மைகளையும் ஒருங்கே பெற்றுப் பெருமகிமை அடைந்து பேரின்பம் பெறுவாய். இவ் வுண்மையை உறுதியாக உணர்ந்து செம்மை நெஞ்சனுய்ச் சிறந்து வாழுக.

---

345. வஞ்சம் படிந்து மனம் கோட்டம் ஆயினுன்
வஞ்சன் கொடியனென வாழ்கின்ருன்—நெஞ்சத்தின்
நேர்மை அளவேயிந் நீளுலகில் மானிடன்தன்
பார்வை அளவு படும். (ரு)

இ-ள்

தன்நெஞ்சில் வஞ்சமும் கொடுமையும் மருவின் அம் மனிதன் வஞ்சன் கொடியன் என நிலவுகின்ருன்; நெஞ்சத்தின் நேர்மை அளவே இவ்வுலகில் மானிடன் சீர்மை அடைந்து திகழ்கின்ருன்.

மனிதனுடைய எல்லா உயர் நலங்களுக்கும் அவனது உள்ளமே மூலகாரணமாயுள்ளது; அந்த உள்ளத்தின் தகுதி அளவே உலகத்தில் அவன் உலாவி நிற்கின்ருன். உள்ளம் பழுதுபடின் மனிதன் இழிந்து பாழ் படுகின்ருன்.

விளைவுக்கு உரிய நல்ல வித்தில் புழு விழின் அது யாதும் பயன் இன்றி அழிவுறும்; உயர்வுக்கு உரிய புனித நெஞ்சில் புன்மை விழின் அது எல்லா நன்மைகளையும் இழந்து இழிவுறும்.

மனத்தின் அளவே மனிதன் மதிக்கப் படுகின்ருன்.

நல்லவன் பெரியவன் என்று தன்னை எல்லாரும் சொல்ல வேண்டும் என்றே எந்த மனிதனும் சிந்தையுள் ஆவலாய் மூந்தி நிற்கின்ருன். அங்ஙனம் உலகம் உவந்து சொல்ல வேண்டுமாயின் நல்ல நீர்மையும் பெருந் தகைமையும் தன்பால் அமைந்திருக்க வேண்டுமே என்பதை எவனும் உணர்ந்து கொள்வதில்லை. விதையாமலே விளைவு காண விழையும் இழுதை போலத் தகுதியில்லாமலே மிகுதி பூண விழைவது நகைப்புக்கு இடமாகின்றது.

வஞ்சன், கோடியன் என ஒருவனை நேரே குறித்துச் சொன்னல் அவன் நெஞ்சம் பொருன்; சொன்னவனை வெறுத்து மறுக்கின்ருன்; ஆகவே அவை ஈன நிலையின என்று அவன்

உள்ளம் உணர்ந்துள்ளமை வெளிப் படுகின்றது; உணர்ந்தும் பழக்க வாசனையால் அத் தீமைகளை ஒழித்து விட முடியாமல் களித்து நிற்கின்றான்.

வஞ்சமும் கொடுமையும் நெஞ்சத்தை இழிவுறுத்துகின்றன; அதனால் மனிதன் இழிந்து பாழ் படுகின்றான்; அங்ஙனம் பாழாகாமல் நல்ல குண நீர்மைகளைப் பேணி வாழவேண்டும்.

நேர்மை அளவே மானிடன் பார்வை.

என்றது மனச் செம்மையின் மாட்சியின் படியே காட்சி என்பது காண வந்தது. பண்டங்களைத் துலாக் கோலில் வைத்து நிறுத்து நிறை காண்கின்றோம்; மனிதரை உளக் கோலால் ஓர்ந்து உளவு தெளிகின்றோம்.

செல்வம் புறத்திலும், கல்வி அகத்திலும் நின்று மனிதனை மாட்சிமைப் படுத்தி வரினும், எல்லாவற்றிற்கும் உள்ளப்பண்பே உயிர் நிலையமாய் வேரூன்றி உள்ளூறச் சீர் புரிந்துள்ளது.

நேர்மையான மன முடையவன் சீர்மையான மனிதனாய்ச் சிறந்து திகழ்கின்றான். ஒரு மனிதனை உண்மையாக அளந்து காண அவனுடைய சொல்லும் செயலும் கருவிகளாய் நிற்பினும் தெளிவான அளவு கருவி மனமேயாம்.

The mind is the standard of the man. (Watts)

"மனிதனது நிலை மனத்தில் உள்ளது" என வாட்ஸ என்பவர் இவ்வாறு கூறியிருக்கிறார்.

"I do not distinguish by the eye, but by the mind, which is the proper judge of the man." (Seneca)

"மனத்தால் அன்றிக் கண்ணால் நான் சிறப்படையவில்லை; மனமே மனிதனது சரியான நீதிபதி" என்னும் இது ஈண்டு எண்ணத்தக்கது. கண்ணினும் மன நிலையைக் கருதித் தெளிக.

திருந்திய மனத்திலிருந்துதான் சிறந்த பெருந்தகைமைகள் யாவும் விளைந்து வருகின்றன. அவ் விளை நிலத்தைப் பழுது படுத்தாமல் பாதுகாத்துப் பண்படுத்தின் இருமை இன்பங்களும் எளிதின் அடையலாம். வஞ்சமும் கொடுமையும் படியாமல் நெஞ்சம் பேணுக என நினைவுறுத்தியது, நிறை பேரின்பம் உறுதல் கருதி.

346. உள்ளம் இழிந்து படிந்தே உணர்வொளி
பள்ளம் படிந்து பயனழியும்—உள்ளந்தான்
ஆன்ம நிலையம் அதுகீழ்மை ஆயினே
மேன்மை அழியும் விரைந்து. (சு)

இ-ள்

மனிதனுடைய உள்ளம் இழிந்து படின் உணர்வு ஒளி குன்றி உயர்பயன் ஒழியும்; உள்ளம் ஆனது உயிரின் நிலையம் ஆதலால் அது ஈனம் உறின் எல்லா மேன்மைகளும் விரைந்து அழிந்து போம்; அங்ஙனம் போகாதபடி புனிதமாய்ப் பொருந்தி வாழுக என்றவாறு.

இது, ஆன்ம நிலையின் அமைதி கூறுகின்றது.

உள்ளமும் உணர்வும் உயிரினது கண்ணும் ஒளியுமாய்க் கலந்திருக்கின்றன; அந்த விழுமிய விழியை எவ்வழியும் யாண்டும் செவ்வையாகப் பேணிவரும் அளவே பெருமையும் இன்பமும் பெருகி அருமையும் அமைதியும் மருவி வருகின்றன. இருமை நலனும் ஒருமையாய் உதவ வுரிய இதயத்தை அருமையாகப் பேணி வராவழி எவனும் என்றும் சிறுமையே காண நேர்வன்.

நல்ல நெய் தோய்ந்த திரியில் விளக்கு விளங்குதல் போல் நல்ல எண்ணம் தோய்ந்த உளத்தில் உணர்வு ஒளி மிகுந்து விளங்கும். உணர்ச்சி ஓங்கி வளர்தற்கு இனிய ஆதாரமாகிய உள்ளம் கள்ளம் கபடுகள் படிந்து ஈனமாய் இளிவுறுமாயின் அங்கே நல்ல ஞான ஒளி தோன்றாது.

உள்ளம் இழியின் உணர்வு ஒளி அழியும்.

என்றது நிலமும் விளைவும் போல் காரண காரியங்களின் நிலைகளைப் பூரணமாய்த் தெளிந்து கொள்ள வந்தது.

பழுதுபட்ட விழி பார்வை மழுங்கிப் பாழாம்; அவ்வாறே ஊனமுற்ற உளம் உணர்வு குன்றி ஈனம் அடையும். உள்ளத்தில் நீதியும் ஒழுங்கும் நேர்மையும் இல்லை ஆயின் அங்கே அறிவு யாதொரு நன்மையும் செய்து கொள்ளாது.

"Without morlity, intellect were impossible for him."

"நீதியில்லாத மனிதனுக்கு அறிவால் யாதும் பயன் இல்லை" என்னும் இது ஈண்டு எண்ணத் தக்கது.

சன்மார்க்க நிலையில் நின்று தன் நெஞ்சைச் செம்மையாக ஒருவன் பேணி வருவானாயின் அம் மனிதனிடம் அதிசய அறிவும் அற்புத ஆற்றல்களும் உளவாகின்றன.

சித்த சுத்தியால் ஆன்ம சத்தி அதிகப்படுகின்றது; ஆகவே இதய பரிபாகமுடையவன் உலகம் வியந்து போற்றும் நிலையினை அடைகின்றான். தான் அசையாமல் இருந்துகொண்டே எல்லாவற்றையும் அவன் அசைத்து வருகின்றான். உத்தம சீலம் அற்புத ஆற்றல்களுக்கு மூல காரணமாய்ச் சாலவும் அமைந்து தனி மகிமை பெற்றுள்ளது.

> தன்விரலை ஆட்டாமல் சத்தியவான் எத்திசையும்
> முன்வரவே ஆட்டும் முதல்.

என்றபடி விறல் வென்றிகள் விளைந்து வருகின்றன.

மனம் புனிதம் அடைந்த பொழுது மனிதன் தனியான ஒரு தெய்வீக நிலையில் திகழ்கின்றான். புறத்தே தோன்றுகின்ற உயர்ச்சிகள் எல்லாம் அகத்தே ஆழ்ந்த மூல வேரில் ஊன்றி நிற்கின்றன.

உள்ளம் ஆன்ம நிலையம் என்றது அதன் பான்மை கருதி. உள்ளத்தின் அளவே உயிர் ஒளி வீசி உயர்கின்றது.

உள்ளம் கீழ்மை ஆயின் மனிதன் கீழ்மகனாய் இழிகின்றான்; மேலான எண்ணங்களை எண்ணி அது மேன்மை மேவின் அதனை யுடையவன் மேன் மகன் ஆகின்றான்.

உயர்வும் தாழ்வும் உள்ளத்தால் உளவாகின்றன.

இந்த உள்ளத்தைச் செம்மையுடன் பேணிச் சீர்பல பெறுக

---

347. நெஞ்சேநற் சான்றாக நேர்ந்து நடப்போரே
அஞ்சாமை மேன்மை அடைகுவார் — நெஞ்சதனைக்
கொன்று திரிவோர் கொலைஞர்போல் எஞ்ஞான்றும்
நின்று வெருள்வர் நெடிது. (எ)

இ-ள்

மனமே சாட்சியாக நேர்மையுடன் நடப்பவர் யாண்டும் ஆண்மையாளராய் மேன்மைகள் பல அடைவர்; நெஞ்சத்தைக் கொன்று திரிபவர் கொலையாளிகள் போல் புலையாய் இழிந்து என்றும் நிலை தாழ்ந்து கெடுவர் என்றவாறு.

இது, நெஞ்சின் நியதி கூறுகின்றது.

மனித சமுதாயம் நெறி முறையே ஒழுங்காய் இனிது நடந்து வரும் பொருட்டே வேத விதிகளும் அரச நீதிகளும் அதிகார நிலைகளில் வெளி வந்திருக்கின்றன.

இந்த விதி முறைகளின்படி ஒழுகி வருபவர் பழிதுயரங்கள் இலராய்ச் சுகமே வாழ்ந்து வருகின்றனர். மீறி நடப்பவர் இம்மையிலும் மறுமையிலும் தண்டிக்கப் படுகின்றனர்.

தீய காரியங்களைச் செய்தால் நரக துன்பம் நேரும்; அரச தண்டனை உண்டாம்; என இங்ஙனம் அஞ்சியே பெரும்பாலும் மக்கள் அடங்கி ஒடுங்கி நடக்கின்றனர். அச்சம் அவனியை அவ நிலையில் ஆண்டு வருகின்றது.

அச்சமே கீழ்களது ஆசாரம்; எச்சம்
அவாஉண்டேல் உண்டாம் சிறிது. (குறள், 1075)

என்னும் இது ஈண்டு அறிய வுரியது.

கீழ்மக்கள் நல்ல ஒழுக்க வழிகளில் இயல்பாக இசைந்து நடவார்; மேலோர் அடிப்பர்; இராச தண்டனை பிடிக்கும் என்னும் அச்சத்தாலேயே அடங்கி நடப்பர். ஏதேனும் பொருள் வருவாய் கிடைக்கும் எனினும் ஒப்புக்கு ஆசாரம் காட்டி ஒழுகி வருவர் எனக் கயவர்களைக் குறித்துத் தேவர் இவ்வாறு உரைத்திருக்கிறார். இந்த இயல்பின்படி இப்பொழுது சீர் தூக்கி நோக்கினால் எவ்வளவு கயவர்களை இவ் வுலகம் சுமந்து கொண்டிருக்கின்றது என்பதை ஓரளவு உணர்ந்து கொள்ளலாம்.

இவ்வாறு அஞ்சியும் ஆசைகொண்டும் ஆசாரம் கொள்ளாமல் தம் நெஞ்சமே சான்றாய் நேர்மையோடு ஒழுகி வருபவர் சிறந்த சான்றோராய் உயர்ந்து விளங்குகின்றனர்.

உத்தமனுக்குத் தன் சித்தமே சட்டமாய்ச் செறிந்திருக்கின்றது. உலக சட்டங்கள் அவன் எதிரே தலைவணங்கி நிற்கின்றன. அரசும் தெய்வமும் பரசிவரும் நெறி முறைகள் அவனிடம் வரிசை புரிந்தருள்கின்றன.

அரிய பேறுகளுக்கும் பெரிய மகிமைகளுக்கும் உரிய துணையாய் அமைந்துள்ள நெஞ்சத்தைப் புனிதமாகப் போற்றிவரும்

அளவே மனிதன் மாட்சி பெற்று வருகின்றான்; அதனைப் பழுது படுத்தி ஒழுகின் அவன் இழிமகனாய் அழிவு படுகின்றான்.

நெஞ்சதனைக் கொன்று நடப்போர்.

என்றது மனத்தை மழுக்கி மதிகேடராய் மதம் மீறித் தீமை புரிந்து திரிவோரை. அத் தீவினையாளரைக் கொலைஞர் என்றது தமது இனிய உயிர்த் துணையைக் கொன்ற கொடுமையும் மடமையும் அறிய வந்தது.

உள்ளம் உயிர்க்குக் கண்ணாய் ஒளி புரிந்துள்ளது. நல்லது இது; தீயது இது; பழி இது; பாவம் இது; புகழ் இது; புண்ணியம் இது என யாண்டும் எவர்க்கும் என்றும் நெஞ்சம் அறிவுறுத்தி நிற்கின்றது. நின்றும் மனிதன் ஆசையை அடக்க முடியாமல் நீசங்களைப் புரிந்து விடுகின்றான்.

தவறான காரியங்களைப் புரிவது மனிதனுக்கு இயல்பு அன்று; மயலினால் தனது இயல்பினை மீறி அயலான அவங்களைச் செய்ய நேர்கின்றான். பிழை செய்ய எண்ணும் பொழுதே "அது பழி, பாவம்: அவ்வழியில் இயங்காதே" என உள்ளம் துடித்து உணர்த்தும். கள்ளம் புரியத் துணிகின்றவனும் இந்த நெஞ்சின் அனுபவத்தை நேரில் கண்டிருப்பன். அங்ஙனம் கண்டதனாலே தான் தன் தீமையை யாரும் காணாதபடி மறைந்து செய்ய ஒதுங்கிப் பதுங்கி ஒளிந்து போகின்றான். நெஞ்சம் உணர்த்தியும் கேளாமையால் அவன் வாழ்வு பாழாகின்றது.

தன் நெஞ்சத்தை நிலை குலைத்துப் புலைவழிகளில் புகுபவனிடம் அஞ்சாமை ஆண்மைகள் அமைந்து நில்லா; அச்சமும் திகில்களுமே யாண்டும் அடர்ந்து நின்று தொடர்ந்து வருத்தும். உள்ளம் கள்ளம் உறவே உயிர் எள்ளலுறுகின்றது.

கொலைஞர் போல் நின்று வெருள்வர்.

என்றது நெறி கேடராய் நெஞ்சு நிலை திரிந்தவர் உறுநிலம் குன்றி என்றும் பஞ்சைகளாய்ப் பரிதபித்து நிற்றல் கருதி.

வெருளல் = அஞ்சி அல மருதல்.

ஈன நினைவால் இழிவடைந்த நெஞ்சம்பின்
ஊனம் மிகுந்தே உழலுமால்—ஞானஒளி
மேவாது மேன்மை விளையாது வெய்யதுயர்
ஓவாது மூளும் உருத்து.

என்னும் இதன் கருத்தைக் கண்ணூன்றிக் காண வேண்டும். உள்ளம் பழுதுபடின் உளவாகும் இழிவுகளையும் அழிவுகளையும் இதனால் அறிந்து கொள்கின்றோம்.

நெஞ்சோடு இணைந்து நெறி நின்று ஒழுகுபவன் நிலையான இன்பத்தைப் பெறுகின்றான்; அல்லாதவன் பொல்லாத துன்பங்களை அடைந்து புலையாடி ஒழிகின்றான்.

மனிதனது உள்ளம் நெறி முறை தழுவியது; அது வழுவாய் விலகின் இழிவடர்ந்து இடர் விளைந்து விடுகின்றது.

நெறியைப் படைத்தான், நெருஞ்சில் படைத்தான்;
நெறியில் வழுவின், நெருஞ்சிலமுட் பாயும்;
நெறியில வழுவாது இயங்கவல் லார்க்கு
நெறியில் நெருஞ்சின்முட் பாய கிலாவே. (திருமந்திரம்)

நெஞ்சம் திறம்பி நெறி வழுவின் நெடுந் துயர் விளையும் என இது உணர்த்தியுள்ளது. உவமக்குறிப்பு ஓர்ந்து சிந்திக்கத்தக்கது.

மனத்தை மாசு படுத்தாதே; அதனை நேர்மையோடுபேணிச் சீர்மையுடன் ஒழுகுக.

---

348. கூடிச் சகுனி குதித்தான்வெஞ் சூதின்கண்
ஓடிச் சமரில் ஒளித்தானே—கோடிநின்று
வஞ்சிக்கும் பேடியர்க்கு மாண்பமைந்த நல்வீரம்
நெஞ்சத்தில் உண்டோ நினை. (அ)

இ-ள்

சூது ஆட்டத்தில் களித்துக் குதித்த சகுனி போர்முகத்தில் ஒளித்து ஓடினான் ஆதலால் வஞ்ச நெஞ்சமுடைய பேடியர்க்கு அஞ்சாத வீரத் திறல் உண்டாகாது என்றவாறு.

இது, வஞ்ச நெஞ்சின் வசை உரைக்கின்றது.

மனிதனது நிலைமைகளுக்கெல்லாம் நெஞ்சமே தலைமையான நிலையமாய் நிலவியுள்ளமையான் அவ்வுண்மை அளவே நன்மைகள் விளைகின்றன. அத் தன்மை குன்றினால் மனிதன் புன்மையுடையனாய்ப் பொலிவிழந்து போகின்றான்.

அஞ்சாமை ஆண்மை வீரம் என்பன தலை சிறந்த உயர் குணங்கள். இந்த இயல்புகளை யுடையவன் உயர்ந்த மனிதனாய்ச் சிறந்து எவரும் வியந்து புகழ விளங்குகின்றான்.

மேன்மையான பண்புகள் நேர்மையான நெஞ்சிலிருந்தே விளைந்து வருகின்றன. கள்ளம் கரவு படின் அவ்வுள்ளம் இழிந்து படுகின்றது; படவே, அதில் உயர்ந்த பான்மைகளும் சிறந்த மேன்மைகளும் விளைந்து வராமல் ஒழிந்து போகின்றன.

வஞ்சிக்கும் பேடியர்க்கு வீரம் உண்டோ?

என்றது நேர்மையற்ற நெஞ்சினரது நீர்மை தெரிய வந்தது. கரவு படிந்த மனத்தவர் உரமுடையராய் நிற்கமுடியாது ஆதலால் பேடியர் என நேர்ந்தார். ஆண்மை இழந்து இழிந்த கீழ்மையாளரைக் கோழைகள் பேடிகள் என உலகம் மொழிந்து வருகிறது.

உள்ளம் புன்மை அடையவே உயர்ந்த மனிதத் தன்மை அழிந்து படுகின்றது. தலை நிமிர்ந்து நிற்கும் தனி மேன்மை குன்றி இளிவும் ஈனமும் அங்கே வெளி வருகின்றன.

வஞ்ச நெஞ்சினர் மறைந்து நின்று புறங் கூறிக் கோள் மூட்டிக் குடிகேடு செய்வரேயன்றி நேரே வந்து மேன்மையான முறையில் ஆண்மையுடன் யாதும் செய்யமாட்டார்.

சகுனி சூதில் குதித்தான்; சமரில் ஒளித்தான்.

என்றது சூதாட்டத்தில் அவன் களித்து நின்றதும், போராட்டத்தில ஒளித்து ஓடியதும் உணர்ந்து கொள்ள வந்தது.

சகுனி என்பவன் காந்தார தேசத்து அரசன் புதல்வன். காந்தாரியோடு உடன் பிறந்தவன். துரியோதனனுக்கு மாமன். இவன் கொடிய வஞ்சகன். கடிய நெஞ்சினன். சூது ஆடுவதில் மிகவும் வல்லவன். பாண்டவரை வஞ்சித்து வரவழைத்துச் சூது புரிந்து அரசைக் கவர்ந்து கொண்டு அடவிக்கு ஓட்டினவன். கடுஞ் சூதனான இவனுடைய சொல்லைக் கேட்டே துரியோதனன் கெட்டான். கரவும் வஞ்சமும் கபடமும் உடைய இவன் பாரதப் போரில் யாருடனும் எதிர்த்து அமர் செய்யாமல் ஒதுங்கியே இருந்தான். ஒரு நாள் தருமரோடு போர்புரிய மூண்டான். அந்தப் புண்ணிய சீலர் யாதொரு தீதும் செய்ய மாட்டார் என்று எண்ணியே இவன் திண்ணமாக நேரே வந்தான். இவனைக் கண்டதும் அக் கோமகன் கொதித்து வில்லை வளைத்து வீர வுரையாடினன். "அடே கொடிய வஞ்சகா! முன்னம் சூதில் என்னை வென்று கொண்டதை நினைந்தோ இன்று எளிதாக இங்கு வந்தாய்! இது

உன் வஞ்சப் போர் அன்று; அஞ்சாமை நிறைந்த ஆண்மைப் போர். இதில் தப்பாமல் உன் தலையைத் தரையில் உருட்டி விடுவேன்; வல்லவனானால் காத்து நில்" என்று சொல்லிக்கொண்டே வில்லிலிருந்து அம்புகளை வீசினான். அவனது வீரத் திறலைக் கண்டு இவன் வியர்த்து வெருவி விரைந்து ஓடிப் போயினான்.

சோரத்துடன் நீ பொருதடர்த்த சூதன்று;
இவை மெய் துளைத்துருவும்
வீரப்பகழி; உனை இவற்றால் வெல்வேன்
எனப்போர் வில்வாங்கி
ஈரக் கருணை முகத்தண்ணல் எய்தான்;
அவற்றுக்கு எட்டாமல்
பேரப் பேரத் தேர்கடவிப் பின்னிட்
டவர்க்கு முன்னிட்டான்.

(பாரதம், 12ம் போர், 72)

போர் முகத்தில் சகுனி பேடித் தனமாய் ஓடிப் போயிருத்தலைக் கண்டு இங்கே இகழ்ந்து சிரிக்கின்றோம். வஞ்ச நெஞ்சினர்க்கு ஆண்மை வீரங்கள் அமையா என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

நெஞ்சைப் பழுது படுத்தாமல் நேர்மையுடன் வாழ்பவரிடமே மேன்மையான பான்மைகள் மேவி மிளிரும்; இந்த ஆன்ம நியதியை அறிந்து அகம் தூய்மையாய் அமைந்து ஒழுகுக.

---

349. நேர்மையருள் இல்லாத நெஞ்சுபாழ்; நீதியொடு
சீர்மை இலாத செழுங்கலைபாழ்;—கூர்மைமேல்
கொள்ளாத வேல்பாழ்; கொடுக்காத செல்வம்பாழ்;
நள்ளாத நண்புபாழ் நாடு. (௯)

இ-ள்

நேர்மையும் அருளும் இல்லாத நெஞ்சம், நீதியும் சீர்மையும் இல்லாத கலை அறிவும், கூர்மை இல்லாத வேலும், ஈகைஇல்லாத செல்வமும், விருப்பம் இல்லாத நட்பும் பாழாம் என்றவாறு.

ஒரு மனிதனது உயிர் நிலைக்கு அவன் உள்ளம் மூல ஆதாரமாயுள்ளது; அது செம்மையுடையதாயின் எல்லா நன்மைகளும்

எளிதில் உளவாகின்றன; செவ்வி சிதையுமேல் யாவும் அவலமாய் அவன் அவமடைய நேர்கின்றான். அந்த உண்மையான மூலத் தானத்தின் கோலத்தை இது குறித்துக் காட்டுகின்றது.

நெஞ்சு, கலை, வேல், செல்வம், நட்பு என்னும் இந்த ஐந்தும் இங்கே ஆராய்ச்சிக்கு வந்துள்ளன.

நேர்மை என்னும் அதிகாரத்தில் பிறவும் கூற நேர்ந்தது அதனை ஓரளவு தெளிவாக விளக்குதல் கருதி.

நேர்மை நெஞ்சைச் செப்பம் செய்கின்றது; கருணை கனிவு ஆக்கின்றது. நிலத்திற்கு நீரும் எருவும் போல் நெஞ்சுக்கு நேர்மையும் அருளும் நீர்மை புரிகின்றன.

இத் தன்மைகள் இல்லாத நெஞ்சம் வளம் அற்ற வறு நிலம் போல் புன்மையுற்றிருக்கும் ஆதலால் அது பாழ் என வந்தது.

அவ்வாறு பாழ் படாதபடி செம்மையும் கருணையும் மேவிச் சீர் செய்துவரின் ஆருயிர் ஆனந்த நிலையமாய்ப் பொலிந்து விளங்கும். புனித ஊற்றிலிருந்து இனிய நீர் பெருகுதல் போல நல்ல உள்ளத்திலிருந்து எல்லா நன்மைகளும் உளவாகின்றன.

நீதி ஒழுக்கங்கள் இல்லையாயின் கல்வியறிவு புல்லிதாம் என்றது அவற்றைப் போற்றி ஒழுக வேண்டும் என்று சொல்லியபடியாம். கலையின் உயிர்நிலையைத் தலைமையாக் கருதிக்கொள்க.

கூரிய வேல் வீரியமாய் வெற்றி பெற்று வருதல் போல் நேரிய நெஞ்சம் யாண்டும் நிலைத்த மேன்மையில் தழைத்துவரும்.

நேர்மை இல்லாத உள்ளம் கூர்மையில்லாத வேல் போல் சீர்மை குன்றிச் செயல் சிதைந்து மயல் உழந்து படும் என்க.

கொடுக்காத செல்வம் பாழ் என்றது பொருளின் பொருள் உணர வந்தது. தன் பொருளைத் தனது ஐம்புல இன்ப நலங்களுக்கு மாத்திரம் பயன் படுத்துகின்றவன் அயலே வேறு உயர்ந்த பயனைக் காணாதவனாகின்றான். பிறர்க்கு இதமாய்க் கொடுத்தருள்கின்றவன் புகழ் புண்ணியங்களை அடைந்து இருமையும் பெருமை பெறுகின்றான்.

இங்ஙனம் சிறந்த பேற்றை அடையாத பொருள் கடையாய் இழிந்து படுதலால் அது பாழ் என நேர்ந்து பழிபடலாயது.

உண்மையான உள்ளன்புடன் கலவாத உறவு புன்மையாம்; ஆதலின் திண்மையான நட்பின் தன்மை தெரிய வந்தது.

சீர்மையுடைய கலை, கூர்மையுடைய வேல், நீர்மையுடைய செல்வம், நேசமுடைய நட்பு, நேர்மையுடைய நெஞ்சு மனிதனுக்கு இனிய சம்பத்துக்களாம். இந்த அரிய நிதிகளையுடையவர் பெரிய அதிபதிகளாய்ப் பெருமை பெறுகின்றனர்.

அறிவு வீரம் திரு முதலிய உயர் நலங்களுக்கெல்லாம் உள்ளச் செம்மை உறுதி பயந்துள்ளது; அவ் வுண்மை நிலையை உணர்ந்து எவ்வகையினும் செவ்வியனாய்ச் சிறந்து வாழுக.

---

350. கள்ளம் கரவு கனிய நரிஎனவே
எள்ளல் மருவி இழிகின்றான்—கள்ளமிலா
நேர்மை யுடையான் நிமிர்சிங்க ஏறென்னும்
சீர்மையடை கின்றான் சிறந்து. (ம)

இ-ள்

உள்ளத்தில் கள்ளமும் கரவும் கனியின் அந்த மனிதன் நரி என்று உலகம் எள்ளி இகழ இழிவுறுகின்றான்; கரவின்றி நேர்மையுடையவன் சிங்க ஏறு என வியந்து புகழச் சிறந்து விளங்குகின்றான் என்றவாறு.

இது, உள்ளம் இழியின் உயர்வு அழியும் என்கின்றது.

உண்ணும் உணவுகள் உடல்களை ஓம்பி வருதல்போல் எண்ணும் எண்ணங்கள் உயிர்களை வளர்த்து வருகின்றன.

நல்ல நினைவுகள் இனிய பால் போல் வனப்பும் வன்மையும் அருள்கின்றன; புல்லிய எண்ணங்கள் தீய கள் போல் இளிவும் தளர்வும் தருகின்றன. நன்மைகள் தோய்ந்தன நலம் பல பெற்று உயர்ந்து ஒளி மிகுந்து திகழ்கின்றன. புன்மைகள் படிந்தன பொலிவிழந்து மெலிந்து இழிவடைந்து படுகின்றன.

கள்ளம் = பிறருடைமையைக் கவர்ந்து கொள்ளக்கருதுவது.

கரவு = மருமமாய் மறைந்து வஞ்சம் புரிவது.

இந்த இளிவுகள் நெஞ்சம் புகின் அது ஒளி யிழந்து ஊனம் அடையும்; அடையவே அதனையுடைய மானிடன் ஈனமாய் இழிந்து கெடுகின்றான். எண்ணம் பழுதுபடின் மனிதன் முழுதும் இழிவு படுகின்றான். உள்ளம் பேணி உயர்வு காணுக.

இளிவான நினைவுகளை ஒழித்து உயர்ந்த சிந்தனைகளை வளர்த்து வருபவனே என்றும் சிறந்தவனாய்த் திகழ்ந்து தேசு மிகுந்து நிற்கின்றான்.

"A bad conscience will make us cowards; but a good conscience will make us brave." (Goldsmith)

"கெட்ட எண்ணங்கள் மனிதரைக் கோழைகள் ஆக்குகின்றன; நல்ல நினைவுகள் வீரர்களாச் செய்கின்றன" என்னும் இது ஈண்டு எண்ணத் தக்கது. இதய நிலையில் மனிதன் உதயமாகிறான்.

ஈன எண்ணம் குடி புகுந்த போதே மனிதன் ஈனனாகின்றான்; அது நீங்கின் மேன்மையாயின் மேலோனாய் மிளிர்கின்றான் என்றமையால் வெளித் தோற்றங்களுக்கெல்லாம் உள்ளமே மூல நிலையமாயுள்ளமையை உய்த்துணர்ந்து கொள்ளலாம்.

கரவுடையானை நரி என்றது சிறுமையும் செயலும் கருதி.

நேர்மையுடையான் நிமிர் சிங்க ஏறு.

என்றது நெஞ்சின் சீர்மை தெரிய. சிங்க ஏறு என்னும் உருவகம் பெருமிதமும் கம்பீரமும் போராண்மையும் கருதி யுணர வந்தது.

செவ்விய நெஞ்சம் திவ்விய மகிமைகளை யுடைமையால் அதனை எவ் வழியும் பேணி வருபவன் பெரு நலங்களை அடைகின்றான். அஞ்சாமை ஆண்மை முதலிய மேன்மைகள் எல்லாம் நேர்மையான நெஞ்சின் பான்மைகளாயுள்ளன.

ஆன்மாவின் அற்புத சத்திகள் சித்த சுத்தியிலேயே செழித்து விளங்குகின்றன. அந்த உத்தம நிலையத்தை யாண்டும் புனிதமா வைத்து என்றும் நீர்மையுடன் ஒழுகிச் சீர்மை புரிந்து வருக.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

மனச் செம்மை இருமை இன்பங்களும் தரும்.
அதனால் புகழும் புண்ணியங்களும் வரும்.
நேர்மை இன்றேல் சீர்மை இன்றும்.
அதனையுடையவன் எல்லாம் அடைவான்.
அவனை உலகம் உவந்து பேணும்.
உள்ளம் இழியின் உணர்வு ஒழியும்.
வஞ்ச நெஞ்சன் அஞ்சி அயர்வன்.
பேடியாய் இழிந்து பிழைமிகப் படுவான்.
ஒளியிழந்து ஊனம் உறுவான்.
செம்மையாளன் சிறந்து திகழ்வான்.

௬௫-வது நேர்மை முற்றிற்று.

# முப்பத்தாறும் அதிகாரம்.

## தூய்மை.

அஃதாவது புனித நிலைமை. சித்த சுத்தி முத்திக்கு மூலம் என்று குறித்திருத்தலால் பரிசுத்தத் தன்மையின் பான்மையும் பயனும் மேன்மையும் அறியலாகும். இருதயம் முதலியன யாவும் தூய நீர்மையாயிருக்க வேண்டும் என உணர்த்துகின்றமையால் நேர்மையின் பின நெறி முறை ஓர்ந்து இது வைக்கப்பட்டது.

351. எடுத்த பிறவி இனிதா உயர்ந்து
தொடுத்த துறக்கமும் தோன்றும்—மடுத்த
மனம்புனித மாயின் மனிதன் இறைவன்
இனம்புகுந்து நிற்பன் எளிது. (க)

இ-ள்

மனிதனுடைய மனம் புனிதம் ஆனால் அவன் பிறந்த பிறவி உயர்ந்து பேரின்ப நிலையைப் பெற்றுத் தெய்வத்தின் இனமாய்ச் சிறந்து திகழ்வன் என்றவாறு.

உயிர் இனங்களுள் மனிதன் உயர் நிலையில் ஒளி பெற்று நிற்கின்றான். அந்த நிலை எண்ணங்களால் இயைந்தது ஆதலால் அவன் உயர்ந்துள்ளமைக்கு உள்ளமே மூல காரணம் என்பது உணர்ந்து கொள்ளலாம். அகமே புறம் எனும் தகவுரை உயர் பொருளுடையது. வாழ்வின் நிலையெல்லாம் உள்ளச் சூழ்வில் உறைந்திருக்கின்றன. உண்மை தெளிதல் நன்மையாம்.

சுகத்தை விரும்புவதும், துக்கத்தை வெறுப்பதும் மனித இயல்புகளாய் மருவியுள்ளன. தான் கருதிய இன்பங்களைக் கருதியபடியே ஒருவன் மருவ வேண்டுமாயின் தன் மனத்தை முன்னதாக அவன் புனிதமாக்கிக் கொள்ள வேண்டும்.

உயர்வு தாழ்வு, இன்பம் துன்பம், ஆக்கம் கேடு முதலிய எல்லா நிலைகளுக்கும் மனமே ஆதி மூல நிலையமாய் அமைந்திருத்தலால் அதன் ஆதார அமைதிகளை ஆராய்ந்து யாதும் ஏதம் முறாவகை யாண்டும் நல்ல சாதனமாக அதனைப் பாதுகாத்துக் கொள்வது உயர்ந்த போதனையாய் வந்தது.

மனத்தைப் புனிதமாகப் பேணிக் கொண்டவன் புண்ணியவானுய்ப் புகழ் மிகப் பெறுகின்றான்; பேணுதவன் பாவியாய் இழிந்து பழி மிகப் படுகின்றான். சுத்தம் தூய்மை புனிதம் என்னும் மொழிகள் இனிய பொருள்களையுடையன.

மனம் எதனை ஆழ்ந்து நினைக்கின்றதோ அதன் மயமாய்ச் சூழ்ந்து வளர்ந்து வாழ்ந்து வருகின்றது. வரவே அதன் உருவும் உறவும் வெளி மிளிர்கின்றன.

உயர்ந்த நிலைகளை அடைய விரும்புகின்றவன் இழிந்த புலைகளை யாண்டும் எண்ணலாகாது. இளிவான நினைவுகள் மனிதனை ஈனன் ஆக்கி விடும்; ஆதலால் எவ்வழியும் அவையாதும் புகாமல் பாதுகாப்பது நலம். மாசின்மை தேசுடைமை ஆகின்றது.

தூசி விழாதபடி கண்ணை இமை காப்பது போல் மாசு படியாதபடி மனத்தை உணர்வு காக்க வேண்டும்.

புனித மனமுடையவன் இனிய வாழ்வுகண்டு இம்மையிலும் மறுமையிலும் இன்பம் மிகப் பெறுகின்றான். எம்மையும் நன்மையே காண்கின்றான்.

மனம் புனிதம் ஆயின் மனிதன் இறைவன்.

சித்த சுத்தியுடைய உத்தமனது உயர் நிலையை இது உய்த்துணர வந்தது. பரிசுத்தநிலை கடவுளுக்கு வடிவம் ஆதலால் அந் நிலையினையடைந்தவன் இறைவன் என நின்றான்.

"Cleanliness is indeed next to Godliness."

சுத்தம் தெய்வீக நிலையது என மேல்நாட்டாரும் இங்ஙனம் கூறியுள்ளனர். காட்சிக்கு இனியதாய் இன்பம் தோய்ந்திருத்தலால் புனிதத்தை யாரும் போற்றி வருகின்றனர். தேக சுத்தம், மனசு சுத்தம், ஆன்ம சுத்தம் எனத் தூய்மை பலவகை நிலைகளில் பரவியுள்ளன.

நீரால் தேக சுத்தி நேர்கின்றது; சத்தியத்தால் இதய சுத்தி எய்துகின்றது; தத்துவ ஞானத்தால் ஆத்தும சுத்தி அமைகின்றது. கூழ் ஆனாலும் குளித்துக்குடி; கந்தை ஆனாலும் கசக்கிக் கட்டு. என்னும் பழமொழியால் மனிதன் எத்தகைய வறிய நிலையில் இருந்தாலும் அவன் சுத்தமாக வாழ வேண்டும் என்பதை ஆழமாக உணர்ந்து கொள்கின்றோம். சுசி வசியமாகின்றது.

அழுக்கு, மாசு, அசுத்தம் என்னும் சொற்களைக் கேட்டாலே யாரும் அருவருப்படைகின்றனர்; அம்மலினங்களை மருவலாகாது பகுத்தறிவு நிறைந்த உயர்ந்த மனிதப் பிறவியை அடைந்துள்ள நீ உன் வாழ்க்கையை எவ்வழியும் தூய்மையாக வகுத்து யாண்டும் செவ்வையாய் வாழ வேண்டும்; அதுவே திவ்விய வாழ்வாம்.

---

352. சுத்தன் எனும்பெயரைத் தொன்மைக் கடவுளும்
வைத்து மகிழும் வகைதெரியின்—சுத்தம்
எனைத்துணைய மேன்மை இதைநீ இனிதா
நினைத்து வருக நிதம். (உ)

இ-ள்

பரிசுத்தன் என்னும் திருநாமத்தைத் தனக்குத் தனி உரிமையாக் கொண்டு கடவுள் உவந்திருக்கிறார் ஆதலால் சுத்தம் எவ்வளவு மேன்மையுடையது என்பதை நீ நன்கு உணர்ந்து கொள்ள வேண்டும் என்றவாறு.

அமலன், அனகன், சுத்தன், தூயன், புனிதன் எனக்கடவுள் துதிக்கப் பட்டுள்ளார். சுத்தம் என்பது தெய்வத் தன்மையாம் என்னும் உண்மை இதனால் தெளிவாகியுள்ளது இத்தன்மையைத் தோய்ந்து நிற்பவன் எவ் வகையிலும் திவ்விய மகிமைகள் வாய்ந்து நிற்கின்றான். மனம் மொழி மெய் என்னும் மூவகை நிலைகளிலும் மனிதன் புனிதமுடையனாயின் அவன் தெய்வீக நிலையில் சிறந்து உய்தி சுரந்து உயர்ந்து திகழ்கின்றான்.

மாசிலாமணி என ஈசனைப் போற்றி வருதலால் மாசுடைமையின் நீசம் தெரிகின்றோம். ஒருவனுடைய மனம் மாசு படியாமல் தூய்மையாயிருப்பின் அது ஈசனுடைய ஆலயமாய்த் தேசு மிகுந்து திகழ்கின்றது.

பாசம் படிந்த பொழுது சீவான்மா பரமான்வைப் பிரிந்து பரிதபித்து நிற்கின்றது; பாசம் நீங்கின் அது ஈசனாய் இலங்குகின்றது. பாசம் நீசம் ஆக்குதலால் அதனை நாசமாக்கி விடுக.

காசம் படர்ந்த கண் ஒளியிழந்து குருடுபடுகின்றது; பாசம் படர்ந்தஉயிர் தெளிவழிந்து இளிவுழந்து தெருமரலடைகின்றது.

தன்னை நீசன் ஆக்கிநிற்கும் மாசினை நீக்கியபோது மனிதன் ஈசனை நோக்கி எழுகின்றான். அழுக்கு இல்லாத கண்ணாடியில் யாவும் தெளிவாய் விளங்குதல் போல் இழுக்கு நீங்கிய உள்ளத்தில் எல்லா உண்மைகளும் எளிது துலங்குகின்றன. மனிதன் தெய்வ பிண்டம் ஆயினும் மாசு படிந்தமையால் மதி மயங்கி நிற்கின்றான். மாசு தீரின் தன்னையும் தலைவனையும் நன்னயமாக அவன் நன்கு தெளிந்து கொள்கின்றான்.

ஆசு தீர்ந்த மனத்தினிடை அன்றி உணர்வு தோன்றாது;
மாசு தீர்ந்த ஆடியிடை அன்றி வதனம தோன்றுமோ?
பாசம் நீங்கு பரஞ்சுடரை நினைக்கும நினைவால பற்று மனம்
காசம் நீங்கு கண் போலத் தன்னைக் காண விளங்குமால், (1)

வானம் அல்லேன்; வளி அல்லேன்;
அழல் நீர் அல்லேன்; மண் அல்லேன்;
ஞானம் அல்லேன்; வினை அலலென்;
நானே சிவம் என்று எண்ணினேன்
ஊனம் இலலா ஒரு சிவமே யாவன்;
இவ்வாறு உனனுதான்
ஈனம் எல்லாம உடைய வுடம்பு
எடுத்துச் சுழலும் எஞ்ஞான்றும். (2)

தன்னைச் சிவம் என்று அறிந்தவனே
அறிந்தான் தன்னை உண்மையாத்;
தன்னைச் சிவம என்று அறியாதான்
அறியான் என்றும் தன் உண்மை;
தன்னைச் சிவம் என்று அறிந்த அன்றே
தாழ்வாம் பாசம் தனைநீப்பன்;
தன்னைச் சிவம என்று அறியாதான்
தனக்குப் பிறப்பே துணையாகும, (பிரபுலிங்க லீலை)

மனிதனுக்கும் கடவுளுக்கும் உள்ள உறவுரிமையை உறுதியாக இலைந்து உணர்தியுள்ளது. உண்மையை உள்ளத்தெளிவுடன் ஓர்ந்து உணர்ந்து நனமை அடைந்து கொள்க.

“தன்னை மறந்து தாரணியில் பிறந்தேன்; பின்னை நினைந்து பெரும்பதம் அடைந்தேன்” என முன்னம் ஒரு முனி மொழிந்ததும் அறிக. நெடிய மறவி கொடிய பிறவி ஆயது.

சிவன் என்றுநீ சிரமழி கின்றனே
தேவன் என்றுனைத் தேர்ந்து தெளிந்துகொள்
பாவ பாசம் படியின் படிமசை
ஏவ மான பிறவிகள் எய்துமே.

என்னும் மெய்ம்மையை எண்ணி உணர்ந்து இதம் உறுக.

உன் சித்தத்தைச் சுத்தி செய்; இத்தனை காலமும் இழந்திருந்த தெய்வப் பேற்றையும் பேரின்பத்தையும் பெற்று மகிழுவாய். உய்தியை உடனே செய்து கொள்ளுக.

---

353. முத்தி அடைய முயல்வார் முதலாகச்
சுத்தி அடையத் தொடங்குவார்—சுத்தி
இடங்கொண்ட போதே இனியபே ரின்பம்
உடன்கொண் டொளிரும் உயர்ந்து. (௩)

இ-ள்

மோட்சத்தை அடைய முயல்கின்ற முமுட்சுக்கள் முதலில் தம் உள்ளத்தைச் சுத்தம் செய்து கொள்ளுகின்றனர்; சித்தம் சுத்தியாய பொழுதுதான் பேரின்பம் அவரிடம் பெருகி எழுகின்றது; அப் பேற்றை விரைந்து பெறுக என்றவாறு.

இது, முத்தியின் மூல நிலையை உணர்த்துகின்றது.

பிறவி துன்பம்; பிறவாமை இன்பம்; என அனுபவங்களால் உயிர்கள் உணர்ந்து கொள்ளுகின்றன; உணரவே பிறவி நீங்கிப் பேரின்பம் அடைய நாடுகின்றன; அப்பேறு எளிதில் அமையாது; தக்க சாதனங்களும் பக்குவமும் தகுதியாக அமைந்த பொழுதுதான் கருதிய அது கை கூடுகின்றது; அந்த மோட்ச சாதனங்களுள் சித்த சுத்தியே முதன்மையானது ஆதலால் அதன் நிலைமையை இது விளக்கி நின்றது.

முத்தி என்பது பாச பந்தங்களிலிருந்து நீங்கி உயிர் பரமாய் நிற்கும் நிலை. சிப்பியிலிருந்து வெளிப்பட்ட முத்தைப் போல அசுத்தக் கட்டுகளினின்று விடுபட்ட ஆன்மா அரிய மகிமையும் பெரிய தேசும் பெருகி மிளிர்கின்றது.

இந்த முத்திப் பேற்றிற்குத் தவம் யோகம் ஞானம் முதலியன நல்லசாதனங்களாய் அமைந்துள்ளன. அவற்றுள் உள்ளத் தூய்மையே எல்லாவற்றிலும் முன்னதாக மன்னியுள்ளது. சித்த சுத்தி முத்தியில் உய்த்தலால் அது மெய்த்தவ நிலையில் உத்தமமாய் ஒளிர்கின்றது. வித்து வர விளைவு வருகின்றது.

முத்தி நெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்தி நெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்
சித்த மலம் அறுவித்துச் சிவம் ஆக்கி எனை ஆண்ட
அத்தன்எனக்கு அருளியவாறு ஆர்பெறுவார்? அச்சோவே!

(திருவாசகம்)

சித்த மலம் அற்ற வழிதான் எவரும் முத்திநலம் பெறுவர்; அப் பொழுது சிவன் சிவமாய்த் திகழும் என இஃது உணர்த்தி யுள்ளது. உண்மையை ஊன்றி உணர்ந்து உறுவதை ஓர்ந்து கொள்ளுக. உள் மாசு தீரவே உயர் தேசு நேருகின்றது.

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன்.

(குறள், 34)

உள்ளம் தூயனுயின் அவனே உயர்ந்த தருமவான் என வள்ளுவப் பெருந்தகை இவ்வாறு தெள்ளிதாக உணர்த்தியுள்ளார்.

எண்ணிய இன்ப நலங்கள் யாவும் சித்த சுத்தியால் எய்த லாம் ஆதலால் அது புண்ணியம் என வந்தது.

சுத்தி இடம் கொண்டபோதே பேரின்பம்.

என்றது மனம் புனிதமாயின் மனிதன் அடையும் மகிமை தெளிய வந்தது. பிறவி நீக்கமும் பேரின்பப் பேறும் இதய பரிசுத்தத்தால் உதயமாகின்றன; அந்தப் புனிதத்தை இனிது பேணி மனிதன் உய்ய வேண்டும்.

உயிர்க்கு ஒளி விழியாய் உள்ளது உள்ளம்; அது மாசு படி யாமல் தெளிவுடையதாயின் எல்லா நலங்களும் எளிதே வந்து குவிகின்றன. அருளும் அமைதியும் பொங்கி ஞான சோதி வீசி அவ் வுள்ளம் ஆனந்த நிலையமாய் அமைந்து திகழ்கின்றது.

தந்திரியில் எழும்இசைபோல் சாந்தி முன்னும்
சற்குணத்தில் ஞானம் எழும் தம்மிலதாமாம்
இந்த இரண்டும் குளமும் மலரும் போல
இனிது வளர்ந்திடும் ஒக்க இரண்டும் கற்கில்
வந்தணுகும் தனித்தனியே இரண்டும் கற்கில்
வருபயன் ஒன்றிலதாம்இவ் வாய்மை கேள்வி
முந்தும் அறம் பொருளின்பம் கீர்த்தி வாணுள்
முழுதளிக்கும் மனத்தெளிவால முத்திநல்கும்.

(ஞானவாசிட்டம்)

இனிய குண நலங்களும், சாந்தியும், ஞானமும் பேரின்ப சாதனங்கள் என்று குறித்து வந்த இது மனத் தெளிவு முத்தி நல்கும் என இறுதியில் உறுதியாக உணர்த்தியருளியது. கருதிய கதி மோட்சங்கள் யாவும் உன் இருதயத்தில் மருவி யுள்ளன; அதனைத் தூய்மை செய்து வை; எல்லா இன்ப நலங்களும் உன் பால் எளிதே வந்து இனிது பெருகித் தனியுரிமையாய் நிற்கும்.

---

354. நெஞ்சம் புனிதம் நிலைபுனிதம் நீயுறையும்
தஞ்சம் புனிதமாச் சார்ந்திருந்தால்—கஞ்சம்
களிக்கும் திருவும் களித்துன்பால் வந்தே
அளிக்கும் திருவை அமர்ந்து. (௪)

இ-ள்

மனம் வாக்கு காயம் வாழ்க்கை நிலை மனை வாசம் முதலிய யாவும் தூயனவாய் மருவி இருந்தால் திருமகள் உவந்து வந்து உன்பால் பெரு மகிழ்வைத் தந்தருளும் என்றவாறு.

உரை செயல்களுக்கு மூலத்தானம் ஆதலால் நெஞ்சின் புனிதம் முதலில் குறிக்கப் பட்டது. அகம் தூய்மை, புறந் தூய்மைகள் எல்லாவற்றிற்கும் இனிய ஆதாரமாய் இசைந் திருக்கின்றது.

நீ உறையும் தஞ்சம் என்றது குடியிருக்கும் மனையை. வசிக் கும் வீடு புசிக்கும் உணவு குடிக்கும் நீர் படிக்கும் நூல் முதலாக அடுத்துள்ள தொழில் நிலைகள் யாவும் புனிதமுடையனவாகப் பேணிவரின் அது மனித வாழ்க்கையின் உயர்தர நிலையில் ஒளி செய்து தெளி பேரின்பமாய்ச் சிறந்து விளங்கும்.

அழுக்கும் அசுத்தமும் அருவருப்பானவை. அவற்றில் வெறுப்பில்லாமல் ஒருவன் இருப்பானாகில் அவன் பிறப்பு இழிக்கப் படும். பழக்க வழக்கங்களைக் கொண்டே மனிதன் மதிக் கப்படுகின்றான். செயல்கள் இயல்களின் சாயல்களாய் அயல் வருகின்றன. வெளி வாழ்வு உள் வீழ்வை விளக்கி விடுகிறது.

இழிந்த கழி நீர்க் குழிகளை விழைந்து கிடக்கும் பன்றி நாய்கள் அவற்றின் ஈனப் பிறவியின் இயல்புகளை வெளிப்படுத்தி நிற்கின்றன. சார்ந்துள்ள நிலைமைகள் நேர்ந்துள்ள உண்மைகளை ஓர்ந்து கொள்ளச் செய்கின்றன. உரியதைக் கூர்ந்து காணுக.

அசுத்தங்களில் வெறுப்பின்றி விருப்புற்றுள்ளவர் உயர்ந்த மனிதப் பிறப்பில் தோன்றி யிருந்தாலும் அவர் இழிந்த நிலை யினர் என்பதைத் தெளிந்து கொள்ளச் செய்கின்றனர்.

உலகில் ஒருவன் பழகிவரும் பழக்கம், வாழ்ந்து வரும் வாழ்க்கை அவனது நிகழ்கால நிலையை உணர்த்துவதோடு அமை யாமல் சென்ற காலத்தின் செலவையும் வருங்காலத்தின் வரவை யும் தெளிவுறுத்தி நிற்கின்றன.

திருந்திய பண்பும் பெருந்தகைமையும் பரிசுத்த வுணர்வும் மனிதனை மிகவும் உயர்ந்த நிலையில் உயர்த்தியருள்கின்றன. அகம் புனிதமாய் உயர மனிதன் தனி மகிமை அடைகின்றான். உள்ளம் உயர்ந்து வருகிற மனிதனை உலகம் உவந்து விழைந்து கொள்ளு கின்றது.

"Every step of inward progress makes us worth more to the world."

"உள்ளம் உயர உயர உலகிற்கு நாம் உதவியாளராகின் றோம்" என்னும் இது ஈண்டு உணரத்தக்கது. ஒருவனுடைய அகத்தின் வளர்ச்சி சகத்திற்கு நன்மையாய்த் தழைத்து வரு கின்றது. நல்ல மனித சமுதாயத்திற்கும் மா நிலத்திற்கும் உள்ள உறவுரிமையை இதனால் நன்கு உணர்ந்து கொள்கின்றோம்.

கஞ்சம் களிக்கும் திரு என்றது தாமரை மலரில் உவந்து வசிக்கும் இலட்சுமியை. கஞ்சம் = தாமரை.

திரு உன்பால் வந்து அமர்ந்து திருவை அளிக்கும்.

என்றது தூய்மையாளர்க்கு உளவாகும் பாக்கியங்களை உணர்த்தி நின்றது. அழகும் பரிசுத்தமும் திருவின் உரிமைகள் ஆதலால் புனிதர்பால் அவள் அருள் இனிது வருகின்றது.

பொருள் போகம் மேன்மை கீர்த்தி முதலிய உயர் நலங்கள் எல்லாம் உள்ளம் தூயர்க்கு ஒருங்கே உளவாம் என்க.

அசுத்தம் மூதேவிக்கு இடம் ஆதலால் அதனையுடையவர் அல்லலும் வறுமையும் அவமானங்களும் அடைந்து வருந்து கின்றனர். பற்றிய படியே பலன்கள் படிகின்றன.

சுத்தம் சீதேவியின் நிலையம் ஆதலால் அதனை யுற்றவர் செல்வம் மகிழ்ச்சி சீர்த்திகளை எய்திச் சிறந்து நிற்கின்றனர்.

சுத்தம் உடையவனுக்கு இலட்சுமி கடாட்சம் உண்டா கின்றது; ஆகவே இன்ப நலங்கள் யாவும் அவன்பால் அன்பாய் அடைந்து நிற்கின்றன.

உலகம் புரக்கும் பெருமான்தன்
உளத்தும் புயத்தும் அமர்ந்தருளி
உவகை அளிக்கும் பேரின்ப
உருவே! எலலாம் உடையாளே!
திலகம் செறிவா ணுதல்கரும்பே!
தேனே! கனிநத செழுங்கனியே!
தெவிட்டாது அன்பர் உளத்துள்ளே
தித்தித்தெழும் ஓர் தெள்ளமுதே!
மலகஞ் சுகத்தேற் கருளளித்த
வாழ்வே எனகண் மணியேஎன்
வருத்தம் தவிர்க்க வரும்குருவாம்
வடிவே! ஞான மணி விளக்கே!
சலகந் தரம்போல் கருணைபொழி
தடங்கண் திருவே! கண மங்கைத்
தாயே சரணம் சரணமிது
தருணம் கருணை தருவாயே, (அருட்பா)

திருவின் இயலும் செயலும் இது குறித்துள்ளது.

செல்வ நலங்களுக்கு அதி தேவதையாய் நின்று உயிரினங் களின் தகுதி நோக்கித் திருமகள் இங்ஙனம் அருள் புரிந்து வரு தலால் புனித நெஞ்சர்க்கு இனிய தஞ்சமாய் அவள் இசைந் தருளி அரிய இன்ப நலங்களை உரிமையுடன் உதவுகின்றாள்.

தன் இருதயத்தைச் சுத்தம் செய்து கொண்டவன் எல்லாப் பெருமைகளையும் ஒருங்கே பெறுறவன் ஆகின்றான்.

மருவினிய சுற்றமும் வான்பொருளும் நல்ல
உருவும் உயர்குலமும் எல்லாம்—திருமடந்தை
ஆம்போ தவளோடும் ஆகும்; அவள்பிரிந்து
போம்போது அவளோடும் போம். (மூதுரை)

வாழ்வின் நலம் எல்லாம் திருவின்பால் உள என்பதும் அவள் அருளால் பொருள் நலங்கள் யாவும் வரும் என்பதும் அவ் வரவு நல்ல புண்ணியத்தின் அளவே என்பதும் இதனால் அறியலாகும்.

இத்தகைய பாக்கிய இலட்சுமி மனிதனது உள்ளத் தூய்மையை நோக்கி மகிழ்கின்றாள். தன் உள்ளத்தைப் புனிதமாக்கியுள்ளவன் திருவின் கருணையைத் தனியுரிமையாகப் பெற்றுக் கொள்கின்றான். நெஞ்சத் தூய்மை நிறைந்த பாக்கியமாம்.

நல்ல எண்ணங்களை எண்ணுவதும், எல்லா உயிர்களுக்கும் இரங்கியருள்வதும், இக பர நிலைகளை உணர்வதும் இனிய புண்ணியமாகப் பெருகி வருதலால் அம் மனிதன் புனிதனாய் உயர்கின்றான்.

இல்லார்க்கு ஒன்று ஈயும் உடைமையும், இவ்வுலகில்
நில்லாமை உள்ளும் நெறிப்பாடும்,—எவ்வுயிர்க்கும்
துன்புறுவ செய்யாத தூய்மையும் இம்மூன்றும்
நன்றறியும் மாந்தர்க்குள. (திரிகடுகம், 68)

உயர்ந்தார் இயல்புகளை இஃது உணர்த்தியுள்ளது.

எவ் வுயிர்க்கும் துன்பம் செய்யாதவன் தருமமூர்த்தியாய்த் தழைத்து வருதலால் அவன் தூய்மை யாளனாய்த் துலங்கி நிற்கின்றான். புனித மனம் எவர்க்கும் இனிமை புரிகின்றது.

புண்ணிய கருமங்கள் சித்தத்தைச் சுத்தி செய்து உத்தம நிலையில் உயர்த்தியருள் கின்றது. தூய்மை யுடையான் நோய்மையுடையான் என்னும் வாய்மையால் அதன் தாய்மை தெளிவாம்.

---

355. பழிபாவம் யாதொன்றும் பற்றாமல் என்றும்
அழியாத வாழ்வை அடையின்—ஒழியாத
மெய்யறிவின் நற்பயனை மேவினன் எவ்வுயிர்க்கும்
ஐயன் அவனே அறி. (ரு)

இ-ள்

பழிபாவங்கள் யாதும் அணுகாமல் ஒழுகி என்றும் அழியாத வாழ்வை ஒருவன் அடையின் அவனே பிறவியின் உண்மையான உயர் பயனைப் பெற்றவனாவான்; எவ் வுயிர்க்கும் தலைவனாய்த் திவ்விய நிலையில் நிலவி விளங்குவன் என்றவாறு.

புகழ் புண்ணியங்கள் இகத்திலும் பரத்திலும் உயிர்களுக்கு உயர் நலங்களை நல்கி அருள்கின்றன. ஆகையால் அவை ஆன்ம அமுதங்களாய் அமைந்து யாண்டும் மேன்மைகள் மிகுந்தன.

பழிபாவங்கள் இங்கும் அங்கும் எங்கும் இழிதுயரங்களையே விளைத்து வருதலால் அவை கொடிய விடங்களாகக் கருதப் பட்டுள்ளன. புண்ணியத்தை விடுத்துப் பாவத்தை அடுப்பது அமுதத்தை ஒழித்து நஞ்சைக் குடிப்பது போல் நாசமே யாகும்.

பிற உயிர்களுக்குத் துயரமானவைகளை ஒருவன் செய்வானயின் அவன் பாவி ஆகின்றான்; அத் தீவினையாளனை யாவரும் இகழ்ந்து வெறுக்கின்றனர்; அங்ஙனம் பழியும் பாவமும் வளரின் அவ் வுயிர் ஒளி யிழந்து இழிவுறுகின்றது.

அவ்வாறு இழிவு நேராமல் வாழ்பவனே உயர் வாழ்வுடையனய் ஒளி மிகப் பெறுகின்றான். அப்பேறே அரிய பிறவியின் பெரிய பயனய் இனிமை புரிகின்றது.

பழி பாவம் பற்றின் அது இழிவான அழி வாழ்வாம் ஆதலால் அவை பற்றாதது அழியா வாழ்வு என வந்தது.

தான் எடுத்த பிறப்பைச் சிறப்பு ஆக்கி என்றும் குன்றாத ஆனந்தநிலையை எய்துகின்றவன் வாழ்வின் உயர்ந்த ஊதியத்தைப் பெற்றவன் ஆகின்றான்.

மெய் அறிவின் நற்பயனை மேவினான்.

என்றது தத்துவ ஞானத்தால் அடையத் தக்க உத்தம நலனை அடைந்த முத்தனை. பொய் அறிவு மையல்மிக வுடையது; வெய்ய நிலைகளை விழைந்து திரிவது ஆதலால் அஃதில்லாதது மெய்யறிவு என வந்தது.

தீய நினைவுகள் ஒழியவே உள்ளம் தூய்மை அடைகின்றது; அந்த மனத் தூய்மையால் உணர்வு ஒளி மிகப் பெறுகின்றது; அதனால் உயர் பேரின்பம் உளவாகின்றது. உள்ளத்தே தூய்மையுடையவன் எல்லா நலங்களையும் ஒருங்கே எய்தி மகிழ்கின்றான்.

> தூய்மை உடைமை துணிவாம் தொழிலகற்றும்
> வாய்மை உடைமை வனப்பாகும்—தீமை
> மனத்தினும் வாயினும் சொல்லாமை மூன்றும்
> தவத்தில் தருக்கினார் கோள். (திரிகடுகம், 78)

தூய்மை தலைமையான தவம்; வாய்மையும், தீமை செய்யாமையும் அதன் இனிய துணைகள் என இது குறித்திருக்கிறது.

எண்ணமும் செயல்களும் புண்ணிய நிலைகளில் வளரவே அம் மனிதன் தரும தேவதையாய்த் தழைத்து வருகின்றான்; வரவே மனித இனத்துள் அவன் தனியான ஒரு புனித சீலனாய்ப் பொலிந்து விளங்குகின்றான்.

எவ் வுயிர்க்கும் ஐயன் அவன்.

என்றது தன் உயிரைப் புனிதப் படுத்தினவன் மன்னுயிர்க் கெல்லாம் இனியனாகின்றான்; ஆகவே தாயை நினைந்து போற்றும் சேய்கள் போல் அத்தூயனைப் புகழ்ந்து போற்றி யாவும் உவந்து கொள்கின்றன. அவ் வுண்மையும் உரிமையும் உயர்வும் உணர வந்தது.

நெஞ்சம் வஞ்சமாய் மாசுறின் ஈசன் அருளை அவன் இழந்து கெடுகின்றான்; தூய்மையாயின் தேசு மிகுந்து தெய்வத்தன்மை பெறுகின்றான். தூய்மை கடவுள் தன்மை ஆதலால் அதனையுடையவன் எவ்வளவு பாக்கியவான்! என்பதை எளிது தெளிந்து கொள்ளலாம். தூயான் என்றே கடவுளுக்கு ஒரு பெயர்.

தூயானைச் சுடர்ப்பவளச் சோதியானைத்
தோன்றிய எவ்வுயிர்க்கும் துணையாய் நின்ற
தாயானைச் சக்கரம் மாற்கு ஈந்தான் தன்னைச்
சங்கரனைச் சந்தோக சாமம் ஓதும்
வாயானை மந்திரிப்பார் மனத்துளானை
வஞ்சனையால் அஞ்செழுத்தும் வழுத்துவார்க்குச்
சேயானைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின்றாரே. (தேவாரம்)

உள்ளம் தூயராய் இறைவனை எண்ணி உருகாதவர் அல்லல் நிலைகளில் அலமந்துழல்வார் என இது அறிவுறுத்தி யுள்ளது

உன் அகத்தைத் தூய்மை செய்; அதிசயமகிமையை அடைந்து உலகம் எல்லாம் துதி செய்து வணங்க நீ உயர்ந்து விளங்குவாய்.

---

356. உள்ளம் புனிதமுறின் ஊக்கம் உயர்வீரம்
வெள்ளம் எனவே விளையுமால்—உள்ளந்தான்
தீதாய் இழியின் சிறுமை பழிதுயர்கள்
வாதாடி நிற்கும் வளர்ந்து. (சு)

இ-ள்

மனிதனுடைய மனம் புனிதம் உறின் ஊக்கம் வீரம் முத

வியஉயர் நலங்கள் எல்லாம் ஒருங்கே பெற்றுச் சிறந்து திகழு வான்; உள்ளம் மாசு படிந்து இழியின் பழி துயர்கள் வளர்ந்து நீசமாய் அவன் அழிவன் என்றவாறு.

குண நலங்கள் எல்லாம் மன நலத்தின் அடியாய் வளர்ந்து வருகின்றன. மலர் மணம் போல் உயர் குணங்கள் உயிரில் மிளிர் கின்றன. அவை உள்ளத்தின் வழியே வெளியே ஒளி வீசி உலா வுகின்றன. அவ்வுள்ளம் தூயதாயின் யாவும் இனியனவாய் இன்ப மணம் கமழ்கின்றன. தீயதேல் எல்லாம் புல்லியனவாய்ப் பொலி விழந்து கழிகின்றன. மனமும் குணமும் நிலமும் விளைவும் என நிலவியுள்ளன. நெஞ்சம் திருந்தின் நிலைகள் உயர்கின்றன.

களை படர்ந்த நிலத்தில் பயிர் துலங்காது; இளிவடர்ந்த உளத்தில் உயிர் விளங்காது. அரிய மகிமைகளை விளைத்துப் பெரிய இன்பங்களை ஊட்ட வல்ல உள்ளத்தை இளிவடைய விடு வது கொடிய அழிவாம். மனித வாழ்வின் மேன்மை எல்லாம் மனத்தில் மருவியுள்ளன; அதனைக் கீழ்மையுறாமல் பாதுகாத்துக் கொள்பவனே உயர்ந்த பலனை அடைந்து கொள்கின்றான்.

வளமுடைய நிலம்போல் நலமுடைய உளம் நலம் பல தருகின்றன. மனம் தெளியவே மகிமைகள் விளைகின்றன.

சுத்தமான இதயத்திலிருந்துதான் சிறந்த சீர்மைகள் செழித்து வளர்கின்றன. அவற்றால் வாழ்க்கை மாட்சியுறுகின்றது.

ஊக்கம் என்பது உள்ளக் கிளர்ச்சி. உயர்ந்த நோக்கில் ஊக்கி எழுவது ஊக்கம் என வந்தது.

ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்கம் உடையான் உழை. (குறள், 594)

எல்லாப் பாக்கியங்களும் ஊக்கம் உள்ளவனை நோக்கி வரு கின்றன என்றமையால் இதன் உண்மை நிலையை உணர்ந்து கொள்ளலாம். உள்ளத்தூய்மை உயர் செல்வமாகின்றது

எவ்வழியும் நிலை கலங்காமல் சத்தியமும் தருமமும் தழுவி நிற்கும் பெருமிதம் வீரம் என விளங்கி நிற்கின்றது.

சித்த சுத்தி உத்தமத் தன்மைகளுக்கு உறையுளாயுள்ளது. அச் சுத்தியைச் சத்திய சீலத்தால் பேணின். அந் நிலை அள விடலரிய நலங்களையும் ஆற்றல்களையும் நல்கி ஆனந்தம் அருளும்.

"கூற்றுவன் தண்டம் இல்லைக் கோள்செயும் தீமை இல்லை
மாற்றரும் அசனிதீய வளிமழை அராக்கள் செய்யும்
சாற்றரும் வருத்தம் இல்லைத் தரித்திரம் சற்றும் இல்லை
ஏற்றமார் மெய்யே கூறிப் பொய்யினை இரித்துளார்க்கே."

(காசி ரகசியம்)

மெய்யால் விளையும் மெய்ப் பயன்களை இதில் உய்த் துணர்கின்றோம். இத் தகைய சத்தியத்தை எந்த உள்ளம் தோய்ந்திருக்கிறதோ அது சுத்தமுடையதாகின்றது; ஆகவே அற்புத சித்திகளைப் பெற்று ஆன்மா ஆனந்த நிலையில் மிளிர்கின்றது.

உள்ளம் தீதாய் இழியின் சிறுமை பழி துயர்.

மனிதனது மனம் புனிதம் இல்லாத பொழுது அவன் அடையும் துயர நிலைகளை இது உணர்த்தி நின்றது.

பொறாமை காமம் கள்ளம் முதலிய தீமைகள் கதுவிய பொழுது உள்ளம் தீயதாய் இழிந்து படுகின்றது. படவே பழியும் துயரும் இழிவும் விளைந்து மனிதனை ஈனப்படுத்து கின்றன.

பெருமையும் இன்பமும் தூயநெஞ்சிலிருந்து உளவாகின்றன; சிறுமையும் துன்பமும் தீய மனத்தால் விளைகின்றன.

தீய நினைவுகள் உள்ளத்தைப் பாழ்படுத்தி அல்லல்களை விளைக்கின்றன; நல்ல நினைவுகள் நலம் பல நல்குகின்றன.

பொல்லாத சிந்தனைகளைத் தன் நெஞ்சில் சிந்திக்கின்றவன் கொடிய நஞ்சைக் குடிப்பவன் போல் நாசத்தை அடைகின்றான்; நல்ல சிந்தனைகளை யுடையவன் இனிய அமுதத்தை உண்ணுகின்றவன் போல் யாண்டும் இன்ப வாழ்வை பெறுகின்றான்.

தீயனாய் இழிந்து ஒழியாதே; தூயனாய் உயர்ந்து வாழுக.

---

357. மாசு மறுக்கள் மருவாமல் உன்மனத்தைத்
தேசு மிகவேநீ செய்துவரின்—ஈசன்
குடிபுகுந்து நிற்பன் குவலயம்பின் உன்முன்
அடிபணிந்து நிற்கும் அமைந்து. (எ)

இ-ள்

மாசு படியாமல் உன் மனத்தைப் பேணிவரின் தேசு மிகுந்து வரும்; ஈசனும் உன்னிடம் வாசமாய்க் குடி புகுந்தருளுவன்; உலகம் முழுவதும் உன்னை அடி பணிந்து வணங்கும் என்றவாறு.

இங்கே மாசு என்றது கெட்ட எண்ணங்களை.

மறு என்றது கரவு கவடு மறதி மடிகளை.

உலகம் உயிர் கலைகள் முதலிய எல்லா நிலைகளையும் உள்ளம் எண்ணி அறிய வல்லது; எதனையும் நிதானித்து நிறுத்து நிறை காண்பது; அளவு படியும் துலாக்கோலும் போல் பொருள்களை உளவு கண்டு உணர்த்துவது. இத் தகைய மனத்தை இனிது பேணிவர வேண்டும். மனம் புனிதமாய் அமையின் மனித வாழ்க்கை யாண்டும் இன்பமாம். அது சிறிது பழுது படின் வாழ்வு முழுதும் கெடும். தாழ்வுகள் யாவும் புகும்.

யாதொரு மாசும் படியாமல் தன் உள்ளத்தை எவன் பாது காத்து வருகின்றனோ அவன் பரமபாக்கியவானுய்த் தேசமிருந்து திகழ்கின்றான். நெஞ்சத் தூய்மை நிறை தவமாகின்றது.

பேராசை பொறாமை நய வஞ்சகம் முதலியவற்றால் மனம் மாசாய் நீசமடைகின்றது. அந்த நீசங்களை அறவே ஒழித்து அன்பு அமைதி கருணை தெய்வ சிந்தனைகளைச் செய்து வரின் மனம் செவ்விய தேசுடன் திவ்விய மகிமை யுறுகின்றது.

நீச நிலைகளை நினைந்த பொழுது மனிதன் இதயம் நீசமாய் நாசம் அடைகின்றது; புனித உணர்வு புகின் அது ஈசன் ஆலய மாய் இனிய சோதி வீசி இன்பம் மிகுகின்றது.

ஈசனை இருத்துறும் இதயத்து ஓர் பொருள்
ஆசையை இருத்துதல் அந்த ஞளர்தாம்
வாசம் உற்றிடும்ஒரு மனையில புன்செயல்
நீசரை இருத்துதல் நிகர்க்கும் என்பரால்.

(பிரபுலிங்க லீலை)

நெஞ்சம் தூய்மை ஆயின் அதில் ஈசன் இருந்தருள்கின்றான்; தீமையுறின் அது நீசம் அடைகின்றது. எனவே மனத்தை மனி தன் எவ்வாறு பேணி வரவேண்டும் என்பது இனிது காணலாகும்.

தூய்மை என்பது தெய்வத்தன்மை ஆதலால் அது கடவுள் நிலையம் ஆகின்றது. பேரின்ப நிலையமான முத்தியையும் தூய்மை என்றே மேலோர் குறித்திருக்கின்றனர்.

தூஉய்மை என்பது அவாவின்மை; மற்றது
வாஅய்மை வேண்ட வரும். (குறள், 364)

இதில் தூய்மை உணர்த்தி நிற்கும் பொருளை உணர்க. அகத்தின் தூய்மை அரிய பல மகத்துவங்களை யுடையது.

நெறிப்படும் அகத்தின் தூய்மை நிகரிலாத் தூய்மை ஆகும்;
புறத்தினில் தூய்மை தூய்மை அன்று; உளம் பொருந்தஉன்னித்
திறப்படச் சேவை செய்தல் சேவையாம்; தியானியாது
முறைப்படச் சேவை செய்தல் சேவையன்றுமால் முன்னில்.

(வாயுசங்கிதை)

அமல மூர்த்தியான கடவுள் அருளைக் கருதிவரின் மனிதனது மனம் புனிதம் ஆகின்றது; ஆகவே போக நலங்களும் யோக சித்திகளும் ஒருங்கே அவனுக்கு உளவாகின்றன. இம்மையிலே எல்லா மகிமைகளையும் அவன் பெற்று மகிழ்கின்றான்.

உம்மைநான் அடுத்த நீரால் உலகியல் வேதநீதி
செம்மையால் இரண்டும் நன்றாய்த் தெளிந்தது; தெளிந்த நீரால்
மெய்ம்மையாம் சித்த சுத்தி விளைந்தது; விளைந்த நீரால்
பொய்ம்மை வானவரின் நீங்கிப் போந்தது சிவன்பால் பத்தி. (1)

வந்தஇப் பத்தியாலே மாயையின் விருத்தியான
பந்தமாம் பவஞ்ச வாழ்க்கை விளைவினுள் பட்ட துன்பம்
வெந்தது; கருணையாகி மெய்யுணர் வின்பந்தன்னைத்
தந்தது; பாதம் சூட்டித் தன்மயம் ஆக்கிற்றன்றே. (2)

(திருவிளையாடற் புராணம்)

பாண்டிய மன்னனை நோக்கி வாதவூரடிகள் இவ்வாறு கூறியிருக்கிறார். "நல்லோர் சகவாசத்தால் எனக்கு நல்லுணர்வு வந்தது; உள்ளம் தெளிந்தது; அந்தச் சித்தசுத்தியால் கடவுளைக் கண்டேன்; பிறவி தீர்ந்து பேரின்பம் கொண்டேன்" என இதில் உரைத்துள்ள அநுபவமான உறுதி நலங்களை ஊன்றி உணர்ந்து இருதய நிலைமையைக் கருதிக் கொள்ள வேண்டும்.

ஈசன் குடி புகுந்து நிற்பன்.

என்றது மாசு நீங்கிய மனத்தில் ஈசன் உவந்திருக்கும் இயல் புணர வந்தது. இறைவன் எங்கும் நிறைந்திருந்தாலும் புனிதமான இடத்தை இனிது உவந்து கொள்கின்றான். தூய ஆன்மாவைத் தானாகவே வந்து தழுவி மகிழ்கின்றான்.

தந்ததுஉன் தன்னைக் கொண்டது என் தன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்?
அந்தம்ஒன் றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதுஒன் றுஎன்பால்?

சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்
திருப்பெருந்துறையுறை சிவனே!
எந்தையே ஈசா! உடலிடம் கொண்டாய்
யானிதற்கு இலன்ஓர்கைம் மாறே. (திருவாசகம்)

இறைவனோடு உறவாய் மாணிக்க வாசகர் இவ்வாறு உரையாடியுள்ளார். சிவ பெருமான் இவரிடம் வந்து ஒரு பண்டமாற்றுச் செய்து கொண்டதாகப் பாடியிருக்கும் இப் பாசுரம் அரிய பொருள் நலங்களையுடையது. தத்துவ நோக்குடன் உய்த்துணர்ந்து உவந்து கொள்ள உரியது. தனது சீவத் தன்மையை எடுத்துக் கொண்டு சிவானந்தத்தைத் தனக்கு ஈசன் கொடுத்தருளினன் எனக் களிபெருவகையாய்க் கசிந்துருகி யுள்ளார். சிந்தையே கோயில் கொண்ட எம் பெருமான் என்றதனால் இவரது சித்த சுத்தியும் பத்தி நிலையும் தெய்வத் தேசும் உணரலாகும்.

மனம் தூய்மை ஆயின் மனிதன் கடவுள் ஆகின்றான்.

---

358. சுத்தம் உனக்குநற் சோறிடும் என்றஅவ்
ஒத்த முதுமொழியை ஓர்ந்துணர்ந்து—நித்தம்
குளித்து முழுகிக் குணநீர்மை தோய்ந்துள்
அளித்து வருக அருள். (அ)

இ-ள்

சுத்தம் சோறிடும் என்னும் உத்தமமான பழமொழியின் பொருளை உய்த்துணர்ந்து நாளும் நீரில் குளித்துச் சீரிய குண நலங்களை வளர்த்து யாண்டும் ஆருயிர்களுக்கு அருள் புரிந்து வருக என்றவாறு.

மனிதன் புறமும் அகமும் புனிதமாயின் எங்கும் இனியனாகின்றான். தேக சுத்தி ஆன்ம சுத்திக்கு ஆதாரவாயமைந்துள்ளது. இருவகைத்தூய்மையும் உயிர்வாழ்வில உரிமையுடையன ஆதலால் அவை பெருமையாகப் பேணப் பெறின் இருமை இன்பமும் காணப் பெறும். வெளியும் உள்ளும் ஒளி செய்து வாழுக.

புறம்தூய்மை நீரான் அமையும்; அகம்தூய்மை
வாய்மையால் காணப் படும். (குறள், 298)

தேகமும் மனமும் தூய்மையாய் இருக்க வேண்டும் எனத் தேவர் கருதியுள்ள உறுதி நிலையை இதில் உணர்ந்து கொள்கின்றோம். புறம்=உடம்பு. அகம்=மனம்.

செம்பு வெண்கலம் முதலிய பாத்திரங்களை நாளும் சுத்தமாத் துலக்கிவரின் அவை தேசு மிகுந்து தெளிவாயிருக்கும்; துலக்காது விடின் மாசு படிந்து மலினமாய்க் கிடக்கும்.

தினமும் நீரில் குளித்து வரின் உடம்பு சுத்தமாம்; அழகும் ஆரோக்கியமும் அமைந்து திகழும். குளியாது நின்றால் தெளிவு குன்றும்; ஒளி யாதும் இன்றி இளிவாக நேரும்.

உண்ணும் உணவு போல் தண்ணீர் ஆடலும் உயிர்வாழ்க்கையின் உயர் இயல்பாக இனிது அமைந்துள்ளது; ஆகவே நீர் ஆடி உண்ணுவது மேலானசீலமாக மதிக்கப்பட்டுத் துதிக்கப்பெற்றது.

> உண்பொழுது நீராடி உண்டலும்; என் பெறினும்
> பால்பற்றிச் சொல்லா விடுதலும்; தோல்வற்றிச்
> சாயினும் சான்றாண்மை குன்றாமை; இம் மூன்றும்
> தூஉயம் என்பார் தொழில். (திரிகடுகம், 27)

பரிசுத்தமாக வாழ்வோம் என்று வாழ்க்கைத் திட்டத்தை வகுத்துள்ள மேலோர்கள் முதலில் நீராடியே உண்பர் என்றதனால் அதன் நீர்மையும் சீர்மையும் ஓர்மையும் அறியலாகும்.

சுத்தம் சோறு இடும் என்பது பழமொழி. இது ஆழ்ந்த பொருள் நோக்கில் அமைந்திருக்கிறது. மனம் மொழி மெய்கள் சுத்தமாயிருந்தால் அம் மனிதனுக்குத் தெய்வம் உயர்ந்த போகங்களை ஊட்டியருளும் என இது காட்டியுள்ளது.

எடுத்த உடல், உடுத்த உடை, அடுத்த இடம் முதலியவற்றைச் சுத்தமாக வைத்திருப்பவன் சுகமாய்ச் சீவிப்பன்; அல்லாதவன் அவமாய் இழிந்து நாளை அவலமாய்க் கழிப்பன்.

குளியாதிருப்பது சுகக் கேடாகின்றது. குளித்தவுடன் மனிதன் ஒரு புதிய தெளிச்சலை அடைகின்றான். குளிப்பினால் உள்ளமும் உணர்வும் விழிப்பாய்க் களிப்படைகின்றன.

நீராடலால் அரிய பல நலங்கள் அமைந்திருத்தலின் உணவு கொள்ளுமுன் குளித்துக் கொள்வது உயர்ந்த நியமம் ஆயது.

நீர் பல கால் மூழ்கல்; நெறி ஒழுகல் எனத் தவசிகளுடைய இயம நியமங்கள் குறிக்கப் பட்டுள்ளமையான் குளிப்பின் தலைமையும் நிலைமையும் தவ சீலமும் தெளிவாய் நின்றன.

பெரும்புலர் காலை மூழ்கிப் பித்தர்க்குப் பத்த ராகி
அரும்பொடு மலர்கள் கொண்டங்கு ஆர்வத்தை உள்ளேவைத்து
விரும்பிநல் விளக்குத் தூபம் விதியினால் இடவல்லார்க்குக்
கரும்பினில் கட்டி போலவார் கடவூர் வீரட்ட னாரே. (தேவாரம்)

அதி காலையில் குளிப்பதே உயர்வாம் என இது உணர்த்தி யுளது. துயிலின் அயர்வை நீக்கிச் செயலில் உயர்வை ஊக்கி வருதலால் காலைக் குளிப்பு கரும யோகத்தின் மருமமாய்க் கருத நின்றது.

குளித்து முழுகிக் குண நீர்மை தோய்ந்து உள்
அளித்து வருக அருள.

தன் வாழ்நாளை உயர்ந்த குறிக்கோளுடன் ஒருவன் கழித்து வர வேண்டிய வகையை இது குறித்து வந்தது.

குளிர் நீரால் தேகம் சுத்தம் அடைகின்றது; குண நீர்மையால் ஆன்மா தூய்மையுறுகின்றது. கருணைப்பண்பு உள்ளத்தைக் கனியச் செய்து உயிரைப் புனிதம் ஆக்குதலால் அருள் தூய்மைக்குத் தாய்மையாய் அமைந்தது. தண்ணீரும் தண்ணளியும் உடலுயிர்களைக் கண்ணியம் செய்து வருகின்றன. அவ் வரவுகள் உறவுகளாயின் உயர் நலங்கள் உளவாம்.

எழுபது வயது நிரம்பிய கிழவி ஒருத்தி முப்பது வயதுடையவள் போல் இளமையும் பொலிவும் எய்தியிருந்தாள். அவளுடைய பேரன் ஒரு நாள் அவளை வியந்து நோக்கி அந்த மேனி நிலைக்குக் காரணம் யாது? என அவளிடம் விழைந்து கேட்டான். அதற்கு அவள் சொன்ன பதில் அடியில் வருவது: "குளிர்ந்த நீரில் நாளும் மும்முறை குளித்து வந்தேன்; தளர்ந்த வயதிலும் இளமை இங்ஙனம் வளர்ந்து வந்துள்ளது" என உவந்து மொழிந்தாள். அம் முதியவள் வாய்மொழி புதிய ஒளி ஆயது.

தண்ணீர் முழுக்கின் நன்னீர்மையை இதனால் நன்கு தெரிகின்றோம். குளிப்பு தேய்ப்பு புசிப்பு என்னும் வளர்ப்பு நிலைகளுள் முன்னது ஆசாரசீலத்தின் முதல படியாயுள்ளது. குளித்த பின்புதான் தேவ பூசை முதலிய புனித காரியங்களைச் செய்ய நேர்வர்.

ஒத்த மரபினன் ஆயினும் குளியாதவனைக் குளித்தவர் தீண்டமாட்டார்; தீட்டு என்று ஒதுங்குகின்றார். குளியாமையுள் தீண்

டாமை குடி புகுந்துள்ளமையை இதனால் உணர்ந்து கொள்ளுகின்றோம். நீசம் புகுவதை நினையாமல் மோசம் போகின்றார்.

நீரால் எய்தும் தூய நீர்மையை எவ்வளவு பேர் இழந்திருக்கின்றனர்! நியமமாய்க் குளித்துவரும் மரபுகள் அறிவின் தெளிவில் தழைத்து வருகின்றன. அங்ஙனம் குளியாத இனங்கள் உணர்வொளி குன்றி இழிந்து நிற்கின்றன. பிறப்பில் ஒத்திருந்தாலும் தூய செயல் வகையால் சிலர் சிறப்பு எய்துகின்றனர்; அவ்வாறு செய்து கொள்ளாமையால் பலர் பரிசுகுலைந்துள்ளனர்.

புசிப்பு பசிக் களைப்பை நீக்குதல் போல் குளிப்பு மனக் கவலையை நீக்குகின்றது. தலையில் தண்ணீர் விடின் குலையில் துன்பம் விடும் என்பது பழமொழி. இழவு வீட்டாரிடம் இவ்வாறு இது உரைக்கப் படுகின்றது. இறந்து போனவரை நினைந்து வருந்தி அழுகின்றவர் அத் தீட்டு மாறவும் துக்கம் தீரவும் நீரில் மூழ்கி வருவது நியமமாய் உள்ளது. நியதியாய் நீராடி வரும் பழக்கம் உயர்ந்த நிலைமையை உணர்த்தி வருகின்றது.

பகுத்தறிவுடைய மனிதர் வாழ்க்கையின் உயர்ச்சி நிலைகளை ஓர்ந்து உணர்ந்து தேர்ந்து முன் வர வேண்டும். தோய்திருந்த தீட்டுப் போக நீராட்டங் கொண்டு சீராட்டுடன் முன் ஏறிய போதுதான் பாரில் யாராலும் பாராட்டப் பெறுவர்.

இனிய குண நீர்மைகளை மருவி நியமமுடன் நின்று அகமும் புறமும் தூயராய் மனிதர் வாழ வேண்டும் என்பது கருதது.

---

359. அழுக்குடையான் என்னும் அவலமொழி யாண்டும்
இழுக்குடைய னாக்கும் இயல்பால்—ஒழுக்கமுடன்
உண்மாசு நீங்கி உயர்க உறுதுயரம்
மண்மாசு நீங்கும் மதி. (கூ)

இ-ள்

அழுக்கன் என்னும் இழிமொழி மிகவும் இழுக்குடையது ஆதலால் அப் பழி யாதும் படியாமல் எவ்வழியும் ஒழுக்கமுடையனாய் உள் மாசு நீங்கி உயர்ந்து கொள்க; எல்லா மாண்புகளும் விரைந்து பெறுவாய் என்றவாறு.

அழுக்கு அசுத்தம் என்பன பிணி வறுமைகளைப் போல் அருவருப்பும் வெறுப்பும் மருவியுள்ளன.

அசுத்தன் என்பது வாழ்வின் இளிவையும் தாழ்வையும் உணர்த்தி அவனை ஒரு ஈன நிலையினனுக் காணச் செய்கின்றது; அதனை .மான மனிதன் மருவலாகாது.

உள் மாசு நீங்கி உயர்க.

என்றது வெளி மாசுகள் மட்டும் நீங்கினுல் போதாது; மனம் மாசு நீங்கி மகிமையுற வேண்டும் என்றவாறு.

உடலை ஓம்புதல், குடி வாழ்க்கை புரிதல், தொழில் முறை நடத்தல் முதலிய நிலைகளில்மாத்திரம் பவித்திரமாய் இருந்தாலும் உள்ளத் தூய்மை இல்லையாயின் அவை செவ்வையாய்ச் சிறந்து நில்லா ஆதலால் சித்த சுத்தியை எத் திறத்தும் நன்கு பேணி வருதல் என்றும் நலமாம்.

சத்தியம் தயை நேர்மை பொறுமை நிராசை அடக்கம் முதலிய குண நலங்களால் மனம் புனிதம் அடையும் ஆதலால் மானச தீர்த்தங்கள் என இவை மதிக்கப் பட்டுள்ளன. இந்த உத்தம இயல்புகளையுடையவன் சித்த சுத்தியாளனுய்ச் சிறந்து விளங்குகின்முன். அகத்தே நல்ல நீர்மைகள் இல்லை ஆயின் புறத்தே எவ்வளவு தீர்த்தங்களில் போய் மூழ்கிக் குளித்தாலும் மனிதன் புனிதனுக முடியாது.

அறத்துறை பயிலும் மானத தீர்த்தம்
ஆடலராகி நீர் ஆடில்

புறத்தழுக்கு ஒழிவது அல்லது புனிதர்
ஆகிலர்; பூந்திரை சுருட்டும்

சிறைப்புன லதனில் முழையுறழ் பகுவாய்த்
தீவிழிக் கூர்எயிற்றிடங்கர்

சுறக்குல முதல அளப்பருங் காலம்
தோய்ந்ததால் துறக்கம் உற்றனவோ?

(காசி காண்டம்)

உள்ளே நல்ல குணங்கள் இல்லாமல் வெளியே குளித்து முழுகி மேனி மினுக்குதலால் மாத்திரம் ஒருவன் சுத்தன் ஆகான்; அப்படி ஆனுல் எப்பொழுதும் நீரிலேயே கிடக்கின்ற மீன் தவளை முதலைகள் யாவும் பரிசுத்த சீவன்களாய் முத்தி அடைந்திருக்குமே! என யுத்தியோடு இது வாதித்திருக்கிறது. அகம் தூய்மை இல்வழி வெறும் வெளி ஆசாரங்களால் வியன் பயன் விளையாது.

சிறந்த குண நலங்களாலும் இனிய எண்ணங்களாலும் மனம் புனிதம் ஆகின்றது; அதனால் உயிர் உயர் நிலையை அடைகின்றது. மாசு நீங்கவே தேசு ஓங்கி ஈசனருள் தேங்குகின்றது.

உண் மாசு நீங்கின் மண் மாசு நீங்கும் என்றது சித்தம் சுத்தியாயின் பிறவித்துயர் நீங்கிச் சிவன் முத்தி எய்தும் என்னும் உண்மை உய்த்துணர வந்தது.

தீய நினைவுகளை நினைந்து உன் உள்ளத்தைத் தீங்கு படுத்தாதே; யாண்டும் நல்லனவே எண்ணி நன்மை பெறுக.

" Purity in thought, speech and act is absolutely necessary "

"எண்ணம் சொல் செயல்களில் புனிதமாயிருப்பது தனி மகிமையுடையது" என விவேகானந்தர் இங்ஙனம் உரைத்திருக்கிறார். மாசு படியாமல் தேசு படிக.

மனத்தில் அழுக்கற்றார் மாதவத்தர்; அல்லார்
கனத்த தவவடிவம் காட்டி—வனத்தில்
தனித்திருந் தாலும் தவமகிமை காணார்
இனித்த மனமே இதம்.

என்னும் இதனால் மனத் தூய்மையின் மகிமை தெளிவாம்.

---

360. தூயநடை தூயவுடை தூயமொழி தூயசெயல்
தூயநிலை யாவும் தொடர்ந்துமே—நேயம்
புரிந்து வருக புனிதனருள் உன்னைத்
தெரிந்து வருமே தெளிந்து. (ம)

இ-ள்

நடை உடை மொழி செயல் இயல் முதலிய எல்லா நிலைகளிலும் தூய்மையுடையனாய் நின்று யாண்டும் அன்பு புரிந்து வருக; இறைவன் அருள் உன்னை நாடி ஓடி வரும் என்றவாறு.

உலக வாழ்க்கையின் பலவகை நிலைகளிலும் பண்பு படிந்து புனிதனாய் ஒழுகிவரின் மனித வாழ்வு இனிமையும் இன்பமும் பெருகித் தனி மகிமை அடைகின்றது.

உடலில் புனைவனவும், உள்ளே கொள்ளுவனவும், உறையும் இடங்களும், உரை செயல் யாவும் தூய்மையா யிருக்க வேண்டும். தன்னைச் சார்ந்த எதையும் சுத்தமாக வைத்துக் கொள்ளும் பழக்கம் உத்தம மனித வாழ்க்கையாய் உயர்கின்றது. அசுசி அடையாமல் பழகிவருவதில் சுசியுடைமை வளர்ந்து வருகின்றது.

சுகியாய் இருப்பதினும் சுசியாயிரு எனத் தனது அருமை மகனுக்கு ஒரு தந்தை இவ்வாறு அறிவு கூறியிருக்கிறான். தேக போகங்களில் திளைத்திருப்பவன் இறுதியில் பரிதாபமாய் இளைத்து விழ்கின்றான்; ஆன்ம சுத்தியாய் அமர்ந்துள்ளவன் மேன்மை மிகுந்து என்றும் குன்றாத மெய்ப் பேறு பெறுகின்றான்.

உள்ளம் புனிதமுற உயர் நலங்கள் வெள்ளமாய் விரிந்து விளைகின்றன. தீய மயல்கள் ஒழிந்து தூய செயல்கள் வளர்ந்து வரவே உயிர்ப் பயிர்கள் செழித்து ஒளி வீசி எழுகின்றன.

நேயம் புரிந்து வருக என்றது எல்லாவுயிர்களிடமும் அன்பாய் இரங்கி ஆதரவு செய்து வருதலை. சீவ தயையுடையானிடம் தெய்வ அருள் தானாகவே வந்து பெருகுகின்றது.

புனிதன் அருள் உன்னைத் தெரிந்து வரும்.

என்றது அன்புடையவன் அடையும் அதிசய வைபவம் அறிய வந்தது. பிறவுயிர்கள்பால் இரங்கி இனியனாய் மனிதன் அன்பு செய்து வரவே அவன் புண்ணிய சீலனாய் உயர்கின்றான்; எண்ணிய இன்ப நலங்கள் யாவும் அவன்பால் எளிதே வந்துசேருகின்றன. பரமனது கிருபை அவனுக்குத் தனிஉரிமை ஆகின்றது. ஆகவே அவன் பேரானந்தமுடையனாய்ப் பெருகி நிற்கின்றான்.

தான் சுகமாய் இருக்க வேண்டும் என்றே மனிதன் யாண்டும் மூண்டு முயன்று வருகின்றான். இரவும்பகலும் உயிர்கள் படுகின்ற பாடுகள் எல்லாம் இன்ப வரவை எதிர் நோக்கியே என்பது எங்கும் அனுபவமாயுள்ளது. அவ்வரவுகளை அன்பு அருள்கின்றது.

நோய் வறுமை பாவம் என்பன துன்ப நிலையங்கள் ஆதலால் அவை யாதும் அணுகாதபடி தன்னை மனிதன் பாதுகாத்து ஒழுக வேண்டும். நோயால் தேகமும், வறுமையால் வாழ்வும், பாவத்தால் உயிரும் பாழ்படுகின்றன.

நோய் உறின் உடல் நிலை கெடும்; அது கெடவே யாவும் கேடாம். அக் கேடு நேராவகை நாடி ஒழுகுக.

உடம்பார் அழியில் உயிரார் அழிவர்;
திடம்பட மெய்ஞ் ஞானம் சேரவும் மாட்டார்;
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே. (திருமந்திரம்)

உடம்பைத் தூய்மையாகப் பேணி ஒழுகுபவனே உயிரை இனிது பேணினவனுவான் எனத் திருமூலர் இவ்வாறு உணர்த்தியுள்ளார். யோக ஞானங்களுக்கு இனிய சாதனங்களாய் அமைந்துள்ளமையால் தேக நலங்கள் யாவராலும் உரிமையோடு கருதப் படுகின்றன. சுவரை வைத்துச் சித்திரம் என்றபடி எவரும் உயர் நிலையை அடைதற்கு உடல்கள் இயல் உரிமைகளாய் அமைந்திருக்கின்றன. உரிய கருவிகள் ஊறுபடின் அரிய காரியங்கள் மாறுபட்டு அவமே கெடும். பிணி மெலிவு முதலிய பிழைபாடுகள் நுழையாமல் தேகத்தை யாண்டும் நன்கு பாதுகாத்து வருதல் யாவர்க்கும் நலமாம்.

உயிர்நிலைய மான உடல்நோய் உறின்றே
துயர்நிலைய மாகும் துணி.

என்னும் இதனுல் பிணியின் பெருங்கேடு தெரியலாகும். நோய் தீயது ஆதலால் அஃது இல்லாத வாழ்வு நல்ல புண்ணியப் பேருக எண்ணப் பட்டுள்ளது.

"நோய் அற்ற வாழ்வு நான் வாழ வேண்டும்" என இராம லிங்க அடிகள் கடவுளிடம் இங்ஙனம் வேண்டியிருத்தலால் நோயுடையது எவ்வளவு தீயது! என்பது எளிது தெளிவாம்.

நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் என்னும் முதுமொழி நோயின்மையின் மேன்மையை நன்கு விளக்கியுள்ளது. புறந்தூய்மையால் பெரும்பாலும் நோய்கள் ஒழிந்துபோகின்றன. உணவும் காற்றும் உடையும் இடமும் சுத்த முடையனவாய் இருப்பின் அங்கே இனிய ஆரோக்கிய வாழ்வு தனியே மேலோங்கி நிற்கும். தூய காற்றை உட்கொள்ளுவதால் இரத்தம் சுத்தி ஆகின்றது; ஆகவே தேகம் எங்கும் அது நன்கு பரவி நலம் பல தருகின்றது.

காலை மாலைகளில் வெளியே உலாவி வருவது சாலவும் நல்லது.

காலை நடை காலுக்குப் பலம்;
மாலை நடை மனதுக்கு நலம்.

என நடையின் பயனை அனுபவித்துள்ள ஆங்கிலப் புலவர் ஒருவர் தமது பிரசங்கத்தின் இடையே அவையில் இவ்வாறு உரையாடியிருக்கிறார். இதனுல் திறந்த வெளியில் நாளும் நடந்து வருதலால் உடல் உயிர்களுக்கு உளவாம் ஊதியங்கள் உணரலாகும். கருமமும் தருமமும் அருமை நலங்களை அருளுகின்றன.

தூய நடை என்றது பரிசுத்தமான நல்ல ஒழுக்கத்தைக் குறித்ததோடு தூய காற்றோட்டத்தில் நியமமாக உலாவி வருதலையும் உணர்த்தி நின்றது.

ஓடி நடந்து உலாவி வருதலினால்
நாடி நரமபெங்கும் நன்காகும—நீடிவரும்
ஆயுள் வலிதாம் அகம்புறமும் நன்மையாம்
தோய்க நடையைத் தொடர்ந்து.

எனவரும் இந்த மருத்துவமுறையைக் கருத்துடன் தெரிந்து நடந்து கொள்க. இருவகை நடையும் மனிதனுக்கு இனிய திருவுடைமையாய் மருவியுள்ளன.

காலநடந்து கால்பருகிக் கைதழுவி மெய்யொழுகின்
கோல்நடந்து காணா குனிந்து.

நியமமாய் நடந்து நெறி முறை ஒழுகுபவர் என்றும் திடதேகிகளாய் இருப்பர் என நடையின் பயனை இஃது நன்கு உணர்த்தியுள்ளது. கால் = காற்று. கை = ஒழுக்கம்.

Walking is healthy. "நடத்தல் நல்ல சுகம்" என மேல் நாட்டாரும் உலாத்தலைக் குறித்து இங்ஙனம் உரைத்திருக்கின்றனர். நோய்கள் அணுகாமல் உயிர்களைப் பாதுகாத்து வருதலால் ஆரோக்கிய வாழ்வை யாவரும் வியந்து கொள்ளுகின்றனர்.

நல்ல பழக்கங்களைப் பழகி நெஞ்சம் தூயனாய் நின்று எவ்வுயிர்க்கும் நேயம் புரிந்து வரின் அம் மனித வாழ்வு பரம புனிதமுடையது; அந்தப்பாக்கியவான் இறைவன் அருளை இனிதடைந்து யாண்டும் இன்ப நலங்களை எய்தி மகிழ்கின்றான்.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

மனம் புனிதம் ஆயின் மனிதன் தெய்வம் ஆகிறான்.
சுத்தன் என்பது கடவுளுக்குப் பெயர்.
சித்த சுத்தி முத்தி அருளும்.
அதனால் எல்லா நலங்களும் உளவாம்.
எவ் வழியும் மேன்மையாம்.
யாண்டும் இன்பமாம்.
ஈசன் வாசமாம்.
தேக சுத்தியால் போகம் சித்தியாம்.
உள் மாசு நீங்கின் உயிர் தேசு ஓங்கும்.
பரமான்மாவாய் வர முயர்ந்து விளங்கும்.

௩௬-வது தூய்மை முற்றிற்று.

# முப்பத்தேழாம் அதிகாரம்.

## நேயம்.

அஃதாவது அன்பின் அமைதி. உயிர் உருக்கமான உள்ளக் கனிவை இது உணர்த்துகின்றது. தூய்மையும் நேயமும் உயர்ந்த ஆன்மபரிபாகங்களாய் அமைந்து பாலும் சுவையும் போல் பண்பும் பயனும் பதிந்திருத்தலால் அதன் பின் இது வைக்கப்பட்டது.

**361.** அன்பின் அளவே அரியவுயிர் மாண்பெய்தி
இன்பம் அளவி இருக்குமால்—அன்புயிரின்
சாரம் அஃதின்றேல் சக்கை எனநின்று
தூரம் இழியும் தொலைந்து. (க)

இ-ள்

அருமையான உயிர் அன்பின் அளவே பெருமையும் இன்பமும் பெருகி மிளிர்கின்றது; அன்பு உயிரின் சாரமாயுள்ளது; அஃது இல்லாத வாழ்வு சாரமற்ற சக்கையாம் என்றவாறு.

இது உயிரின் உயர் பண்பை உணர்த்துகின்றது.

அன்பு என்பது ஆன்மாவின் கனிவான இனிய இயல்பு. இந்தப் பண்பு எவ்வளவுக்கு எவ்வளவு அமைந்துள்ளதோ அவ்வளவுக்கு அவ்வளவு அந்த உயிர் இன்ப நிலையில் உயர்ந்து ஒளிர்கின்றது. உள் ஈரம் வெளி நீரமாய் விரிந்து மிளிர்கின்றது.

மணம் நிறைந்த மலரைப் பலரும் விழைந்து போற்றுகின்றனர்; அன்பின் குணம் நிறைந்தவரை உலகம் உவந்து கொண்டாடுகின்றது.

அன்பு என்னும் சொல்லுக்குப் பொருள் இனிய உள்ளக் கனிவு என்பதே. கனிந்தது கனி எனப் பழத்தின் முதிர்ந்த நிலையைக் குறித்து நிற்றல் போல் இந்த அன்பு பக்குவம் நிறைந்த உயிரின் உயர்ந்த நிலைமையை உணர்த்தி யுள்ளது.

நெஞ்சம் நெகிழ்ந்து பாய்ந்து எங்கும் கனிவாய் இனிய நீர்மை புரிந்து வருதலால் நேசம் பாசம் நேயம் பரிவு எனப் பல நாமங்களை அடைந்து உலக வழக்கில் அன்பு நிலவி நிற்கின்றது.

அளிநார் சங்கம் நேயம் அனபே
பாசம் என்றும் பேசப படுமே. (பிங்கலந்தை)

பரிவு நார் வாரம் ஈரம் பற்று அளி பாசம் அன்பாம்
புரிவு ஆணம் நேயமும் பேர். (நிகண்டு)

முன்பிருந்த பிங்கல முனிவர் அன்புக்கு ஐந்து பெயர் குறித்தார்; பின்பு வந்த மண்டல புருடர் அதற்குப் பத்துப் பெயர் வரைந்து காட்டியுள்ளார். பேர்கள் எல்லாம் காரணம் மருவி வந்துள்ளன. மூல மேவர்களைத் துருவி நோக்கின் இருதயங்கள் உருகி ஒழுகியுள்ள பரிபூரண அமைதிகளை உணரலாகும்.

அந்தக்கரணத்தின் பிரிய வடிவமான இனிய உணர்ச்சியே அன்பு என வழங்கப் படுகின்றது. சார்பு பற்றிப் பல பெயர்களை இது மருவலாயது. உற்ற தொடர்புகள் உரிமையில் எழுந்தன.

தன்னைப் பெற்ற தாய் தந்தையர் மேல் ஒருவன் உள்ளப் பிரியம் மருவியபொழுது அது பரிவு என வந்தது. மனைவியிடம் நேரின் காதல்; மக்கள்பால் உறின் பாசம்; ஒக்கல் மேல் எழின் வாஞ்சை; எளியவரிடம் சேரின் அளி; துயரமுடையவர்பால் படின் இரக்கம்; தாழ்ந்த பிராணிகள் மேல் சாரின் தயை; ஒத்தவர்பால உறின் நேசம்; உயர்ந்தவர் பாலாயின் ஆர்வம்; பொருள்கள்பால் புகின் பற்று; தெய்வத்தின் மேல் வைப்பின் பத்தி என இவ்வாறு பல பிரிவுகளாய் அனபு பரவியுள்ளது.

இத்தகைய அன்பையுடைய உயிரே பண்பு சுரந்து என்றும் இன்பம் கனிந்து மிளிர்கின்றது. நீருக்குத் தண்மையும் தேனுக்கு இனிமையும பூவுக்கு மணமும் போல் ஆன்மாவுக்கு அன்பு பான்மை படிந்து மேன்மை புரிந்து வருகின்றது..

இந்த அருமைப்பண்பு குன்றிய பொழுது ஒளி குன்றிய விழிபோல் மனிதன் பழிதுன்றி இளிவுறுகின்றான்.

பாலும் மணமும் பசுமலர்பால் அன்புயிரின்
மேல்மணந்து நிற்கும் மிகுந்து.

பாலால் பசுவும் மணத்தால் மலரும் மாண்புறுதல் போல் அன்பால் உயிர் மகிமையுறுகின்றது என இது உணர்த்தியுளது. அன்பு இல்லாத மனிதன் மணம் அற்ற மலராய்க், குணங்கெட்ட மலட்டுப் பசுவாய் இழிக்கப்படுவான் எனபது பெறப்பட்டது.

அன்பு உயிரின் சாரம்; அஃது இன்றேல் சக்கை.

என்றது அன்புக்கும் உயிருக்கும் உள்ள உறவுரிமையை ஊன்றி நோக்கி உணரவந்தது. கரும்புக்குச் சாரமும் கனிக்குச் சுவையும் போல் உயிர்க்கு அன்பு இனிமை சுரந்துள்ளது. அந்தச் சாரங்கள் நிறைந்து நிற்கும் அளவே அவை சிறந்து மதிக்கப் படுகின்றன. சுவைகள் குறைந்த பொழுது அசாரங்களாய் அவலமடைகின்றன. அவ்வாறே அன்பின் உண்மை இன்மை களால் உயிர்கள் முறையே உயர்வு தாழ்வுகளை உறுகின்றன.

என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம். (குறள், 77)

என்பு இல்லாத புழு வெயிலில் எரிந்து துடித்தல் போல் அன்பு இல்லாத உயிர் தரும தேவதை முன் பரிந்து பதைக்கும் எனத் தேவர் இங்ஙனம் உணர்த்தியிருக்கிறார். அன்பு இன்மை எவ்வளவு பாவம்! எவ்வளவு துன்பம்! எவ்வளவு கேடு! என்பதை இதனால் நன்கு அறிந்து கொள்ளலாம்.

அன்பு எவ்வழியும் பூத தயையாய் விரிந்து யாண்டும் ஆதரவு புரிந்து வருதலால் அதிலிருந்து புண்ணியங்கள் விளைகின்றன; விளையவே பாவக் கட்டுகள் ஒழிந்து போகின்றன; போகவே ஆன்மா மேலான இன்ப நிலையை மேவி மகிழ்கின்றது.

"The redeemer and instructor of souls, as it is their primal essence, is love." (Worship)

"அன்பு உயிர்களின் மூலசத்தாயுள்ளமையால் ஆன்மாக்களை ஒளி செய்து உய்தி புரிந்தருளுகின்றது" என எமர்சன் இவ்வாறு கூறியிருக்கிறார். சீவசஞ்சீவியாய் மேவியுள்ளமை தெரிய வந்தது.

பயிர்க்கு நீர் போல் உயிர்க்கு அன்பு உறுதி புரிகின்றது.

அன்பின் அளவே உயிர் இன்ப நலனை மருவுகின்றது என்றதனால் அன்பு இல்வழி அது துன்ப நிலையில் சுழன்று உழலும் என்பது தெளிவாய் நின்றது. உரிய இயல்பு ஒழியவே பெரிய இழிவாய்க் கழிந்து படுகின்றது.

உள்ளம் இளகிக் கனியாவழி மனிதன் கல்லாய் இரும்பாய்க் கடிய வன விலங்காய்ப் பொல்லா நிலையில் முடிவுறுகின்றான்.

"கல்லனும் ஐய! ஒரு காலத்தில் உருகும்; என்
கல்நெஞ்சம் உருக இலையே!

கருணைக்கு இணங்காத வன்மையையும் நான்முகன்
கற்பிக்க ஒரு கடவுளோ? ''

எனத் தாயுமானவர் இங்ஙனம் அலறியிருக்கிறார். அன்பின் பெருமையை நன்கு உணர்ந்தவர்; அதனைப் பரிபூரணமாகத் தான் அடையவில்லையே! என ஏங்கி நொந்து தன் பிறவியை இங்ஙனம் இகழ்ந்துள்ளமையால் அவரது உள்ளப் பண்பையும் உயிரின் ஆவலையும் நாம் உணர்ந்து கொள்ளுகின்றோம்.

அன்புப் பிறப்பே இன்பப் பிறப்பு; அல்லாதது துன்பப் பிறப்பு ஆதலின் அது தொலைக என நல்லோர் எல்லாராலும் சொல்ல நேர்ந்தது.

அன்பு உயிரின் இன்ப ஊற்று; அதனை மருவியுள்ள அளவே மனம் மணம் பெறுகின்றது; குணம் பெருகுகின்றது; புனிதன் இனியன் புண்ணியன் கண்ணியன் தண்ணளியாளன் என மனிதனை அது மாண்புறுத்தியருள்கின்றது.

" As much love, so much mind."

"அன்பு எவ்வளவோ அவ்வளவே மனம்" என இத்தாலிய நாட்டுத் தத்துவ ஞானி ஒருவர் இவ்வாறு கூறியிருக்கிறார்.

அன்பு இல்லை ஆனால் முரடுபட்டு மாட்டு மதியாய் மனம் மடிந்து போம் என்பது இதனால் முடிந்து நின்றது.

அன்பு சிவ அமுதம்; அதனை மேவியுள்ள அளவே மனிதன் தேவியல்பமைந்து திவ்விய மகிமை பெறுகின்றான்.

அன்பை மருவிய அளவுதான் மனம் புனித உருவமாய் இனிது திகழ்கின்றது; அது குறையின் சிறுமையுற்றுச் சீரழிகின்றது; நிறையின் பெருமைபெற்றுப் பேரின்பமும் நுகர்கின்றது; மனிதனது மாட்சியெல்லாம் அன்பின் ஆட்சியளவே அமைந்துள்ளமையால் அவ்வுண்மையை ஓர்ந்து உரிமை செய்து கொள்ளுக.

---

362. என்பமைந்த யாக்கை எடுத்துவந்த திங்குநாம்
அன்பமைந் துய்ய அறிமினோ—என்புடலை
முன்னம் இருவர் முதலன்பைப் பேணவிடுத்
தென்ன பயனடைந்தார் எண். (உ)

இ-ள்

இங்கே சிறந்த மனித உடம்பில் நாம் பிறந்து வந்தது எவ்வுயிர்க்கும் அன்பு புரிந்து உய்தி பெறவேயாம்; தாம் எய்தி

யிருந்த உடம்புகளை விடுத்து அன்பு ஆற்றி முன்னம் இருவர் பெற்ற இன்ப நிலையை உணர்ந்து உய்ய வேண்டும் என்றவாறு.

இது, அன்பு புரிவதே அரிய பிறவிப் பேறு என்கின்றது.

என்பு அமைந்த யாக்கை என்றது அன்பு அமைய வந்த இந்தப் பிறவியின் அருமை அறிய வந்தது. என்பு இல்லாத புழு பூச்சி முதலிய இழிந்த பிராணிகளாய்ப் பிறந்து கழிந்து படாமல் உயர்ந்த உணர்வு நலம் கனிந்த சிறந்த மனித உருவில் தோன்றியதைச் சிந்தித்து நோக்கின் இத் தோற்றத்தின் ஏற்றமும் ஊற்றமும் உணரலாகும். தோன்றிய பயனைத் தோய்ந்து கொள்ள வேண்டும்.

பிற பிறவிகளினும் இது அவயவங்கள் நன்கு அமைந்தது; எதையும் கருதி நோக்கும் கருத்து மிக உடையது; உறுதியான அறிவு ஆற்றல்கள் தோய்ந்தது; விதி விலக்குகள் வாய்ந்தது; செய்வது தவிர்வது தெளிந்து உய்தி காண உரியது; இத் தகைய அருமை நலங்கள் யாவும் உரிமையுடன் வாய்ந்த இந்த மனிதப் பிறப்பு அன்புடைமையால் பண்பு பல படிந்து பெருஞ் சிறப்பினை அடைகின்றது. ஆதலால் அன்பு புரிவதே இந்த அரிய பிறவியின் பெரிய பயனாய் மருவி நின்றது.

> அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
> என்போடு இயைந்த தொடர்பு. (குறள், 73)

என்றது பொய்யாமொழி. உய்தியை உரிமையுடன் உணர்த்தியுள்ள இதனை ஊன்றி உணர்ந்து சிந்திக்க வேண்டும்.

அருவமான அரிய உயிர் உருவமான இந்த உடலில் புகுந்து இங்கே வந்தது அன்பு செய்யவேயாம் என்றமையால் அது செய்யாவழி இத் தோற்றம் வெய்யதாய் வீணே இழிந்து படும் என்பது விளங்கி நின்றது.

உடம்போடு கூடி அல்லது அன்பு செய்ய முடியாது ஆதலால் அதற்குத் தகுதியான வடிவை அது தாங்க நேர்ந்தது.

மாடு ஆடு முதலிய வேறு உடம்புகளை மருவின் அறிவோடு அன்பு செய்ய இயலாது ஆதலின் மனித உடம்பை உரிமையாகத் தழுவிக் கொண்டது. தழுவியது பழுதாகாமல் விழுமியது கெழுமியது. உய்தி உறவே உயர் மெய் எய்தியது.

இங்ஙனம் உயர்ந்தபிறப்பை அடைந்து நிற்கின்ற உயிர் சுருந்த அன்பைச் செய்து கொள்ளின் பின்பு வேறே பிறந்துபடாமல் சிறந்த பேரின்ப நிலையை விரைந்து பெற்றுக் கொள்ளுகின்றது.

அன்பு யாண்டும் பிறர்க்கு இதமாய் நீண்டு விரிகின்றது அதன் ஒவ்வோர் அணுவும் இன்பத் துளிகளாய்ப் பாவி வருத லால் அது எங்கும் புண்ணியக்கடலாய்ப்பொங்கி மிளிர்கின்றது; ஆகவே பேரின்பச் சுவையை ஆன்மா நுகர்ந்து மகிழ்கின்றது.

இவ்வாறு சிறந்த ஊதியமாய் அன்பு அமைந்திருத்தலால் அதனை விழைந்து புரிவது ஆருயிர்க்கு அமைந்த உரிமை ஆயது.

தானமும் தருமமும் தவமும் ஞானமும் உயிர்க்கு உறுதி யாய் உய்தி புரிவன ஆயினும் அன்பைப் போல் அவை எளிதில் இன்ப நலனை ஈந்தருளா. பொருளைச் செலவழித்துப் புலன்களை அடக்கிப் பட்டினி கிடந்து உடம்பை வாட்டிப் படாதபாடுகள் பட்டபின்பு முடிவில் சிறிது பலனைக் காட்டும் அவற்றினும், யா தொரு பாடும் படாமல் கருதிய உடனேயே அரிய உறுதி நலங் களையும் பெரிய இன்பங்களையும் ஒருங்கே விளைத்தருளுகின்ற அன்பு எவ்வளவு அதிசயமுடையது!

இதயம் சிறிது கனியவே அரிய நலங்கள் யாவும் எளிதே உதயம் ஆகின்றன. தெய்வ கிருபையும் கைவந்து சேர்கின்றது.

"அன்பினுக்கு எளிவந்த அமுதே!" என இறைவனைத் துதித் திருத்தலால் அன்பின் அற்புத நிலைமையை அறியலாகும்.

என்பு தோல் உடை யார்க்கும் இலார்க்கும் தம்
வன்பகைப்புலன் மாசற மாய்ப்பது என்?
முன்பு பின்பின்றி மூவுலகத்தினும்
அன்பின் அல்லதுஓர் ஆக்கம் உண்டாகுமோ? (இராமாயணம்)

வசிட்ட முனிவர் இராமபிரானுக்கு உரைத்த படியிது.

தம் புலன்களை அடக்கிக் கடவுளரை நோக்கிக் கடுந்தவங்கள் புரிவதினும் எவ்வுயிர்க்கும் இரங்கி அன்பு செய்துவரின் அதனால் எல்லா இன்ப நலங்களும் எளிதே வந்து சேருமே! என மக்க ளுக்கு இதமான ஓர் ஞானஉபதேசமாய் இது இசைந்திருக்கிறது. ஒரு அரிய தவசி வாயிலாக அன்பின் பெருமையைக் கம்பர் இங்ஙனம் காட்டியுள்ளார். காட்சி கருதி யுணர வுரியது.

அன்பு அல்லது வேறு ஓர் ஆக்கம் இல்லை என்றதனால் அது எவ்வளவு பெரிய பாக்கியம்! என்பதை எளிதின் உணர்ந்து கொள்ளலாம். உயிர்க்கு எவ்வழியும் உய்வைத் தருதலால் இது தெய்வத் திரு என நின்றது.

பிற உயிர்களுக்கு இரங்கி அருளும் இயல்பினை யுடையவர் தமது உடல் பொருள் ஆவி அனைத்தையும் உதவ நேர்கின்றனர்.

அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு. (குறள், 72)

என அன்பாளரது பண்பாட்டினைத் தேவர் இவ்வாறு கண் காட்டி யுள்ளார். ததீசி முனிவரிடம் இந்திரன் ஒருமுறை வந்து குறையிரந்து நின்றான். தமது உடலிலுள்ள ஒரு எலும்பால் அவனது குறை நீங்கும் என்று தெரிந்ததும் உடனே யோக சித்தியால் தமது இனிய உயிரை நீக்கி முனிவர் உதவி புரிந்தார். அந்தப் பேரன்பாளர் புரிந்த ஆருயிர் உதவியை வியந்து யாவரும் புகழ்ந்தனர். தேவ தேவரும் அவரை ஆவலுடன் போற்றிமகிழ்ந் தனர். அத் தூயவர் நேயமுடன் நல்கியது நிலை மிக உயர்ந்தது.

நேய என்பு இந்திர நீ கொள்வாய்! எனத்
தாயினும் அன்புறு ததீசி என்பவன்
ஏயவெங் கானலின் நீடு நீர் எனும்
காயம்விட்டு அரிகழல் கலந்து மேயினான். (1)

மன்பெரும் சிறப்பினான் மாலை வெண்குடை
மின்பொழி மணிமுடி வேந்தன் நலகுளனு
என்பும் ஆங்கு அளித்தனன் இருந்தவத்தினான்
அன்பினர் யாதுமற்று அருள்க லாதவே. (2)

(பாகவதம், 6-6)

ததீசியின் அன்புநிலை இங்ஙனம் பண்பு படிந்துள்ளது.

சீமூதவாகன் என்பவன் மிகுந்த கண்ணோட்ட முடையவன். ஓரறி வுயிரும் ஊறுபடச் சகியாத பேரருளாளன். ஒரு நாள் பெரிய மலைச் சாரல் அயலே இவன் செல்லுங்கால் அங்கு ஓர் முதியவள் தனியே அழுது கொண்டிருந்தாள். அருகே அணுகிப் பரிவுடன் வினவினான். தான் அழுதற்குரிய காரணத்தை அவள் தெளிவாகச் சொன்னாள்: "இப் பக்கத்தே பறவை உருவில் அதி சயமான ஓர் பூதம் உள்ளது. இவ் வூரிலிருந்து ஆண்டுக்கு ஒரு

முறை அதற்கு ஓர் ஆடவனைப் பலி கொடுப்பது வழக்கம். வீட்டின் கணக்குப்படி அந்த முறை எனக்கு வந்துள்ளது. ஒரே ஒரு மகனையே வைத்திருக்கிறேன். நாளை நின்று இவ் வேளையில் இம் மலைக்கு அனுப்ப வேண்டுமே! என்று நினைந்து அழுகின்றேன்; என் நெஞ்சம் துடிக்கின்றதே; நான் என் செய்வேன?'' என அவள் ஏங்கி மொழிந்தாள். அம் மொழியைக் கேட்டதும் இவன் உள்ளம் உருகி நின்றான். ஆளைக் கொண்டு வந்து பலியிடுகிற நேரத்தையும் முறைகளையும் விவரமாக அவளிடமே வினவித் தெரிந்து கொண்டான். அவளைத் தேற்றி அனுப்பினன். ஒரு நாள் கழிந்தது. மறு நாள் குறித்த நேரத்திற்கு ஒரு நாழிகைக்கு முன்னதாகவே தனியே இவன் விரைந்து சென்று உடல் முழுதும் வெள்ளை உடையால் போர்த்துக் கொண்டு அந்தப் பலிப் பாறையில் படித்திருந்தான். பறவை வந்தது; எடுத்துச்சென்றது. தனது இருப்பிடத்திற்குக் கொண்டுபோய் உடல் முழுவதையும் கொத்திக் கொத்தித் தின்றது. அதன் பசி முழுவதும தீர்ந்தபின் இவன் முகத்தைப் பார்த்தது. உயிர் போகாமல் மலர்ந்த முகத்துடன் உவந்திருக்கும் இவனது நிலைமையைக் கண்டதும் அது வியந்து நின்று விவரம் கேட்டது. இவன் உற்ற உண்மையை முற்றும் உரைத்தான். இவனுடைய கருணைப்பண்பை அறிந்ததும் அது நெஞ்சம்இரங்கி வருந்தியது; தன் வாழ்க்கை நிலையை இகழ்ந்தது. அன்று முதல் யாதொரு ஊனையும் தின்பது இல்லை என்று உறுதி செய்து விரதம் கொண்டது. தனது மந்திர சத்தியால் இவனது உடலைப் பழையபடியே வளரச் செய்தது. இவனை வாழ்த்தி நிறுத்தி விட்டு விந்தமலைக்கு அது தவம் செய்யச் சென்றது. இவனுடைய அன்புடைமையினல் கொடிய பூதமும் இனிய நீர்மையாய்க் குணம் அடைந்தது; பலி செலுத்தி வந்த அவ் வூரவர் யாவரும் உள்ளம்களித்து உவந்து துதித்து இவனைக் குல தெய்வமாக நினைந்து வணங்கிப் போற்றி வாழ்த்தி வந்தனர்.

இன்னுயிரினும் இனியதாக அன்பொழுக்கத்தை இன்ன வாறு இவர் பேணி வந்துள்ளமையால் முன்னம் இருவர் என ஈண்டு எண்ண நேர்ந்தார். அன்புடையார் எவரும் பேரின்ப நிலையைப்பெறுகின்றார். அந்தப்பண்புபடிந்து பரமபதம் அடைக.

363. அரிய பிறவி அடைந்தும் அதனால்
உரிய பயனை உறாமல்—பெரிய
பிழைபெருக்கி நின்றார் பிழைக்கமதி அற்றார்
கழையெருத்தில் பூத்த களே. (௩)

இ-ள்

அரிய மனிதப் பிறவியை அடைந்து வந்தும் அதனால் அடைய உரிய இனிய பயனைப் பெறாமல் வீணே பிழைகளை விழைந்து புரிந்து பிழைக்க மதி அற்றவராய்த் தம் வாழ்நாளைப் பாழ்படுத்திப் பலர் பரிதாபமாய்ப் பழி படுகின்றார் என்றவாறு.

உயிர் நிலையமான இந்த மனித உடம்பு உயர் நிலையது. இயல் பாக எளிதில் எய்தியது அன்று; பல படிகளைக் கடந்து முடிவில் அருமையாக அடையப் பெற்றது. பெருமை மிக உடையது. தன்னையும் தலைவனையும் அறிந்து இன்னல்கள் நீங்கி இன்ப நிலையை அடைதற்கு இனிய சாதனமாய் அமைந்துள்ளமையான் இம் மனித சன்மம் புனிதமானது என வானவரும் வியந்திருக்கின்றனர். புல்லிய பிறவிகள் எல்லாம் தப்பி இந்த நல்ல பிறவியை அடைந்தது சொல்ல முடியாத ஓர் பேருதியமாம்.

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பலவிருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன் எம்பெருமான்
மெய்யேஉன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்."

(திருவாசகம்)

மரம் கொடி செடி புழு முதலிய நிலைகள் பலவும் கடந்து உயர்ந்த மனிதப் பிறவியை அடைந்து இறைவனை நினைந்து உருகி இன்பம் காணும் பேறு எவ்வளவு அரிது என்பது இதனால் அறிந்து கொள்ளலாம். உற்றதும் உறுவதும் உய்த்துணரவுரியன.

இழிந்தன யாவும் கடந்து உயர்ந்த சன்மத்தை அடைந்தவர் அதனால் அடையவுரிய நன்மையை அடைந்திலராயின் அவரது இழவும் இழிவும் எவ்வளவு கொடியன!

"இப் பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ?
யாது வருமோ அறிகிலேன்?"

எனத் தாயுமானவர் இப்படி மறுகியிருக்கிறார். அரிய பிறவிப் பயனை விரைவில் பெற வேண்டும் என உத்தம உள்ளங்கள் எல்லாம் ஒரு முகமாய் உருகித் துடித்திருக்கின்றன.

பெறுதற்கு அரிய பிறவியைப் பெற்றும்
பெறுதற்கு அரிய பிரானடி பேணார்
பெறுதற்கு அரிய பிராணிகள் எல்லாம்
பெறுதற்கு அரியதோர் பேறிழந் தாரே. (திருமந்திரம்)

பூக்கைக் கொண்டுஅரன் பொன்னடி போற்றிலார்;
நாக்கைக் கொண்டு அரன் நாமம் நவில்கிலார்;
ஆக்கைக்கே இரை தேடி அலமந்து
காக்கைக்கே இரை யாகிக் கழிவரே. (தேவாரம்)

அழியும் ஆக்கையொ டேஅழி யாப்பதம்
கெழுமு வார்பெற்ற தேநல்ல கேள்வியும்
அழியும ஆக்கை தனை அழியாது என
விழுவரே நரககுழி வெய்யரே. (சிவதருமோத்தரம்)

எய்தற்கரிய யாக்கைதனக்கு எய்திற்று என்றால் அது கொண்டு
செய்தற் கரிய அறங்களபல செயது துயர்கூர் பிறவியினின்று
உய்தற்கு ஒருமை பெறஎண்ணாது உழல்வோன் உடம்புபொற்கலத்தில்
பெய்தற் குரிய பாலகமரில பெயதது ஒக்கும் என்பரால்.
(பிரபுலிங்க லீலை)

மந்திரவாள் பெற்றும் பகைவெல்லான் மற்றதுகொண்டு
அநதோ தன மெய்யை அரிந்தான்போல்—இநதஉடல்
கொண்டுமுத்தி செலலுமகுறிப்பின்றிச் சிற்றின்பம்
கண்டுவினைக் காளாம் கணக்கு, (சித்தாந்த கரணம்)

இவை ஈண்டு ஆழ்ந்து படித்து ஆராய்ந்து சிந்திக்கத் தக்கன.

பிறந்த உடல் இறந்து படுமுன் சிறந்த பயனை அடைந்து கொளள வேண்டும் என உயர்ந்தோர் எல்லாரும் உள்ளம் உருகி உரைத்திருக்கின்றனர். பெறலரியதைப் பெற்றிருந்தும் அதனால் பெறவுரியதைப் பெறாமல் வறிதே வாழ்நாளைக் கழித்திருப்பவர் பரிதாப நிலையில் பாழ்பட்டு அழிகின்றார் ஆதலால் அவரது அழிவுக்கு இரங்கி அருள் நலமுடையார் பொருள் மொழிகளைப் புகனறு போயுள்ளார். அனுபவ சீலருடைய உரைகளில் இரக்கமும் உருக்கமும் உணர்ச்சிகளும உறுதியுண்மைகளும் ஒளி செய்து மிளிர்கின்றன. உரிய நிலைமையைக்கருதி யுணரவேண்டும்.

தாம் பெற்ற இன்பநிலையைப் பிறரும் பெறவேண்டும் எனும் அன்புரிமையால் உளளம் உருகி மேலோர் உணர்வொளி காட்டுகின்றார். காட்டியும காணுதவரைக் கண்டு கலங்கி இரங்குகின்றார்.

"பெற்றவட்கே தெரியும்அந்த வருத்தம் பிள்ளை
பெறுப் பேதை அறிவாளோ? பேரானந்தம்
உற்றவர்க்கே கண்ணீர்கம்பலே யுண்டாகும்;
உறாதவரே கல்நெஞ்சம் உடைய ராவார்."

உரியவனை நினைந்து உள்ளம் உருகிக் கண்ணீரும் கம்பலையும் தாமாகப் பெருகி எழுந்த போதுதான் ஒரு மனிதன் தனது அரிய பிறவியின் பயனைப் பெற்றவன் ஆகின்றான்; அல்லாதவன் அவமே இழிந்து அழிந்தவனுகின்றான் என இதனுல் தெளிந்து கொளகின்றோம். உள்ளத்தே அன்புடையவன் பிளளைப் பேறுடைய நல்ல தாய்போல் நலம் பல பெறுகின்றான்; அன்பில்லாதவன் யாதும் பெறாத மலடிபோல் மதிப்பும் மாண்பும் இழந்து படுகின்றான. நெஞ்சம கனியாவழி தீசங்கள் கனிகின்றன.

இறைவன் இன்ப உருவினன்; என்றும் உள்ளவன்; எங்கும் நிறைந்தவன்; எல்லாம் அறிபவன; யாண்டும் உரிமையுடையவன; எவ்வழியும் அருள் புரிபவன். அவனபால் அன்பு செய்யின் சிறந்த இன்பமும் உயர்ந்த மகிமையும் விரைந்து வருகின்றன.

நிலையில்லாத உலகப் பொருள்களை விட நிலையுடைய பரம் பொருளினிடத்து நேயம் புரிபவனே நிலையான பயனைப் பெற்றவன் ஆகின்றான். பெற வுரியதைப் பெறுவதே பேரறிவாம்.

சிறந்த மனிதப் பிறவியைப் பெற்றபயன் உயர்ந்த புனிதனை நினைந்து உருகி எல்லாஉயிர்களையும் அவனுகப்பாவித்து யாண்டும் இரங்கி இதம் புரிந்து வருவதேயாம்.

இங்ஙனம் இனிய இத நலங்களை மறந்து இன்னு நிலைகளில் இழிந்து திரிபவர் தம்மையே கொல்லும் வெம்மையாளராய் வீணே விளிந்து போகின்றார்.

பிழைபெருக்கி நின்றார் பிழைக்கமதி அற்றார்.

நெஞ்சில நேயம் இன்றி வஞ்சத் தீமைகள் செய்து வன் கண்ணராயுழலும் புன்கண்ணர் தமது அருமையான பிறவிப்

பேற்றை இழந்து வறிதே ஒழிந்து போதலால் இங்ஙனம் இரங்கி ஏச நின்றார். பிழைக்க மதி அற்றார் என்றது அவரது வாழ்வு முழுதும் பாழ்படுதல் கருதி.

மிருகம் பறவை முதலிய ஈனப் பிறவிகளைத் தாண்டி உயர்ந்த ஞானப் பிறவியைப் பெற்றும் அதன் பலனைப் பெறாமல் பாழாய்ப் போவது மிகவும் பரிதாபமான ஓர் ஈனமே யாம்.

கழை எருத்தில் பூத்த கலை.

என்றது பிழை பெருக்கி நின்றாரது நிலை தெளிய வந்தது.

கழை = கரும்பு. கலை என்றது கரும்பின் தலையில் உள்ள பூந் தோகையை. இனிய மனித உருவில் தோன்றியும் மணமும் குணமும் இன்றி வீணே பிணமாய் விழும் பிழையாளர் கழையின் கலையாய்க் கருத நின்றனர்.

உள்ளே ஈரம் உள்ளவன் சாரமுள்ள கரும்புபோல் சீர்மை யுறுகின்றான்; அஃதில்லாதவன் சக்கை, கலை என எள்ளித் தள்ளப் படுகின்றான்.

அன்புடையவன் அருளையும் பொருளையும் மருவி இருமையும் இன்ப வாழ்வு காண்கின்றான்; அல்லாதவன் வாழ்வு பொல்லாத தாய்ப் புலையுற்று வீழ்கின்றது.

> அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
> வற்றல் மரம்தளிர்த் தற்று. (குறள், 78)

அகத்தே அன்பு இல்லாதவன் சகத்தே உயிர் வாழும் நிலையை இஃது உணர்த்தியுள்ளது. ஈரமற்ற பாலை நிலத்தில் நிற்கும் பட்ட மரத்தைச்சுட்டி ஒப்புக் காட்டியிருத்தலால் அவனது ஆன்ம வீழ்வின் அழிவு காணலாகும்.

உள்ளத்தே அன்பில்லாதவன் உலகத்தே பொருள் வளமுடையனாய்ச் செழித்து வாழினும் ஆன்ம நிலையில் யாதொரு ஒளியுமின்றி அவமே தாழ்ந்து அழிகின்றான்.

> அன்பகத் தில்லான் அகிலமெல்லாம் கொண்டாலும்
> துன்பகத்தே கண்டான் தொடர்ந்து.

என்பதனால் அன்பு இல்வழி விளையும் அவகேடுகள் அறியலாகும். அன்பு இன்பத் திரு; இருமையும் ஒருமையே தரும்; அதனை உரிமையுடன் மருவி அருமை நலங்களை அடைக.

361. அன்பின் சுவைகனிந்த ஆருயிரை எம்பெருமான்
இன்பின் கனியாக ஏந்துவான்—அன்புநலம்
இல்லையெனில் பொல்லா இழிகாய் எனவெறுத்தே
எல்லை இகந்து விடும். (க)

இ-ள்

எம்பெருமான் ஆகிய இறைவன் அன்பு நலம் கனிந்த அரிய உயிரை இன்ப நறுங்கனி ஆக ஏந்தி மகிழ்கின்றான்; அன்பு இல்லாத உயிரைப் பொல்லாத இழி காயாக வெறுத்து அயலே எறிந்து விடுகின்றான் என்றவாறு.

மனிதன் நல்லவன் என்பதும் தீயவன் என்பதும் அவனது அகத்தே எழுகின்ற நல்ல எண்ணங்களையும் தீய நினைவுகளையுமே முறையே பொறுத்திருக்கின்றன. பண்பு கனிய மனிதன் இன்ப உருவன் ஆகின்றான்; கனியாதவழி இனியாதவனுய் இழிவுறுகின்றான். குண நலம் மனிதனுக்கு மண நிலை அருள்கின்றது.

கனிந்த பழம் சுவை மிகுந்து வருகின்றது; மக்கள் அதனை விழைந்து கொள்ளுகின்றனர்; கனியில்லாத காய் புளிப்பாயிருத்தலால் அது வெறுக்கப் படுகின்றது.

அன்பால் கனிந்த நெஞ்சமுடையவன் எங்கும் இனியனுயிருத்தலால் இறைவன் அவனை உவந்து கொள்ளுகின்றான்; அன்பில்லாதவன் காடுபட்டுக் கடுத்திருத்தலால் வெறுத்து இகழப் படுகின்றான். உள்ளம் கடிதாக உயிர் வாழ்வு கொடிதாகிறது.

நெஞ்சம் இனிமையாய்ப் பண்புபட நிலைமை தலைமையாய் உயர்கின்றது; வன்மையாய்ப் புன்மையுறவே நன்மை பலவும் இழந்து மனிதன் நாசத்தை அடைகின்றான்.

அன்பு மனிதனை ஈசன் ஆக்கி அருள்கின்றது. உலக நிலையில் தாழ்ந்தவர் எனக் கருத நின்ற கண்ணப்பர், நந்தனர், திருப்பாணுழ்வார் என்னும் இவர் அன்பு ஒன்றினலேயே அமரரும் தொழுதகு தன்மையராய் நமரிடை என்றும் நிலவி யுள்ளனர்.

அரிய பெரிய தவ ஞானிகளும் அடைய முடியாத பெரிய பேரின்ப நிலையை யாதொரு தவமும் செய்யாமல் மிகவும் எளிதாக இவர் அடைந்து கொண்டது எதனல்? அந்த அதிசய மந்திரம் யாது? சிந்தனை செய்ய வேண்டும். எளியரான இவர் அளியராய் ஒளி செய்து பரமாகியுள்ள நிலைமையை ஞான வுலகமும்

நினைந்து நினைந்து வியந்து போற்றுகின்றது. இவரது சரிதம் அன்பு மயம். அதிசய அன்பு துதி செய்யப் பெறுகின்றது.

"பரிவின் தன்மை உருவு கொண்டனையவன்" எனக் கண்ணப்பரை இவ்வாறு கல்லாட தேவர் உள்ளங் கனிந்து உரைத்திருக்கின்றார். பரிவு=அன்பு. இவர் பரிவு மீதூர்ந்து தம் கண்ணை அகழ்ந்த போது இறைவன் எதிர் தோன்றி,

"நில்லு கண்ணப்ப! நில்லு கண்ணப்ப! என்
அன்புடைத் தோன்றல் நில்லு கண்ணப்ப!"

(திருமுறை)

என்று கையைப் பிடித்துச் சொல்லி நிறுத்தி உடனே பரமபதம் அருளினர் என்றால் இவரது அன்பின் மகிமையை யார் சொல்ல வல்லார்? எவரும் தொழுது துதிக்கும் விழுமிய நிலையினர்.

"கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
என்அப்பன் என்ஒப்பில் என்னையும் ஆட்கொண்டருளி"

என மாணிக்கவாசகர் இவரது அன்பினை இவ்வாறு பாராட்டி உருகியிருக்கிறார். பரமன் திருவாயால் என் அன்புடைத்தோன்றல் என அருள் புரிந்துள்ளமையால் அன்பு நெறியினர் யாவரும் இவரைத் தலைமையாகத் துதித்து வருகின்றனர்.

அப்பன் இன்றி அம்மையின்றி அகிலவுல
கங்களெலாம் அப்பா என்று
செப்பநின்ற ஒருமுதல்வன் திருவாயால்
அப்ப! எனச் செப்ப நின்றாய்!
ஒப்பரிய அன்பு நிலைக்கு ஓரின்ப
நிலையாகி ஓங்கி என்றும்
துப்பறிய ஒளிர்கின்ற சுடர் விளக்கே
இடர்ஒழிக்கும் துரிய வாழ்வே. (1)

ஊனருந்தல் ஈனம்என உணர்வுடையார்
அருவருக்கும் ஊன வூனை
வானறிய மண்அறிய மறைமொழிந்த
திருவாயில் வலிய ஊட்டி
ஞான தவ யோகியரும் நண்ணாத
பெரும்பதத்தை நண்ணி யுள்ளாய்!
கானுறையும் வேடன் என்கோ? கைலையுறை
நாடன் என்கோ? கழறுவாயே. (2)

தத்தைமொழி நாணமொழி தத்தை வயிற்று
உதித்தெழுந்த தவக் கொழுந்தே!
மித்தை இந்த உலகமென மெய்யுணர்வு
மிக்கவுயர் ஞான யோக
வித்தகரும் வியந்துவியந் துளமுருகி
விழைந்தேத்த விளங்கி நிற்கும்
சுத்தசிவ அன்புருவே! இன்புருவே!
என்புருகத் தொழுநாள் என்றோ? (3)

பண்ணரிய தவம்புரிந்தும் அடைவரிய
பரம்பொருளை யாதும் பண்ணாது
உண்ணரிய உணவொன்றை உண்ணவைத்தங்
கது புரிந்த உளவோராமல்
கண்ணரிந்து பின்வைக்கக் கால்அறிந்து
முன்வைத்துக் காலன் என்றும்
எண்ணரிய நிலைபெற்ற கண்ணப்பர்
கால்பெற்றோர் என் பெறாரே? (4)

அன்பால் இவர் பெற்ற பேற்றைக் கலை உலகம் இன்னவாறு பலவகை நிலையிலும் வியந்து புகழ்ந்து விழைந்து போற்றுகின்றது.

இவரது அன்புநிலை அதிசய முடையது ஆதலால் மதவாதிகளும் இவரை மதித்துத் துதிக்கின்றனர். குலம் கல்வி தவம் முதலிய நலங்கள் நன்கு அமையாதிருந்தும் அன்பினால் அரிய பதவியை இவர் அடைந்திருக்கிறார்.

அன்பின் உயிரை எம்பெருமான் இன்பின் கனியாக ஏந்துவான்; என்றது அதன் நிலைமை தலைமைகளைக் கூர்மையாக ஓர்ந்து கொள்ள வந்தது. அன்பு தெய்வ நீர்மை ஆதலின் அதனையுடையவனைத் தெய்வம் உரிமையாக உவந்து கொள்ளுகின்றது.

அன்பும் சிவமும் இரண்டு என்பர் அறிவிலார்;
அன்பே சிவம்ஆவது ஆரும் அறிகிலார்;
அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே. (திருமந்திரம்)

அன்பே கடவுள் எனத் திருமூலர் இவ்வாறு உறுதி கூறியிருக்கிறார். சீவன் சிவனாகின்றான். அரிய பேரின்ப நிலையை அன்பு எளிதாகத் தந்து விடுதலால் உய்தி அருளும் உறுதி நலனாய் அது ஒளி மிகுந்து உயர்ந்து திகழ்ந்துள்ளது.

"நின்நிழல் அன்னோர் அல்லது இன்னோர்!
சேர்வர் ஆதலின், யாஅம் இரப்பவை
பொருளும் பொன்னும போகமும அல்ல; நின்பால்
அருளும அன்பும் அறனும் மூன்றும்
உருளிணர்க் கடம்பின் ஒலிதாரோயே!" (பரிபாடல். 5)

கடுவன் இளவெயினனார் என்னும் புலவர்பெருமான் முருகக் கடவுளை நோக்கி இவ்வாறு வேண்டியிருக்கிறார். பொருளும் போகமும் பிறவியை நீக்காது ஆதலால் அதனை நீக்கியருளுகின்ற அன்பு நிலையையே தமக்கு அருள வேண்டினார்.

இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார்
பிறவாமை வேண்டும்; மீண்டும் பிறப்பு உண்டேல், உன்னை என்றும்
மறவாமை வேண்டும்; இன்னும வேண்டு நான் மகிழ்ந்து பாடி
அறவாநீ ஆடும்போதுன் அடியின் கீழ் இருக்க என்றார்.
(பெரிய புராணம்)

காரைக்கால் அம்மையார் இறைவனிடம் இவ்வாறு அன்பு நிலையை உரிமையுடன் முறையிட்டு வேண்டியுள்ளார்.

"புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன் அடி என்மனத்தே
வழுவாது இருக்க வரம்தர வேண்டும." (தேவாரம்)

என்பில்லாத புழுவாய்ப் பிறந்தாலும் உன்பால் அன்பிருந்தால் அது எனக்கு இன்பப் பிறவியாம் என அப்பர் இப்படி அரனை நோக்கி உருகி உரைத்திருக்கிறார்.

முருகன் குமரன் குகன்என்று மொழிந்து
உருகும செயல் தந்து உணர்வு என்று அருள்வாய்?
பொரு புங்கவரும் புவியும் பரவும்
குருபுங்கவ! எண்குண பஞ்சரனே. (கந்தர் அநுபூதி)

உள்ளம் உருகும் நிலையை உதவியருளும்படி அருணகிரிநாதர் முருக வள்ளலை இவ் வண்ணம் பரவி உருகியிருக்கிறார்.

"என்பெலாம் நெக்குடைய, உரோமம் சிலிர்ப்ப, உடல்
இளக, மனது அழலின் மெழுகாய்
இடையறாது உருக, வருமழை போல் இரங்கியே
இருவிழிகள் நீர் இறைப்ப
அன்பினால் மூர்ச்சித்த அன்பருக்கு அங்ஙனே
அமிர்த சஞ்சீவி போல் வந்து
ஆனந்த மழைபொழிவை! உள்ளன்பிலாத எனை
யார்க்காக அடிமை கொண்டாய்?

புன்புலால் மயிர்தோல் நரம்பென்பு மொய்த்திடு
　　புலைக்குடிலில் அருவருப்புப்
பொய்யல்லவே இதனை மெய் என்று நம்பி என்
　　புந்தி செலுமோ பாழிலே
துன்பமாய் அலையவோ உலகநடை ஐய ஒரு
　　சொப்பனத்திலும் வேண்டிலேன்
சுத்தநிர்க் குணமான பரதெய்வமே பரஞ்
　　சோதியே சுகவாரியே.'' (தாயுமானவர்)

என்பு நெகிழும், உரோமம் சிலிர்க்கும், உடல் இளகும், மனம் அழலின் மெழுகாய் உருகும், கண்கள் நீர் பொழியும், உணர்வு அவசமாம் என அன்பின் மெய்ப்பாடுகளை அனுபவ சீலரான தாயுமானவர் இதில் வெளிப்படுத்தியுள்ளார் உயிர் உருக்கங்கள் ஊன்றி உணர வுரியன. படியேறிய புனித ஆன்மாக்களின் இனிய மனக் கனிவாய் அன்பு நிலவியுளது.

---

365. மானிடனாய் வந்திருந்தும் மானிடனைப் போற்றியருள்
　　ஆன நலனை அடையாமல்—ஊனுடலை
　　ஓம்பி உழல்கின்றாய் ஓர்ந்துயிர்க் கன்புசெயின்
　　ஏம்பல் உறுவாய் இனிது. (ரு)

இ—ள்

உயர்ந்த மனிதனாய் உதித்திருந்தும் கடவுளை உவந்து போற்றிச் சிறந்த நலனை அடையாமல் தேகத்தையே பேணி மோகம் மிகுந்து உழலுதல் மோசமான நாசம் ஆகும்; உன் நிலைமையை ஓர்ந்து உயிர்களுக்கு அன்பு செய்து உயர்ந்த பயனை விரைந்து பெறுக என்றவாறு.

மனித சன்மம் பலவகையிலும் உயர் நலமுடையது. உலகில் தோன்றியுள்ள எந்தப் பிராணிகளையும் அடக்கி ஆள வல்லது; தான் கருதியதைப் பிறர்க்குத் தெளிவாக உணர்த்தவும், பிறர் கருத்துக்களை எளிதாக உணர்ந்து கொள்ளவும் இசைந்தது; நன்னையும் தீவினையும் நுண்ணிதாக எண்ணி நோக்கிக் கண்ணிய கதி நலம் காணத்தக்கது. புண்ணியம் அமைந்தது; இத் தகைய நீர்மையும் சீர்மையும் வேறு பிறவிகளில் யாவும் அமையா. அவ்வாறான ஊன சன்மங்களையெல்லாம் ஒருவி உயர்ந்த ஞான

சென்மத்தைப் பெற்றிருக்கின்றோம்; இங்ஙனம் பெற்றிருந்தும் இந்த அருமையான உடம்பின் பயனை விரைந்து பெறாமல் மறந்திருப்பது பிறந்த பயனை இழந்திருப்பதேயாம்.

மானிடனாய் வந்திருந்தும் என்றது இந்த வரவு நிலையின் அருமை பெருமைகளைச் சிந்தனை செய்து கொள்ள வந்தது.

கான விலங்குகளாய் ஈனமான உடல்களில் இழிந்து உழலாமல் ஞானம் அடையவுரிய நல்ல மானிட தேகம் பெற்று வந்துள்ளாய்! இதன் பயனை ஒல்லையில் அடைந்து கொள்க என இது உணர்த்தி நின்றது. வீண் நாள் கழியாமல் மேல்நிலை காணுக.

சிறந்த இந்த ஞானப் பிறவிக்குத் தகுந்த பயன் யாது? எனின், உயர்ந்த பரம் பொருளை உரிமையாக மருவிக் கொள்வதேயாம். என்றும் யாதும் அழிவில்லாத ஆனந்தநிலையம் ஆதலால் அதனைத் தோய்ந்து மகிழ்வதே ஏய்ந்த பிறவிக்கு வாய்ந்த பயனும். உரியதை உறாது ஒழியின் ஊனம் அடையும்.

இறைவனுக்கு உருவும் பெயரும் இல்லை ஆயினும் நம் அறிவு அறிந்து வழிபடச் சில உருவ நாமங்களை மருவி அருளுடன் ஒளிர்கின்றான். நிலைகள் பலவும் கலை ஞானங்களாய் வந்தன.

இங்கே மானிடன் என்றது சிவபெருமானை. மானை இடது கையில் தாங்கியிருப்பவன் என்பது பொருள். மான் இடன் மானிடன் என வந்தது. மாய முனிவர் ஏவிய மாயமானைத் தன் கையில் நிறுத்தி என்றும் மாயாத மானாக அதனைக் காட்டியருளினான். மழு, துடி, புலித்தோல் முதலிய சிவ சின்னங்கள் எல்லாம் பரமனது அருளாடல்களை விளக்கியுள்ளன. இறைவன் கையில் ஏறியுள்ள மான் கவிஞர் மனத்தில் ஏறிக் களிப்பை விளைத்துள்ளது.

ஒருமானைக் கரத்தினில் வைத்து ஒருமானைச்
　　சிரத்தினில் வைத்து உலகம ஏழும்
தருமானை இடத்தினில வைத்து அருள்வானைப்,
　　பவளநெடும சயிலம் போல
வருமானை முகத்தானை அளித்தானைப்,
　　பொருமானை மகிழ ஏறும்
பெருமானை அருணகிரிப் பெம்மானை
　　அடிபணிந்து பிறவி தீர்ப்பாம். (அருணாசல புராணம்)

மான் எழுந்தாடும் கரத்தோய்நின் சாந்த மனத்தில் சினம்
தான் எழுந்தாலும் எழுகஎன்றே என் தளர்வை எல்லாம்
ஊன் எழுந்தார்க்க நின்பால் உரைப்பேன் அன்றி, ஊர்க்கு உரைக்க
நான் எழுந்தாலும் என் நாவெழுமோ மொழி நல்கிடவே.

(அருட்பா)

தேவியும் மானும் விளையாடு இடத்தர் திருவெங்கையில்
ஆவியும் ஆரமுதும் போன்று இறைகண்ட ஆயிழையே.

(திருவெங்கைக் கோவை)

நகம் தருங்கொடி கண்களை நாணியே
முகம்திரும்பு முறையில் திரும்பு மான்
மகிழ்ந திடங்கதிர் வீர மழுவலம்
தகும தகும் தகும் என்று தயங்குற. (பிரபுலிங்கலீலை)

மான் ஓடு மருவிச் சிவனை இவ்வாறு பாவி யிருக்கின்றனர். கண் அழகில் சிறந்த மான் உமா தேவியின் கண்களைக் கண்டு நாணியது போல முகம் திரும்பி நின்றது; அதனை நோக்கி மழு மகிழ்ந்து "தகும் தகும்" என்று வியந்து கொண்டது எனக் கவி புனைந்து கூறியுள்ள அழகை நோக்குக. நகம் = மலை. நகம் தரும் கொடி என்றது பருவதராசன் பெற்ற பார்வதி என்றவாறு.

மானிட னுய வடிவுகொண் டருளாது
மானிட னுய வடிவுகொண் டருளி.

(பண்டார மும்மணிக் கோவை, 14)

மானை இடப் பக்கம் கொண்ட கோலம் விடுத்து மனித உருவில் குருவாய் வந்து எனப் பரமன் அருளின பான்மையை இது குறித்துள்ளது. அவனது ஆடல்கள் பாடல்களாகின்றன.

மானிடனுய வந்தது மானிடனை நினைந்து உய்யவே என்றது அரிய பிறவிக்கு உரிய பயனை உரிமையுடன் உணர்ந்து கொள்ள.

மானுடப் பிறவிதானும் வகுத்தது மன வாக் காயம்
ஆனிடத்து ஐந்தும் ஆடும் அரன்பணிக்காக அன்றே?
வானிடத் தவரும மணமேல் வந்து அரன்தனை அர்ச்சிப்பர்;
ஊனெடுத்து உழலும ஊமர் ஒன்றையும் உணரார் அந்தோ! (1)

கருவினுள் அழிவ தாயும், கழிந்திடாது அழிவதாயும்,
பரிணமித்து அழிவதாயும், பாலனாய் அழிவதாயும்,
தருணனாய் அழிவதாயும், தான் நரைத்து அழிவதாயும்,
உருவமே அழிவே யானால் உள்ளபோதே பார் உய்ய. (2)

(சிவஞான சித்தியார்)

உய்தி நிலையை உரிமையுடன் உணர்த்தியுள்ள இதன் கருத்துக்களைக் கருதி ஆராய்ந்து உறுதி நலனை ஓர்ந்து கொள்ள வேண்டும். காலம் உள்ளபொழுதே உய்க என்றது உணரவுரியது.

அரிய வாழ்நாளைப் பாழாக் கழியாமல் உரியபயனை விரைவில் அடைபவர் பெரிய திருவாளராகின்றார்.

ஊன் உடலை ஓம்பி உழல்கின்றாய்!

என்றது உயிர்க்கு உறுதி நலனை ஓர்ந்து கொள்ளாமல் உடலைக் கொழுக்க வைத்துத் திரிகின்றாய்! இறுதியில் உன் கதி என்ன? சுடலைத் தீக்கோ, அடலை மண்ணுக்கோ இரையாய் ஒழிந்து போவதோடு கழிந்து போகவோ நீ பிறந்து வந்தாய்? உன் உயிரின் நிலைமையைச் சிறிது கருதிப்பார் என நினைவு கூற உணர்த்திய வாறும். உண்மை உணர்வு நன்மை காணுகின்றது.

தன் உயிருக்கு இன்பத்தை நாடுகின்றவன் இன்ப வடிவமான இறைவனை எண்ணி உருகுவதையும், பிற வுயிர்களுக்கு இதம் செய்வதையும் கடமையாகக் கைக் கொள்ளுகின்றான்.

கடவுள் எல்லார்க்கும் பொதுவாய் எங்கும் நிறைந்திருந்தாலும் அன்புடையவர்பால் அருள் புரிந்து திகழ்கின்றான்.

குழந்தையும் தெய்வமும் கொண்டாடுனத்த இடம் என்பது பழமொழி. மனிதன் உள்ளம் உருகி நினைந்த பொழுது பரமன் உரிமையுடன் அவனைத் தழுவிக் கொள்கின்றான். இவன் அன்பு செய்ய அவன் அருள் பொழிகின்றான்.

அமரர் முதல் எவருக்கும் அரியனாயினும் அன்பருக்கு மிகவும் எளியனாய் இறைவன் அமர்கின்றான்.

அன்பருக்கு அன்பனே எனப் பரமபதிக்கு மாணிக்கவாசகர் இவ்வாறு உயர்வான ஒரு பெயர் சூட்டியிருக்கிறார்.

உயிர்க்கு அன்பு செய் ஏம்பல் உறுவாய்!

என்றது சீவ கோடிகளுக்கு இரங்கி இதம் செய்! சிவன் அருளை அடைந்து நீ உயர் பேரின்பம் நுகர்வாய் என ஆன்ம போகத்தின் பான்மை தெரிய வந்தது. ஏம்பல்—ஆதரவு; மகிழ்ச்சி. இனிய செயல் இன்ப நிலையமாகின்றது.

தெய்வ சிந்தனையும் சீவ தயையும் உய்வகை உதவி உயிர்க்கு உயர் நலம் அருளுகின்றன; அவற்றைக் கைதழுவி ஒழுகிக் கதி நிலை காணுவதே மெய் தழுவி வந்த மெய்ப் பயனாகும்.

---

366. உள்ளன்பில் லாத உருவும் உயர்கலையின்
தெள்ளறிவில் லாத திருவுநல்—ஒள்ளொளியுள்
இல்லா விழியும் இழிவாய்ப் பழிமிகுந்து
பொல்லாமை யாகும் புவிக்கு. (சு)

இ—ள்

உள்ளே நல்ல அன்பு இல்லாத உருவமும், உயர்ந்த கலை ஞானம் இல்லாத செல்வமும், ஒளி இல்லாத விழி போல் இழிந்து உலகில் யாண்டும் பழி மிகுந்து படும் என்றவாறு.

உருவம் உயிர் நிலையமானது; வடிவங்களுள் மனித தேகம் பெருமை மிக வுடையது; அத்தகைய அரிய உருவம் பெறினும் இனிய அன்பு இலவழி அது இன்னாதாய் இழிந்து ஈனம் உறுகின்றது. குணம் குன்றியது மணம் குன்றி மடிந்து போகின்றது.

அன்பு ஆன்மாவின் இனிய பண்பு; அந்தப் பான்மை பதிந்துள்ள அளவே மனிதன் மேன்மை கனிந்து திகழ்கின்றான். செல்வம் மிகவும் சிறந்தது; ஆயினும் நல்ல கல்வி அறிவு இல்லை ஆனால் அது புல்லிதாய் இழிந்து படுகின்றது.

கண்விழி பெரிதும் அருமையானதே; எனினும் ஒளி இல்லை ஆயின் அது ஈனமாய் இளிவுறுகின்றது.

அன்பு இல்லாத உருவினது இழிவினைத் தெளிவாக விளக்க இந்த இரண்டும் எடுத்துக் காட்டுகளாய் ஈண்டு அடுத்து வந்தன.

திருவும் உருவும் முறையே அறிவும் அன்பும் மருவிய போதுதான் இருமையும் இன்பமாய் அவை பெருமை பெறுகின்றன; மருவா வழி ஒரு பயனும் காணாமல் விருதாவாய் விளிந்து ஒழிகின்றன. உயர் இயல்புகள் உயிர் நிலைகள் ஆகின்றன.

நல்ல தன்மைகளைத் தழுவியுள்ள அளவே எந்தப்பொருளும் நன்மையாய்த் துலங்கி நலம் பல புரிகின்றது.

அன்புடைய மனிதன் பண்பு சுரந்து எங்கும் இன்ப நிலையமாய் இனிது திகழ்தலால் உலக மாதாவுக்கு அவன் உயர்ந்த தலைமைப் புதல்வனாய் நிலவி நிற்கின்றான். அவனைக் காணும்தோறும், எண்ணும் போதும் சன சமுதாயம் தனியே உவகை மீக்கொள்ளுகின்றது. தன் உள்ளத்தில் அன்பு இல்லாதவன் ஒளி இல்லாத விழிபோலவும், அறிவு இல்லாத செல்வம்போலவும் புலையாய் இழிந்து புன்மை யுறுகின்றான்.

பொல்லாமை ஆகும் புவிக்கு

என்றது அன்பு இல்லாமையால் விளையும் கொடுமையும் தீமையும் குறித்து வந்தது. பொல்லாமை = தீங்கு, இளிவு.

இனிய இரக்கமாகிய அன்பு நெஞ்சில் இல்லையானால் அந்த மனிதன் கொடியவன் ஆகின்றான்; ஆகவே சீவர்களுக்கு அவனால் அல்லல்கள் விளைகின்றன; அதனால் அவனது உருவத் தோற்றம் உலகிற்குத் தீது என நேர்ந்தது.

உயர்ந்த மனிதப் பிறப்பும் அன்பு குன்றிய பொழுது அவலமாய் இழிந்து படுகின்றது; அங்ஙனம் ஒழிந்து போகாமல் உள்ளம் கனிந்து நல்ல தயையுடன் ஒழுகி ஒல்லையில் எல்லை உயர்க.

---

667. தாய்தந்தை மக்கள் தமர்தாரம் என்றிவர்பால்
நேயம் புரிந்து நிலவுகின்றாய்—நேயமுன்
வீட்டளவில் நில்லாமல் மேதினியெல் லாம்விரியின்
ஊட்டளவில் இன்பம் உனக்கு. (எ)

இ—ள்

தாய் தந்தை மனைவி மக்கள் ஒக்கல் என்னும் இவர்பால் இயல்பாகவே அன்பு புரிந்து வருகின்றாய்; இந்த அன்பு உன் வீட்டளவில் நில்லாமல் உலகம் எல்லாம் பரவினால் அலகில்லாத பேரின்பம் உனக்கு உண்டாம் என்றவாறு.

ஊட்டு என்றது இன்ப விருந்தைக் காட்டி நின்றது. யான் எனது என்னும் முனைப்பும் நினைப்பும் மனிதனிடம் இயல்பாக

அமைந்துள்ளன. "நான் சம்பாதித்தேன்; இது என்னுடைய பொருள்" என்று தன்னைக் குறித்தும் தனது உடைமைகளைக் குறித்தும் பெருமையும் உரிமையும் யாண்டும் கொண்டாடி நிற்கின்றான். அபிமானமாகிய இந்தப் பாச உணர்ச்சிகளே வாழ்க்கைகளின் வளர்ச்சிகளுக்கு மூல காரணங்களாய்த் தழைத்திருக்கின்றன. தன்னைச்சார்ந்த பொருள்களிடம்இயல்பாகவே மனிதன் அன்பு செலுத்தி வருகிறான். உள்ளத்தின் பிரிய வடிவமான பாச நேசங்கள் பிள்ளைகள் மீதும் மனைவியிடத்தும் பெற்றோர் பாலும் பெருகி நிற்கின்றன.

கடவுளை நினைந்து துதிக்கும் பொழுதும் தந்தையே! தாயே! எனச் சிந்தை கனிந்து பாடி வருதலால் இந்த உரிமைப் பொருள்களிடம் மனிதன் தோய்ந்திருக்கும் அன்பும் அருமையும் அறிய வருகின்றன. உள்ளப் பாசங்கள் உயிர் நேசங்கள் ஆகின்றன.

பெற்ற தொடர்பும் உற்ற உரிமையும் பெருகி யிருத்தலால் தாய் தந்தை மனைவி மக்கள் மேல் இயற்கையாகவே எவரும் உரிமையுடன் அன்பு செலுத்தி வருகின்றார்.

பிறப்புரிமையில் இயல்பாக அமைந்தமையால் இந்த அன்பு இயற்கை என வந்தது வேறு அயலான பொருள்கள் மேல் உரிமை கொண்டபொழுது அந்த ஆர்வ நிலையை அளந்து காட்டத் தலைமையான இந்த அன்பையே உவமை கூற நேர்கின்றார். சகாதேவனைக் கண்ணன் ஒருமுறை நோக்கி, "உன் உள்ளத்தில் மிகவும் உரிமையாக நேசித்துள்ள உண்மை என்ன?" என்று கேட்டான். இந்தக் கேள்விக்கு அவன் சொன்னபதில் அயலேவருவது:

ஒரு மொழி அன்னை; வரம்பிலா ஞானம்
உற்பவ காரணன்; என்றும்
தருமமே துணைவன்; கருணையே தோழன்;
சாந்தமே நலனுறு தாரம்;
அரியதிண் பொறையே மைந்தன்; மற்று இந்த
அறுவரும் அல்லது ஆர் உறவு? என்று
இருவரில் இளையோன் மொழிந்தனன் தன்பேர்
இதயமா மலர்க்கிடை எடுத்தே.

(பாரதம், பழம்பொருந்துசருக்கம், 20)

சத்தியம் ஞானம் தருமம் கருணை சாந்தம் பொறுமை என்னும் இக் குண நலங்களே தனக்குத் தாய் தந்தை தம்பி தோழன் மனைவி மைந்தன் என அருத மதிமான் இங்ஙனம் கூறியிருக்கிறான்.

உயிர்க்கு உறுதித் துணைகளாகத் தான் கருதிக் கைக்கொண்டுள்ளமையைத் தெளிவாக விளக்குதற்கு உலக நிலையில் முதன்மையான உரிமையினங்களைச் சுட்டி யுரைத்தான்.

இந்தச் சுற்றத்தாரைப் போலவே மற்றவரையும் உரிமையோடு கருதி நேயம் புரிந்த போதுதான் மனிதன் பெரியவனாய் அரிய பேறுகள் பெறுகின்றான்.

நேயம் உன் வீட்டு அளவில் நில்லாமல் மேதினி எல்லாம் விரியின் என்றது அன்பு எங்கும் விரிந்து பரந்து வெள்ளம் போல் பெருகி ஓட வேண்டும் என உள்ளப் பரிவின் எல்லை தெரிய வந்தது. அன்பு பெறுக ஆன்மா உயர்கின்றது.

பெற்ற பிள்ளைகளிடமும் கொண்ட மனைவி மாட்டும் அன்பு நிகழ்வது இயல்பு; விலங்குகள் பாலும் அது காணப்படுகின்றது. அவ் வளவில் நில்லாமல் அயலிடமும் அன்பு பரவிய வழியே உயர்நிலை விளைகின்றது.

அன்பை உன் வீட்டளவில் நிறுத்தாதே; உலகம் எங்கும் நீட்டுக. எவ்வுயிரையும் தன் உயிர்போல் எண்ணி இரங்கிய போதுதான் மனிதன் தெய்வமாகின்றான்.

> மன்னுயிர் தன்னுயிர் என்ன ஓர்மகன்
> உன்னிய போதவன் உய்தி காணுமே
> பின்னவன் பிறவியின் பீழை கண்டிடான்;
> முன்னவன் நிலையையே முழுதும் எய்துமே.

என்னும் இதனால் உயிர் உருக்கத்தின் உய்தி நிலை உணரலாகும். பேரன்பு பேரின்பம் ஆகின்றது.

---

368. வெய்ய வனவிலங்கும் மெய்யன் புடையவன்முன்
பைய வணங்கிப் பணியுமே—தெய்வமே
அன்பின் வடிவம் அதனை யுடையவன்
இன்பின் வடிவம் இவண். (அ)

இ—ள்

உண்மையான அன்புடையவன் எதிரே கொடிய காட்டு

மிருகங்களும் பணிந்து வணங்கும்; அன்பு தெய்வ வடிவம் ஆதலால் அதனையுடையவன் என்றும் ஆனந்த வடிவமாய் அமர்ந்திருப்பன் என்றவாறு.

ஆன்ம உருக்கத்தில் அதிசய மகிமைகள் அமைந்திருக்கின்றன. தண்ணளியும் தயையும் புண்ணிய விளைவுகளாய்ப் பொலிந்து வருதலால் அவை உயிரினங்களுக்கு உயர் நலங்களை அருளுகின்றன. உள்ளம் கனிய உயிர் ஒளி மிகுந்து உயர்கின்றது பிறவுயிர்கள்பால் இரங்கியருளும் அளவு மனிதன் பெரியவன் ஆகின்றான். இறைவன் அருள் அவனுக்குத் தனி உரிமையாய் இனிமை புரிகின்றது.

"Blessed are the merciful: for they shall obtain mercy."

"இரக்கமுள்ளவர் பாக்கியசாலிகள்; தெய்வ கிருபையை அவர் எய்துகின்றனர்" என ஏசுநாதர் இவ்வாறு கூறியுள்ளார்.

அன்பு இரக்கம் அருள் என்பன பரிபக்குவமான ஆன்ம நீர்மைகளாய்க் கனிந்து மிளிர்கின்றன. "இரக்கம் என்று ஒரு பொருள் இலாத நெஞ்சினர்" (இராமாயணம்) என அரக்கரைக் குறித்திருத்தலால் இரக்கம் இல்லாதவரது இழிவும், அஃது உடையவரது உயர்வும் அறியலாகும்.

தெய்வமே அன்பின் வடிவம்.

என்றது உய்தி உண்மைகளை ஊன்றி உணர வந்தது. கடவுளுக்கு யாதொரு வடிவமும் தனியே இல்லை. அன்பர் கருதிய வடிவமே வடிவாய்க் கருணை புரிகிறான்.

பள்ளம் உள்ள இடத்தில் வெள்ளம் புகுதல் போல் உள்ளம் உருகிய உயிரில் இறைவன் உறைகின்றான். மனம் உருக மனிதன் புனிதன் ஆகின்றான். அன்பு உயிரை இன்ப உருவம் ஆக்குதலால் அது தெய்வம் என நின்றது.

"அன்பைப் பெருக்கி எனது ஆருயிரைக் காக்க வந்த
இன்பப் பெருக்கே இறையே பராபரமே! (1)

என்புருகி நெஞ்சம் இளகிக் கரைந்து கரைந்து
அன்புருவாய் நிற்க அலந்தேன் பராபரமே!" (2)

எனத் தாயுமானவர் இவ்வாறு கரைந்திருக்கிறார். அன்பே பேரின்ப நிலையம் என இவர் கருதியுள்ளமை அறியலாகும்.

அன்பினால் அடியேன் ஆவியோடு ஆக்கை
ஆனந்த மாய்க்க சிந்து உருக
என்பரமல்லா இன்னருள் தந்தாய்
யானிதற் கிலனொர் கைம்மாறு;
முன்புமாய்ப் பின்பு முழுதுமாய்ப் பரந்த
முத்தனே! முடிவிலா முதலே!
தென்பெருந் துறையாய்! சிவ பெருமானே!
சீருடைச் சிவபுரத் தரைசே! (திருவாசகம்)

அன்பினால் அடைந்த ஆனந்தப் பேற்றை வியந்து மகிழ்ந்து பரமனை நோக்கி மாணிக்க வாசகர் இங்ஙனம் பாடியுள்ளார். உள்ளம் உருகி உயிர் பரவசமாய் வந்த உரைகள் ஆதலால் இவற்றின் கருத்துக்களைக் கருத்துடன் கரைந்து காண வேண்டும்.

வன விலங்கும் அன்புடையவன் முன் பணியும்.

என்றது அன்பின் அற்புத மகிமை அறிய வந்தது. அன்புடையவனை எங்கும் இனியனாய இதம புரிதலால் எவ் வுயிரும் அவனைத் தெய்வமாக நினைந்து கொண்டாடுகின்றது.

சீவ தயை நிறைந்த மாதவர்கள் இருக்கும் இடத்தில் கொடிய மிருகங்களும் இனியனவாய் அமைந்து விடுகின்றன. அகத்திய முனிவரது ஆசிரமத்தில் இந்த அதிசயங்கள் நிகழ்ந்திருக்கின்றன. சில அடியில் வருகின்றன.

அரிமான் ஏற்றில் கூன்பிறைக் கோட்டு
அணணல் வேழம் முதுகுரிஞ்சும்;
வெருவாச் சரபம் தலையணையா
வெங்கண் அரிமான் விழிதுயிலும்;
புரிகோட்டு இரலை புனிற்றுமறி
பொங்கி எழுந்து வால் குழைத்துப்
பரிவால் கடைவாய்ப பால் ஒழுகப்
பாய்வெம் புலியின் முலை உண்ணும்; (1)

கேழற்பீன்றி மருப்பின் நிலங் கிளையா
ஞமலி மேல் துயிலும்;
பேழ்வாய்க் கரடி மயிர் உளர்ந்து
முதிர்சூல் மந்தி பேன் எடுக்கும்;

ஊழிக்கனல் பாய்ந்து ஒழுகு விழி
உரகம் கிரி மேல உறங்கும்;
மாழைச் சிறுமான் குழக் கன்றை
வந்து நரிகள் தைவருமால், (காசி காண்டம்)

மூர்க்கமான மிருகங்களும் முனிவர் நிலையத்தை அடுத்த மையால் இன்னவாறு இனிய நீர்மை வாய்ந்திருந்தன. சிவ தயை யுடையவர் எதிரே யாவும் தலை வணங்கி அடி தொழுகின்றன. அன்பு கடவுளின் வடிவம்; அதனை யுடையவன் அளவிடலரிய இன்ப நிலையை அடைகின்றான்.

---

369. எல்லாரும் எவ்வுயிரும் ஈசன் வடிவமெனச்
சொல்லாரும் வேதம சுழித்துளதால்—பல்லாரும்
உன்னுயிர்என் றெண்ணி ஒழுக உயர்கதிபின்
நின்னுடலாகும நிலைத்து. (கூ)

இ—ள்

தேவர் முதல் யாவரும் எவ்வுயிர்களும் யாவும் ஈசன் வடிவம் என வேதம் சொல்லியுள்ளது; ஆதலால் எல்லாரையும் உன் உயிராக எண்ணி ஒழுகுக; அங்ஙனம் ஒழுகின் உயர்ந்த பேரின்பம் உன்னிடம் நிறைந்து நிலைத்து நிற்கும் என்றவாறு.

உரியவர்களிடத்து மாத்திரம் பிரியமுடன் ஒழுகுவது ஓரளவு பண்பே ஆயினும், அது உயர்ந்த அன்பு ஆகாது; உலகிலுள்ள எல்லா உயிர்களையும் தன் உயிர்போல் எண்ணி ஒழுகிய பொழுது தான் தலை சிறந்த புண்ணியசீலனாய் மனிதன் நிலவி நிற்கின்றான்.

சாதி மதம் தேசம் முதலியன யாதும் பாராது எவரையும் எவ்வுயிரையும் உன் உயிர் என நினைந்து பேணுக என்றது உண்மையான உறவுரிமையை நுண்மையாக உணர்ந்து கொள்ள வந்தது. உயிரினங்கள் யாவும் இனிய உறவினங்களே.

தாய் தந்தை தமர் தாரம் என வந்துள்ளன தேக சம்பந்தமான உறவுகள். பிறந்த ஒரு பிறப்பில் சூழ்ந்து தோன்றிய தோற்றங்கள்; விரைந்து மறைந்து போகின்ற இந்தச் சூழல்களில் மிகுந்த அபிமானமும் அன்பும் பாராட்டி வருகின்றோம்.

கடல் அலைகள் போல் உடலளவில் தோன்றி மறைகின்ற மையால் இந்த உறவினங்கள் சந்தையில் கூட்டம் என வந்தன. இடையே சிறிது தொடர்புடைய இவற்றினும் என்றும் யாண்டும் நிலையான தொடர்புகளாய் உயிரினங்கள் உரிமை தோய்ந்திருக்கின்றன. பழம் கிழமைகளை உளம் தெளிய வேண்டும்.

உடலின் தொடர்பான உறவுகளை மட்டும் உரிமையா நோக்கிக் குறுகி நிற்பது ஊனமாகும்; உயிரின் உறவான எவ்வுயிரையும் தனது இனமாக எண்ணி எழுவது ஞான சீலமாம்.

குறுகிய ஊன நோக்கம் ஒழிந்து பெருகிய ஞான நோக்கம் எழுந்த பொழுது மனிதன் பெரியவனுய்ப் பேரின்ப நிலையைக் காண்கின்ருன். யாவும் எவ்வுயிரும் தான் ஆக உணர்ந்து தண்ணளி புரிந்து ஒழுகுவோன் புண்ணிய நிலையில் பொலிந்து மகாத்துமா ஆகின்ருன். தன்னை அறிந்த பொழுது தலைவனையும் உணர்ந்து கொள்கின்ருன்.

எல்லாரும் எவ் வுயிரும் ஈசன் வடிவம்.

என்றது கடவுளின் உண்மை நிலையை உணர்ந்து கொள்ள வந்தது. இறைவன் எங்கும் நிறைந்திருக்கிருன்; அவன் இல்லாத இடம் இல்லை. அகண்ட பரிபூரணன்; அநாதி மலமுத்தன் என வேதங்களில் விளங்கி வரும் பெயர்கள் அவனது நிலைமை தலைமைகளை விளக்கி நிற்கின்றன.

அகர முதல எழுத்தெல்லாம்; ஆதி
பகவன் முதற்றே உலகு (குறள், 1)

இறைவன் அகரம் போல் உளன் எனத் தேவர் இங்ஙனம் அருளியுள்ளார். அகரம் மருவிய பொழுதுதான் எந்த எழுத்தும் உருவாய் ஒலிக்கும்; மருவாவழி ஏதும் ஒலியாது; அவன் அசைய அகிலமும் அசையும்; அசையாவழி அணுவும் அசையாது என்னும் உண்மையை ஓரளவு உணர்த்தியுள்ளமையால் அகரம் ஈண்டு ஆதி பகவனுக்கு உவமையாயது.

அகரவுயிர் எழுத்தனைத்தும் ஆகி வேருய்
அமர்ந்ததென அகிலாண்டம் அனைத்தும் ஆகிப்,
பகர்வன எல்லாம் ஆகி அல்லவாகிப்
பரமாகிச் சொல்லரிய பான்மை ஆகித்,

துகளறு சங்கற்ப விகற்பங்கள் எல்லாம்
தோயாத அறிவாகிச் சுத்தம் ஆகி
நிகரில் பசுபதியான பொருளை நாடி
நெட்டுயிர்த்துப் பேரன்பால் நினைதல் செய்வாம்

ஒன்றாகிப் பலவாகிப் பலவாக் கண்ட
ஒளி ஆகி வெளி ஆகி உருவம் ஆகி
நன்றாகித் தீதாகி மற்றும் ஆகி
நாசமுடன் உற்பத்தி நண்ணுதாகி
இன்றாகி நாளையுமாய் மேலுமான
எந்தையே! எம்மானே! என்று என்று ஏங்கிக்
கன்றாகிக் கதறினர்க்குச் சேதா வாகிக்
கடிதினில் வந்து அருள்கூரும் கருணை விண்ணே.

(தாயுமானவர்)

ஈசன் யாவுமாய்ப் பரந்து விரிந்து எங்கும் நிறைந்துள்ளான்; அன்பால் நினைந்து உருகினவர்பால் அவன் விரைந்து வந்தருளுகின்றான் என அனுபவநிலையில் சுரந்து வந்துள்ள இந்த அருமைப் பாடல்கள் ஈண்டு உரிமையுடன் கருதி ஊன்றி உணர வுரியன.

யாண்டும் எல்லா உயிர்களிலும் எந்தப் பொருளினிடத்தும் பாலில் நெய்போல் இறைவன் பரவியிருக்கிறான் என்னும் உண்மையைச் சிந்தனை செய்து வரின் அவ் வரவால் அரிய பல நலங்கள் உளவாம். தெய்வக் காட்சி உய்வைத் தருகின்றது.

இந்த ஞானப் பார்வை ஈன நிலைகளையெல்லாம் அடியோடு நீக்கி உயர்ந்த பேரின்ப நிலையை நேரே கொண்டு வந்து காட்டுகின்றது. காண உரியதைக் கண்டு மகிழக் கண் விழிக்க வேண்டும்.

பார்த்த பொருள்களில் எல்லாம் பரமன் உள்ளான் என்று ஒருவன் கருதி உணர்வானாயின் யாண்டும் யாதொரு தீங்கும் நிகழாது; எங்கும் தெய்வ சிந்தனையே மருவி உருகி வருதலால் அவன் தயாமூர்த்தியாய் உயர்ந்து திவ்வியமகிமை பெறுகின்றான்.

பார்த்தபொருள் எல்லாம் பரமனெனப் பாராமல்
கூர்த்த பழிநிலையில் கூர்ந்திழிந்தேன்—பார்த்தஇடம்
எங்கும் அவன்இருப்பை இன்றுகண்டேன் கண்டேனே
பொங்கியபே ரின்பம் புகுந்து.

என்றமையால் விரிந்த போதக் காட்சியை இழந்த வழி உண்டாகும் இழவும் அடைந்த பொழுது உண்டாகும் ஆக்கப் பேறும் அறியலாகும். உண்மை தெரிய உய்தி வருகின்றது.

கண்ட பொருள்களை எல்லாம் கடவுள் மயமாக ஒருவன் காணுவானாயின் அந்த ஞானக் காட்சி அதிசயமான ஆனந்த நிலையை அருளி விடும். அந் நிலையைப் பெற்றவன் பின்பு பிறவித் துன்பத்தைக் காணான்; பேரின்பத்தையே கண்டு நித்திய முத்தனாய் நிலவி நிற்கின்றான்.

எவ் வழியும் தெய்வம் உளது என உணரவே வெவ் வழி விலகி விடுகின்றது; செவ்விய ஆன்ம நேயங்கள் செழித்து வளர்ந்து திவ்விய மகிமைகள் உளவாகின்றன.

பல்லாரும் உன் உயிர் என்று எண்ணி ஒழுக.

என்றது உயர்ந்த உயிர் வாழ்க்கையின் சிறந்த நிலைமை தெரிய வந்தது. ஆன்ம நேயம் ஆனந்த போகம் ஆகின்றது.

தன்னுடைய உயிரை ஒருவன் எவ்வாறு பேணி வருகிறானோ அவ்வாறே எல்லா உயிர்களையும் பிரியமாகக் கருதிவரின் அவன் அரிய பேறுகளை அடைகின்றான்.

இவன் சிறிது அன்பு செய்ய உலகம் எல்லாம் இவன் மேல் பெரிதும் அன்பு செய்கின்றன. வித்திலிருந்து விளைவு தோன்றுதல் போல் ஒருவன் செயல் இயலின் படியே பயன்கள் விளைகின்றன. விதைத்தது விளைவாய் விரிந்து வருகின்றது.

Love, and you shall be loved. (Emerson)

"அன்பு செய்; உலகம் உன்பால் அன்பாய்க் குவியும்" என எமர்சன் என்பவர் இவ்வாறு கூறியுள்ளார். இன்னாமையை ஒழித்து இனிமையை வளர்த்து வருவதை உயர்ந்தவர் எவரும் உவந்து போற்றி வருகின்றனர். "Love your enemies" (Bible) "பகைவரையும் நேசியுங்கள்" என ஏசுநாதர் அருளியிருக்கிறார்.

பகைமை கொடுமை பழி பாவம் யாவும் அன்பால் ஒழிந்து போகின்றன. உறவு உரிமை புகழ் புண்ணியம் எல்லாம் அதனால் விளைந்து வருகின்றன. இனிய வரவுகள் இன்பம் தருகின்றன.

மனித சமுதாயத்தை இனிய தாக்கி யாண்டும் புனிதப் படுத்தி வருதலால் அன்பு மேன்மையான ஒரு ஆன்ம அமுதமாய் அமைந்திருக்கின்றது. அது மருவிய அளவே மகிமைவிளைகின்றது.

உயர் கதி நின் உடல் ஆகும் என்றது அன்புடைமையால் அடையும் ஆதாய நிலை அறிய வந்தது. ஒருவன் உள்ளத்தில் அன்பு வளர உயர்ந்த பேரின்ப வெள்ளம் அவனைச் சூழ்ந்து பெருகுகின்றது. கதி மோட்சம் தானாகவே அவனுக்குத் தனி உரிமையாய் மருவுகின்றது.

எல்லாம் இறைவன் உருவங்கள் எனக் கருதுக; எங்கும் அன்பு செய்க; பொங்கிய பேரின்பம் உன் முன்பு வந்து புகும்.

---

370. உள்ளம் உருகி உடையான் தனைநினைந்து
வெள்ளம் எனநீர் விழிபெருக்கிக்—கள்ளம்
கலவாத பேரன்பைக் கண்டவர்கள் அன்றே
விலகாமல் எய்துவார் வீடு. (ம)

இ—ள்

உடையவனை நினைந்து தம்முடைய உள்ளம் கரைந்து கண்ணீர் சொரிந்து உண்மையான உயர்ந்த அன்பைப் பூண்டவர்களே பேரின்ப வீட்டை உறுதியாகப் பெறுவர் என்றவாறு.

இது அன்புக்கு உரிய உறுதி நிலையை உணர்த்துகின்றது.

மனைவி மக்கள் பாலும், சனசமுதாயத்தின் மேலும், பிற பிராணிகளிடமும் பாசமும் நேசமும் தயையும் புரிந்து ஒழுகும் வகைகளை இதுவரை அறிந்து வந்தோம்; இதில் இறைவனை நாடி உருகும் உரிமையை அறிய வந்திருக்கிறோம்.

உற்ற பிறவியில் உடல் உரிமையான பொருள்களில் பிரியம் வைத்து இனியராய் மனம் கனிந்து ஒழுகுவது உயர் நீர்மையே ஆயினும் என்றும் தனி உறவாய் யாண்டும் உயிர்க்கு உயிராயுள்ள இறைவனை நினைந்து உள்ளம் கரைந்து உணர்வு கசிந்து உரிமையுடன் வழிபாடு செய்து வருவதே விழுமிய நிலைமையாம்.

சீவான்மாவுக்கும் பரமான்மாவுக்கும் உள்ள உறவுரிமையை ஓர்ந்து உணரின் அதனைப் பிரிந்து நிற்கும் பரிதாப நிலையைத் தெளிவாகத் தெரிந்து உள்ளம் கரைந்து உருகும்; விழி நீர் வெள்ளம் பொழிந்து பெருகும். உயர் நீர்மை சுரந்து மருவும்.

தனது மனைவி, தன் பிள்ளை என்னும் உரிமையினாலேதான் ஒருவன் உள்ளத்தில் பிரியம் உண்டாகின்றது. உரிமை உணர்ச்சி அன்புக்கு மூல வித்தாயுள்ளது. தேக சம்பந்திகளாய் வந்துள்ள வர்களிடம் மனிதன் மோகம் மிகுந்து நிற்கின்றான்; என்றும் ஆன்மநாயகனாய் அமைந்துள்ள ஆண்டவனை மறந்து விடுகின்றான்.

உயிர்க்கு உயிரான உரிமைப் பொருளை உண்மையாகத் தெரிந்த பொழுது உலக சம்பந்தமான எல்லாப் பொருள்களையும் இகழ்ந்து தள்ளிவிட்டு அதனையே உயிர் உள்ளி உருகுகின்றது; அதனால் பேரின்ப வெள்ளம் பெருகி எழுகின்றது.

உடையான் என்றது கடவுளுக்கு ஒரு பெயர். எல்லா உயிர்களும் யாவும் தனக்குத் தனி உரிமையான உடைமைகளாக என்றும் உடையவன் என்பதை இந் நாமம் உணர்த்தி நிற்கின்றது.

உயிர்க்கு இனிய இந்த அருமைத் துணையைக் கருதிவருவது உறுதி நலனாய் உய்தி தருகின்றது; கருதாது ஒழிவது பரிதாபமாயிழிந்து படு துயரமாகின்றது.

> அருந்துணையை; அடியார்தம் அல்லல் தீர்க்கும்
> அருமருந்தை; அகல்ஞாலத் தகத்துள் தோன்றி
> வருந்துணையும் சுற்றமும் பற்றும் விட்டு
> வான்புலன்கள் அகத்தடக்கி மடவாரோடும்
> பொருந்தணைமேல் வரும்பயனைப் போக மாற்றிப்
> பொதுநீக்கித் தனைநினைய வல்லோர்க்கு என்றும்
> பெருந்துணையைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
> பேசாத நாள்எல்லாம் பிறவா நாளே. (தேவாரம்)

இந்தப் பாசுரம் பரிவு மீதூர்ந்து வந்துள்ளது. பொருள் நிலைகளைக் கண் ஊன்றிக் கருதி உணர வேண்டும்.

அருந்துணை, அருமருந்து, பெருந்துணை என இதில் இறைவனைக் குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்கத் தக்கது. இந்த ஆன்மநாயகனை மறந்த நாள் மனிதனைப் பிறந்த நாள் ஆகாது என்றமையால் பிறப்பின் பயனும் குறிப்பும் ஓர்ந்து உணர்ந்து கொள்ளலாம்.

> வெள்ளம் என நீர் விழி பெருக்கி

என்றது பரமனது உரிமையை அறிந்த பொழுது உயிர் உருகி நிற்கும் உண்மை நிலை உணர வந்தது.

ஆனந்த போகமாய் அரசு புரிந்திருக்கும் தனது அருமைத் தந்தையைப் பிரிந்து போய் நெடுந்தூரம் கடந்து வருந்தி அலைந்து நீண்ட காலம் துயருழந்து நொந்த மைந்தன் தெய்வாதீனமாய் மீண்டு வந்து தன் தந்தையைத் தனியே காண நேரின் அவன் உள்ளம் எவ்வாறு உருகி மகிழுமோ அவ்வாறே பரமனைப்பிரிந்து போய்ப் பிறவித் துயரங்களில் வீழ்ந்து உழந்து தாழ்ந்து தவித்த சீவன் மறுபடியும் அரிதாக அத் தாதையைத் தலைக் கூட நேர்ந்த பொழுது அப்பனே! அத்தா! ஐயனே! எனப் பரவசமாய் அழுது கரைந்து ஆனந்த நிலையை அடையும் என்க.

புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
 பொன்னெடுங் கோயிலாப் புகுந்துஎன்
என்பெலாம் உருக்கி எளியையாய் ஆண்ட
 ஈசனே! மாசிலா மணியே!
துன்பமே பிறப்பே இறப்பொடு மயக்காம்
 தொடக்கெலாம அறுத்தநற் சோதீ
இன்பமே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
 எங்கெழுந் தருளுவ தினியே. (திருவாசகம்)

இறந்திறந்தே இளைத்தஎலாம் போதும் இந்த உடம்பே
 இயற்கைஉடம் பாக அருளின்னமுதம் அளித்து என்
புறந்தழுவி அகம் புணர்ந்தே கலந்து கொண்டு எந் நாளும்
 பூரணமாம் சிவபோகம் பொங்கியிட விழைந்தேன்
பிறந்திறந்து பொய்க்கதியைப் பெறநினைந்து ஏமாந்த
 பேதையர்போல் எனைநினையேல் பெரியதிருக் கதவம்
திறந்தருளி அணைந்திடுவாய் சிற்சபைவாழ் அரசே
 சித்தசிகா மணியேஎன் திருநடநா யகனே. (அருட்பா)

பரமன் பிரிவை நினைந்து மறுகி அன்பால் உருகி முன்னைய நிலையை மீண்டும் அடைந்து கொள்ள விழைந்து அன்னையை நாடி ஓடும் பிள்ளைகள் போல மெய்யுணர்வுடைய மேலோர் இன்னவாறு இறைவனை நோக்கி விரைந்து செல்லுகின்றனர்.

சிறந்த மனிதப் பிறவியைப் பெற்ற பயன் மீண்டும் வேறொரு பிறவியை அடையாமல் ஆண்டவனை அடைந்து கொள்வதேயாம். அந்த ஆனந்த பூரணனை நினைந்து கனிந்த போது ஆன்மா அவன் மயமாய் அமைந்து திகழ்கின்றது.

அன்பைக் கண்டவர்கள் வீடு எய்துவார்.

என்றமையால் அன்புக்கும் முத்திப் பேற்றிற்கும் உள்ள உறவுரிமையை உய்த்துணர்ந்து கொள்ளலாம்.

மனிதன் அன்பால் உருகி அழுத பொழுது தெய்வம் கருணைத் தாயாய்க் கனிந்து வந்து அவனை உவந்து அணைத்து எடுத்துக் கொள்ளுகின்றது. கொள்ளவே துன்பங்கள் யாவும் தொலைந்து போகின்றன; இன்ப நலங்கள் பெருகி எழுகின்றன.

அன்பன் ஆகும் தன தாளடைந்தார்க்கெலாம்
செம்பொன் ஆகத்து அவுண னுடல் கீண்டவன்
நன்பொன் ஏய்ந்த மதிள்சூழ் திருக்கண்ண புரத்து
அன்பன் நாளும் தனமெய்யர்க்கு மெய்யனே.

(திருவாய்மொழி)

கடவுளை அன்பன் என்று நம்மாழ்வார் இங்ஙனம் குறித்திருக்கிறார். இன்ப மூர்த்தியாகிய இறைவன் தன்பால் அன்பால் உருகியஉயிர்களுக்குஅன்பு சுரந்து பேரின்பநலனை அருளுகின்றார்.

புத்தியை வாங்கிநின் பாதாம் புயத்தில் புகட்டி அன்பாய்
முத்தியை வாங்க அறிகின் றிலேன்முது சூர் நடுங்கச்
சத்தியை வாங்கத் தரமோ குவடு தவிடுபடக்
குத்திய காங்கேய னேவினை யேற்குஎன் குறித்தனையே.

(கந்தர் அலங்காரம்)

சித்தம் அன்பாய் அமையின் முத்தியின்பம் உண்டாம் என அருணகிரி நாதர் இவ்வாறு அருளியிருக்கிறார்.

---

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

அன்பு உயிரின் சாரம்.
அது செய்வதே பிறவிப் பயன்.
அன்பு இல்லாத பிறப்பு அவமேயாம்.
அன்புடையவன் இறைவனுக்கு இன்பக் கனி.
இறைவனை நினைவதே இன்பப் பேறும்.
அன்பு இன்றேல் யாவும் இன்றாம்.
அன்பை எங்கும் செய்க.
அன்பால் அதிசய மகிமை விளைகின்றது.
எல்லாம் ஈசன் என நினைக.
உள்ளம் உருகின் பேரின்ப வெள்ளம் பெருகும்.

௩௭-வது நேயம் முற்றிற்று.

---

# முப்பத்தெட்டாம் அதிகாரம்.

## நினைவு.

அஃதாவது நினைவின் நிலைமை. நினைப்பு மறப்பு விழிப்பு துயில் முதலிய நிலைகளில் தோய்ந்து சீவர்கள் உலகில் இயங்கி வருகின்றனர். நினைவினால் மனிதன் அடையும் உறுதி நலனை உணர்த்துகின்றமையால் நேயத்தின் பின் இது வைக்கப்பட்டது.

371. நனவு கனவு நளிர்துயில் என்னும்
இனவகை மூன்றால் இயங்கி—மனவகை
உற்று மனிதன் உலாவி உழல்கின்றான்
பற்று முனிவு படிந்து. (க)

இ-ள்.

நனவு கனவு துயில் என்னும் மூவகை நிலைகளில் தோய்ந்து ஆசை வெகுளிகள் வாய்ந்து மனிதன் உலகில் வாழ்ந்து வருகின்றான் என்றவாறு.

இது, உனது நிலைமையை நினை என்கின்றது.

மனிதனுடைய வாழ்க்கைகாலத்தால் கணிக்கப்பட்டுள்ளது. பொழுது பலவகை நிலைகளில் கழிந்து போகின்றது. ஆயுளாக அமைந்துள்ள நாள் பழுது படாதபடி பயன் படுத்துகின்றவன் விழுமிய பயனைப் பெற்றவனாகின்றான்.

விழிப்பு உறக்கம் கனவு என அனுபவங்களான இம்மூன்றும் வாழ்க்கைக் கூறுகளாய் மருவி யிருக்கின்றன.

நனவு=ஐம் பொறிகளும் உணர்வுடன் இயங்கும் நிலை.

துயில்=புலன்கள் அடங்கி அயர்ந்திருக்கும் அமைதி.

கனவு=நனவும் துயிலும் இன்றி இடையில் இயங்குவது.

இம் மூவகை நிலைகளும் சீவ வாழ்வில் மேவியுள்ளன. இயல்பான இயக்கங்களாய் இசைந்துள்ளமையால் இவை சீவ சுபாவங்கள் ஆயின. சாக்கிரம் சுழுத்தி சொப்பனம் என வட மொழியில் இவை வழங்கப் படுகின்றன.

பகலில் விழிப்பாய் மக்கள் தொழில் புரிகின்றனர்; இரவில் அயர்ந்து உறங்குகின்றார். இந்தத் தூக்கத்தின் இடையே சில சமயங்களில் நினைவாய் எழுவதே கனவு என வந்தது.

வாழ்வின் கூறுகளாய் வாய்ந்துள்ள இவற்றுள் தோய்ந்து ஆசைகளிலும் பாசங்களிலும் ஆழ்ந்து மனிதன் வாழ்ந்து வருகிறான். மானிட வாழ்வு மன நினைவால் இயங்குகிறது.

பற்று முனிவு படிந்தது என்றது விருப்பும் வெறுப்பும் வேரூன்றி நிற்கும் நீர்மை தெரிய வந்தது. மனிதன் பெரிதும் குறைபாடுடையவன் ஆதலால் நிறைவை அவாவித் தவிக்கின்றான்.

எல்லாம் அறிந்து, எங்கும் நிறைந்து, என்றும் உள்ள பரம்பொருளுக்குப் பற்றும் முனிவும் இல்லாமையால் வேண்டுதல் வேண்டாமையிலான் என அவன் விளங்கி நிற்கின்றான். அந்தப் புனிதனை அடைய மனிதன் அந்நிலையில் புனிதன் ஆகவேண்டும்.

பற்றும் முனிவும் அற்ற போதுதான் ஆன்மா பரமான்மை உற்று மகிழ்கின்றது. தீயது ஒழிந்து தூய்மை ஆய போது சேயதும் அண்மையாய்ச் சேர்ந்து விடுகின்றது.

பற்று முனிவுகள் படிந்துள்ள அளவும் சீவன் படியில் உழந்து வருகின்றான். தனது உண்மை நிலையை உணர்ந்து நன்மை அடைய வேண்டும் என்று உணர்த்துகின்றமையால் வாழ்வின் இயல்புகளையும் மயல்களையும் இது விளக்கியருளியது.

நனவு துயில் விழைவு வெகுளிகளை யுடையனாய் ஒழுகி வருகின்றாய்; நீ யார்? உன் நிலை என்ன? தேகமும் என்னுடையது என்று நாளும் நீ சொல்லி வருகின்றமையால் அதனினும் வேறாய்த் தேகி என நிற்கின்றாய்; உனது நிலைமையை நினைந்து பார் என நினைவூட்டிய படியிது.

> நனவு கண்டதும், நான் கண்ட நனவுள நினைவு நீங்கிக்
> கனவு கண்டதும், சுழுத்தி கண்டதும், வேறு ஒன்றேபோல்
> தினம் அநுபவிப்பது ஒக்கும்; தெரியவும் இல்லை; சற்றே
> மனதினில் உதிக்கும் பின்னே மறைக்கும் அது அருளுவீரே.
>
> (கைவல்லியம்)

இன்னவாறு தனது அனுபவ நிலைகளைத் துருவி நோக்கி அறிவுடன் உசாவி வருவது ஆன்ம விசாரம் ஆகின்றது இந்தத் தத்துவ விசாரணை மனிதனை உத்தம நிலையில் உயர்த்தியருள்கின்றது. உன்னை நினைந்து பார்; அந்தப் பார்வையில் உண்மை தெரியும்; ஒளி பெருகும்; உயிர் உயரும்; உய்தி உண்டாம்.

372. நினைவால் மனிதன் நெடிது நிலாவி
நனவால் மிகவும் நடந்து—தினமும்தன்
வாழ்வை நடத்தி வருகின்றான் வந்தமைந்த
சூழ்வின் படியே தொடர்ந்து. (உ)

இ—ள்

மனிதன் எண்ணங்களால் வளர்ந்து பழகியுள்ள பழக்க வாசனையின் படியே தொழில் புரிந்து யாண்டும் தனது வாழ்வை நடத்தி வருகின்றான் என்றவாறு.

நினைப்பு மறப்பு என்பன ஒளியும் இருளும் என மனித வாழ்வில் மருவி யுள்ளன. நினைவு அமைந்த அளவுதான் வாழ்வு இனிது நடந்து வருகின்றது நினைவு நேரம் எல்லாம் நனவு என நிலவி நிற்றலால் அது நேராதபோது யாதொரு வினைவும் சேராது என்பது தெளிவாய் நின்றது.

மனிதனது வாழ்வும் தாழ்வும் அவனுடைய நினைவிலேயே நிலைத்து உள்ளன. வித்தில் மரம் அடங்கி யிருப்பது போல் நினைப்பில் நிலை அடங்கி யிருக்கின்றது.

எண்ணங்கள் வாழ்வின் வண்ணங்களாய் வருகின்றன.

எண்ணத்தின் படியே மனிதன் வண்ணமும் வடிவும் அமைந்து வாழ்ந்து வருகிறான். காரண காரிய முறையில் இது பூரணம் அடைந்துள்ளது. உள்ளமே எல்லாம் என உணரவுரியது.

ஒருவன் புண்ணிய சீலன் என வெளி வருவான் ஆயின் அவன் புண்ணியமான எண்ணங்களை நாளும் எண்ணி வந்துள்ளான் என்பது திண்ணமாகத் தெளிவுறுகின்றது.

வெளியே தோன்றுகின்ற விளக்கங்கள் யாவும் உள்ளே ஊன்றிய நினைவுகளி லிருந்தே ஒளி பெற்று நிற்கின்றன.

புகழ் புண்ணியங்களாகிய உயர் நிலைகளும், பழி பாவங்களாகிய இழி நிலைகளும் நினைவிலிருந்து விளைந்த நெடிய விளைவுகளேயாம். நினைவின் நிலைகள் எங்கும் பொங்கி நிலாவுகின்றன.

உள்ளே நினைவு நல்லதாய் உயரின் மனிதன் வெளியே நல்லவனாய் உயர்கின்றான்; அது தீயதாய் இழியின் அவன் தீயவனாய் இழிகின்றான். நினைவுகளே உயிர்களை ஆண்டு வருகின்றன.

தினை அளவு தீமை மனதில்ஏறினும் அவ்வளவுக்கு மனிதன் தீயனாகின்றான். நன்மையும் அப்படியே தன்மையை வளர்க்கின்றது. தீயநினைவு தீயன்ஆக்கி மனிதனைத்துன்பத்தில் ஆழ்த்துகின்றது; தூய நினைவு தூயன் ஆக்கி அவனை இன்பத்தில் ஏற்றுகின்றது.

முத்தியின்பத்தையும் நரக துன்பத்தையும் தன்னையுடையானுக்குத் தரவல்லதாய் நினைவு மன்னியிருத்தலால் அதன் தன்மையும் வன்மையும் என்ன நிலையின! என்பது எளிது தெளிவாம்.

நிலத்தில் இட்ட வித்து முளைத்து விளைதல்போல் மனத்தில் தொட்டது கிளைத்து வருகின்றது.

நல்ல வித்து நலம் பல தருகின்றது; கெட்ட வித்து கெடுவிளைவாகின்றது. விதைத்த விளைவை உழவன் அறுப்பது போல் நினைத்த பலனை மனிதன் அனுபவித்தே தீர வேண்டும்.

"A man will reap just what he sows." (Page)

"தான் விதைத்ததையே மனிதன் அறுப்பான்" என இது குறித்திருக்கின்றது. நினைப்பின் நிலையையும் வினைப் பயனையும் மேல்நாட்டார் எவ்வாறு கருதியுள்ளனர் என்பது இதனால் அறியலாகும். கருதியனவே கரும பலன்களாய் மருவி வருகின்றன.

நினைவில் நிமிர்ந்து, நனவில் நடந்து வருகின்றான்.

என்றது மனித வாழ்வின் இயலும் செயலும் கருதிவந்தது.

நினைவே யாண்டும் உயிரினங்களை ஆண்டு வருகின்றது. அதனைப் புனிதமாகப் பேணி வருகின்றவன் இனிய மனிதனாய் இன்பம் நுகர்கின்றான்; அங்ஙனம் பேணாமல் பிழைபடவிட்டவன் ஈனமாயிழிந்து இன்னலுழந்து கெடுகின்றான்.

நல்ல நினைவிழந்த போதே நலமிழந்து
அல்லல் உழந்தான் அவன்.

நனவில் விழித்துத் தொழில் புரிகின்றவன் நினைவிலும் விழிப்பாய் எழில் புரியின் அவன் ஒளி விழியுடையனாய் உயர் பயன் அடைகின்றான் நினைவின் கண்ணேயே எல்லா வாழ்க்கை நிலைகளும் நிலைத்து நிற்கின்றன; அந்த உண்மையை ஊன்றி உணர்ந்து தன்மையுடன் நடந்து நன்மை அடைந்து கொள்ளுக.

373. வினைவிளை வெல்லாம் விரிந்த மனத்தின்
நினைவால் நிமிர்ந்து வரலால்—நினைவைப்
புனிதப் படுத்தினுர் புண்ணியராய் நின்ருர்
மனிதப் பரப்புள் மகிழ்ந்து. (௩)

இ—ள்

கரும விளைவுகள் எல்லாம் மனத்திலிருந்து விளைந்து விரிந்திருக்கின்றன; தன் எண்ணத்தைப் புனிதப் படுத்திக் கொண்டவன் புண்ணிய சீலனுய் உயர்ந்து மகிழ்கின்ருன் என்றவாறு.

வினை விதி ஊழ் கருமம் என்னும் பதங்கள் வியன் பொருளுடையன. இம் மொழிகள் அறிவுலகில் அதிசய ஒளிகளை வீசி உலாவுகின்றன. கரும பலன்களை அனுபவித்துக் கழிக்கவே மனிதன் பிறந்திருக்கிருன் என நூல்கள் எல்லாம் வரைந்திருக்கின்றன.

தான் செய்யும் கருமம் நல்லது ஆயின் அது இன்பம் ஆகின்றது; தீயதாயின் துன்பம் தருகின்றது. ஒருவன் அடைகின்ற இன்ப துன்பங்களுக்கு அவனுடைய நல்வினை தீவினைகளே காரணமாகின்றன. பெருமையும் சிறுமையும் பிறர் தர வாரா; தான் தர வருமே என்றமையால் தோன்றுகின்ற அனுபவங்களுக்கு எல்லாம் அவனது வினையே மூல வேராய் ஊன்றியுள்ளமை உணரலாகும்.

"வினையின் வந்தது; வினைக்கு விளைவாயது;
புணைவன நீங்கின் புலால் புறத்திடுவது;
மூத்துவிளி வுடையது; தீப்பிணி இருக்கை;
பற்றின் பற்றிடம்; குற்றக் கொள்கலம்;
புற்றடங்கு அரவின் செற்றச் சேர்க்கை;
அவலக் கவலை கையாறு அழுங்கல்
தவலா உள்ளம் தன்பால் உடையது;
மக்கள் யாக்கை," (மணிமேகலை, 4)

பிறப்பு வினையால் வந்தது என இது விளக்கி யுள்ளது.

செய்த வினைப்பயன் சேர்ந்து நுகர
எய்திய பிறப்பு இஃது என்பதை உணர்ந்தும்
உய்தியை நாடி உயர்நிலை உருமல்
மீட்டும் வினைகளை விழைந்து புரிந்து
மாட்டு மதியாய் மறிதல்
கேட்டு நிலையின் கெடுகுறி யாமே.

துன்ப மூலமான வினைகள் ஒழிந்த பொழுதுதான் இன்ப நலம் காண முடியும்; இங்ஙனம் உறுதியான உய்தியை உணராமல் மேலும் மேலும் துன்பத்திற்கே ஏதுவைச் செய்து கொள்வது பேதைமையாம் என இது உணர்த்தியருளியது.

படர்தரும்வெவ் வினைத்தொடர்பால் பவத்தொடர்பு; அப்
 பவத்தொடர்பால் படராசிற்கும்
விடலரும்வெவ் வினைத்தொடர்பு; அவ்வினைத்தொடர்புக்கு
 ஒழிபுஉண்டோ? வினையேற்கு அம்மா!
இடர்பெரிதும் உடையேன்மற்றுஎன்செய்கேன்! என்செய்கேன்!
 அடலரவம அரைக்கசைத்த அடிகேளோ அடிகேளோ.

(சிதம்பரச் செய்யுட் கோவை 36)

வினையால் பிறவி உண்டாகின்றது; அங்ஙனம் உண்டான பிறவி மீண்டும் வினையைச் செய்கின்றது; இவ்வாறு காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலால் பிறவி நீங்கி எனக்கு உய்யும்வழி உண்டோ? எனக் குமர குருபரர் இறைவனை நோக்கி இவ்வாறு மறுகி முறையிட்டு உருகியிருக்கிறார்.

"வேதாவை இவ்வண்ணம விதித்தது ஏன்? என்னின், உன்
 வினைபபகுதி என்பன்; அந்த
வினைபேச அறியாது; நிற்க, இவை மனதால்
 விளைந்ததால் மனதை நாடில்
போதமே நிறகும்; அப் போதத்தை நாடிலோ
 போதமும நிலைல விளக்கம;
பொய்யன்று தெய்வமறை யாவுமே நீ என்று
 போக்குவர வற நிகழ்த்தும." (தாயுமானவர்)

சிருட்டி கருத்தாவாகிய பிரமனை நோக்கி ஓ வேதனே! என்னை ஏன் இந்த வேதனைப் பிறவியில் படைத்தாய்? என்று கேட்டேன்; அதற்கு அவன "நான் என்ன செய்வேன்? உன் வினைக்கு ஈடாகப் படைத்தேன்" என்றான்; வினையை நோக்கினேன், அது யாதும் பேச மாட்டாமல் மானத்தைக் காட்டியது; மானத்தைப் பார்த்து வினவினேன்; அது அறிவைச் சுட்டி விட்டது; அந்த அறிவை நோக்கினேன், அது உன்னைக் காட்டி நின்றது; ஆதலால் எல்லாவற்றிற்கும் நீயே காரணன்; என் பிறவியைத் தீர்த்தருள் என இறைவனோடு தாயுமானவர் இப்படி வழக்காடி யிருக்கிறார். வழக்கு வழிமுறையை விளக்கியுளது.

வினையின் நிலையும் அதன் விளைவும் இங்ஙனம் விரிந்து பரந்துள்ளன. இப் பரப்பெல்லாம் நினைப்பின் பிறப்புகளேயாம்.

மனிதனுடைய எண்ணம் சொல் செயல்களே வினைகளாய் வருகின்றன. செயலும் சொல்லும் எண்ணத்தின் வண்ணமாய் எழுதலால் எல்லாவற்றிற்கும் அதுவே முதன்மையாய் உள்ளது.

நினைவு ஒன்று நல்லதாயின் யாவும் நல்லனவாய் விளைகின்றன. எல்லா நன்மைகளுக்கும் மூல வித்தா யுள்ளமையான் நினைவை இனிது பேணி வருகின்றவர் யாண்டும் தனி மகிமையுடன் தழைத்து விளங்குகின்றார்.

நினைவைப் புனிதப் படுத்தினார் புண்ணியர்.

யாதொரு தீமையும் அணுகாமல் எண்ணங்களைப் பேணி வருபவர் தரும குண சீலராய் இருமையிலும் பெருமை பெறுகின்றனர். உயர் நலங்கள் எல்லாம் உள்ளத்தில் உள்ளன.

புனிதமான நினைவு புண்ணியம் ஆகின்றது; அதனால் எண்ணிய நலங்கள் யாவும் இனிது வருகின்றன.

---

374. இனிய நினைவுகள் இன்னமிர்தாய் இன்பம்
கனிய வளர்ந்து கதிக்கும்—துனியான
தீய நினைவுகள் தீவிடமாய் ஓங்கியே
மாய வருத்தும் மதி. (௪)

இ—ள்

நல்ல எண்ணங்கள் இனிய அமிர்தமாய்ப் பெருகி இன்பம் தருகின்றன; தீய நினைவுகள் கொடிய விடமாய் விரிந்து குடிகேடு புரிகின்றன என்றவாறு.

இனிய நினைவுகள் என்றது புனிதமான எண்ணங்களை. எவ்வுயிர்க்கும் இன்னாமைஇல்லாத சிந்தனைகளே இனிய நினைவுகளாம்.

உண்ணும் உணவு உடலை வளர்ப்பது போல் எண்ணும் எண்ணங்கள் உயிரை வளர்க்கின்றன. சத்து இல்லாத புல்லிய உணவுகளைப் போல் புன்மையான நினைவுகள் நன்மை யாதும் பயவாமல் வறிதே இழிந்து படுகின்றன.

அறிவும் அன்பும் மருவி எழும் நினைவுகளே பெருமையும்

இன்பமும் சுரந்து பெருகி வருகின்றன. மதிநலம் கனிந்த அளவே நினைவு அதிசய மகிமையை அடைகின்றது.

இனிய நினைவை அமிர்து என்றது உணர்வையும் உயிரையும் ஒளி மிகச் செய்து உறுதி புரிந்து வரும் உரிமை கருதி.

அமுதம் உண்டவன் அறிவும் ஆண்மையும் ஆயுள் வளர்ச்சியும் அடைகின்றான்; அவ் வண்ணமே இனிய எண்ணம் உடையவனும் அரிய பல உறுதி நலங்களை எளிதே பெறுகின்றான்.

நினைவு சீவ ஊற்று; அது இனிமை சுரந்து வரின் மனிதன் மகானாய் மகிமை மிகுகின்றான்.

நல்ல சிந்தனைகளையே நாளும் பழகி வருகின்றவன் நல்லவன் ஆகின்றான்; ஆகவே எல்லா இன்ப நலங்களும் அவனுக்குத் தனி உரிமைகளாய் இனிது அமைகின்றன.

இனியவன், நல்லவன், பெரியவன் என்பன இனிமை நன்மை பெருமை என்னும் குண நீர்மைகளால் அமைந்தன.

இதமான நினைவுகளால் இதயம் உயர்கின்றது; உயரவே உயர் பரமனுக்கு அது தனி நிலையம் ஆகின்றது. நல்ல நீர்மைகளால் தூய்மை அடைந்த உள்ளம் தெய்வத் தன்மையை எய்துகின்றமையால் உய்தி கண்டு உயர் இன்பங்களை நுகர்கின்றது.

ஒருவன் உள்ளம் நல்லதாய் உயரின் எல்லா உயிர்களும் அவனைத் திசை நோக்கித் தொழுகின்றன.

> "A man in the view of absolute goodness, adores, with total humanity."

"நல்ல எண்ணமுடையவனை மனித சமுதாயம் தானாகவே தொழுது வணங்குகிறது" என எமர்சன் உரைத்திருக்கிறார்.

கல்வி அறிவு முதலிய எல்லா நலங்களும் நல்ல எண்ணத்தால் ஒளி மிகப் பெறுகின்றன. எண்ணத்தின் நன்மை அளவே அவை சீரும் சிறப்பும் பெற்று மனிதனுக்குப் பேரும் புகழும் தருகின்றன.

எண்ணம் இழிவாயின் எத்துணை நூல் கற்றாலும்
அண்ணல் அருளை அவனடையான்—எண்ணம
புனிதம் எனின் அந்தப் புண்ணியனைத் தெய்வம்
மனமுவந்து கொள்ளும் மகிழ்ந்து.

நினைவு பழுதாயின் விழுமிய கல்வியும் இழிவாம் என்றமை யால் அதன் உய்தி நிலையும் உறுதி நலனும் தெளிவாய் நின்றன.

இனிய நினைவு அமிர்தமாய் வளர்ந்து எங்கும் இன்பம் அருள்கின்றது; இன்னாதது எந்நாளும் துன்பமே புரிகின்றது.

தீய நினைவுகள் தீவிடம்.

என்றது யாண்டும் அழி துயரங்களையே விளைத்து வருதல் கருதி.

உயர் நிலைகள் எல்லாம் தூய உள்ளத்திலிருந்து உளவா கின்றன; தூய்மை தோய்ந்துள்ள அளவே பான்மைபடிந்து அது மேன்மை மிகுந்து விளங்குகின்றது. அதில் தீய நினைவு படிந் பாங்கு சிதைந்து தீங்காய் மாறுகின்றது. உள்ளம் கெடவே எல்லா நலங்களும் ஒருங்கே ஒழிந்து போகின்றன. தூய நினை வுடையவன் தூயனாய் உயர்கின்றான்; தீய எண்ணம் உடையவன் தீயனாய் இழிகின்றான்.

நெருப்பு பட்ட இடத்தைச் சுடும்; விடம் குடித்தவனைக் கொல்லும். கெட்ட எண்ணம் தன்னை எண்ணினவனை அடியோடு கெடுத்து விடும்; அவன் செத்தாலும் விடாமல் பிறவிதோறும் வாசனையாய்ப் புகுந்து அவனை நீசன் ஆக்கி நாசப் படுத்தும்.

பொல்லாத எண்ணங்களை எண்ணுகின்றவன் தனது உள்ளக் கமலத்தில் தீமூட்டி உயிர்க்கு விடத்தை ஊட்டினவன் ஆகின்றான்.

ஒரு முறை பழகிய தீய வாசனை உயிரை விடாது பிடிக்கும். இதனை யோசனை செய்து உன் உள்ளத்தைப் பேணுக.

அன்பு தயை முதலிய கனிவான இனிய நினைவுகளையே என் றும் நினை; அவை அமுதவாரியாய் ஆனந்தம் விளைக்கும். கொடிய நினைவு குடிகேடு செய்யும்; அதனைக் கனவிலும் கருதாதே.

---

375. எண்ணுகின்றாய் தீமைஎனின் ஈனக் கொடுவிடத்தை
உண்ணுகின்றாய் என்றே உனையுணர்க—உண்ணுகின்ற
நஞ்சம் குடித்தானை நாசப் படுத்துமே
நெஞ்சக் குடியும் நினை. (ரு)

இ—ள்

தீமையை உன் நெஞ்சுள் நீ எண்ணுவாய் ஆயின் கொடிய

நஞ்சைக் குடித்தவன் ஆகின்றாய்; உண்ட நஞ்சு உயிர்க் கேடு செய்வது போல் கருதிய தீமை கடுந்துயர் விளைக்கும் என்க.

மனிதனுடைய எண்ணங்கள் அளவிடலரியன; ஆயினும் அவற்றை மூன்று வகையுள் அடக்கிக் கொள்ளலாம்.

நல்லது தீயது நடுவானது என நினைவுகள் முடிவாயுள்ளன.

அன்பு அருள் மருவி எல்லா வுயிர்களுக்கும் இதமாய எழுகின்ற எண்ணங்கள் நல்லன ஆகின்றன. கொடுமை பகைமை பொறாமைகள் மண்டி அயலார்க்குத் துயராய்த் தோன்றும் நினைவுகள் தீயனவாம். இங்ஙனம் இதமும் அகிதமும் தோயாமல் யாண்டும் தன்னலமே கருதிப் பொருளாசை முதலியனவாய் மருள் மிகுந்து உழல்வன பொதுவானவையாம்.

மனம் எப்பொழுதும் சலனம் உடையது. காற்றைப் போல் ஓயாது சலித்து வரும் இயல்பினது ஆதலால் ஏதேனும் ஒன்றை அது எண்ணிக் கொண்டே யிருக்கும்.

பொருள் போகங்களை நினைந்து கறங்கு போல் மனம் விரைந்து சுழன்று வர மனிதர் வெறியராய் உழன்று வரும் நிலை அதிபரிதாபமானது.

ஒருபொழுதும் வாழ்வ தறியார்; கருதுப
கோடியும் அல்ல பல. (குறள், 337)

உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்
எண்பது கோடிநினைந்து எண்ணுவன—கண்புதைந்த
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
சாந்தனையும் சஞ்சலமே தான். (நல்வழி)

மனிதருடைய இயல்புகளையும் நினைவின் நிலைகளையும் நுணுகி உணர்ந்து மேலோர்கள் இங்ஙனம் இரங்கி யிருக்கின்றனர்.

இவ் வாறான எண்ணங்களே பாச பந்தங்களாய் விரிந்து உயிர்களைப் பிறவிகளில் பிணித்துப் போமல் அலைத்து வருகின்றன. உள்ளத்தின் ஓட்டம் உயிர்ப் பிணி ஆயது.

வீடுகட்டி மாடுகட்டி மெய்யிறுகக் கட்டும்வினைப்
பூடுகட்டி விட்டுப் புறப்படமாட் டாதுலண்டு
கூடுகட்டி யாங்கேஎன் கோட்டை கட்டினேன் கடப்பம்
காடுகட்டி ஆளுமுக்கட் கட்டித் திரவியமே.

(மதுரை அந்தாதி)

உலக போகங்களை விழைந்து எண்ணிய எண்ணங்களே அலகிலாத பிறவிகளாய் வந்தன என இது அறிவுறுத்தியுள்ளது. கடப்பம் காடு என்றது மதுரையை; முன்பு கடம்பவனமா யிருந்தது பின்பு இந்தத் திருநகரம் ஆயது. மூன்று கண்களை யுடைய அமுதமே! எனச் சொக்கநாதப் பெருமானைச் சுட்டி முக்கட் கட்டி என வந்தது.

சொக்கநாதா! பெரிய வீடு கட்டி நல்ல மாடு கட்டிச் சுகமாக வாழ வேண்டும் என்று எண்ணி என்றும் தீராத துயரப் பிறவியைக் கட்டிக் கொண்டேன்; இக் கட்டான இக்கட்டை நீக்கி என்னைக் காத்தருள் எனக் கவி இவ்வாறு இறைவனை வேண்டியிருக்கிறார். மெய் இறுகக் கட்டும் வினைப் பூடு என இதில் குறித்திருப்பது எதை? கூர்ந்து பார்க்க.

மனக் கோட்டையால் பிறவிக் கோட்டை ஆயதற்கு உவமை வந்தது. தான் சுகமாய் இருந்து வாழவேண்டும் என்று சிலந்திப் பூச்சி நூலால் வலைபின்னிக் கூடுகட்டும்; தன்னை உள்ளே வைத்து முழுதும் சுற்றி விடுதலால் பின்பு வெளியே வரமுடியாமல் அது அங்கேயே அகப்பட்டுச் செத்துப்போகும். தன் செயலால் தனக்கே கேடுவிளைத்துக் கொள்ளும் புழுவைப்போல் தனது எண்ணத்தால் தனக்கு மனிதன் இடர் இழைத்துக் கொள்ளுகின்றான். உலண்டு கூடு கட்டுவதை உவமை காட்டியது உணர்ந்து சிந்திக்கத் தக்கது. "We are like silk worms". "நாம் பட்டுப்பூச்சு போல் உள்ளோம்" என விவேகானந்தரும் இங்ஙனம் குறித்திருக்கிறார். தனது வினை விளைவினாலேயே தனக்கு விளிவு நேர்வதை மனிதன் அறியா திருப்பது மதி கேடான விதி முடிவாயது.

> "வரியுடல் சூழக் குடம்பை நூல் தெற்றிப்
> போக்குவழி படையாது உள்உயிர் விடுத்தலின்
> அறிவு புறம் போய உலண்டது போலக்
> கடல்திரை சிறுத மலக்கு துயர் காட்டும்
> உடல் எனும் வாயில் சிறைநடுவு புக்குப்
> போகாது உணங்குறும் வெள் அறிவேம்." (கல்லாடம்)

எனக் கல்லாடரும் இங்ஙனம் கரைந்து சொல்லியிருக்கிறார்.

உலக அவாவால் பிறவி நேர்ந்தது என்று தெரியவே அது தீரும்படி இறைவனை நாடி உணர்வுடையார் உருகி நிற்கின்றார்.

தத்தையங் கனையார் தங்கள்மேல் வைத்த
தயாவை நூறுயிரம் கூறிட்டு
அத்தில்அங்கு ஒருகூறு உன்கண்வைத் தவருக்கு
அமருலகு அளிக்குநின் பெருமை
பித்தன் என்று ஒருகால் பேசுவரேனும்
பிழைத்தவை பொறுத்தருள் செய்யும்
கைத்தலம் அடியேன் சென்னிமேல் வைத்த
கங்கைகொண்ட சோளேச்சரத் தானே.

(திருவிசைப்பா)

மங்கையர் மேல் வைக்கும் ஆசையில் நூறுயிரத்தில் ஒரு பங்கு ஈசன்பால் வைத்தால் பிறவி தீர்ந்து பேரின்பம் பெறலாமே! என ஆர்வத்தோடு இது போதித்துள்ளது.

மனிதனது எண்ணம் மையல் மிக வுடையது; அது தூய்ய நிலையை அடைந்த போதுதான் வெய்யநிலை தீர்கின்றது.

தன் நலம் கருதிய பொதுவான எண்ணங்களே இவ்வளவு இன்னல்கள் ஆகின்றன; அவை தீமையோடு கூடின் அதனல் விளையும் தீய விளைவுகள் எவ்வளவாம்? இதனைக் கூர்ந்து சிந்தித்து ஓர்ந்து உணர வேண்டும்.

தீமை எண்ணுகின்றுய் எனின், விடத்தை உண்ணுகின்றுய்! என்றது அந்த நீச எண்ணத்தால் விளையும் நாசத்தை உணர்ந்து. நினைவு இழிவாயின் மனிதன் அழிகின்றுன்.

உன் உள்ளத்தில் கெட்ட எண்ணம் தோன்றினல் அது உன்னை அடியோடு கெடுக்கும் கெடுகுறியாம். விடத்தைக் குடித்தவன் செத்து வீழ்தல் போல் கெட்டதை நினைத்தவன் கெட்டு வீழ்கின்றுன். நஞ்சம் காட்டியது நாசத்தின் உறுதி காண.

தன் நெஞ்சத்தில் கெடு நினைவு தோன்றினல் தனக்குக் கெட்ட காலம் வந்தது என்று ஒருவன் நினைந்து கொள்ள வேண்டும். பஞ்சில் தீயை வைத்தது போல் நெஞ்சில் தீமையை எண்ணுவது. ஒரு தீய எண்ணம் மருவினல் அந்த உள்ளம் பரிதாபமாய் இழிந்து பாழாய் ஒழிகின்றது.

அணு அளவு தீய நினைவு மலை அளவு துன்பத்தை விளைவு செய்து விடுகின்றது. மனிதனுக்கு உளவாகின்ற எல்லாத் துயரங்களும் பொல்லா நினைவுகளால் விளைந்து வந்தன.

பொல்லாங்கு என்பவை எல்லாம் தவிர் என்றது நல்ல ஞான போதனையாய் வந்துள்ளது.

தீமையை எவ்வழியும் யாதும் எண்ணுதே; எண்ணினுல் அது உனக்கே வெவ்விய துயரமாய் விளைந்து வளையும்.

நஞ்சைக் குடித்தவன் செத்தே போவான்; நெஞ்சத்தில் தீங்கு நினைப்பவனும் விளங்கவே மாட்டான். கெட்ட நினைவை ஈனக்கோடு விடம் என்றது மான மனிதனை ஈனப் படுத்திக் கொல்லும் அதன் இழவு நோக்கி.

கெடு நினைவைக் கடு விடமாக் கருதி விடுக.

புகழும் இன்பமும் விளைகின்ற மனமாகிய அந்தப் புனித நிலத்தில் பழிதுயர் புகாமல் இனிது பேணுக என்பது கருத்து.

---

376. உள்ளம் உயர உணர்வுயர்ந்து நல்லின்ப
வெள்ளம் பெருகி விரியுமே—கள்ளம்
தினையளவு நெஞ்சினிடைச் சேர்ந்தாலும் தீதாய்ப்
பனையளவு துன்பம் படும். (சு)

இ—ள்

உள்ளம் நல்லதாய் உயரின் உணர்வு ஒளி மிகுந்து பேரின்ப வெள்ளமாய்ப் பெருகி மிளிர்கின்றது; நெஞ்சில் தினை அளவு கள்ளம் புகின் பின்பு பனை அளவு துன்பம் விளையும் என்றவாறு

மனிதன் புகழ்ச்சியை விரும்புகிருன்; இகழ்ச்சியை வெறுக்கின்ருன். தன்னை உயர்ந்தவனுக எல்லாரும் சொல்ல வேண்டும் என்றே யாண்டும் அவன் ஏங்கி நிற்கின்ருன். உயர் நிலை யாவும் உள்ளத்திலிருந்தே உதயம் ஆகின்றன. தன்னுடைய உயர்வை அயலிடமிருந்து நாடுகின்றவன் மயலுடையனுகின்ருன்.

ஒருவனுக்கு உயர்வும் மகிமையும் தருவது உணர்வு. அந்த உணர்வு உள்ளத்தின் தகுதியால் ஒளி மிகுந்து உயர்கின்றது.

உள்ளம் உயர என்றது தாழ்ந்த நிலையில் வீழ்ந்து மனம் இழிந்து படாமல் உயர்ந்த நிலையில் அது வாழ்ந்து வரும்படி செய்தலை. உள்ளம் இளிவுறின் ஒளி இழந்த விழி போல் மனிதன் பழி யுறுகின்ருன். இழி நினைவு அழி துயராகின்றது.

மனிதனுடைய வாழ்வுகள் யாவும் உள்ளத்தால் ஒளிபெற்று வருதலால் அதன் இயல்பும் இருப்பும் அறியலாகும்.

மனம் சித்தம் உள்ளம் என்னும் மொழிகள் ஒரு பொருளனவாய்த் தோன்றினும் நினைவின் வகையில் நிலை வேறுடையன. எண்ணல் சிந்தித்தல் உள்ளல் என்னும் வினை வேறுபாடுகளால் நினைவின் கூறுகள் நிலை பிரிந்துள்ளமையை நுணுகி உணர்ந்து கொள்ளலாம். இனிய நினைவுடையது தனிமகிமை அடைகின்றது.

உயிர் வாழ்க்கைக்கு உறுதி புரிந்து ஊக்கி வரும் ஆக்கம் எல்லாம் உள்ளத்தையே ஆதாரமாக நோக்கியுள்ளது.

வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனையது உயர்வு. (குறள், 595)

மனிதனது உயர்ச்சிக்கு உள்ளம் மூல ஆதாரமாய் நிலைததுள்ள உண்மையை நாயனார் இங்ஙனம் உணர்த்தியுள்ளார்.

இந்த உள்ளம் புனித நிலையில் கனிந்து சீர்மை சுரந்து நிலவின் உணர்வு கூர்மையாய் ஒளி மிகுந்து விளங்குகின்றது. அந்த இனிய உணர்வால் எல்லா இன்ப நலங்களும் எளிதில் வருகின்றன. வரவுகள் நினைவின் உறவுகளாயுள்ளன.

இன்ப வெள்ளம் பெருகி விரியுமே.

என்றது உள்ளமும் உணர்வும் நல்லனவாய போது உளவாகும் ஊதியங்களை உணர்த்தி நின்றது.

நல்ல உள்ளத்தால் தெளிவான அறிவும், தெள்ளிய அறிவால் இன்ப வெள்ளமும் பெருகி வருதலால் யாண்டும் இன்பமே வேண்டி நிற்கும் மனிதன் முதலில் தன் உள்ளத்தை நல்லதாக்கிக் கொள்ள வேண்டும் என்பது குறிப்பாயது.

தனக்கு மகிமை தன் உள்ளத்திலேயே உள்ளது என்னும் உண்மையை ஒருவன் உணர்ந்து கொண்டால் அவன் அயலே மயலாய்ப் புன்மை புகான்; தன் நெஞ்சமே சான்றாய் யாண்டும் நன்மையே கருதித் தன்மை உயர்ந்து நிற்பன். தன் உள்ளத்தை அணுகி நோக்கவே இறைவனை அங்கே நுணுகி நோக்குகின்றான்.

அறிவிலா மாந்தர் நல்லன் என்றுரைக்க;
அல்லன் என்றுரைக்க மற்றவரால்
செறிபயன் உளதோ நெஞ்சமே! குளத்தூர்ச்
சிவபிரான் ஒருவனே அகத்துப்
பிறிவிலாத் துணையாய் உடனிருந்தறிந்து
பெரும் பயன் அளிப்பவன் அவனே
நெறியினல் அறிய வேண்டும் என்று இதனை
நினைந்திடாய் நன்று நின் அறிவே.

(குளத்தூர் அந்தாதி)

தன் உள்ளத்தோடு மனிதன் ஒன்றி நின்றபோது இங்ஙனம் நல்ல ஞான நோக்குடன் உரையாட நேர்கின்றான்.

இனிய உள்ளம் தெய்வ மணம் கமழ்ந்து இன்பம் தருகின்றது. இத் தகைய புனித நிலையத்தைப் புலை அடைய விடின் மனிதன் நிலை குலைந்து கெடுகின்றான்.

நல்ல உள்ளம் உணர்வும் ஒளியும் உதவி உயர் பேரின்பம் அருள்கின்றது. அது தீதாய்க் கள்ள முறின் எல்லா நலங்களும் இழந்து பொல்லாத் துயரங்களைப் பொருந்தச் செய்கின்றது.

உள்ளம் கெடின் உணர்வு கெடுகின்றது; உயர்வு ஒழிகின்றது; துயரங்களும் பழிகளும் தொடர்ந்து வருகின்றன.

துன்ப வினைவுகள் தோயாதபடி உன் உள்ளத்தைத் தூய்மை செய்து கொள்க. இன்ப நிலையை எளிது தெளிக என்பது குறிப்பு.

---

377. நினைவின் அளவே நிலையாம்; இதனை
நினைவில் நிதமும் நினைந்தே—எனைவழியும்
தண்ணளி பேணித் தயவு புரிந்துவரின்
கண்ணுேளி யாகும் கதி. (எ)

இ—ள்

தனது நினைவின் அளவே மனிதன் நிலைமை அமைகின்றது; இந்த உண்மையை நாளும் உணர்ந்து எவ்வழியும் நன்மையே பேணி எவ்வுயிர்க்கும் இதம் புரிந்து வரின் திவ்விய பேரின்ப நிலை நேரே வரும் என்றவாறு.

நினைப்பது, சிந்திப்பது, அறிவது, ஆராய்வது, உணர்வது, தெளிவது என்னும் வினை நிலைகளால் மனத்தின் இயல்புகள்

வெளிப்படுகின்றன. எண்ணி அறிவதாலும் அந்த அறிவின் கண்ணிய நிலையாலும் மனிதன் மாட்சிமை அடைந்து வருகிறான்.

நினைத்து நோக்கும் ஆற்றல் இன்மையால் யானை குதிரை மாடு ஆடு முதலிய மிருகங்கள் மாக்கள் என நின்றன. ஊன்றி நினைக்கும் உரனுடைமையால் மாக்களினும் சிறந்தவராய் மக்கள் உயர்ந்தனர். உயர்வெல்லாம் அறிவமைதியால் வாய்ந்தன.

மாவும் மாக்களும் ஐயறி வினவே;
மக்கள் தாமே ஆறறி வுயிரே. (தொல்காப்பியம்)

என ஆசிரியர் தொல்காப்பியனார் இவ்வாறு இயல் வகுத்துள்ளார். ஐயறிவு என்றது கண் மூக்கு முதலிய பொறிகளால்மட்டும் அறிவது. ஐம்பொறிகளோடு மன உணர்வும் வாய்ந்திருத்தலால் மக்களை ஆறறி வுயிர் என்றார். இந்த ஆறறிவின் உள்ளும் கூரறிவு சீரறிவு பேரறிவுகள் நேரளவி உள்ளன. கல்விப்பயிற்சியாலும் நல்வினை முதிர்ச்சியாலும் அறிவு ஒளியும் தெளிவும் பெற்று உயர்கின்றது. இனிய நினைவோடு தோய்ந்த அறிவு தனி மகிமை வாய்ந்து தலைமையாய் மிளிர்கின்றது.

நினைவின் அளவே நிலை என்றது தன் உள்ளத்திலிருந்து தோன்றுகின்ற எண்ணங்களின் வண்ணங்களாகவே மனிதர் மருவி வருதல் கருதி. நினைவு உயர நிலை உயர்கின்றது.

தான் பிறந்த இடம் பயின்ற கல்வி சேர்ந்த இனம் தோய்ந்த நிலை வாய்ந்த வகை முதலிய வசதிகளைத் தழுவியே மனிதனுடைய செயலும் இயலும் அயலறிய வருகின்றன. புறநிலை இவ்வாறு பொதுவாகப் பொருந்தி நிற்பினும் அக நிலை வேறாய் அமைந்து நிற்கின்றது. நெடுங்காலமாகப் பழகி வந்த வாசனைகள் மனத்தில் சூக்குமமாய் ஒடுங்கி யிருத்தலால் நினைப்பில் அந்த இயற்கை மணங்கள் வீசிச் செயற்கைகளாய் விளங்குகின்றன.

சொல்லுக்கும் செயலுக்கும் நினைவு மூலமாயிருத்தலால் யாவும் அதன்படி மேவி விரிகின்றன. தனது தகுதிக்குத் தக்கவாறே எவனும் நினைக்க நேர்கின்றான். பழக்க வாசனைகளின் படியே நினைவுகள் பழுத்து வருகின்றன.

நினைவு நல்லதாய் உயரின் மனிதன் நல்லவனாய் உயர்ந்து எல்லையில்லாத பெருமைகளை அடைகின்றான்.

நல்ல நினைவு கற்பக தருவும் காம தேனுவும் அமுதமும் போல் அற்புத நலங்களை நல்கி ஆனந்தம் அருளி வருகின்றது. பழுதுபடாதபடி தனது நினைவை இனிது பாதுகாத்து வருபவன் விழுமிய பயனை விரைந்து பெறுகின்றான்.

எதனை அடைய ஒருவன் எண்ணுகின்றானே அது அவனை வந்து அடைகின்றது. எண்ணத்துக்குப் பெருமை எல்லாம் தீமை யாதும் சேராத திண்மையேயாம்.

முனிவன் யோகி ஞானி என முதன்மை பெற்று வருபவர் எவரும் புனித எண்ணத்தினாலேயே தனி உயர்ந்துள்ளார்.

மனிதன் எதையும் அடைய உரியவன்; அவன் அடைய முடியாத அரிய பொருள் யாதும் இல்லை. தான் கருதியதைக் கருதியபடியே ஒருவன் பெறுவது புண்ணியத்தினால் அமைவது; அந்தப் புண்ணியம் நல்ல எண்ணத்தினால் விளைவது; ஆகவே எல்லா இன்பப் பேறுகளுக்கும் எண்ணமே காரணமா யுள்ளது.

தண்ணளியும் தயவும் கதியைக் கண் ஒளியாக் காட்டும் என்றது அருள் ஒழுக்கத்தின் பொருள் உணர வந்தது. எவ்வுயிர்க்கும் இரங்கி இதம் புரியும் இயல்பு தயவு என நேர்ந்தது. இது தெய்வ குணம். கடவுளுக்கு தயா நிதி என்று பெயர். தயையுடைய நெஞ்சில் எவ்வழியும் கனிவான இனிய எண்ணமே இதமா எழும்; அந்த எண்ணம் புண்ணிய விளைவாயப் பொங்கி வருதலால் கதி மோட்சம் அதற்குத்தனி உரிமையாயது. நினைவு கொடுமை ஆயின் நெடிய துயரமாம்; கருணை கனியின் கதியின் பமாம். உறுதி நலம் கருதி உண்மை தெளிந்து உய்தி உறுக.

---

378. நெஞ்சைநீ தொட்டு நினையாமல் நீளுலகில்
விஞ்சுபுகழ் எய்த விழைகின்றாய்—பிஞ்சு
பழுத்ததுபோல் யாதும் பயனுறா வாறே
இழுக்கிவிழு கின்றாய் இடர். (அ)

இ—ள்

உனது மன நிலையை நீ ஊன்றி உணர்ந்து கொள்ளாமல் உலகில் உயர்ந்த புகழை அடைந்து கொள்ள அவாவுகின்றாய்!

நெஞ்சின் தகுதிக்கு மிஞ்சி விழைவது பிஞ்சு பழுத்தது போல் பிழையாம் என்றவாறு.

புகழ் விளைதற்குரிய செயல்களைச் செய்யாமல் அதனை விழைவது அவமாம் ஆதலால் ஆவதை அறிந்து புரிக என இது அறிவுறுத்துகின்றது.

தன்னைப் பிறர் புகழ்ந்து போற்ற வேண்டும் என்று மனிதன் யாண்டும் விழைந்து நிற்கின்றான். புகழும் இன்பமும் சீவர்களுடைய பேராவல்களாய் மேவியுள்ளன.

புகழ் என்பது உலகம் உவந்து கூறும் துதிமொழி ஆதலால் அது எவர்க்கும் இலகுவில் அமையாது. இனிய குண கணங்களாலும் அரிய செயல் நலங்களாலும் தனியே விளைந்து வருவது. வீரம் கொடை சீலம் ஞானம் முதலிய மேலான மூலங்களிலிருந்து எழுகின்ற கீர்த்தி ஞாலம் எங்கும் ஒளி வீசி நிற்கின்றது.

நீர்மை குன்றித் தாழ்ந்த நெஞ்சனாய் நிற்கின்ற ஒருவன் உயர்ந்த கீர்த்தியை விழைந்து துள்ளுவது இழிந்த இகழ்ச்சியாய் இசைந்து வருகின்றது.

உயர்ந்த நிலைகளை அடைய அவாவுகின்றவன் முதலில் தன்னைத் தகுந்தவன் ஆக ஆக்கிக் கொள்ள வேண்டும். தான் தகுதி ஆன பொழுது மிகுதியான நலங்கள் யாவும் அவனிடம் தொகுதிகளாய் வந்து குவிகின்றன.

தன் உள்ளத்தின் தகுதி அளவே உலகத்தில் ஒருவனுக்கு மதிப்பும் மாண்பும் உளவாகின்றன. தன் பான்மைக்கு மிஞ்சிய மேன்மையை எவனும் யாண்டும் என்றும் பெற முடியாது. வேலை நோக்கிக் கூலி அளப்பது போல் அகத்தின் சீலம் நோக்கித் தெய்வம் சீர்மை அருள்கின்றது.

தன் உள்ளத்தின் நிலைமையை ஒருவன் உண்மையாக ஓர்ந்து கொள்ளின் பின்பு கள்ளத் தனமாக எதையும் காதலியான் ஆதலால் அகத்தின் இயல்பினை அவன் ஆய்ந்து கொள்வது சகத்தின் நன்மை ஆகின்றது. அகம் நலம் உறின் யாவும் நலமாம்.

நெஞ்சை நீ தொட்டு நினை என்றது தன் உள்ளமே சான்றாய் மனிதன் ஒழுக வேண்டும் என உணர்த்திய வாறும்.

நெஞ்சம் உயர எல்லா உயர்வுகளும் அவனிடம் தஞ்சமாய் அடைகின்றன; அது தாழின் உயர் நிலைகள் யாவும் அவனை யாதும் அணுகாமல் அகன்று போகின்றன.

பிஞ்சு பழுத்தது போல் என்றது தன் நெஞ்சின் தகுதிக்கு மிஞ்சிய புகழை ஒருவன் மேவ விழைவது நகைக்கே ஏதுவாய் நலையுறும் என்பதை உவமையாய் வந்து உணர்த்தி நின்றது. காய் முதிர்ந்து கனிந்து பழுத்தால் அது இனிமையாய் எங்கும் மதிப்புறும்; பிஞ்சு பழுத்தால் அது இன்னதாய் யாண்டும் இளி வுறும். உள்ளே பண்பு இன்றேல் வெளியே ஒன்றும் விளங்காது.

தன் அகத்தே தகுதியான பக்குவமுடையவன் எவர்க்கும் இனியனாய் இசை மிகப் பெறுகின்றான்; அங்ஙனம் இல்லாதவன் புல்லியனாய் வசையுறுகின்றான்.

நல்ல நினைவுகளையே நினைந்து உன் உள்ளத்தைப் புனிதமாக உயர்த்தின் உயர் நலங்கள் எல்லாம் ஒருங்கே உளவாகின்றன.

---

379. உன்னிலையை ஊன்றி உணரா துளமடிந்து
புன்னிலையில் வீழ்ந்து புரள்கின்றாய்—உன்னுடைய
உண்மை நிலையை உணரின் உயரின்பம்
எண்மையாய் எய்தும் இனிது. (௯)

இ—ள்

உன் அந்தரங்கமான ஆன்ம நிலையை அறியாமல் மறந்து வெறியனாய் இழிவில் விழுந்து புரள்கின்றாய்; உண்மை இயல்பை உணரின் உயர்ந்த பேரின்பம் விரைந்து விளையும் என்றவாறு.

உணர வுரியதை இது உணர்த்துகின்றது.

மனிதன் அறிவு நலம் உடையவன். சகல கலைகளையும் அகில நிலைகளையும் அறிய வல்லவன். கண்களால் கண்டும், காதுகளால் கேட்டும், மூக்கால் முகர்ந்தும், நாக்கால் நுகர்ந்தும் பொருள்களை ஓர்ந்து அறிகின்றான். இங்ஙனம் எல்லாவற்றையும் நாளும் நன்கு அறிந்து வருகின்றவன் தன்னை மாத்திரம் யாதும் எண்ணி அறிவது இல்லை. இது அதிசய விநோதமான மதி மயக்கமாயுள்ளது. தன்னை ஆயாமல் உள்ள இதனை மாயா வல்லபம் என்பர்.

உண்மையை உணர ஒட்டாதபடி மயக்கி நிற்பது மாயை என வந்தது. தனது உண்மை நிலையை உணர்ந்த போது அவன் தத்துவ ஞானியாய் முத்தியை அடைகின்றான். உணர்ந்தவன் ஞானி என்றமையால், உணராதவன் அஞ்ஞானி என நின்றான். மெய்யுணர்வு உய்தி புரிதலால் அதனை யுடையவர் தெய்வீக நிலையை எய்துகின்றனர்.

ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர்வு இல்லா தவர்க்கு. (குறள், 354)

உண்மை உணர்வே உய்தி தரும்; அதனை யுடையவனே பாக்கியவான் என இது உணர்த்தி யுள்ளது. யாவும் அறிய வல்ல அரிய மனிதப் பிறவியை அடைந்தும் தான் யார்? ஏன் இங்கு வந்தோம்? என்ன செய்ய உரியோம்? இப் பிறவி எப்படி வந்தது? இது தப்பினால் எங்கே போவோம்? உடல் ஒழியுமுன் அடைய வேண்டியது எது? அடையாது ஒழியின் யாது அடையும்? என யாதொரு சிந்தனையும் இல்லாதிருப்பது விந்தையாக வுள்ளது.

உலகமே கண்ணைப் பொய்யறிவில் ஓடிப் புலையாடி நிற்றலால் மெய்யறிவு மேவாது போயது. அது போகவே உய்தியும் ஒழிந்தது.

மெய்யைத்தான் சிறிது உணர்ந்து நீவிதித்த மன்னுயிர்கள்
உய்யத்தான் ஆகாதோ? உனக்கு என்ன குறை உண்டோ?
(இராமாயணம், விராதன், 59)

இராமபிரானை நோக்கி விராதன் இவ்வாறு விநய விநோதமா வினவி யிருக்கிறான். சீவ கோடிகளை உலக மாயையில் ஆட்டி மாயன் என்னும் பேர்க்கு நேயமாய் நிற்கின்றாய்! நீ சிறிது அருள் புரியின் அவையாவும் கண் விழித்து உண்மை கண்டு உயர் கதி அடையுமே; அவ்வாறு அடைந்தால் உனக்கு என்ன குறைந்தா போகும்? என்றும் எங்கும் நிறைவுடைய உனக்கு யாதொரு குறைவும் நேராது; கொஞ்சம் பெரிய மனது வைத்துச் சீவர்களுக்கு உய்தி புரிந்தருள் என்னும் பொருள் பொதிந்து இது வந்துள்ளது. உயிர்களின் உறுதி நிலை கருதி யுணர வுரியது.

மெய்யை உணராமல் வையமாந்தர் வெய்யநிலையில் வீழ்ந்து உழல்கின்றனர் என்க் கம்பர் கருதி இரங்கியுள்ளமை கண்டு அறிய நேர்ந்தது. கவியின் இதயம் கனிவு மிக வுடையது.

தெய்வம் எல்லார்க்கும் பொது; அது எங்கும் கருணை சுரந்துள்ளது; இனிய நினைவுடன் எவ்வுயிர்க்கும் இரங்கியருளும் மனிதனுக்கு அந்தப் பேரருள் தனி உரிமை ஆகின்றது. ஆகவே தனது நல்ல எண்ணமே முத்தி நிலைக்கு மூல வித்தாயுள்ளமையை உய்த்துணர்ந்து கொள்ளலாம்.

எண்ணம் இனியதாக இதயம் புனிதம் ஆகின்றது; அதனால் உணர்வு தெளிகின்றது; அது தெளியவே உண்மை நிலை எளிதே வெளிப் படுகின்றது.

உண்மை நிலையை உணரின் இன்பம் எண்மையாம்.

என்றது தனது ஆன்ம சொரூபத்தை அறியின் ஆனந்த வெள்ளம் பொங்கி எழும் அமைதி கருதி வந்தது.

தன்னை அறிதலாவது கருவி கரணங்களான தேக முதலிய வற்றினும் வேறாயுள்ள ஆன்மாவை உணர்ந்து கொள்ளுதல். அவ்வுண்மை உணர்வால் பிறவி நீங்கிப் பேரின்பம் ஓங்குகின்றது.

"தன்னையும் தனக்கு ஆதாரத் தலைவனையும் கண்டானேல்
பின்னை அத் தலைவன் தானாய்ப் பிரமமாய்ப் பிறப்புத்தீர்வன்;
உன்னை நீ அறிந்தாய் ஆகில் உனக்கு ஒரு கேடும் இல்லை;
என்னை நீ கேட்கை யாலே ஈது உபதேசித் தேனே."

(கைவல்லியம்)

தனது உண்மை நிலையை உணர்ந்த போது உண்டாகும் உய்தி நிலையை இது உணர்த்தியுள்ளது. பொருள்களை ஊன்றி நோக்கி ஓர்ந்து சிந்திக்க வேண்டும். தத்துவ தரிசனம் சித்த சுத்தி யாளருக்கே இனிது கைகூடுகின்றது. அந்தப் புனித இதயத்தை இனிது பாதுகாத்து வருபவன் பாக்கியவான் ஆகின்றான். எதையும் சொல்லுவது எளிது; எய்துவது அரிது.

நல்ல எண்ணங்களால் கருமங்கள் நல்லன வாகின்றன. அந்த நல்வினைகளால் எல்லா நன்மைகளும் இனிது விளைகின்றன. புண்ணிய பரிபாகத்தினாலேதான் மனிதன் புனித நிலையை அடைகின்றான்.

"ஸத்கர்ம பரிபாகதோ பகூநாம் ஜந்மநா மந்தே
நிருணாம் மோக்ஷேச்சா ஜாயதே."

"நல்வினையின் விளைவால் பல பிறவிகளின் முடிவில் மனிதர்க்கு மோட்சத்தில் இச்சை உண்டாகின்றது" என பைங்கல உபநிஷதம் இங்ஙனம் கூறியுள்ளது.

ஒரு மனிதனுக்கு மறுமை நோக்கம் வருவது எவ்வளவு அருமை என்பது இதனால் அறியலாகும். புனித இயல்புகளைப் பழகிவரின் புண்ணியம் பழுத்து வரும். அதனால் உயர் நலங்கள் யாவும் ஒருங்கே உளவாம்; இவ் வுண்மையை ஓர்ந்து தெளிக.

துயரம் நீங்கி உயர் கதி யடைய வேண்டின் உள்ளம் உயர வேண்டும். அதனை நல்ல எண்ணத்தால் பேணி நலம்பல காணுக.

---

380. தன்னை நினைந்து தலைவன் தனையுணர்ந்தால்
முன்னை உயர்வெல்லாம் முன்தோன்றும்—பின்னையிப்
பொல்லாப் பிறப்பில் புகுந்த துயரங்கள்
எல்லாம் ஒழியும் எளிது. (ம)

இ—ள்

தன்னுடைய உண்மை தெளிந்து தலைவனை உணர்ந்தால் முன்னைய உயர்வு எல்லாம் முன்னே தோன்றும்; தோன்றவே பிறவித்துன்பங்கள் யாவும் உடனே ஒழிந்து போம் என்றவாறு.

தன்னை என்றது ஆன்மாவை. தலைவனை என்றது பரமான்மாவை.

உலகம் உயிர் பரம் என்னும் மூன்று பொருள்கள் உள்ளன. மலை கடல் நிலம் முதலாக விரிந்து பரந்துள்ள உலகத்தைக் கண் எதிரே நேரே காண்கின்றோம். அகில உலகங்களையும் அனந்த சீவ கோடிகளையும் கதிர் ஒளிகளையும் விதி முறையே இயக்கி வருகிற ஒரு உயர் பொருள் அதிசய ஆற்றலும் அளவில் இன்பமும் உடையதாய் யாண்டும் நித்தியமாய் எங்கும் நிறைந்திருக்கிறது என்று கருதிக் கொள்கின்றோம்.

இந்த உலக மாயை நீங்கிய பொழுது உயிர் அந்த ஆதி மூலப் பொருளைத் தோய்ந்து கொள்ளுகிறது என வேதங்கள் ஓதி வருகின்றன. சீவனுக்கும் ஈசுவரனுக்கும் உள்ள உறவுரிமையைச் சிறிது உணரினும் மற்றப் பந்த பாசங்கள் யாவும் ஒழிந்து அந்தமிலின்பத்தை மேவி மகிழும். தன் மெய்யான கோலத்தை உணர முடியாதபடி மூல மாயை மறைத்திருக்கிறது.

தனது உண்மை இயல்பினை அறிந்தால் புன்மைமயல் ஒழிந்து பழைய புனித நிலை தெளிவாகின்றது. தெளியவே தேகமும் அது சம்பந்தமான உலக உறவினங்களும் அயல்என வெளியாகின்றன.

மறந்து மயங்கியிருந்த உண்மை தெளிந்தபொழுது ஆன்மா உவந்து வியந்து உறுதி நிலையை மருவி மகிழ்ந்து கொள்கின்றது.

மாடும் சுற்றமும் மற்றுள போகமும் மங்கையர் தம்மோடும்
கூடி அங்குள குணங்களால் ஏறுண்டு குலாவியே திரிவேனை
வீடு தந்து என்றன் வெந்தொழில் வீட்டிட மென்மலர்க் கழல்காட்டி
ஆடு வித்து எனது அகம் புகுந்து ஆண்டதோர் அற்புதம் அறியேனே!

(மாணிக்கவாசகர்)

மையாடு கண்ணியும் மைந்தரும் வாழ்வும் மனையும் செந்தீ
ஐயாநின் மாயை உருவெளித் தோற்றம் அகிலத்துள்ளே
மெய்யாய் இருந்தது நாட்செல நாட்செல வெட்டவெறும்
பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய் மெல்லப்போனதுவே.

(பட்டினத்தார்)

தந்தைதாய் மகவுமனை வாழ்க்கை யாக்கை
சகம் அனைத்தும் மௌனி அருள் தழைத்தபோதே
இந்திர சாலம் கனவு கானல் நீராய்
இருந்ததுவே இவ்இயற்கை என்னே! என்னே!

(தாயுமானவர்)

தன்னை நினைந்து தலைவனை அறிந்து உண்மை தெளிந்த பொழுது தோன்றிய அனுபவங்கள் இவ்வுரைகளில் வந்துள்ளன. தெய்வக் காட்சி கைவந்துள்ளவருடைய உள்ளங்களும் உரைகளும் செயல்களும் உலகிற்கு ஒளி புரிந்து உறுதி நலங்களை அருள்கின்றன. உரிமையுடன் கருதி உணர்ந்த வழியே அனுபவ மொழிகள் இனிமை சுரந்து திகழ்கின்றன.

முன்னை உயர்வு எல்லாம் முன் தோன்றும்.

என்றது தன்னை நினையாதபொழுது தோன்றாமல் மறைந்து நின்ற அதிசய ஆனந்தங்கள் யாவும் உண்மையை உணர்ந்தவுடன் உதயமாகி வருதலை இதயம் காண வந்தது.

தோல் எலும்பால் ஆன தேகமே தான்; மனைவி மக்களே இனம்; உலகப் பொருள்களே சதம்; என இவ்வளவில் வெளி நோக்காகவே யாவரும் களி மிகுந்துள்ளனர். இம்மையல் நோக்கம் மாறி உள் நோக்கி உறுதி உணரின் உண்மை தெளிவாகின்றது. அத்தெளிவு பேரின்ப ஒளியாய்ப் பெருகி எழுகின்றது.

**தேக நியதி களைந்து ஆன்ம தரிசனம் செய்யின் மோக இருள் கழிந்து ஏக ஒளி வெளியாம். அவ் ஒளியில் ஆவி அமுத நிலையமாய் மேவி மிளிர்கின்றது.**

"மேவிய புன்மயிர்த் தொகையோ, அம்மயிர்
பாவிய தோலின் பரப்போ, தோலிடைப்
புகவிட்டுப் பொதிந்த புண்ணோ, புண்ணிடை
ஊறும் உதிரப் புனலோ, கூறுசெய்து
5 இடையிடை நிற்கும் எலும்போ, எலும்பிடை

முடைகெழு மூளை விழுதோ, வழுவழுத்து
உள்ளிடை ஒழுகும் வழும்போ, மெள்ள நின்று
ஊரும் புழுவின் ஒழுங்கோ, நீரிடை
வைத்த மலத்தின் குவையோ, வைத்துக்
10 கட்டிய நரம்பின் கயிறோ, உடம்பிற்குள்

பிரியாது ஒறுக்கும் பிணியோ, தெரியாது;
இன்னது யான் என்று அறியேன்; என்னை
எங்கும் தேடினன், யாதிலும் காணேன்; முன்னம்
வரைத்தனி வில்லால் புரத்தை அழலூட்டிக்
15 கண்படை யாகக் காமனை ஒருநாள்

நுண்பொடி ஆக நோக்கி அண்டத்து
வீயா அமரர் வீயவந்து எழுந்த
தீவாய் நஞ்சைத் திருவமுது ஆக்கி
இருவர் தேடி வெருவர நிமிர்ந்து
20 பாலனுக் காகக் காலனைக் காய்ந்து

சந்தன சரள சண்பக வகுள
நந்தன வனத்திடை ஞாயிறு வழங்காது
நவமணி முகிழ்த்த புதுவெயில் எறிப்ப
எண்ணருங் கோடி இருடி கணங்கட்குப்
25 புண்ணியம் புரக்கும் பொன்னி சூழ்ந்த

திருவிடை மருத! பொருவிடைப் பாக!
மங்கை பங்க! கங்கை நாயக! நின்
தெய்வத் திருவருள் கைவந்து கிடைத்தலின்
மாயப் படலம் கீறித் தூய
30 ஞான நாட்டம் பெற்றபின் யானும்

நின்பெருந் தன்மையும் கண்டேன்; காண்டலும்
என்னையும் கண்டேன்; பிறரையும் கண்டேன்;
நின்நிலை அனைத்தையும் கண்டேன்; என்னே
நின்னைக் காணா மாந்தர்
35 தன்னையும் காணாத் தன்மை யோரே." (திருமுறை)

இந்த அருமைப் பாசுரம் உரிமையுடன் கருதி உணரவுரியது. தத்துவக் காட்சியை வித்தக விநோதமாப் பட்டினத்தடிகள் இதில் விளக்கியுள்ளார். சொல்லியிருக்கும் முறை சுவை சுரந்துள்ளது.

உலக நோக்கமாய் உழந்து வந்த நான் ஒரு நாள் என்னை யார்? என்று அறிய விரும்பினேன். எல்லாரிடமும் எங்கும் தனி முனைப்பாய்ப் பேசி வருகிற நான் என்பது எது? இந்த உடலி லுள்ள கை கால் செவி தோல் மயிர் நரம்பு எலும்பு முதலிய யாவும் நான் என்னும் சொல்லுக்கு உரிமை இல்லாமல் ஒழிந்து போயின. ஒன்றிலும் காணாமையால் நான் மறுகி நின்று என்னை நெடிது தேடினேன்; முடிவில் இறைவன் அருளால் ஞானநாட்டம் பெற்றேன். அதன் பின் என்னைக் கண்டேன்; அவனையும் கண் டேன்; உலக நிலைமைகள் எல்லாவற்றையும் ஒருங்கே கண்டேன். இந்தக் காட்சியைக் கண்டு மகிழாமல் சீவ கோடிகள் அந்தோ! கண்குருடு பட்டிருக்கின்றனவே! என இரங்கி மொழிந்திருக்கும் அருமையை உள்ளம் கூர்ந்து ஓர்ந்து சிந்திக்க வேண்டும்.

ஆன்மா தூயது; என்றும் நிலையானது; யாண்டும் தலைமை யது; அது நீயாய் உள்ளாய்; உன் நிலைமையை உணர்ந்து உய்க.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

நனவும் துயிலும் வாழ்வின் இனங்கள்.
நினைவால் மனிதன் நிலவுகின்றான்.
வினைகள் யாவும் நினைவில் விளைந்தன.
இனிய நினைவு அமுதம்.
கொடிய எண்ணம் நஞ்சம்.
நல்ல நினைவு நலம் பல நல்கும்.
உள்ளம் உயர உணர்வு உயர்கின்றது.
உள்ளத்தின் அளவே உலகம் மதிக்கின்றது.
உண்மை உணர உய்தி உண்டாகின்றது.
தன்னை உணர்ந்தவன் இன்னல் ஒழிந்தான்.

௩௮-வது நினைவு முற்றிற்று.

# முப்பத்தொன்பதாம் அதிகாரம்.

## நிலை.

அஃதாவது உண்மையான உறுதி நிலை. மறந்த பொருளை நினைந்து காண்பது போல் இழந்த நிலையை உணர்ந்து பெறுவதை உரைக்கின்றமையால் நினைவின் பின் இது வைக்கப்பட்டது.

381. தன்னை அறிந்து தனையிழந்து தானுன
முன்னை நிலையில் முழுதாழ்ந்து—பின்னையொரு
பேதமின்றி நிற்கும் பெருநிலையே பெற்றபிறப்
பூதிய மாகும் உணர். (க)

இ—ள்

தனது உண்மை நிலையை உணர்ந்து புன்மை ஒழிந்து முன்னைய நன்மையில் முழுதும் ஆழ்ந்து பேதம் இழந்து நிற்கும் நிலையே பிறப்பின் ஊதியமாம் என்றவாறு.

இது பிறந்தவன் பெற வேண்டியதை உணர்த்துகின்றது.

தன்னை அறிதலாவது மறந்து மயங்கி யுள்ளதைத் தெரிந்து கொள்ளுதல். வெளி மயக்கமான களி மயக்கங்கள் யாவும் நீங்கி உண்மையான ஒளி முயங்குவதே தெளிவமைந்ததாம்.

தனை இழந்து—நான் என்னும் அகங்காரத் திமிர்கள் ஒழிந்து. தேகத் தொடர்புகளை மோகமாய்ப் பற்றியுழல்வதே சீவ சுபாவ மாயுற்று வருதலால் அந்தத் தொத்து நோய் தொலைந்தால் அன்றி உத்தம நிலையை அடைந்து கொள்ள முடியாது.

பிறந்த சாதி, புகுந்த மதம், இருந்த ஊர், இசைந்த நாடு, சேர்ந்த செல்வம், நேர்ந்த அதிகாரம் முதலியன யாவும் போலித் தோற்றங்கள் ஆதலால் இவற்றை இறுகப் பிடித்துக் கொண்டு யாண்டும் செருக்கி இறுமாந்து திரிவது ஈனமாய் முடிகின்றது.

தன்னை ஓர்ந்து அறிந்தவன் புன்மை நிலைகளைப் போற்றிப் புலையாட மாட்டான்; புலையாட்டம் எல்லாம் தனது உண்மை நிலையை உணராத அவ நிலையிலேயே களி மீறிய வெறிகளாய்க் கலித்து நிற்கின்றன. நிலைமை தெளியவே தலைமை திகழ்கின்றது.

ஊன நிலையில் ஓங்கி எழுந்தன ஞான நிலையில் மாய்ந்து போகின்றன. உன்னை அறி; ஊனங்களை ஒழி; ஞானம் கனிந்து தெளி. மதி நலம் வாய்ந்த மான மனிதனாய் வந்தவன் கதி நலம் இழந்து ஈனமாய் இழிந்து போகலாகாது. இழியின் அழி துயரங்களாம்; உயரின் அழியாத ஆனந்தங்கள் ஆம்.

முன்னை நிலையில் முழுது ஆழ்ந்து.

என்றது பண்டு பதிந்திருந்த பரம நிலையில் பரிபூரணமாய்த் தோய்ந்து என ஆதி மூல நிலையை ஓர்ந்து கொள்ள வந்தது.

பிறவிகளை மருவுமுன் உயிர் உயர் நிலையில் ஒளி மிகுந்திருந்தது. பரம தேசுடன் ஈசன் என இலங்கி நின்ற அது பாச பந்தங்களில் படிந்து பழமையை இழந்தது. இழந்து போன அக் கிழமையை நெடுங்காலமா மறந்து வந்தமையால் நீசப் பிறவிகள் வளர்ந்து வரலாயின.

தன்னை மறந்து போகவே இன்னல் நிலைகளில் பிறந்து இழிந்துபட நேர்ந்தது. பின்னர் உண்மை தெளியவே உய்தி நிலை தோய்ந்தது. உரிமையை அடைவது பெருமை ஆயது.

தன் சொந்த வீட்டை விட்டு வெளியேறினவன் அயலே சென்று அலமந்து திரிகிறான்; மயல் மிகுந்தமையால் மதியிழந்து உழல்கின்றான்; பின்பு ஏதேனும் ஓர் ஏதுவால் இயல் தெளிந்த போது மறுபடி வந்து அந்த வீட்டை அடைகின்றான். அது போல் ஆதியில் பரமபத நிலையில் மருவி இருந்த ஆன்மா அதனை நீங்கிப் பிறவிகளில் புகுந்து பல உலகங்களிலும் அலைந்து நிலை குலைந்து திரிகின்றது; மையல் மதியால் எய்தியதே சதம் என்று இறுமாந்து உழல்கின்றது; காலக் கழிவில் மூலம் தெளிகின்றது; தெளியவே முடிவில் தனது சொந்தமான அந்தப்பதவியை வந்து அடைகின்றது. இந்த அடைவைத்தான் மோட்சம், முத்தி, வீடு, பேரின்பம் என ஆர்வ மீதூர்ந்து பேசி வருகின்றோம்.

முத்தி நிலையைக் குறித்து மேலோர்கள் வியந்து பேசுவதையும், நூல்கள் புகழ்ந்து கூறுவதையும் நுனித்து நோக்கின் அதன் தனியான உண்மை இனிதாக எளிது தெளிவாம்.

புதிதாக எதையும் அடையவில்லை; பழமையையே கிழமை தெரிந்து சீவன் சேர்ந்து கொள்கின்றது. பிறவிகளில் பெருந் துயரங்களை அனுபவித்து வருந்தியது பேரின்ப வீட்டுள் புகுந்ததும் பெயராமல் இருந்து உயர் மகிமையுடன் மகிழ்கின்றது.

அறிவுடைய மனிதப் பிறப்பை அரிதாகப் பெற்றுள்ளமைக்குப் பெரிதாக உற்றபயன் உரிமையைப் பெற்றுக் கொள்ளுவதேயாம். ஆகவே பிறப்பின் ஊதியம் இன்னது என இது உணர்த்தி நின்றது. இழந்ததை எய்துவது இன்பமாகின்றது.

காணப்படுகின்ற உலக நிலைகளை மட்டும் கண்டு மயங்கிக் கழிந்து போகாதே; காண்கின்ற உனது உண்மை நிலையை உணர்ந்து நோக்கி உறுதி நலனை ஓர்ந்து உய்தி பெறுக.

---

382 *புலனறிவு மாறிமெய்ப் போதம் அழுந்தி*
*நிலையான அந்நிலையும் நீங்கித்—தலைமையாய்*
*உள்ள நிலையில் ஒடுங்கின் உயிரின்ப*
*வெள்ளம் விரிந்து விடும்.* (உ)

இ—ள்

ஐம்புலன்களையும் அடக்கி மெய்யுணர்வு தோய்ந்து அதனையும் கடந்து மேலான உண்மையில் ஆன்மா மருவின் ஆனந்த வெள்ளம் பெருகி விரியும் என்பதாம்.

இது உயிரின் புனிதஉரிமையைக்கருதி உணர்க என்கின்றது.

மனிதன் வெளி நோக்காய் விழைந்து உழல்கின்றான்; உள் நோக்கி எதையும் உணர்ந்து கொள்வது இல்லை. அயலே ஓடி உழல்வதில் விழிப்பாய் ஆசை கூர்கின்றான்; தன் இயலை நாடி உணர்வதில் குருடாய் மோசம் போகின்றான்.

புற நாட்டப் புலையாட்டமாய்ப் பொங்கி நின்று எல்லாத் துயரங்களுக்கும் காரணம் ஆகின்றது; அக நாட்டம் நல்ல ஞான சீலமாய் நலம் பல தருகின்றது. ஊன நோக்கம ஒழிந்து ஞான நோக்கம் எய்திய பொழுது மனிதன் புனிதனாய் மகிமை பெறுகின்றான். உயர் நலங்கள் யாவும் தன்னிடமே மேவி யுள்ளன.

புலன் அறிவு என்றது வெளியான இந்திரிய உணர்ச்சிகளை. மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் இந்த ஐந்து பொறிகளின் வாயிலாகப் பரிசம் சுவை உருவம் கந்தம் ஓசைகளை அறிந்து வருகிறோம். பொருளுணர்ச்சிகள் புலன்கள் என வந்தன.

பொறி புலன்கள் மனத்தை வெளியீர்த்து வெறியாக்கி விடு

தலால் உண்மையான உயிர் அறிவுக்குப் புன்மைப் பகைகளாய் அவை புறம் பேச நேர்ந்தன.

புலன் அறிவு மாறிய போதுதான் போதம் மீறி எழும் ஆத லால் அவற்றின் மாற்றம் ஞானத்தின் ஏற்றம் ஆயது.

உலக இச்சைகளில் ஊக்கிக் கலகங்களை விளைத்துப் பிறவித் துயரங்களை வளர்த்து வருதலால் தத்துவ தரிசனிகள் எல்லாரும் புலன்களைப் பொல்லாத சத்துருக்களாக எள்ளி வெறுத்துள்ளனர்.

மாறிநின்று என்னை மயக்கிடும் வஞ்சப்
புலன்ஐந்தின் வழிஅடைத்து அமுதே
ஊறிநின்று என்னுள் எழுபரஞ் சோதி
உள்ளவா காணவந்து அருளாய்
தேறலின் தெளிவே சிவபெருமானே!
திருப்பெருந் துறையுறை சிவனே!
ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த
இன்பமே! என்னுடை அன்பே! (திருவாசகம்)

பகையாய் மாறி நின்று புலன்கள் வெளியே பழிகளைச் செய்து வருகின்றன; அவ் வழிகள் ஒழிந்த பொழுது உள்ளே இறைவன் அமுதமாய்த் தேனின் தெளிவாய் எல்லையில்லாத ஆனந்த நிலையமாய் அதிசய சோதியாய் ஒளி வீசி உலாவியருள் கின்றான் என மாணிக்கவாசகர் தமது ஆன்ம அனுபவ நிலையை இங்ஙனம் உலகம் அறிய அருளியுள்ளார்.

புலன்களைப் போக நீக்கிப் புந்தியை ஒருங்க வைத்து
இலங்களைப் போக நின்று இரண்டையும நீக்கி ஒன்றாய்
மலங்களை மாற்ற வல்லார் மனத்தினுட் போகம் ஆகிச்
சினங்களைக் களைவர் போலும் திருப்பயற்றூர னாரே.
(அப்பர்)

ஐவகை அரையர் அவராகி
ஆட்சி கொண்டு ஒரு காலவர் நீங்கார்
அவ்வகை யவர் வேண்டுவதானால்
அவரவர் வழி ஒழுகி நான் வந்து
செய்வகை அறியேன் சிவலோகா!
தீவணா! சிவனே! எரியாடீ!
எவ்வகை எனக்கு உய்வகை அருளாய்
இடைமருதுறை எந்தை பிரானே. (சுந்தரர்)

புலன்ஐந்தும் தானே பொரமயங்கிச் சிந்தை
அலமந் துழலும் அடிமை—நலமிகுந்த
சித்தான மோன சிவனேநின் சேவடிக்கே
பித்தானல் உண்டோ பிறப்பு. (தாயுமானவர்)

புலன் வசப்பட்டால் உயிர் புலையாய் அலமருகின்றது; அவ்வழி ஒழியின் அறிவு தெளிவடைந்து இறை அருள் எய்திப் பிறவி தீர்ந்து ஆன்மா பேரின்பம் அடைகின்றது என இவை அறிவுறுத்தியுள்ளன. உயிர் உருக்கங்கள் உணர வுரியன.

பத்தியால் சித்தம் சுத்தி ஆகின்றது; அதனல் தத்துவ ஞானம் விளைகின்றது; அந்த உத்தம நிலையில் உதித்த உணர்வுரைகள் புத்தமுதங்களாய்ப் புதிய தெளிவுகளை நல்கி அரிய இன்பங்களை அருளி இனிய ஆறுதல்கள் புரிந்து வருகின்றன.

தலைமையாய் உள்ள நிலை என்றது பரமாயிருந்த உயர் மேன்மையை. உனது உண்மைநிலையை உணர்ந்து கொள்; கொண்டால் துன்பத் தொடர்பு தொலைந்து இன்ப வெள்ளம் பெருகும் என்க.

---

383. முன்னம் இழந்த முதலை அடையாமல்
என்ன அடையினுமென் ஊனமே—அன்னதுநேர்
உற்ருன் உடம்பெடுத் தோயா துழந்தபயன்
பெற்ருன் பிறவான் பிற. (ந)

இ—ள்

முன்பு இழந்து போன உயர்ந்த முதலை அடையாமல் வேறு எதை அடைந்தாலும் அவமேயாம்; இழந்த முதலை அடைந்தவன் பிறந்த பயனைப் பெற்ற சிறந்த பாக்கியவான் ஆகின்ருன்; அடையாதவன் கடையாய் இழிந்து கழிந்து படுகின்ருன் என்றவாறு.

இது அடைய வேண்டியதை அடைக என்கின்றது.

உயிரினங்கள் எல்லாம் உயர்வையும் உய்தியையுமே நாடி உழலுகின்றன. பகுத்து அறியும் உணர்வு இல்லாமையால் மிருகம் பறவை முதலிய பிராணிகள் யாவும் உயர்ந்த குறிக்கோள் இன்றி உண்பதும் உறங்குவதுமாய்க் காலத்தைக் கழித்து அழிந்து போகின்றன. கருதி யுணர்வன உறுதி நலங்களைக் காண்கின்றன.

மனிதன் மன வுணர்ச்சியும் மதி நலனும் உடையவன் ஆத
லால் வாழ்க்கைத் திட்டங்களை வகுத்துக் கொண்டு உயர்ந்து
கொள்கின்றான். தனது உயர்வுக்குப் பல வகையான வசதிகளை
நாடி முயல்கின்றான். பொருளைத் தேடிப் போக போக்கியங்களை
அமைத்துக் கொள்கின்றான்; ஐம்புல இன்பங்களையும் ஆர நுகர்
கின்றான்; அதிபதி என யாரும் புகழப் பேரும் சீரும் பெற்றுப்
பெருகி வாழ்கின்றான். வாழ்வு வீழ்வுறாமல் சூழ்வு புரிகின்றான்.

செல்வ நலங்களை எவ்வளவு அடைந்து வாழ்ந்தாலும் யா
தொரு ஆறுதலும் இல்லாமல் மேலும் மேலும் ஆவலுடையனாய்
அவலக் கவலைகளில் ஆழ்கின்றான். ஆகவே உலக போகங்கள்
எல்லாம் உயிர்க்கு உண்மையான உறுதி நலங்கள் அல்ல; புன்மை
களை வளர்த்துப் புலை நிலைகளில் ஆழ்த்திப் புறமே போய்த்தொலை
வன என்னும் தெளிவை அடைகின்றான். தெளியவே அழியாத
நிலையை அடைய விழி திறந்து வழியை நாடுகின்றான். அந்த
ஞான நாட்டம் வளர்ந்து வரவே ஊன ஓட்டங்கள் ஒழிந்து
போகின்றன. உண்மை நிலை ஒளி மிகுந்து திகழ்கின்றது.

முன்னம் இழந்த முதல் என்றது பரம பதத்தை.

ஆதி மூலமான பரம்பொருளை இழந்து விட்டுப் பாழான
பிறவிக் காட்டில் புகுந்து பரிதாபமாய் அலைந்து திரிகின்றோம்.
இடையே வந்து சேர்ந்த பந்த பாசங்களில் மயங்கியுள்ளமையால்
முந்தைய நிலைமையையும் தலைமையையும் முழுதும் மறந்து போ
யினோம். அடியோடு மறந்து போன அந்தப் பழங் கிழமையை
உணர்ந்து மீள அதனை அடைந்து கொண்டவனே சிறந்த பாக்கிய
வான் ஆகின்றான். அடையாதவன் கடையாய் இழிந்து போ
கின்றான். அப் போக்கு பொல்லாத நிலைகளில் எல்லையின்றிப்
போதலால் அல்லலே கண்டு அவலமாய் அழிகின்றான்.

பரிபூரண சுதந்திரமான அந்தப் பேரின்ப நிலையை அடை
யாமல் வேறு எவ்வளவு சீரும் சிறப்புகளையும் அடைந்தாலும்
முடிவில் சிறுமையே காண்பன் ஆதலால் அக் காட்சி கருதி யுணர
வந்தது. அழிவதை அவாவி உழல்வது இழிவாய் முடிகின்றது.

என்ன அடையினும் ஈனமே! என்றது செல்வம் அதிகாரம்
முதலிய உலக மதிப்புகள் எல்லாம் உய்தி புரியாமல் ஒருங்கே

ஒழிந்து போதல் கருதி. வினை வசமாய் வந்து கூடியன அது முடியவே அடியோடு மறைந்து போகின்றன; போகவே அவற்றைச் சதம் என்று நம்பியிருந்தது மதி கேடாய் முடிகின்றது.

மாடுண்டு கன்றுண்டு மக்களுண்டு என்று மகிழ்வது எல்லாம்
கேடுண்டு எனும்படி கேட்டுவிட்டோம்; இனிக் கேள் மனமே!
ஓடுண்டு கந்தையுண்டு உள்ளே எழுத்தைந்தும் ஓத உண்டு
தோடுண்ட கண்டன் அடியார் நமக்குத் துணையும் உண்டே.

(பட்டினத்தார்)

உயிர்க்கு உறுதி நலனை நாட நேர்ந்த போது உலகத்தின் செல்வ நிலைகள் இவ்வாறு அயலாய் ஓட நேர்கின்றன. இயல் தெளியவே மயல் ஒழிகின்றது. உண்மையை உணராத வரையும் புன்மையில் புலையாடி வெம்மையா யுழல்கின்றான்.

தனது அரிய பெரிய பதவியை வறிதே இழந்து மனிதன் பரிதாபமாய் இழிந்து வந்திருக்கிறான். இழந்த உரிமையை அடைந்து கொள்வதே உயர்ந்த ஊதியமாய் உறைந்துள்ளது.

பயன் பெற்றான் பிறவான்.

என்றது இழந்த நிலையை அடைந்து கொண்டவனது இயல்பும் உயர்வும் உணர வந்தது. அழியாத ஆனந்த நிலையில் இருந்த நீ வழி தவறி வந்து விட்டாய்; பழி துயரங்கள் உன்னைப் பற்றிக் கொண்டன; கொடிய இந்த இழி மயல்களிலிருந்து விழி திறந்து நோக்கி வழிகண்டு உய்யவேண்டும். ஏக பரம்பொருளோடு பாகம் கொண்டிருந்த நீ படி மாறிய படியால் சோகம் கொண்டாய்; அத்தொல்லை மூலம் தெளிந்து உனது எல்லையை எய்துக.

---

384. எடுத்த உடம்பே இறுதியாய் மேலோர்
அடுத்த உடம்பை அடையார்—தொடுத்த
வினைகழிய நோற்று விரத்தியொடு நிற்கும்
மனமுடை மாட்சி யவர். (ச)

இ—ள்

இரு வினைகளும் கழிந்து ஒழியத் தவம்தழுவி உறுதி பூண்டு நிற்கும் ஞான சீலர் வேறு ஓர் அடுத்த பிறவியை அடையாமல் எடுத்த உடம்பையே இறுதியாக முடித்தருளுவர் என்றவாறு.

இது, உற்ற பிறவியால் உற உரியதை உணர்த்துகின்றது.

மனித உடம்பு பெறுதற்கு அரியது; பெறலரிய அதனைப் பெற்றுள்ளவன் உடனே விரைந்து பெற வேண்டியது பிறவாமையே; அது பெற்றவன் இறவாத இன்பநிலையை எய்தி நின்றான்.

பிறப்பு எல்லையில்லாத அல்லல்களை யுடையது; என்றும் எவ்வழியும் துன்பங்களே நிறைந்துள்ளமையான் யாண்டும் இன்பங்களையே விழைந்து நிற்கின்ற உயிர் துன்பத் தொடர்பாகிய பிறப்பை நீங்க வேண்டியதாகின்றது.

நல்ல தேகம் எடுத்ததின் பயன் பொல்லாத சோகங்களை ஒழித்துப் புனித நிலையை அதி வேகமாய் அடைவதேயாம்.

மனித தேகமே இனிய பேரின்ப நிலையைத் தர வல்லது ஆதலின் அது கொண்டு தேகி காண வேண்டியதை இது காட்டியருளியது. கருதிக் கண்டவன் உறுதி நலனை வேண்டுகின்றான்.

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை; மற்றது
வேண்டாமை வேண்ட வரும். (குறள், 362)

உணர்வுடைய மனிதன் தனக்கு உறுதியாக வேண்ட உரியது பிறவாமையே; அப்பிறவி நீக்கம் ஆசை முழுதும் அற்ற பொழுது உண்டாகின்றது என இஃது அறிவுறுத்தி யுள்ளது.

"அருளால் அறம் வளரும்; ஆள்வினையால் ஆக்கம்;
பொருளால் பொருள்வளரும்; நாளும்—தெருளா
விழைவின்பத் தால்வளரும் காமம்; அக் காமம்
விழைவின்மை யால் வளரும் வீடு." (அறநெறி, 141)

அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு புருடார்த்தங்களையும் குறித்து வந்திருக்கும் இதனைக் கூர்ந்துபார்க்க.

விழைவு இன்மையில் வீடு உண்மையால் பிறவித் துன்பத்திலிருந்து விடுதலை பெற வுரியவர் உலகப் பற்றுக்கள் முற்றும் ஒருவி நிற்பர் என்பது உணர வந்தது.

எடுத்த உடம்பே இறுதியாய்.

என்றது அடுத்த சன்மம் யாதும் அடையாமல் எடுத்த சன்மத்தை இனிது பயன் படுத்துதல் கருதி. மனிதப் பிறப்பு ஞான நலம் உடையது; இதனை உடையவன் மெய்யுணர்வால் தன்னை

யுணர்ந்து இன்னல் ஒழிந்து இனியது காண உரியவன்; அவ் வுரிமையை அடைந்தவன் உய்தி பெறுகின்றான்; அடையாதவன் அவலப் பிறவிகளில் ஆழ்ந்து கவலைகள் அடைகின்றான்.

*தன்னைத்தான் அறியான் ஆயின் தலைத்தலைத் துன்பம் சாரா*
*மின்னெனத் தோன்றி வீயும் யாக்கைகள் பலவும் மேவும்;*
*என்னதுஓர் யாக்கை தன்னை எடுப்பினும் எடுத்து நின்ற*
*அன்னதோர் யாக்கை நீங்கல் ஆற்றலன் ஆசை கூரும்.* (1)

*அரணியில் அனல்வந்துற்றுஅவ் அரணியை அழிப்பதேய்ப்பக்*
*கருதிய ஞானம் வந்து கலந்துறும் உபாதி நீக்கும்;*
*புரிதுயில் நீத்தோன் தன்பால் பொருந்திடாக் கனவுபோல்பின்*
*உரைசெயு மாயை சேராது; உண்மையை உணரலாமால்.* (2)

(பாகவதம், 3-8)

தன்னை அறியாதிருக்கும் வரையும் பிறவித் துன்பங்கள் பிரியாதிருக்கும்; ஞானத்தால் உணர்ந்த போது ஊன உபாதிகள் யாவும் ஒழிந்து போம் என்னும் இது ஈண்டு உணர வுரியது.

அரணி என்பது நெருப்பு உண்டாகும் ஒரு கழி. தீ தோன்றிய போது அக் கட்டை அழிந்து போம்; அது போல் ஞானம் உதயமானவுடன் பிறவி ஒழிந்து போம் என்க.

விரத்தி என்றது வைராக்கியத்தை. ஞான சீலத்தின் தீர நீர்மையாய்ச் சிறந்து நிற்கின்ற இது உயர்ந்த உய்தி நலங்களை விரைந்து அருளுகின்றது.

உலக போகங்களில் உள்ளம் இழிந்து ஓடாமல் உண்மை நிலையில் உறுதி பூண்டு நிற்கும் பெருமித முடையவரே பிறவி நீங்கிப் பேரின்பம் பெறுகின்றார்

நெறி கேடாய்ச் சிற்றின்பங்களில் இழிந்தவர் பேரின்ப நிலையை இழந்து விடுகின்றார்; அங்ஙனம் இழியாதவர் அழியாத ஆனந்த வாழ்வை அடைகின்றார்.

முடிவிலின்பம் பெற வுரியவர் முடிவு தெரிய வந்தது

உனது இயல்பான நிலை மிகவும் உயர்ந்த மகிமை உடையது; அதனை மறந்து இழிதுயர்களில் விழுந்தாய்; விழித்து எழு; இழந்து போன பழமையை விரைந்து அடைந்து மகிழுக.

385\. காம வெகுளி கடிந்து கருதரிய
ஏம நிலையை எதிரறிந்து—நாம
உருவங்க ளாகி ஒளிர்கின்ற உண்மை
உருவுணரின் உய்தி உறும். (ரு)

இ—ள்

ஆசையும் கோபமும் ஒழிந்து எளிதில் அறிய முடியாத பரம இன்ப நிலையை எதிர் உணர்ந்து, பெயர் உருவங்களாய் உலகில் விரிந்து தோன்றும் உண்மை நிலையைத் தெளியின் உய்தி வெளியாம் என்க.

இது உய்தி உறும் வகையை உணர்த்துகின்றது.

ஆன்மா இயல்பாகவே மேன்மை ஆனது; அது தேகங்களை மருவிய பொழுது போகங்களை விழைந்து பலவகையான மோகங்களை அடைந்து சார்ந்த தன் வண்ணமாய்த் தாழ்ந்தும் உயர்ந்தும் சலித்து உழலுகின்றது. சலிப்புகள் வினை வலிப்புகளாய் விரிந்துள்ளன.

சூரியனை மேகம் மறைப்பது போல ஆன்ம சோதியை மோக மயக்கங்கள் மறைத்து மூண்டு படர்ந்து நீண்டுநிற்கின்றன. காற்று வீச்சால் மேகங்கள் கலைகின்றன; ஞான வாடையால் மோகங்கள் ஒழிகின்றன.

மாய மயக்கான தீய இயல்புகள் மனிதனைத் தீயன் ஆக்கித் தாழ்த்தி விடுகின்றன. துன்பத் தொடர்புகள் எல்லாம் எண்ணத்தின் தீமைகளால் விளைந்துள்ளன.

காமமும் வெகுளியும் தீமை என்னும் பேய்க்கு இரண்டு கால்களாய் இணைந்திருக்கின்றன. ஒன்றை ஒன்று மருவி என்றும் சோடியாய் இசைந்திருத்தலால் யாண்டும் சேர்த்துச் சொல்லப்படுகின்றன. இணைப்பு பாசப் பிணைப்பாய்ப் பதிந்தது.

தனது ஆசைக்குப் பங்கம் வந்த இடத்தில் மனிதனிடமிருந்து கோபம் எழுகின்றது. ஆசை ஒழியின் கோபமும் ஒழிகின்றது. இந்த இரண்டும் ஒருங்கே ஒழிந்த பொழுதுதான் உயிர் புனிதமாய் இனிய ஒளி பெறுகின்றது.

காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய். (குறள், 360)

மனிதன் அடைகின்ற துயரங்கள் எல்லாவற்றிற்கும் மூல காரணங்கள் மூன்று; அவை அறவே ஒழிந்தாலன்றிப் பிறவி நோய் ஒழியாது என இஃது உணர்த்தியுள்ளமை காண்க.

மண் பெண் பொன் என்னும் மூன்றிலும் ஊன்றி எழும் நசையே காமம் என வந்தது. உள்ளத்தை உருக்குலைத்து உணர்வைப் பழுது படுத்தி உயிரை அவமாக்கித் துயரக் கடலில் ஆழ்த்தும் கொடிய தீமை ஆதலால் காமம் முதலில் நின்றது.

> நிதியான நிறைநீருக்கு உடைகுளம்;
> மிக்கான குல நெறிக்கு ஓர் தீனம்;
> மதியான மதி விழுங்கும் கோளரவு;
> பவத்தூறு வளர்க்கும் கானம்;
> கொதியான நரகிழுக்கும் கொடும் பாசம்;
> உயிர் உருக்கிக் குடிக்கும் கூளி;
> கதியான வழி அடைக்கும் கற்பெரும்
> கபாடம் அன்றோ கடிய காமம்.
>
> (திருக்குற்றாலத் தலபுராணம் 12-37)

> காமமே பிறவிவித்து ஆகும்; கண்ணிலாக்
> காமமே சிவனடிக் கலப்பு நீக்கிடும்;
> காமமே அவத்தையில் கலக்கச் செய்திடும்;
> காமமே நரகெலாம் காணி ஆக்குமே. (காசி ரகசியம்)

> ஈட்டுறு பிறவியும் வினைகள் யாவையும்
> காட்டியது இனையதோர் காமம் ஆதலின்
> வாட்டமில் புந்தியால் மற்றந் நோயினை
> வீட்டினர் அல்லரோ வீடு சேர்ந்துளார். (கந்த புராணம்)

> காமம் இல்லையெனில் கடுங்கேடு எனும்
> நாமம் இல்லை; நரகமும் இல்லையே. (இராமாயணம்)

காமத்தின் தீமை குறித்து நூல்கள் பல இங்ஙனம் கூறியுள்ளன. அதன் பிடியிலிருந்து விலகினவரே முடிவிலின்பம் அடைகின்றனர்.

தன் உயிர்க்குச் சேமத்தை விரும்பினவர் காம வெகுளிகள் கடிந்து சேம நெறிகளுடன் படியேறி மேலே செல்லுகின்றனர். அல்லல் ஒழிய வேண்டுமாயின் பொல்லாதன களைய வேண்டும்.

நாம உருவங்கள் ஆகி ஒளிர்கின்ற.

என்றது உலகக் காட்சிகளின் நிலைகளை நினைந்து.

வெளியே தோன்றுகின்ற வடிவங்களுக்குப் பெயர்கள் அமைந்திருக்கின்றன. தமக்கு ஏற்ற பெயர்களைக் கொண்டு உலாவுகின்றன. காணாதன பல யாதும் பூணாமல் மறைந்திருக்கின்றன.

வெளியே தெரிகின்ற நாமங்களிலும் உருவங்களிலும் மயங்கி நில்லாமல் உள்ளே உறைகின்ற சீவ ஒளிகளை ஓர்ந்து காண்பவர் தேர்ந்த ஞானிகளாய்ச் சிறந்து திகழ்கின்றார்.

மாசறு காட்சியவர், தீர்க்க தரிசிகள், தத்துவ ஞானிகள் என்பன எல்லாம் உண்மையை உணர்ந்த உத்தம நிலைகளில் உதித்து வந்தன. மாயத் தோற்றங்களில் மயங்கி நில்லாமல் தூய ஏற்றங்களில் தொடர்ந்து செல்பவர் பிறவித் துயரங்களைக் கடந்தவராகின்றார்.

உண்மை உரு உணரின் உய்தி உறும்.

என்றது மெய்யுணர்வால் எய்தும் மேன்மை தெரிய வந்தது.

தோல் பாவைகளை ஆட்டுகின்ற கூத்தன்போல உடல்கள் தோறும் ஆன்மா மருவியிருந்து வெளியே உருவங்களாய் ஒளிர்கின்றது. இந்த ஆன்மா பரமான்வின் ஒளி ஆதலால் விழி எதிர்ப்பட்ட பொருள்களை எல்லாம் பரம்பொருளாகவே பார்த்து வருவது உயர்ந்த தெளிவாய் உய்தி அருளுகின்றது.

எல்லாரையும் எவற்றையும் கடவுள் வடிவமாக் காணும் காட்சியே கதி மோட்சம் தருதலால் அக் காட்சியாளர் நித்திய முத்தராய் நிலவி நிற்கின்றார்.

தெய்வக் காட்சி எய்திய பொழுது பொய் மயக்கங்கள் பொன்றி ஒழிகின்றன. மருள் நீங்கி மாசறு காட்சியார்போது இருள் நீங்கி இன்பம் நுகர்கின்றனர். அவர் பேசும் மொழிகள் எல்லாம் தேசு மிகுந்து வெளி வருகின்றன.

ஈசன் ஈசனென்று என்றும் அரற்றுவன்;
ஈசன் தான் என் மனத்திற் பிரிவிலன்;
ஈசன் தன்னையும் என்மனத் துக்கொண்டு
ஈசன் தன்னையும் யான்மறக் கிற்பனே! (1

தேனைப் பாலினைத் திங்களை ஞாயிற்றை
வான வெண்மதி சூடிய மைந்தனை

வேணி லானை மெலிவு செய் தீயழல்
ஞான மூர்த்தியை நான்மறக் கிற்பனே! (2)

கன்னலைக் கரும் பூறிய தேறலை
மின்னனை மின்அனைய உருவனைப்
பொன்னனை மணிக் குன்று பிறங்கிய
என்னனை இனி யான்மறக் கிற்பனே! (3)

புதிய பூவினைப் புண்ணிய நாதனை
நிதியை நீதியை நித்திலக் குன்றினைக்
கதியைக் கண்டம் கறுத்த கடவுளை
மதியை மைந்தனை நானமறக் கிறபனே! (4)

(தேவாரம்)

எல்லாம் தெய்வ மயமாக் கண்டபொழுது அப்பர் இவ்வாறு ஆனந்த பரவசராய் ஞான நலம் கனிந்து பாடியிருக்கிறார்.

தீய புலைகளை ஒழித்து விடு; தூய நிலைகளைப் பழகி எழு; எங்கும் இறை ஒளிமே பரவியுளது; இவ் வுண்மையை உறுதியாய் உணர்ந்து தெளிந்து யாண்டும் தெய்வ பாவனை செய்து உய்க.

---

386. ஆதிநிலை யாதும் அறியார் அறிவுயர்ந்த
சாதியாம் என்று தருக்குவார்—கோதுமிக
என்றும் இழிவே இயற்றுவார் ஈனரிவர்
நின்றுயர்வ தென்றோ நிலை. (சு)

இ—ள்

தமது ஆதி மூல நிலையை யாதும் உணராமல் யாம் உயர்ந்த சாதியினேம் என்று செருக்கித் தீமை புரிந்து இழிந்து நிற்கும் இழி நிலையாளர் உயர் நிலையை அடைதல் அரிது என்றவாறு.

பிறவியில் நேர்ந்துள்ள பழி துயரங்களுள் மனிதனைச் செய்து கொள்ளுவன பல. எண்ணமும் பேச்சும் செயலும் ஈன நிலைகளில் படிந்து வரும்பொழுது அவன் இழிமகன் ஆகின்றான்.

இயலும் செயலும் இனியனவாயின் மனிதன் உயர்கின்றான்; அவை கொடியனவாயின் இழிவுறுகின்றான்.

பல இழி பிறவிகளையும் கடந்து படி ஏறி வந்துள்ள மனிதர் தமது நிலைமையை உணர்ந்து மேலும் உயர்ந்து உய்தி பெறாமல்

வெய்ய நிலைகளில் அழுந்தி விளிந்து தொலைதல் வெந் துயரா கின்றது. வந்த பயனை அடையாமல் மதி கேடராய் மாய்கின்றார்.

யாம் உயர்ந்த சாதி என்று தருக்குவார்.

என்றது தீது வகைகளில் ஒன்றைத் திறந்து காட்டியது.

மனிதர் களித்து வரும் களிப்புகளில் குலத்திமிர் என்பது கொடிய செருக்காய் நெடிது நீண்டு நீசம் பூண்டுள்ளது.

கல்வி செல்வம் அழகு அதிகாரம் குடிப்பிறப்பு முதலியன நல்ல பாக்கியங்களா மதிக்கப்பட்டுள்ளன. இவற்றைப் பெற்றவன் பிறரை ஆதரித்தருளும கடனாளி ஆகின்றான். அந்தக் கடமையை மறந்து களித்து நின்று அயலாரை அவமதிக்க நேர்வது மயலான மடமை ஆகின்றது. மதி கெடக் கதி கெடுகின்றது.

தான் குலத்தில் பெரியவன் என்று ஒருவன் செருக்கி நிற்பான் ஆயின் அவன் மிகவும் சிறியவனாய் இழிக்கப் படுகின்றான். எவ்வகையிலாவது பிறரைத் தாழ்த்தித் தன்னை உயர்த்திக் கொள்ளவேண்டும் என்று எண்ணுவது சின்ன மனிதருடைய புன்மையாயுள்ளது. பொல்லாத் தருக்கு புலைப் பெருக்காகின்றது

கல்லா ஒருவன் குல நலம் பேசுதல்
நெல்லினுள் பிறந்த பதராகும்மே. (நறுந்தொகை, 36)

தன் குலம் உயர்ந்தது என்று புகழ்ந்து பேசும் புன்மகன் நிலைமையை உணர்த்தியிருக்கும் இதன் நுண்மையை நுனித்து நோக்குக. அயலை இகழ்ந்து தன் உயர்வு கூறுவோன் மனிதப்பதராகின்றான். குல நலம் பேசுதல் புலை நிலையாகும்.

உயர்வெல்லாம் செயல் இயல்களின் நலங்களால் உளவாவன; அவ்வுண்மையை உணராமல் ஊனமுறுதல் ஈனமாகின்றது.

ஆதி நிலை யாதும் அறியார் என்றது அறிந்தால் தீது புரியார் என்பது கருதி வந்தது. சீவ கோடிகள் யாவும் கடவுளிடமிருந்தே வந்திருக்கின்றன. மனிதர் எல்லாரும் அவனுடைய பிள்ளைகளே என்னும் அறிவு சிறிது தோன்றினும் வறிதே குலநலம் பேசிப் புலையாட மாட்டார்.

அந்த அரிய ஆதி மூல நிலை தெரியாது போயினும் பிறந்துள்ள சாதி மூலங்களைக் கொஞ்சம் சிந்தனைசெய்துஉணர்ந்தாலும் ''நான் சிறந்த சாதி'' என்று பேச எவனும் நெஞ்சம் துணியான்.

ஒருவன் பெரிய சாதி என்று தன்னைக் குறித்துப் பெருமை பேசுகின்றான்; அங்ஙனம் பேசுகின்றவனை நோக்கி எதிரேஒருவன் கேட்கின்றான்: "சாதி என்றால் என்ன? எதனால் அது பெரியது? அதனால் உனக்கு வந்தது யாது?" என்னும் வினாக்களுக்கு அவன் விடை கூற வேண்டும். அங்ஙனம் கூற நேரின் அவன் கொண்டிருந்த குலச் செருக்கு குடி வாங்கிப் போகும். முன்னம் மாடாய் இருந்தவன் இப்பொழுது மனிதனாய்வந்திருக்கலாம்; இதில் செருக்குவது ஏன்? முன்னும் பின்னும் முடிவும் படிவும் எண்ணிப்பார்.

பிறந்த பிறப்பால் உயிர்க்குச் சிறந்த உறுதி நலனைச் செய்து கொள்ளுகின்றவனே உயர்ந்த பிறப்பினன் ஆகின்றான்; அல்லாதவர் எல்லாரும் இழிந்த சாதியினராய்க் கழிந்து போகின்றார்.

ஒழிந்து போகின்ற ஊனமான தேக நிலையை மாத்திரம் பற்றிச் செருக்கி நிற்பவர் ஞானசூனியராய் ஈனம் அடைகின்றார்.

என்னைத் தொடாதே ஒதுங்கிப் போ என்று பிறரைத் தாழ்த்திச் சொல்லுகின்றவன் பின்பு தாழ்ந்த சாதியானாய் ஒதுக்கப்படுகின்றான். தீண்டாதார் என்று இன்று தியங்கி நிற்பவர் யார் தெரியுமா? "நாங்கள் மேலான சாதியார்; நீங்கள் எல்லாரும் கீழானவர்கள்: எங்களை யாரும் தீண்டலாகாது" என்று குலத் திமிர் மண்டி முன்பு கொடுமை புரிந்து வந்தவரே.

ஒத்த மக்கள்பால் உரிமை செய்யாமல் பித்தமயக்கால் பிழை புரிந்தவர் பிழைபடலாயினர். பிறரைத் தாழ்த்தினவர் தாழ்ந்து வீழ்ந்தார்; தாழ்வாய்த் தளர்ந்து தவித்தவர் உயர்ந்து வாழ்ந்தார். வினையின் முடிவுகள் அதிசயமான விநோதங்களுடையன.

யாரையும் எவ்வகையிலும் யாதும் இகழ்ந்து பேசாதே; உனக்கு ஏதேனும் சில வசதிகள் வாய்த்தால் அவற்றைக் கண்டு செருக்காதே; அவை கொண்டு அயலாருக்கு உதவி செய்தருளுக.

எய்திய பிறவியால் உய்தி பெறுவதே உயர் பிறப்பு; அல்லாதது இழி கழுதைப் பிறப்பு என மேலோர் வைது மொழிந்திருக்கிறார். இயல்பிலும் செயலிலும் பன்றி நாய் கழுதை முதலிய ஈன மிருகங்களாய் இழிந்து நின்று கொண்டு தம்மை உயர்ந்த சாதியினர் என்று மனிதர் செருக்கிப் பேசுதல் மிகவும் அருவருப்பேயாம். ஞானக் கேடும் மானக் கேடும் மருவி வாழுதல் பெரிதும் ஈனமான பரிதாபங்களாய் யாண்டும் இழிந்து முடிகின்றது.

**உயிர்க்கு உறுதி செய்து கொள்வது எதுவோ அதுவே புனிதமான உயர் பிறப்பு ஆகின்றது; அல்லாததைப் பொல்லாதது என்று நல்லோர் கருதி வருந்துகின்றனர்.**

குலம் பொல்லேன்; குணம் பொல்லேன்; குறியும் பொல்லேன்;
குற்றமே பெரிதுடையேன்; கோலமாய
நலம் பொல்லேன்; நான் பொல்லேன்; ஞானி அல்லேன்;
நல்லாரோடு இசைந்திலேன்; நடுவே நின்ற
விலங்கல்லேன்; விலங்கல்லாது ஒழிந்தேன் அல்லேன்;
வெறுப்பனவும் மிகப்பெரிதும பேச வல்லேன்;
இலம்பொல்லேன்; இரப்பதே ஈய மாட்டேன்!
என் செய்வான் தோன்றினேன் ஏழையேனே. (அப்பர்)

குலத்திடையும் கொடியன்ஒரு குடித்தனத்தும் கொடியேன்
குறிகளிலும் கொடியன்அன்றிக் குணங்களிலும் கொடியேன்
மலத்திடையே புழுத்தசிறு புழுக்களிலும் கடையேன்
வன்மனத்துப் பெரும்பாவி வஞ்சநெஞ்சப் புலையேன்
நலத்திடைஓர் அணுவளவும் நண்ணுகிலேன் பொல்லா
நாய்க்குநகை தோன்றநின்றேன்; பேய்க்கு மிக இழிந்தேன்;
நிலத்திடைநான் ஏன்பிறந்தேன் நின்கருத்தை அறியேன்
நிற்குணனே நடராச நிபுணமணி விளக்கே. (இராமலிங்கர்)

குலந்தான் எத்தனையும் பிறந்தே இறந்து எய்த்து ஒழிந்தேன்;
நலந்தான் ஒன்றுமிலேன்; நல்லதோர் அறம் செய்துமிலேன்;
நிலந்தோய் நீள்முகில்சேர் நெறியார் திருவேங்கடவா!
அலந்தேன் வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே
(திருமங்கையாழ்வார்)

குலந்தாங்கு சாதிகள் நாலிலும் கீழ்இழிந்து எத்தனை
நலந்தானிலாத சண்டாள சண்டாளர்கள் ஆகிலும்
வலந்தாங்கு சக்கரத் தண்ணல் மணிவண்ணற்கு ஆள்என்று உள்
கலந்தார் அடியார்தம் அடியார் எம் அடிகளே. (நம்மாழ்வார்)

**உயர்ந்த ஞான சீலர்கள் உலக நிலையில் அமைந்துள்ள குல நலங்களைக் குறித்து இவ்வாறு கூறியுள்ளனர். ஆன்மலாபத்தை அடைந்து கொள்ளுகின்றவனே மேலான சாதியான்; அவன் பிறப்பே சாலவும் உயர்ந்தது; அவனே தெய்வத் திருவினன் என்னும் உண்மையை இங்கே உணர்ந்து கொள்கின்றோம்.**

**மனித வாழ்வு நிலையில்லாதது; விரைவில் அழிவது; அது அழிந்து படுமுன் அடைய வேண்டியதை அடையாமல் இடையே**

தோன்றியுள்ள மாயத் தோற்றங்களில் மயங்கிக் களிப்பவர் மதி கேடராய் இழிவடைகின்றனர். அந்த இழிவில் வீழாமல் விழி திறந்து நோக்கி வழி தெரிந்து எவ்வழியும் ஒளி புரிந்து உயர்க.

சாதியில் பெருமை பாராட்டிப் பேசுவது பேதைமை; தன்னை உயர்த்திப் பிறரைத் தாழ்த்துவது சின்னத்தனமாம்.

எல்லாரையும் சமமா எண்ணுக; ஒரு தாய் வயிற்றில் பிறந்த உரிமைத் துணைவராகவே எவரையும் கருதி வருக; அக் கருத்து கதி நலம் அருளும். மதி நலமுடன் மருவி இதமாய் வாழுக.

---

387. ஊழி முதல்வன் ஒருவன் புதல்வர்நாம்
வாழி அவனோர் வரவல்லோம்—ஆழி
அனையம் அடலில் அயர்ந்து மடிந்துள்
இனையல் எவனோ இழிந்து. (எ)

இ—ள்

என்றும் நிலையாய் நின்று நிலவுகின்ற பரம் பொருளின் பிள்ளைகள் நாம்; அவனைப் போலவே யாண்டும் உயர்ந்து விளங்க உரியோம்; அளவிடலரிய வலி நிலைகளை யுடையோம்; இந்த உண் மையை மறந்து தளர்ந்து வருந்தி அயர்தல் தவறு என்றவாறு.

ஊழி முதல்வன் என்றது கடவுளை. காணப் படுகின்ற உலக சராசரங்கள் எல்லாம் ஒரு காலத்தில் அழிந்து போம். அந்த அழிவு காலம் ஊழி எனப்படும்.

யாவும் முடிந்து மறையினும் தான் முடிவின்றி முதன்மை யாய் நிற்கும் தலைவன் ஆதலால் இறைவன் ஊழி முதல்வன் என நின்றான். என்றும் நிலையான அம் முதல்வன் புதல்வராய் யாண் டும் நின்று வருகின்றோம்; நிலைமை தெளியின் தலைமை வெளியாம்.

ஆழி=கடல். அடல்=வலி. இனையல்=வருந்தல்.

சருவ வல்லமையுள்ள கடவுளுடைய சந்ததிகள் நாம்; சிந்தை தெளிந்து தீமை புகாதிருந்தால் அத் தந்தையைப் போ லவே மைந்தர்களாகிய நாமும் அதிசய ஆற்றல்களும் அற்புத நிலை மைகளும் அந்தமில் இன்பங்களும் அமைந்து என்றும் நிலையாய் நின்று நிலவுகின்றோம். உரிமையை மறந்தது ஊனம் பிறந்தது.

உள்ளம் பழுதாய் இழிவுறின் தந்தையாகிய அவ் ஈசனது தொடர்பை இழந்து நீசர்களாய் இழிந்து நாசம் அடைய நேர்கின்றோம். உயர் கதியில் ஒளி பெறுதலும் இழி துயரில் அழிவுறுதலும் நமது செயல் இயல்களால் நிகழ்கின்றன; அயல் எவராலும் ஆவன அல்ல. இயல் தெளியாமையால் மயல் ஒழியாமலுள்ளது.

மன நிலைமை சிறிது மாசுபடினும் ஈசனுடைய உரிமையை இழந்து சீவர்கள் வெகு தூரம் விலகி விடுகின்றனர். அங்ஙனம் விலகி ஒழிந்தவர் அளவில்லாத இழிவுகளையும் கொடிய துயரங்களையும் அடைந்து நெடிது வருந்துகின்றனர்; விலகாமல் நின்றவர் தெய்வ ஒளிகளாய்த் திகழ்ந்து திவ்விய மகிமைகளையும் செவ்விய ஆனந்தங்களையும் அனுபவிக்கின்றனர்.

பெரிய பொருளிலிருந்து வந்திருக்கின்றோம் என்னும் உரிமையை மறந்து போனதினாலேதான் சிறுமையும் சீரழிவும் சேர நேர்ந்தன. உண்மையை உணர்ந்த போதுதான் உய்தி உண்டாகின்றது. தன்னை அறியவே தானாகவே மேன்மை மிளிர்கின்றது.

ஒரு சிங்கக் குட்டி; சிறுபொழுதில் தாயை விட்டுத் தவறிப் போய் அருகே மலைச் சாரலில் மேய்ந்து கொண்டிருந்த ஆட்டுக் கூட்டத்தில் சேர்ந்து விட்டது. அந்தச் சேர்க்கை வாசனையால் தனது இயற்கை வீறு மறந்து போயது. ஆட்டுக் குட்டிகளைப் போலவே புல்லைத் தின்று வளர்ந்து வந்தது. ஒரு நாள் அங்கே இரண்டு புலிகள் புகுந்தன; அவற்றைக் கண்டதும் பயந்து அந்தச் செம்மறி ஆடுகள் எல்லாம் சிதறி ஓடின. இந்தச் சிங்கக் குருளையும் சேர்ந்து ஓடியது; ஓட்டத்தில் அனைத்தினும் முந்தி அதி வேகமாய்க்கடிது பாய்ந்து போயது. எதிரே ஒருசிங்கம் கண்டது; இதன் போக்கை நோக்கி, "ஏன் இப்படிப் பதறி ஓடுகின்றாய்!" என்று கேட்டது. 'ஐயோ! புலி கொல்ல வருகிறதே?" என்று சொல்லி விட்டு மேலும் ஓடத் துடித்தது; அதனைத் தடுத்து நிறுத்தி, "சிங்கம் ஆகிய நீ ஏன் இங்ஙனம் பங்கமாய்ப் பயந்து ஓட நேர்ந்தாய்?" என்று வியந்து கேட்டது. நான் சிங்கக் குட்டியா? எனத் தன்னை அது தெரிந்து கொண்டதும் சீறித்திரும்பியது. புலியைக் கண்டு ஓடி வந்ததை நினைந்து நினைந்து நாணியது. பின்பு மிருகேந்திரனாய் ஆண்மை புரிந்து மேன்மையுடன் வாழ்ந்தது.

இந்தச் சிங்கக் குட்டியின் கதை மனிதக் குட்டிகளுக்கு நன்கு பொருந்தியிருத்தலால் இங்கு எடுத்துக் காட்டப்பட்டது.

தன்னை மறந்து போனமையால் மனிதன் இழிந்து இன்னல் உழந்துள்ளான்; உண்மையை உணர்ந்துகொண்டால் புன்மை ஒழிந்து தன்மை யுயர்ந்து நன்மை அடைந்து கொள்கின்றான்.

தேவ குமாரனான சீவன் பாவ உலகில் புகுந்து மனித இனத்துள் நுழைந்து "அவன்மகன்; இவன்மகன்" என்று வீணே குலப் பெருமைகளைப் பேசிக்கொண்டு எதைக்கண்டாலும் பயந்து மையல் நோக்கோடு மருண்டு இழிந்து மறுகி உழலுகின்றான்.

உண்மை இயல் தெளிந்து புன்மை மயல் ஒழிந்து நன்மையுற வேண்டும். அரிய உயர் நலனை இழந்து சிறிய துயர் நிலையில் அழுந்தியிருப்பது அவம் ஆதலால் ஆவதை விரைவில் மேவுக.

*சிங்கக் குருளை திசைதவறி ஆட்டினத்துள்*
*பங்கம் அடைந்து பரிந்ததுபோல்—இங்குனது*
*பான்மை இழந்து பழிதுயருள் பட்டுள்ளாய்!*
*மேன்மை தெளிக விரைந்து.*

தனது நிலைமையை மறந்து தலைமையை இழந்து தாழ்ந்துள்ளவன் அதனை உணர்ந்து கொள்ளவே உயர்ந்து திகழ்கின்றான்.

*"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்*
*தம்முதல் குருவுமாய்த் தவத்தினின் உணர்த்த விட்டு*
*அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே."*

(சிவ ஞான போதம், 8)

ஒரு சக்கரவர்த்தித் திருமகன் இளமையில் தப்பிப் போய் வேடர் சேரியில் புகுந்து வளர்ந்தான்; தனது உயர் தகைமை முழுவதும் மறந்து இழி நிலையில் உழந்து வந்தான்; பருவம் அடைந்த பொழுது ஒரு பெரியவர் அவனைக் கண்டு "அந்தோ! நீ பெரிய அரச குமரன்; சிறிய வேடனாய் இழிந்து திரிகின்றாயே!" என்று பரிந்து உணர்த்தினார். அங்ஙனம் தன்னை உணரவே பின்னர் அவன் மன்னவனாய் மாட்சி அடைந்தான்; அதுபோல் புலன் வசப்பட்டுப் புன்மை அடைந்துள்ள சீவன் தனது உண்மை நிலை தெரியவே சிவ குமாரனாய்ச் சிறந்து திகழும் என இச் சூத்திரம் குறித்துள்ளது. குறிப்புகள் கூர்ந்து நோக்கி ஓர்ந்து சிந்திக்கத் தக்கன. உருவகங்கள் உணர்வின் சுவைகளா யுள்ளன.

*"மன்னவன்தன் மகன் வேடர் இடத்தே தங்கி*
*வளர்ந்து அவனை அறியாது மயங்கி நிற்பப்*

பின்னவனும் என்மகன் நீ என்று அவரிற் பிரித்துப்
 பெருமை யொடுந் தான்ஆக்கிப் பேணுமாபோல்,
துன்னியஐம் புலவேடர் சுழலில் பட்டுத்
 துணைவனையும் அறியாது துயருறும் தொல் உயிரை
மன்னும்அருட் குருவாகி வந்துஅவரின் நீக்கி
 மலம்அகற்றித் தான்ஆக்கி மலரடிக்கீழ் வைப்பன்.''
(சிவஞான சித்தியார், 8-1)

உயிருக்கும் கடவுளுக்கும் உள்ள உரிமை இதனால் உணரலாகும். தன் பிள்ளை என்று தெய்வம் உவந்து அணைத்துக் கொள்ளும்படி உள்ளம் புனிதனாய் மனிதன் உயர்ந்திருக்க வேண்டும்.

இடையே அடைந்த புலைகளை நீக்கித் தரும சீலனாய் மருவியுள்ளவன் இழந்த உரிமையை அடைந்து சிறந்து திகழ்கின்றான்.

“தஸ்யப் ப்ராப் நோதி தத்பதம்” “இழந்து போன தனது பதவியைப் புண்ணிய பரிபாகமுடையவன் அடைகின்றான்” என்னும் இதனால் பரம பதத்தை அடைய உரியவனது நிலைமை தெரிய வந்தது. மாசு களைந்து தேசு மிகவே ஈசனை எய்துகின்றான்.

அயர்ந்து மடிந்து உள் இனையல் எவனோ?

என்றது உனது நிலைமையை மறந்து போனமையால் மதி மயங்கி வருந்துகிறாய்; உண்மையை நினைந்து பார்; அந்த ஞான நோக்கில் நலம் பல காண்பாய் என்று காட்டிய வாறும்.

நீ தெய்வத் திருமகன்; உரிய மெய்மையை உணர்ந்து தெளிந்து செய்ய சீலமுடையனாய் ஒழுகி வைய மையல் ஒழிந்து உய்தி பெறுக என இஃது உணர்த்தியருளியது

---

388. எண்ணியன எல்லாம் எளிதெய்தும் எண்ணுமல்
 மண்ணு யிழிந்து மடிகின்றாய்—எண்ணி நீ
 ஊக்கி முயல்க உடையான் உரிமையுனை
 நோக்கி அடையும் நுழைந்து. (அ)

இ—ள்

நீ எண்ணிய நலங்கள் எல்லாம் எளிதில் வந்து கை கூடும்; எதையும் கருதி உணராமல் விருதாவாய் விளிந்து தொலைகின்றாய்; உண்மையை உணர்ந்து ஊக்கி முயன்றால் உடையவன உரிமைகள் உன்னை நோக்கி விரைந்து வந்து புகும் என்றவாறு.

இது, எண்ணத்தின் ஏற்றத்தை உணர்த்துகின்றது.

மனிதனுடைய உயர் நலங்கள் யாவும் அவனது உள்ளத்திலிருந்தே விளைந்து வருகின்றன. உள்ளுவது என்பது ஊன்றி எண்ணுவது என்னும் குறிப்பை உணர்த்தி நிற்றலால் அதன் நிலைமையும் நீர்மையும் தெரியலாகும்.

எண்ணத்தின் தொகை, எண்ணும் வகை, எண்ணுகின்றவனுடைய தகை என்னும் இந் நிலைகளைத் தழுவியே பலன்கள் விளைகின்றன. விளைவுக்குரிய மூலம் வீறுடையதாயின் பயன்கள் சீருடன்செழித்து வரும். விழித்து முயன்றவர் வீடுகாண்கின்றார்.

அழுத பிள்ளை பால் குடிக்கும்; தட்டினால் கதவு திறக்கும் என்னும் பழமொழிகள் மனிதன் மடி மண்டி யிராமல் யாண்டும் எவ்வழியும் கருதி முயலவேண்டும்என உறுதிநலங்களை உணர்த்தியுள்ளன. இனிய கருமங்கள் அரிய தருமங்களாகின்றன.

தன் உள்ளம் துள்ளி முயலாது ஒழியின் அந்த மனிதன் எள்ளி யிகழப் படுகின்றான். உள்ளம் ஓடிவரும் அளவே உயிர் ஓட்டம் தெளிவாய் ஒளி பெற்று வருகின்றது.

எண்ணியன எல்லாம் எளிது எய்தும்.

என்றது எண்ணத்தின் பயனும் நயனும் காண வந்தது. மனிதன் எதையும் அடையத் தக்கவன்; அவன் கருதிய உறுதி நலங்கள் யாவும் அவனுக்கு உரிமையாகின்றன; இகத்திலும் பரத்திலும் உள்ள எல்லாச் செல்வ நலங்களும் அவனை எதிர் நோக்கி நிற்கின்றன; தகுதியுடன் அவன் கருதிய அளவு கைவந்து கூடுகின்றன. சீவனது சிந்தனையில் சிவன் இருக்கின்றான் என்னும் இது மனிதனது மனநிலையையும்மகிமையையும்உணர்த்தியுள்ளது.

இந்திரன் முதலிய இறையவர் பதங்களும்
அந்தமில் இன்பத்து அழிவில் வீடும்.

அடைய உரியவன் ஆதலால் மனிதனுடைய நிலைமை எவ்வளவு தலைமையுடையது என்பது எளிது தெளிவாம்.

உள்ளம் தெளிந்து உறுதி நலம் கருதித் தருமம் தழுவிய பொழுது அரிய பேறுகள் எல்லாம் எளிதில் வந்து சேருகின்றன.

மனிதன் எல்லை காண முடியாத பெருமைகளை யுடையவன்; தனது தகுதியை மறந்து தாழ்ந்து படுகின்றான்; உண்மையை ஓர்ந்து தெளியின் உயர்ந்து திகழ்கின்றான்.

"Man is a stream whose source is hidden." (Over-soul)

"ஊற்று மூலம் தெரியாத நீரோட்டம் போல் மனிதன் நிலவி நிற்கின்றான்" என்னும் இது ஈண்டு உணரத்தக்கது.

உன் உள்ளத்தின் ஊற்றிலிருந்தே எல்லாம் பெருகி வருகின்றன. வெளியிலிருந்து ஒன்றும் வருவது இல்லை; அயலே மயலாய் எதையும் எதிர்பார்த்து ஏமாந்து நில்லாதே.

தோண்டிய அளவுக்கு நீர் வெளி வருகின்றது; நீ வேண்டிய அளவுக்குச் சீர் பெறுகின்றாய். உனது வேண்டுகோள் ஆண்டவனை நோக்கியது ஆதலால் அது யாண்டும் புனிதமும் தகுதியும் பொருந்தி நிற்க வேண்டும்.

பக்குவம் அடைந்து தன்னைத் தக்கவன் ஆக்கிக் கொண்ட பொழுது மிக்க மதிப்பையும் மேன்மையான பலன்களையும் மனிதன் மேவி விளங்குகின்றான். யாவும் அவன் உள்ளே அமைந்திருத்தலால் அந்த இனிய கருவூலத்தைப் புனிதமாகப் போற்றி வர நேர்கின்றான்.

ஞான நோக்குடன் உள்ளம் கருதாமல் கள்ளம் படிந்துள்ளவன் வெள்ளம் பெருகி வருகின்ற நல்ல ஊற்றுக் கண்ணை மாற்றி அடைத்தவனைப் போல் ஊனம் அடைந்து ஈனம் படுகின்றான்.

எண்ணாமல் மண்ணாய் இழிந்து மடிகின்றாய்!

உணர்வு நாட்டம் குன்றி வீணே இழிந்து நிற்பவன் விரைந்து அழிந்து போகின்றான் ஆதலால் அவனது நிலைமையை நினைந்து இங்ஙனம் இரங்கி வந்தது. அரிய பயனை இழந்து வறிதே அழிவது பெரிதும் பரிதாபமாயது.

எண்ணி முயல்பவன் பொன்னாய் உயர்கின்றான்; எண்ணாது அயர்பவன் மண்ணாய் மடிகின்றான். மனம் மடிந்து மாளாமல் மதியுயர்ந்து வாழுக. உயர்ச்சி எல்லாம் முயற்சியில் உள்ளன.

ஊக்கி முயல்க உரிமை உனை நோக்கி அடையும்.

என்றது எண்ணத்தால் விளையும் பாக்கியங்களை உணர்த்தியருளியது. ஆக்கங்கள் யாவும் உன் அகத்தே உள்ளன; மகத்தான அந்த உரிமைகளை மருவி இருமையினும் பெருமை பெறுக.

389. உண்மை நெறிநின் றுறுதி கடைப்பிடித்துத்
தண்மை யுறுசீலம் தாங்கினார்—வண்மை
அனகனருள் பெற்றார்பின் அல்லலற்றார் என்றும்
கனகனருள் சேயே கரி. (௯)

இ—ள்

சத்திய நெறியில் உறுதியுடன் நின்று உத்தம சீலராய் ஒழுகி வருபவர் இறைவன் அருளை இனிது எய்தி யாதொரு இடருமின்றி யாண்டும் இன்பம் மிகப்பெற்றார்; இவ் வுண்மைக்கு பிரகலாதனே தகுந்த சாட்சி என்றவாறு.

தன் வழி ஒழுகினவரை மெய்யான பேரின்ப நிலையில் உய்த் தருளும் மேன்மையுடையது எதுவோ அது உண்மைநெறி என வந்தது. மெய்வழி உய்வழியாய் ஒளி புரிகின்றது.

உறுதி என்றது உயிர்க்கு உறுதியான தரும சீலங்களை.

கடைப்பிடித்தலாவது யாண்டும் யாதும் வழுவாமல் நீதி நெறிகளில் நிலைத்து நிற்றல். இந் நிலையை இங்ஙனம் குறித்தது நிலை குலைவுகளின் புலைகளை நினைந்து.

மடமைகளும் கொடுமைகளும் மையல்மயக்கங்களும் பெருகி யுள்ள இவ் வையக வாழ்க்கையில் மெய்யான உய்தி நெறியை உணர்தலும், உறுதி குலையாமல் ஒழுகுதலும் பெரிதும் அரிது ஆதலால் அந்த அருமைப் பாட்டில் எவ்வழியும் தளராமல் உறுதி மண்டி நிற்பவர் தரும வீரராய்த் தழைத்து வருகின்றார்.

பொய் மயல்களில் இழிந்து புலையாடாமல் மெய் வழிகளில் ஒழுகி வருபவர் மேலான மகிமைகளை அடைகின்றனர்.

சத்தியமானதும், நித்தியமாய் நிலைத்துள்ளதும் எதுவோ அந்த உத்தம நிலையைப் பற்றி நிற்பவர் உறுதியாய் உய்தி பெறு தலால் பிறவி நோய் நீங்கிப் பேரின்பம் நுகர்கின்றார்.

அனகன் அருள் பெற்றார் அல்லல் அற்றார்.

உற்ற துன்பங்கள் எல்லாம் ஒழிந்து என்றும் அழியாத பேரின்ப நலனைப் பெறுகின்றவரது நீர்மை நிலையை இஃது உணர்த்தி நின்றது.

அனகன்=கடவுள். அகம் என்பது பாவம் தீமை கொடுமை களைக் குறித்து வரும் ஆதலால் அவை யாதும் இல்லாதவன்

அனகன் என நின்றான். அந்தப் புனித மூர்த்தியைப் புனித நிலைகளை அடைந்து படி ஏறிய மனிதன்தான் அடைய முடியும்.

பாவ அழுக்குகள் ஒழிந்த பொழுது மனிதன் புண்ணிய சீலனாய்ப் பொலிந்து விளங்குகின்றான். புண்ணியம் கடவுள் உருவம் ஆதலால் புண்ணியாத்துமா பரமாத்துவாகின்றது.

"If a man is at heart just, then in so far is he God."
(Emerson)

"தன் இருதயத்தில் தரும நீதி மருவிய அளவில் மனிதன் கடவுளாய்த் திகழ்கின்றான்" என்னும் இது இங்கே எண்ணத் தக்கது. இனிய நீர்மையால் அரிய சீர்மைகள் மருவுகின்றன.

உணர்வும் உள்ளமும் புனிதமாகவே சீவன் திவ்விய மகிமைகளை அடைந்து தேவ தேவன் ஆகின்றான்; ஆகவே உயிர் பரங்களின் இயலமைதிகளும் உறவுரிமைகளும் உணர வந்தன.

சித்த சுத்தியும் பத்தியும் முத்தி நிலையில் உய்த்தருளுகின்றன.

கனகன் அருள் சேயே கரி.

என்றது அனகன் அருள் பெற்றவர் அல்லல் அற்றவராய் எல்லையில்லாத இன்பநலங்களை எய்தி மகிழ்வர் என்பதை இனிது விளக்க வந்தது. தெய்வம் சாரவே உய்வு சேருகின்றது.

கனகன்=இரணியன். சேய் என்றது அவன் புதல்வனான பிரகலாதனை. கரி=சாட்சி. புனித நிலையில் நிலைத்து நிற்பவன் இனிய பேறுகளை எய்தி மகிழ்வன் என்பதை மனிதவுலகம் இவன்பால் கண்டுள்ளமையால் இவனது சாட்சி ஆன்ற மாட்சியாய்க் காட்சிக்கு வந்தது.

பிரகலாதன் இளமைப்பருவத்திலேயே உத்தம குணங்களும் தத்துவ ஞானமும் பத்திமையும் உடையவன். இவனுடைய சித்த சுத்தியும் தீரமும் வித்தக நிலையில் விளங்கியிருந்தன.

வெய்ய நிலையில் இறுமாந்து வீறு மண்டி நின்ற இரணியன் தனது மைந்தனுடைய தெய்வ சிந்தனையை வெறுத்து இகழ்ந்து தன்னையே பரம் பொருளாக் கருதி ஒழுகுமாறு இன்னல் பல இழைத்தான். அந்த இடையூறுகளால் யாதொரு தீதும் அடையாமல் இந் நீதிமான் நெறிவழுவாமல் நிலைத்து நின்றான். முடிவில்

அவன் அழிந்து ஒழிந்தான். இவன் அழியாத வாழ்வை அடைந்து மகிழ்ந்தான். தரும குண சீலனான இவன் எதிரே திருமால் தோன்றி உனக்கு என்ன வரம் வேண்டும் என்று வேண்டிய பொழுது இவன் யாதொன்றையும் வேண்டாமல் அன்பையே வேண்டினான்.

"முன்பு பெறப்பெற்ற பேறோ முடிவில்லை;
பின்பு பெறும்பேறும் உண்டோ? பெறுகுவெனேல்
என்பு பெறாத இழிபிறவி எய்திடினும்
அன்பு பெறுகை அரும்பேறு எனக்கு என்றான்."
(இரணியன்வதை, 169)

இதனால் இவனது உள்ளப் பண்பும் உணர்வு நிலையும் உணரலாகும். உண்மை நெறியில் உறுதியுடன் நிலைத்துள்ளவர் இடும்பைகள் யாதும் இலராய் ஈறிலின்பம் பெறுவர் என்பதை உலகம் அறிய இவன் உணர்த்தி நின்றான்.

மெய் வழியில் நிலைத்து ஒழுகுபவன் தெய்வ ஒளியாய்த் திளைத்து மிளிர்கின்றான். நிலைமை குலையாமல் தலைமையில் உயர்க.

---

390. உன்னுள் இருக்கும் உயர்வைப் பிறருடைய
இன்னுரையில் கேட்டின்பம் எய்துகின்றாய்—பின்னுமதைப்
பேணி வளர்த்துப் பெருக்கினால் பேரின்பம்
காணுங்காண் காட்டுங் கதி. (10)

இ—ள்

உன்னுடைய உயர்வைக் குறித்துப் பிறர் புகழ்ந்து சொன்னால் நீ உவந்து கொள்ளுகின்றாய்; அந்த ஆன்ம மேன்மையை மேலே பெருக்கினால் பேரின்ப முத்தி நேரே தோன்றும் என்க.

மனிதனுடைய இன்ப உணர்ச்சிகள் பலவகை நிலைகளில் பரவியிருக்கின்றன. பொறி நுகர்ச்சிகளில் பெரும்பாலும் விரும்பிய சுகங்களை அனுபவித்துவரினும் அறிவுநூல்களைக் கற்பதிலும், அயலார் புகழ்ந்து சொல்லும் துதி மொழிகளைக் கேட்பதிலும் அதிக இன்பங்களை அனுபவிக்கின்றான்.

என்ன வகையிலாவது தன்னைக் குறித்துப் பிறர் உயர்வாக எண்ணவும் பேசவும் வேண்டும் என்றே இரவும் பகலும் ஏங்கி நிற்கின்றான். இந்த ஏக்கம் யாரிடமும் யாண்டும்பரவியிருத்தலால்

உயிரினங்கள் எவ்வழியும் உயர்வையே அவாவி நிற்கும் இயல்பின என்னும் உண்மை தெளிவாகின்றது.

உன் உள் இருக்கும் உயர்வை என்றது உயர்ச்சி புறத்தில் இல்லை; உனது அகத்திலேயே உள்ளது என உணர்த்தியது.

சிறந்த செல்வன், உயர்ந்த பண்டிதன், பெரிய போர்வீரன், அரிய கொடையாளி, நல்ல நீதிமான், தரும சீலன் என்னும் இன்னவகையான உயர் மொழிகள் மக்களுக்கு உவகை யூட்டி வருகின்றன. துதி ஒலிகள் சுக ஒளிகளாய் மிளிர்கின்றன.

தனது தன்மை உயர மனிதன் நன்மையில் உயர்கின்றான். இனிய இயல்புகளும் இத நலங்களும் மனித சமுதாயத்தில் தனியாகவே மதிப்புகள் அடைகின்றன.

நல்ல நீரை யாரும் நயந்து பருகுதல் போல் நல்ல நீர்மையாளனை உலகம் உவந்து புகழ்கின்றது. எண்ணங்கள் உயர்ந்து கண்ணிய நீர்மைகள் கனிந்த பொழுது மனிதன் புண்ணியவானாய்ப் பொலிந்து திகழுகின்றான். அவன்பால் தெய்வத் தேசுமிருந்துள்ளமையால் வையம் முழுவதும் அவனை வாழ்த்த நேர்கின்றது. அவன் பிறப்பே புனிதமாய் மதிக்கப் படுகின்றது.

“A wit's a feather, and a chief a rod;
An honest man's the noblest work of God.” (Pope)

“அறிவனையும் அரசனையும் விட நெறியுடையான் கடவுளின் உன்னத சிருட்டியாய் ஒளி பெற்றுள்ளான்” என்னும் இது ஈண்டு உணரவுரியது.

சத்தியமும் நேர்மையும் சித்த சுத்தியும் வாய்ந்திருத்தலால் உத்தமனை எல்லாரும் போற்றிப் புகழ்கின்றார்.

இனிமையான புனித நீர்மைகளால் மனிதன் உயர்கின்றான்; உயர்வு எல்லாம் அவனிடமே உள்ளன; அயலே யாதும் இல்லை. தன்னைத் தானே உயர்த்திக் கொள்ளாதவன் சின்னவனாய்ச் சீரழிகின்றான். அரிய குணங்கள் பெரிய இனங்களாகின்றன.

பண்பால் உயர்ந்தவன் விண்பாலும் மண்பாலும் வியந்து நோக்க எண்பாலும் இனியனாய் இனிது விளங்கி நிற்கின்றான்.

“Man is his own star, and that soul that can
Be honest is the only perfect man.” (Fletcher)

"தரும சீலன் இனிய திருவினன்; அவனே பரிபூரணமான மனிதன்" என பிளேச்சர் என்பவர் இவ்வாறு கூறியிருக்கிறார்.

குணங்கள் நிறைய நிறைய மனிதன் தெய்வ ஒளியாய்ச் சிறந்து திகழ்கின்றான். மேன்மையான நிலைகள் யாவும் நல்ல பான்மைகளிலேயே பதிந்து வதிந்திருக்கின்றன.

இனிய இயல்பு வளரப் புனித நிலைமை ஒளிர்கின்றது.
பேரின்பம் காணும்; கதி காட்டும்.

என்றது தனது தன்மையை நன்மையாக ஒருவன் வளர்த்து வரின் இம்மை மறுமை முதலிய எல்லா இன்ப நலங்களும் அவனிடம் எளிதே எய்தும் என்பது தெளிய வந்தது.

மனிதன் இயல்பாகவே இனியவன்; உயர்ந்த பொருளிலிருந்து வந்தவன்; பரம்பொருளினுடைய சந்ததி; அவ் வழி மரபு ஒளி மறைவாயுள்ளது; உள்ளம் தூயனாய் உண்மை தெளி; எல்லாநன்மைகளும்இன்பங்களும் உன்பால்இனிது பெருகிவரும்.

தானே தனக்குப் பகைவனும் நட்டானும்;
தானே தனக்கு மறுமையும் இம்மையும்;
தானே தான் செய்த வினைப்பயன் துய்த்தலால்
தானே தனக்குக் கரி. (அறநெறிச் சாரம்)

---

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

மனிதன் பரம நிலையினன்.
புலனில் அழுந்திப் புலையுறுகின்றான்.
நலனில் மருவின் நிலை பெறுகின்றான்.
பிறவியின் பெரும் பயன் மீண்டு பிறவாமையே.
காம வெகுளி ஒழியின் சேமம் வெளியாம்.
சாதிச் செருக்கு தீதின் பெருக்காம்.
சீவர்கள் இறைவன் பிள்ளைகள்.
எதையும் அடைய வல்லவர்.
பேரின்ப நிலையினர்.
எல்லா நலங்களும் எய்த உரியவர்.

௩௯-வது நிலை முற்றிற்று.

---

# நாற்பதாம் அதிகாரம்.

## நியமம்.



அஃதாவது விதி நிலை வழுவாமல் நெறி நின்று ஒழுகும் முறைமை. புலன்களை அடக்கி மனநலமுடன் புனிதமாய் மனிதன் இனிது வாழும் நிலைமையைத் தலைமையாக உணர்த்துகின்றமை யால் உறுதி நிலையின் பின் உரிமை கருதி இது வைக்கப்பட்டது.

391. நீதி நியமம் நெறிமுறைகள் என்றுநாம்
ஓதி உவகை உறுகின்றோம்—ஓதியஅப்
பேரளவில் நில்லாமல் பேர்பெற்று நின்றோமேல்
நேரள வுண்டோ நிலத்து. (க)

இ—ள்

நீதி நியமம் நெறி முறை என்னும் இனிய நாமங்களைப் பேசி மகிழ்கின்றோம்; அங்ஙனம் பேச்சளவில் நில்லாமல் அப் பேர் களைத் தமக்கு உரிமையாக்கி ஒழுகின் அளவில்லாத உயர்வுகள் உளவாம் என்றவாறு.

மனிதன் உணர்வு நலம் உடையவன்; உறுதிநலங்களை ஓர்ந்து சிந்திப்பவன்; அழிவையும் அழியாமையையும் தெளிவாக ஆராய்ந்து கொள்பவன்; அநித்தியங்களில் பற்று ஒழிந்து நித்திய நிலையைப் பற்றி நிற்பவன்; இத்தகைய நிலைகளையுடையவன் ஆதலால் அவ னது வாழ்க்கையின் குறிக்கோள் உத்தம நிலையில் உயர்ந்து ஒளி சிறந்துள்ளது. நெறி வரம்புகள் சீர்மைகள் அருள்கின்றன.

உலகச் சூழல்களில் படர்ந்துள்ள பிழைபாடுகளை எல்லாம் கடந்து உயர் நிலையை அடைய வழிகள் பல கண்டு விழிகள் காணும்படி மேலோர் விளக்கி வைத்துள்ளனர்.

அவை முத்தி நெறி, மோட்ச மார்க்கம் எனப் பேர் பெற்றி ருக்கின்றன. அந்த நல்ல வழியில் நடந்து செல்பவர் அல்லல் பலவும் கடந்து எல்லையில்லாத பேரின்பநிலையை அடைகின்றனர். அவ்வழியை விட்டு விலகினவர் கொடிய அலமரல்களை அடைந்து அழிவும் இழிவும் கண்டு பழி துயரங்களுள் பட்டுப் பரிதபிக் கின்றனர். துயரடையாமல் உயர் வழி ஒழுகுக.

அழிவி லாததற் பதந்தனை மைந்தனே! அகமுகத்தவர் சேர்வர்;
வழிநடப்பவர் பராமுகம் ஆயினல் மலர்ந்தகண் இருந்தாலும்
குழியில் வீழ்வர்காண் அப்படி வெளிமுகம் கொண்டு காமிகள் ஆனோர்
பழித ரும்பிற விக்கடல் அழுந்துவர் பரகதி அடையாரே.

(கைவல்லியம், 53)

உள் முகமாய்த் தம்மை நோக்கிய ஆன்மஞானிகள் நெறியே சென்று நிறை பேரின்பம் பெறுகின்றார்; வெளி முகமாய்க் களி மயக்கில் திரிகின்றவர் பழி வழிகளில் அலைந்து படு துயரங்களை அடைகின்றார்; எனவே வழி தவறினவரது அழிவும் இழிவும் விழி தெரிய வந்தன.

வழி நடப்பவர் பராமுகம் ஆயினல் விழி யிருந்தாலும் குழி யில் வீழ்கின்றார்; அதுபோல் நல்லஅறிவு இருந்தாலும் நெறியை விட்டு விலகினல் அழி துயரில் வீழ்ந்து இழிவடைகின்றனர்.

மாயமான மோக மயக்கங்கள் பல உலகில் பரவி யிருக்கின் றன. அவ் வெறிகளில் வீழாமல் பொறிகளை அடக்கி நல்ல நெறி களில் நடப்பவர் உயிர்க்கு உறுதி புரியும் உத்தமராகின்றனர். தமக்கு நன்மையை நாடுகின்றவர் தீய புலைகளில் யாதும் தோயா மல் தூய நிலைகளில் தோய்ந்து கொள்கின்றார்.

நியமம் என்பது புனிதமான மன அமைதி ஆதலால் அதனை யுடைய மனிதன் இனியனுய்த் தனி மகிமை அடைகின்றான் ஞான சீலங்களுள் இஃது ஓர் அங்கமாய் அமைந்துள்ளது.

இயமம், நியமம், ஆசனம், பிராணுயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன யோக நிலையங்களாய் மதிக் கப்பட்டுள்ளன. குறித்த நாமங்கள் குணங்களால் அமைந்தன.

இயமம்.

பொய்கொலை களவே காமம் பொருள்நசை
இவ்வகை ஐந்தும் அடக்கியது இயமம். (1)

நியமம்.

பெற்றதற்கு உவத்தல் பிழம்புநனி வெறுத்தல்
கற்பன கற்றல் கழிகடும் தூய்மை
பூசனைப் பெரும்பயம் ஆசாற்கு அளித்தலொடு
நயனுடை மரபின் நியமம் ஐந்தே. (2)

ஆசனம்.

நிற்றல் இருத்தல் கிடத்தல் நடத்தல் என்று
ஒத்த நான்கின் ஒல்கா நிலைமையோடு
இன்பம் பயக்கும் சமயம் முதலிய
அந்தமில் சிறப்பின் ஆசனம் ஆகும். (3)

பிராணாயாமம்.

உந்தியொடு புணர்ந்த இருவகை வளியும்
தந்தம் இயக்கம் தடுப்பது வளிநிலை. (4)

பிரத்தியாகாரம்.

பொறியுணர்வு எல்லாம் புலத்தின் வழாமை
ஒருவழிப் படுப்பது தொகைநிலை யாமே. (5)

தாரணை.

மனத்தினை ஒருவழி நிறுப்பது பொறைநிலை. (6)

தியானம்.

நிறுத்திய அம்மனம் நிலைதிரி யாமல்
குறித்தபொருளொடு கொளுத்தல் நினைவே. (7)

சமாதி.

ஆங்கனம் குறித்த அம்முதற் பொருளொடு
தான்பிறன் ஆகாத் தகையது சமாதி. (8)

(யோக சூத்திரம்)

உயிர்க்கு உறுதியான நெறி முறைகள் இங்ஙனம் மருவி யிருக்கின்றன. குறிப்பு நிலைகள் கூர்ந்து சிந்திக்கத் தக்கன.

சத்தியம் நேர்மை தயை பொறுமை முதலிய குண நலங்களை மருவி நெறி நியமங்களுடன் ஒழுகி வருபவர் உயர் பதவியை அடைகின்றனர்.

உள்ளத்தை ஒருமைப் படுத்திப் புனிதநிலையினராய் மனிதர் உயர வேண்டும் என்பதை இஃது உணர்த்தி யருளியது.

பேர் அளவில் நில்லாமல் பேர் பெற்று நில்.

என்றது நீதி நியமங்களை நூல்களில் படித்த அளவில் நின்று விடாமல் அதன்படி ஒழுகி எழுக என்றவாறு.

உனது வாழ்நாளை உயர் நிலையில் செலுத்தி ஒளியுடைய தாக்கி விழுமிய பதவியை அடைக என்பது கருத்து.

392. உள்ளம் இனிதாய் உயர்ந்து மகிழினது
தெள்ளு சுவர்க்கமாய்த் தேசுமிகும்—உள்ளம்
கொடிதாய் இழியின் கொடுநரக மாகும்
கடிது தெளிக கதி. (உ)

இ—ள்

உன் மனம் இனியதாய் உயரின் அது சுவர்க்க இன்பமாய்த் தேசு மீகுந்து திகழும்; உள்ளம் தீயதாய் இழியின் கொடியநரகத் துன்பமாம்; இந்த உண்மையை விரைந்து தெளிந்து சிறந்த கதியைப் பெறுக என்பதாம்.

சுகம் துக்கம் என்னும் இரண்டும் மனித வாழ்க்கையில் இயற்கை உரிமைகளாய்த் தொடர்ந்து வருகின்றன. பகலும் இரவும், நிலவும் இருளும் என இவை நிலவி நிகழுகின்றன.

சுகம் ஒன்றே தோய்ந்ததும், துக்கம் ஒன்றே வாய்ந்ததும் ஆன வாழ்க்கை யாண்டும் யாதும் இல்லை. உருவில் வந்த உயிரினங்கள் எல்லாம் இந்த இருவகையும் எவ்வழியும் ஒருவாமல் மருவி உழலுகின்றன.

உணவின் அருமையைப் பசியும், நிழலின் இனிமையை வெயிலும் உணர்த்தி வருதல்போல் சுகத்தின் உயர்வைத் துக்கம் உணர்த்தி வருகின்றது. இன்ப துன்பங்கள் வாழ்வின் நீழல்களாயுள்ளன.

வேண்டாத துக்கம் மனிதனை விடாது பற்றி வருவது விசித்திரமாகின்றது. விதைத்தது விளைவாய் எழுகின்றது; செய்தது சேர்ந்து விழுகின்றது. உண்மையை ஓர்ந்து தெளிக.

மனிதனுடைய செயல்களில் நல்லதும் தீயதும் புல்லியுள்ளமையால் அவ் வினைகளின் பயன்கள் சுகம் துக்கம் என வெளிக் கிளம்பின. செய்தன சேர வந்தன ஆதலின் யாரும் மாருமல் அனுபவிக்க நேர்ந்தனர்.

> "பேறு இழவு இன்பம் துன்பம் பிணி பகை பிறப்பிவற்றின்
> ஆறுமதாம முன்னம் செய்த வினைவழி வருவது அல்லால்
> வேறொன்றால் ஆவது உண்டோ?" (மேருமந்தர புராணம்)

நேர்வன எல்லாம் வினை விளைவுகள் என விளங்கி நிற்றலால் இனியது காண விரும்பும் மனிதன் தனது நினைவு சொல் செயல்களை எவ்வளவு புனிதமாகப் பேணி வரவேண்டும் என்பது எளிது புலனும். சீவ வாழ்வு பாவம் படியாதாயின் அது தேவ ஒளியாம்.

ஒருவனுடைய வாழ்க்கையின் அனுபவங்கள் யாவும் அவனது செயல்களின் உருவங்களேயாம்; ஆகவே தன்னை இனியனாகத் திருத்திக் கொண்டவன் இன்ப நலங்களை வளர்த்துக் கொள்கின்றான். தன் உள்ளம் பண்படின் எல்லையில்லாத இன்பங்களை அவன் எய்துகின்றான்.

உள்ளம் இனிதாய் மகிழின் அது சுவர்க்கம்.

என்றது இன்ப நிலையின் இயல்பு உணர வந்தது.

சுக துக்கங்கள் வெளியே பொருள்களிலிருந்து வரவில்லை; மனிதனுடைய மனத்திலேயே அவை மருவியிருக்கின்றன. அது நல்லது ஆயின் இன்ப நிலையம் ஆகின்றது. இறைவனுடைய பேரின்ப வெள்ளம் நல்ல உள்ளத்திலே பாய்கின்றமையால் அதன் இயல்பையும் உயர்வையும் உணர்ந்து கொள்ளலாம்.

இனிமைப் பண்பு வளர மனம் புனித நிலையில் பொலிந்து அதிசய மகிமைகளை அடைகின்றது. அந்த நல்ல மனத்தையுடையவன் எல்லாப் பாக்கியங்களையும் எளிதே அடைந்து இன்ப மூர்த்தி ஆகின்றான்; அதனைப் பழுது பட விட்டவன் இழுதையாய் இழிந்து அழி துயரில் ஆழ்கின்றான்.

உள்ளம் கொடிதாய் இழியின் கொடு நரகம்.

தன் மனம் கெடின் மனிதன் கொடிய துயரமுடையனாய்ப் பரிதபித்து மடிகின்றான். இம் முடிவை உணராமல் மூடமாய் அழிவதே பிறவிக் காடுகள் பெருகி வருதற்குக் காரணம் ஆயது.

உயர்வு தாழ்வு இன்பம் துன்பம் முதலிய மனித அனுபவங்கள் யாவும் மனத்தின் நிலையைப் பொறுத்தே உளவாகின்றன; இவ் வுண்மையை ஓர்ந்து நன்மையை நாடிக் கொள்ளுக.

சுவர்க்கம், நரகம் என நூலோரும் மேலோரும் சுட்டியுள்ள இன்ப வுலகமும் துன்ப நிலையமும் வேறு எங்கும் இல்லை; உன் உள்ளத்திலேயே உள்ளன; உளவு கண்டு தெளிவு காணுக.

“தந கோபமே தந சத்ருவு;
தந சாந்தமே தநகு ரக்ஷ; தய சுட்டம் பௌ;
தந ஸந்தோஷமே ஸ்வர்க்கமு;
தந துக்கமே நரகம்.” (சுமதி)

"தனது கோபமே தனக்குக் கொடிய பகைவன்; சாந்தமே இனிய துணைவன்; தயையே நல்ல சுற்றம்; தன்னுடைய மன மகிழ்ச்சியே சுவர்க்கம்; துக்கமே நரகம்" என இங்ஙனம் தெலுங்கில் வந்துள்ளது; இது இங்கே சிந்திக்கத்தக்கது.

நல்ல குணங்களையே பழகி எவ் வழியும் இனிய மனத்தனாய் மனிதன் வாழ்ந்து வருவான் ஆயின் அவ் வாழ்வு புனித மிக வுடையதாய்ப் புண்ணியங்கள் சுரந்து எண்ணிய நலங்கள் யாவும் எய்தி இன்ப நிலையமாம். அந்த இன்பவாழ்வை அடையவேண்டும்.

உன் இதயத்தைப் பண்படுத்து; அங்கே நீ சுவர்க்க இன்பத்தைக் காண்பாய். சுகம் முழுவதும் உனது அகமே உளது; அதனை நாடி அறியாமல் அயலே ஓடி அலைவது வெறி மயலாகும்.

---

393. எண்ணம் இழிவாக ஈன மனிதனெனும்
வண்ணம் மருவி வருகின்றான்—எண்ணம்
புனிதமாய் ஓங்கிப் பொலியின் அவனே
மனிதருள் தெய்வம் மதி. (௩)

இ—ள்

தன் எண்ணங்கள் இழிவாயின் மனிதன் ஈனன் என இழிந்து படுகின்றான்; அது புனிதமாயின் அவன் தெய்வமாய்ச் சிறந்து திகழ்கின்றான்; இதனை உணர்ந்து உய்க என்றவாறு.

பெருமை சிறுமை, புகழ் பழி, இன்பம் துன்பம் என இன்னவாறான நிலைகள் பல வாழ்க்கைகளில் மருவி வருகின்றன. அவை டெயாளவில் பேசப்படுகின்றனவே அன்றி நிலையானவை அல்ல. தாமாகவே தோன்றி நின்று தோன்றிய படியே அவை விரைந்து மறைந்து போகின்றன.

நன்மை தீமைகள் எல்லாம் மனிதனுடைய சிந்தனைகளாலும் செயல்களாலுமே விளைந்து வெளிவந்துள்ளன.

பெருமை பெறுவதும், சிறுமை உறுவதும் அவனுடைய கருமங்களாலேயே அமைந்துள்ளமையால் எல்லாவற்றிற்கும் பூரணமான காரண கருத்தாவாய் அவன் பொருந்தி நிற்கின்றான்.

தன் நிலைமையை அணு அளவு அறிந்துகொண்டால் மனிதன் அரிய பல அதிசய மகிமைகளை எதிரே காண நேர்கின்றான்.

உயிரின் சீவ நாடி உள்ளத்தில் உள்ளது.

அதன் நிலையைப் பொறுத்தே நிலைமைகள் யாவும் நேரே மேவி வருகின்றன. கரும பலன்கள் என வழங்கி வரும் மருமங்களைத் தெரியின் மனத்தின் உருவங்கள் தெளிவாம்.

ஈசன் என ஏத்தப் பெறுவதும், நீசன் என நிந்திக்கப் படுவதும் நினைப்பினால் நிகழ்ந்த நிலைகளேயாம்.

எண்ணம் இழிவு ஆக ஈன மனிதன் எனும்
வண்ணம் மருவி வருகின்றான்.

மனிதனுடைய உண்மை உயர்வையும், புன்மை நிலையையும் பொதுவாக இது உணர வந்தது.

ஒருவனது புறத் தோற்றங்கள் அவனுடைய அகத்தின் மூல வேரிலிருந்து மூண்டு கிளைத்து நீண்டு வெளி வந்துள்ளன.

சிறிய வித்துகளிலிருந்து பெரிய மரங்கள் பெருகி வளர்ந்து நெடிது படர்ந்து நிற்றல் போல் நுணுகிய எண்ணங்களிலிருந்து மனிதனது வாழ்க்கை நிலைகள் யாவும் அடர்ந்து தொடர்ந்திருக்கின்றன. உள்ளமே உலகமாய் உலாவி நிற்கின்றது.

நல்ல நினைவுகளிலிருந்து தோன்றியன யாண்டும் புண்ணிய போகங்கள் பொலிந்து இனிய குளிர் பூஞ்சோலைகள் போல் நறுமணங்கள் கமழ்ந்து எங்கும் செழித்துத் தழைத்து என்றும் இன்பக் காட்சிகளாய்ச் சிறந்து திகழ்கின்றன.

தீய நினைவுகளிலிருந்து வந்தன பாவத் துயரங்கள் படர்ந்து கொடிய கள்ளிக்காடுகளாய்க் கோரமும் கொடுமைகளும் அடர்ந்து நிற்கின்றன. நெஞ்சம் நிலை தவறின் நெடிய கேடுகள் கடிது எழுகின்றன.

இழிவான ஒரு பழி நினைவு மனிதனைப் படுபாதகனாக்கி நெடுங்காலம் அடு துயர்களில் ஆழ்த்தி அடர்கின்றது.

நெஞ்சம் நல்லதாயின் மனிதனைத் தெய்வம் ஆக்கிச் சுவர்க்க இன்பத்தைத் தந்தருளுகின்றது; அது தீயது ஆனால் அவனை ஈனப் பிசாசு ஆக்கி நரக துன்பத்தைக் கொடுத்து விடுகின்றது.

மான மனிதன் மனம்புனிதம் ஆயினால்
வான அமுதமென வாழ்கின்றான்—ஈனம்
சிறிது படினே சிறியனென மாறி
வறிதழி கின்றான் வலிந்து.

இதனை இங்கே நினைந்து சிந்திக்க வேண்டும்.

ஒருவனது சீவியம் ஒளி மிகுந்து உயர்தலும், இருளடைந்து இழிதலும் அவன் அகத்திலேயே நிலையாய் அமைந்துள்ளன.

"ஓ மனமே! கடவுளையும் மோட்சத்தையும் தேடித் தேடி யாதும் காணாமல் பல பிறவிகளை அடைந்து பரிதபித்து வந்தேன்; இன்று உன் கருணையைப் பெற்றேன்; இறைவன் என் எதிரே வந்து நிற்கின்றான்; பேரின்பப் பேறு என்னைப் பேணி வந்துள்ளது; என்னே உன் மகிமை!" என இனிய மன அமைதியை எய்திய கனிகர் என்னும் முனிவர் ஒருநாள் தன் உள்ளத்தை நோக்கி இங்ஙனம் உரைத்திருக்கிறார். மனம் இனிதாய் வசமானால் அளவிடலரிய மகிமைகள் உடனே உளவாம் என்பதை இஃது உணர்த்தியுள்ளது. நெஞ்சமே எங்கும் தஞ்சம் ஆகின்றது.

---

394. இன்பமே வேண்டி இருக்கும் இயல்புடைய
மன்பதை நல்வினையை மாறாமல்—அன்பமைந்து
செய்தபோ தன்றியது சேரலரி தாதலினால்
உய்தி உணர்க உடன். (௪)

இ—ள்

இன்ப நலங்களையே யாண்டும் விரும்பி நிற்கும் இயல்பினையுடைய மக்கள் அவற்றிற்கு உரிய காரணங்களைக் கருதிச் செய்ய வேண்டும்; அங்ஙனம் செய்யாவழி யாதும் எய்தாது; இந்த உண்மையை உணர்ந்து உறுதி நலனை விழைந்து கொள்க என்றவாறு.

இது அனுபவ நிலைகளை நினைவுறுத்துகின்றது.

எந்த விதையை விதைக்கின்றோமோ அந்த வித்துக்களின் இயல்பின்படி மரங்கள் முளைத்து வருகின்றன. அவற்றின் பலன்களும் அவ்வாறே பெருகியிருக்கின்றன.

மனிதன் எத்தகைய நினைவுகளை நினைக்கின்றானோ அத்தகையனவாகவே மொழிகளும் செயல்களும் வெளி வருகின்றன.

நல்ல சுகமே நாளும் தமக்கு வேண்டும் என்று எல்லாரும் இயல்பாகவே கருதுகின்றனர். அங்ஙனம் கருதுகின்றவர் அவ்வரவுக்குரிய மூல வித்துக்களையே விதைக்க வேண்டும்; அவை பருவ காலத்தில் இனிய விளைவுகளை எளிதே உதவியருளும்.

மாறானவைகளை விதைத்தால் அவை வேறான விபரீத பலன்களையே விளைத்து விடும்; அவ் வினை விளைவுகளை அனுபவிக்காமல் யாரும் தப்ப முடியாது. செய்தது செய்தவனைச் சேர்கின்றது.

வித்திய விளைவுகளின்படி விளைவுப் பொருள்களை உழவன் பெறுகின்றான்; செய்த வினைகளின்படி பயன்களைச் செய்தவன் எய்துகின்றான். பண்ணிய கருமங்களே புண்ணிய பாவங்களாய்த் தம் போகங்களை ஊட்டுகின்றன.

நல்வினை என்றது பிற வுயிர்களுக்கு இதமான நல்ல செயல்களே. நல்லதிலிருந்து நன்மைகள் உண்டாகின்றன. கெட்டதிலிருந்து தீமைகள் விளைகின்றன.

நல்லதைச் செய்கின்றவன் அதி மதுரமான மாமரங்களைப் பயிரிடுகின்றான்; கெட்டது புரிபவன் எட்டி மரங்களை நட்டவனுகின்றான். முன்னவன் இனிய கனிகளை எய்தி இன்பமுடன் வாழ்கின்றான். பின்னவன் இன்னாத காய்களைப்பெற்றுத் துன்பம் உற்று வீழ்கின்றான். அனுபவங்கள் யாவும் வினைகளின் விளைவுகளே.

துன்பத்தால் துடித்து அழுவதும், இன்பத்தால் இனிது மகிழ்வதும் தன்னுடைய செயல்களாலேயே நேர்கின்றன ஆதலால் நிலைமைகளைக் கூர்மையாக ஓர்ந்து மனிதன் புனிதமான கருமங்களை எவ் வழியும் செவ்வையாகப் போற்றி வர வேண்டும்.

தருமம், புண்ணியம் என்னும் இந்தக் கண்ணிய மொழிகளால் நூலோரும் மேலோரும் யாண்டும் புகழ்ந்து பேசி வருவன எல்லாம் மனிதனுடைய நல்ல செயல்களையே யாம்.

இனிய பாலைப் பெற விரும்புகின்றவன் பசுவைப் பேணுகின்றான். அதனை உரிமையுடன் புரந்து வரும் அளவு பாலை அது சுரந்து வருகின்றது. புண்ணியமும் அவ்வாறே தன்னைப் பேணி வருகின்றவனுக்கு எண்ணிய இன்ப நலங்களை இனிது சுரந்தருளுகின்றது.

“தர்மோ ரக்ஷதி ரக்ஷித:” “தன்னைப் பேணுகின்றவனைத் தருமம் காக்கின்றது” என்னும் இது இங்கே எண்ணத்தக்கது.

தனது கருமம் தருமமாக மருவிவரின் அது இருமை நலங்களையும் எளிது பயந்து இன்ப ஒளி வீசுகின்றது.

“செய்வினை இனியதேல் தேவ போகமும்
கையக மாகிய காட்சி யாகுமே;
உய்வினை உரிமையா உதவும அன்னதை
மெய்வினை யாகவே மேவ வேண்டுமால்.”

என்னும் உண்மையை ஈண்டு உணர வேண்டும்.

செய்த போது அன்றி அது சேரல் அரிது.

என்றது உள்ளம் கனிந்து நல்ல செயல்களைச் செய்யாவழி எவ்வகையானும் சுக போகங்களை அடைய முடியாது என்பது அறிய வந்தது. இனிய கருமங்களே இருமையும் தருகின்றன.

பொறி புலன்களைப் புனித நெறிகளில் செலுத்தி மனித சமுதாயத்துக்கு இத நலங்களைச் செய்து வருபவன் தானாகவே உயர் மகிமைகளை அடைகின்றான். இன்பமும் மேன்மையும் உன் கைவசம் உள்ளன; அன்பு நலம் உடையனாய் யாண்டும் நல்ல எண்ணங்களையே எண்ணி, இனிய மொழிகளையே பேசிப், புனிதமான செயல்களையே புரிந்து வருக. இறைவன் அருளும் பரம பாக்கியங்களும் விரைந்து பெருகி நிலையான இன்ப நலங்களைத் தலைமையாக உனக்கு உதவியருளும். இனிய வினையால் மனிதன் புனிதன் ஆகின்றான். உரியதைச் செய்து உய்தி காணுக.

---

395 எண்ணுகின்றார் இன்பமுற எண்ணி அதற்குரித்தாம்
புண்ணியம்ஒன் றேனும் புரிகிலார் —பண்ணுவதோ
துன்பமுறு பாவத் தொழிலே இவர்என்றோ
இன்பம் அடைவ தினி. (ரு)

இ—ள்

எல்லாரும் இன்பம் அடைய வேண்டும் என்றே எண்ணுகின்றார்; ஆனால் அதற்கு உரிய புண்ணியங்களைச் செய்யாமல் பாவங்களையே செய்து பாழாகின்றார் என்றவாறு.

இது கருதியதை எய்தும் உறுதி காட்டுகின்றது.

சீவர்களுடைய ஆசைகளும் செயல் இயல்களும் விபரீதமானவை. மாறுபாடுகள் மண்டி மயல் மிகுந்துள்ளன.

தங்களுடைய வாழ்வில் உயர்ந்த போக நலங்களை அனுபவிக்கவே யாவரும் யாண்டும் ஆவலுறுகின்றனர். அங்ஙனம் உற்றும் எங்கும் பிழைபாடுகளே பெற்றுப் பேதுற்று உழலுகின்றனர்.

இன்பத்தை எல்லாரும் அவாவி நிற்கின்றனர்.

துன்பத்தை என்றும் அஞ்சி வெறுக்கின்றனர்.

இந்த விழைவும் வெறுப்பும் அந்தநிலைகளின் நிலைமைகளையும் உயிர்களின் இயல்புகளையும் ஒருங்கே உணர்த்தியுள்ளன.

நுகர்ச்சியில் மகிழ்ச்சியான அனுகூல சம்பந்தங்கள் இன்பம் என வந்தன. மாறுபாடான பிரதிகூல நிலைகள் துன்பம் என நேர்ந்தன. சுக துக்கங்கள் நிலையற்ற நிலையின.

இனிய உறவுகள் எனத் தனி உரிமை எய்தியுள்ள மனைவி மக்களும் அனுகூலமின்றி மாறுபடின் அவரும் இன்னாத நிலையினராய் வெறுக்கப் படுகின்றனர். வெறுப்பின் குறிக்கோள்கள் குறிப்புடன் கூர்ந்து நோக்கி ஓர்ந்து உணரத் தக்கன.

மனிதனுடைய விருப்பும் வெறுப்பும் அவன் அடைகின்ற சுக துக்கங்களின் வகை தொகைகளைத் தோய்ந்து நிற்கின்றன.

எவ்வளவு சிறந்த பொருளாயினும் தனக்கு இடையூறு புரியின் அதனை எந்த மனிதனும் விரும்பான்; வெறுத்தே தள்ளுவான்.

"பொன்னான் இயன்றதெனினும் புனைவிலங்கை
உன்னான் இனியதென." (அரும்பொருளமுதம்)

மனிதன் எவ்வழியும் இன்பமே கண்ணுக் கருதியுள்ளமையை இது காட்டியுள்ளது. சீவ சுபாவங்கள் இவ்வாறிருந்தும் கருதியதற்கு மாறுபாடான பாவ காரியங்களிலேஆவலுற்று வருகின்றன.

இன்பம் புண்ணியத்தால் வருகின்றது
துன்பம் பாவத்தால் உறுகின்றது.

எவ்வுயிர்க்கும் இதமாய் யாண்டும் நல்ல வினைகளைச் செய்தல் புண்ணியம் ஆகின்றது. தன்னையுடையானுக்கு என்றும் அது இன்ப நலங்களை விளைத்தருளுகின்றது.

"புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்கம்
என்னும் ஈது அருமறைப் பொருளே."

"புண்ணியம் பயக்கின்றுழி அரியது எப்பொருளே?"
(இராமாயணம்)

சுவர்க்க போகங்கள் முதலிய யாவும் புண்ணியத்தால்மேவும்; அதனையுடையவன் அடையாத பாக்கியங்கள் யாதும் இல்லை; அதிசயமான இன்ப நலங்களும் அரிய மகிமைகளும் அவன்பால் எளிதே வந்து சேருகின்றன என்பதை இவற்றால் அறிந்து கொள்கின்றோம். தரும விளைவுகள் அருமை நிலைகளாகின்றன.

"திருந்திய நல்லறச் செம்பொற் கற்பகம்
பொருந்திய பொருளொடு போகம் பூத்தலால்
வருந்தியும் அறத்திறம் மறத்தல் ஓம்புமின்" (சிந்தாமணி)

புண்ணியம் உலர்ந்தபின் பொருள் இலார்களைக்
கண்ணிலர் துறந்திடும் கணிகை மார்கள் போல்
எண்ணிலள் இகந்திடும் யாவர் தம்மையும்
நண்ணிய நண்பிலள் நங்கை வண்ணமே. (சூளாமணி)

இவை இங்கே சிந்திக்கத் தக்கன. புண்ணியத்தின் அளவே திருமகளின் அருளும், பொருளும் போகங்களும் உயிர்களுக்கு அமையும் என்றதனால் இதன் மகிமை புலனும்.

இன்பங்களுக்கு மூலகாரணம் புண்ணியம்; அதனைச் செய்தவன் புண்ணியவானாய்ப் போக போக்கியங்களை எய்தி மகிழ்கின்றான்; செய்யாதவன் பாவியாய் வெய்ய துயரங்களில் உழலுகின்றான். கருமபலன்களை உயிர்கள் மருமமாய் மருவிவருகின்றன.

எண்ணுவது இன்பம்; பண்ணுவது பாவம்.

என்றது மனிதனது பரிதாப நிலைமை அறிய வந்தது.

பாலைப் பருக விரும்புகின்றான்; பசுவைக் கொலை புரிகின்றான்.

துன்பங்கள் விளைகின்ற பாவ வித்துக்களை விதைத்துக் கொண்டு இன்பங்களை அடைய விரும்புதல் இழி மடமையாம்

நீ இன்ப நலங்களை விரும்புகின்றாய்; அவை புண்ணியத்தில் உள்ளன; அதனை விழைந்து செய்; யாவும் எளிதே விளைந்து வரும்.

---

396. மனமொழிமெய் யாண்டுமே மாண்புடைய வாகிப்
புனித நினைவுசெயல் பூண்டு—இனியவே
என்றும் எவர்க்கும் இதம்புரியின் நல்வினையாய்
ஒன்றும் உயிருக் குயர்வு. (சு)

இ—ள்

மனம் மொழி மெய் என்னும் மூன்று காரணங்களும் இனியனவாய்ப் புனித நிலையில் நிகழுமாயின் புண்ணியம் சுரந்து உயிர் உயர் நலனை அடையும் என்றவாறு.

மனிதனுடைய உணர்ச்சிகள் மூன்று காரணங்களால் வெளிப்படுகின்றன. வெளியீடுகள் அயலே பரவி அவை பயன்படும் வகையில் நயன் படுகின்றன. தன்மை அளவு நன்மை உளது.

மனத்துக்கு மாண்பு ஆவது எவ் வழியும் மாசு படியாதிருத்தல். இளிவான நினைவுகள் தோயாதிருக்கும் அளவே மனம் ஒளியும் உயர்வும் பெற்றுத் தெளிவடைந்து நிற்கின்றது.

யாண்டுமே என்றது எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்வகையினும் யாதும் பழுது படாமல் விழுமிய நிலையில் உள்ளம் செழுமியிருக்க வேண்டும் என்பதை விளக்கி நின்றது.

எண்ணமும் செயல்களும் யாண்டும் பரிசுத்த நிலையில் தோய்ந்திருக்குமாயின் அம் மனித வாழ்வு தவ மகிமையுடையதாய் மிக வுயர்ந்து ஒளி பெறுகின்றது.

தவம் தருமம் என்பன எல்லாம் ஆன்ம ஊதியங்களான மேன்மை நிலைகள். சீவ கோடிகளுக்கு இத வுரிமைகளாய் மருவி வருவன புண்ணியங்கள் எனப் பொலிந்து திகழ்கின்றன.

என்றும் எவர்க்கும் இதம் புரியின் நல்வினை.

எஞ்ஞான்றும் எவ்வுயிர்க்கும் இத நலங்களை ஒருவன் செய்து வருவானாயின் அவன் புண்ணிய சீலன் ஆகின்றான். ஆகவே எண்ணிய இன்ப நலங்கள் யாவும் இயல்பாகவே அவனிடம் எளிது வந்து சேருகின்றன. தருமம் அதிசய நிலைகளை அருளுகின்றது.

உயிருக்கு உயர்வு ஒன்றும்.

என்றது ஆன்ம வுய்தியின் அமைதி உணர வந்தது.

கீழ்மையில் இழிந்து துயரம் அடைவதை எவரும் விரும்புவதில்லை; மேன்மையில் உயர்ந்து சுகம் பெறுவதையே யாவரும் விழைந்து வருகின்றனர் உயர்வும் இன்பமும் தமது செயல் இயல்களிலேயே உறைந்திருத்தலால் அவற்றைப் புனிதமாகப் பேணி வருபவர் பேரின்ப நலனை அடைகின்றனர்.

நல்ல சத்துள்ள உணவுகளால் உடல்கள் வளம் பெற்று வளர்கின்றன; நல்ல உத்தம நினைவுகளால் உயிர்கள் ஒளி பெற்று மிளிர்கின்றன. இனிய உணவால் உடலை ஓம்புதல் போல் புனித நினைவால் உயிரை ஓம்பி வருபவர் புண்ணியசீலர்கள் ஆகின்றனர்.

நெஞ்சத் தூய்மையும், இன் சொல்லும் மனிதனைப் புனிதன் ஆக்கி வருதலால் அவை இருமை நலங்களையும் அருளுகின்ற தரும நீர்மைகளாய்ப் பெருமை பெற்றுள்ளன. இனிய பண்புகளை

மருவியுள்ள அளவுதான் வாழ்வுகள் இன்ப நிலைகளை எய்தி வருகின்றன. பண்பாடுகள் குன்றிய பொழுது புண்பாடுகளாய்த் துன்பங்கள் தொடர்கின்றன.

"மனத்தில்ஓர் தூய்மைஇல்லை; வாயில்ஓர் இன்சொல் இல்லை;
சினத்தினால் செற்றம் நோக்கித் தீவிளி விளிவன்வாளா
புனத்துழாய் மாலையானே! பொன்னிசூழ் திருவரங்கா!
எனக்கினிக் கதிஎன்? சொல்லாய், என்னையாளுடையகோவே"
(திருமாலை, 30)

மனத்தூய்மை இல்லையானால் கதியில்லை என்பதை அதி விநயமாக இது காட்டியுள்ளது. பொறாமை கோபம் குரோதம் முதலிய புன்மைகளை ஒழித்து நன்மையான எண்ணங்களையே நாளும் பழகி வருபவன் நலம் பல காண்கின்றான். இதமான நினைவுகள் இனிய அமுதங்களாய் இன்பம் தருகின்றன. நெஞ்சில் இனிய நீர்மைகளைப் பேணுக; வாயில் நல்ல வார்த்தைகளைப் பேசுக; எல்லா நன்மைகளும் எளிதே உளவாம்.

---

397. உள்ளம் புனிதமாய் ஓர்ந்து நலம்புரியின்
தெள்ளமிர்தம் உண்ட திறம்போல—உள்ளிநின்ற
யாவும் எளிதா யடையும் அளவிலின்பம்
மேவும் விரைந்து விளைந்து. (எ)

இ—ள்

மனம் புனிதமாய் ஒருவன் நல்ல கருமங்களைச் செய்துவரின் அமுதம் பருகியது போல் அவனுடைய குடி வாழ்வு ஆனந்தம் பெருகி வரும் என்பதாம்.

மனிதன் பிறக்கின்றான்; வளர்ந்து வாழ்கின்றான்; முடிவில் இறந்து மறைந்து போகின்றான். இறந்து போவதே பிறந்த பிறவியின் முடிந்த முடிபாய்த் தெளிந்து நிற்கின்றது. இந்த நிலையில் மனித வாழ்க்கை யாண்டும் இயங்கி வருதலை நாளும் நயந்து நோக்கி வியந்து வருகின்றோம்.

சிறிய வாழ்நாளை யுடையதும் விரைவில் கழிந்து போவதும் ஆகிய நிலைமையில் மானிட வாழ்வு மருவியுள்ளது.

மிகவும் குறுகிய இந்தச் சிறு காலத்துள் பிறவியின் பயனைப் பெற்றுக் கொள்கின்றவன் பெரிய பாக்கியவான் ஆகின்றான்.

அறம் பொருள் இன்பம் வீடு என்னும் இந்த நான்கும் மனிதன் அடையத்தக்க செல்வங்களாக மதிக்கப் பட்டுள்ளன. புருடனால் மருவ வுரிய பொருள்கள் ஆதலின் இவை புருடார்த்தம் என நின்றன. அருத்தம் தெளிந்து திருத்தம் பெறுக.

சித்த சுத்தியோடு செய்கின்ற நல்ல கருமங்களிலிருந்து தருமம் விளைகின்றது; அது இம்மையில் பொருள் இன்பங்களைப் பயந்து மறுமையில் பேரின்பத்தையும் அருளுகின்றது.

எல்லாப் பேறுகளுக்கும் உள்ளப் புனிதம் மூல காரணமா யுள்ளது. மனம் முதலிய மூன்று கரணங்களும் புனிதமாய் இயங்கின் அங்கே தனிமகிமைகள் ஓங்குகின்றன தன் கரணங்கள் செம்மை அடைந்த பொழுது அம் மனிதனால் உலகம் நன்மை அடைகின்றது; அவனும் உய்தி பெறுகின்றான்.

மனத்தினும் வாயினும் மெய்யினும் செய்கை
அனைத்தினும் ஆன்றவிந்தார் ஆகி—நினைத்திருந்து
ஒன்றும் பரியலராய் ஓம்புவார் இல் எனின்
சென்று படுமாம் உயிர். (பழமொழி, 359)

திரிகரணங்களும் பரிபாகம் அடையின் அவர் பெரியவராய் உயர்கின்றார்; அங்ஙனம் அடையாவழி உயிர் கடையாய் இழிந்து படும் என இஃது உணர்த்தியுள்ளது.

மனம் பண்புற மனிதன் பெருமாண்புடையனாய் உயர்ந்து உலகம் நலமுற ஒளி புரிகின்றான்.

ஓர்ந்து நலம் புரியின் என்றது உயர்ந்த மனிதப் பிறவியை அடைந்த பயன் எவ்வுயிர்க்கும் அன்பாய் இதம் புரிவதேயாம் என்னும் உண்மையை உணர்ந்து நன்மை செய்தலை

இனிய கரும நலங்கள் தருமமாய் வருதலால் அவை மனிதனைப் புனிதன் ஆக்கிப் புண்ணிய போகங்களை அருளுகின்றன.

யாண்டும் எவர்க்கும் என்றும் ஒருவன் இதமே செய்துவரின் அவன் பெரிய தெய்வத் திருவுடையனாய் அரிய பதவியை அடைகின்றான். தன்னுடைய செயல் இயல்கள் உயர்நலம் உடையனவாயின் அந்த மனிதன் துயர நிலைகள் யாவும் கடந்து உயர்ந்த நிலையை உறுதியாக அடைந்து கொள்கின்றான்.

உயர்வும் உய்தியும் தன்னிடமே மன்னி உள்ளன.

தேள் அமிர்தம் உண்ட திறம் என்றது நல்ல எண்ணங்களை எண்ணி நலமான செயல்களைச் செய்து வருபவன் இனிய அமுதம் உண்டவன் போல் என்றும் நிலையான இன்பம் எய்தி நிற்றலை உணர்த்தி நின்றது. உண்ணுவதும் எண்ணுவதும் உடலுயிர்களை ஓம்பி வருதலால் அவற்றைப் புனிதமாகப் போற்றி வாழுக.

நல்லதையே நினை; நன்மையே செய்; எல்லா நலங்களும் உனக்குத் தனி உரிமைகளாய் இனிமை சுரந்தருளும்.

---

398.கேடுபிறர்க்கெண்ணல் கெடுகுறியாம் கேண்மையுடன்
நாடுமருள் கொண்டெவர்க்கும் நல்லனாய்ப்—பீடுபெற
நிற்றியேல் வானும் நிலனும் நினக்குரித்தாப்
பற்றினாய் பெற்றாய் பயன். (அ)

இ—ள்

பிறர்க்குக் கேடு எண்ணுவது தனக்கே கெடு குறியாம்; அங்ஙனம் எண்ணாமல் யாண்டும் கருணையுடன் யார்க்கும் நலம்புரியின் அவன் வையகமும் வானகமும் கையகமாக் கண்டு கழி பேரின்பம் பெறுவான் என்பதாம்.

இது நல்ல எண்ணங்களைப் பேணுக என்கின்றது.

தான் சுகமாய் வாழ வேண்டும் என்றே எந்த மனிதனும் என்றும் எண்ணி வருகின்றான்; அந்த வாவில் அயல் வேறு நேரின் துயர் ஏறும் ஆதலால் அது நிகழா வகை நடந்து கொள்வதே எவர்க்கும் இதமாம் உள்ளம் கருதுவன உயிரின் அனுபவங்களாய் வருகின்றன. நல்ல கருத்து நலம் பல தருகின்றது; தீயது தீமைகளை விளைத்து விடுகின்றது.

கேடு பிறர்க்கு எண்ணல் கெடு குறி.

என்றது வினையின் விளைவை நினைந்து கொள்ள வந்தது. தீய செயல்களுக்கும் கொடிய மொழிகளுக்கும் கெட்ட எண்ணம் மூல காரணமாயுள்ளது. கேடான நினைவுகள் பல தீமைகளைக் கூடமாக விளைத்து விடுகின்றன. தீய தொத்து நோய்கள் போல் கெட்ட எண்ணங்கள் சமுதாயத்தில் பரவிப் படு துயரங்களை விளைத்தலால் அவை பாவங்கள் என வந்தன.

தன்னுடைய கெட்ட எண்ணம் அயலானுக்குக் கேடு புரிதலால் அது பாதகம் ஆகின்றது; ஆகவே அந்த எண்ணத்தைக் கொண்டவன் பாவியாய்க் கெடுகின்றான்.

தீயைத் தொட்டவனையும் நஞ்சைக் குடித்தவனையும் அவை சுட்டுக் கொல்லும்; அவ் வண்ணமே நெஞ்சில் கெட்ட எண்ணம் கொண்டவனை அது கெடுத்து ஒழிக்கும்.

பிறர்க்குக் கேடு எண்ணுகின்றவன் தனக்கே கொடிய கேட்டைச் செய்து கொள்கின்றான்; இதனை ஒரு சிறிதும் உணராமல் இருப்பது பெரிய மடமையாய்ப் பெரும்பழி ஆகின்றது.

பிறர்க்கின்னா செய்தலின் பேதைமை இல்லை;
பிறர்க்கின்னா தென்று பேரிட்டுத் —தனக்கின்னா
வித்தி விளைத்து வினைவிளைப்பக் காண்டலின்
பித்தும் உளவோ பிற? (அறநெறிச்சாரம்)

பிறர்க்கு இடர் செய்கின்றவன் பித்தனிலும் பித்தன்; பேதையினும் பேதை; என்று இது குறித்திருக்கிறது. அறிவு பாழாய்த் தனக்கே துன்பத்தை விளைத்துக்கொள்ளுகின்றமையால் மூடன் பித்தன் எனக் கேடன் இழிக்கப் பட்டான்.

ஒரு வித்தில் இருந்து பல விளைதல் போல் ஒரு கெட்ட எண்ணத்திலிருந்து பல கேடுகள் விளைந்து வருகின்றன. அவை யனைத்தையும் அவன் அனுபவித்தே தீர வேண்டும்.

தனக்கே அல்லல் என்று உணர்ந்து பொல்லாதஎண்ணத்தை ஒருவன் ஒழித்துவிடின் அப்பொழுதே அவன் நல்லவன் ஆகின்றான்; நலம் பல காண்கின்றான்.

உள்ளத்தில் தயையுடையனாய் எல்லார்க்கும் இதம் கருதி வருபவன் தரும சீலனாய்ப் பெருமை பெற்று வருகின்றான்.

வானும் நிலனும் நினக்கு உரித்தாப் பற்றினாய்

என்றது மறுமையும் இம்மையும் அவனுக்கு உரிமையான உறுதி உணர. மனம் புனிதமாய் நல்ல எண்ணங்களை எண்ணி வரவே புண்ணியங்கள் பொலிந்து வருகின்றன. அவ் வரவுகள் இருமையும் இன்பங்களாய் அப் புண்ணியவானுக்கு உரிமை புரிகின்றன. பண்ணிய பலன்கள் கண் எதிரே எழுகின்றன.

ஒருவன் புண்ணிய மூர்த்தியாய் உயர்ந்து சிறந்த இன்ப நலங்களை அனுபவிப்பதும், பாவியாய் இழிந்து படு துயரங்களை அடைவதும் அவனுடைய எண்ணங்களாலேயாம்.

இவ் வுண்மையை உணர்ந்து ஒழுகுபவன் நன்மை அடைகின்றான். என்றும் சுகமாயிருக்க விரும்புகின்றவன் யாண்டும் எப்பக்கமும் துக்கத் தொடர்புகளைத் தீண்டலாகாது.

நல்ல எண்ணங்களை நாளும் பழகி வருபவன் எல்லா இன்ப நலங்களையும் எளிதே எய்தி இருமையும் இன்பம் உறுகின்றான்.

---

399. சொல்லும் செயலும் துகளிலவாய்த் தொல்லுயிர்பால்
ஒல்லும் வகையில் உதவினால்—நல்லவெலாம்
நின்பால் நயந்து நிறையுமே நீயன்றி
இன்பார் பெறுவார் இவண். (கூ)

இ—ள்

சொல்லும் செயலும் பழுது இல்லாதபடி இயன்றவரையும் எல்லா உயிர்க்கும் நீ இதம் புரிந்து வரின் அரிய இன்ப நலங்கள் யாவும் உன்பால் வந்து குவியும் என்க.

மனித வாழ்வு எவ் வழியும் இனிமை சுரந்து வரின் அது புனித நிலையமாய்ப் பொலிந்து விளங்கும். அதனால் திவ்விய மகிமைகள் உளவாம்; அவ் வழியில் வாழ்வதே வாழ்வாம் என இது அறிவுறுத்துகின்றது.

துகள் என்னும்சொல் குற்றத்தைக் குறித்து வரும். தன்னைப் பற்றினவனை இழிந்தவன் ஆக்கி எவரும் தூசி போல் இகழ்ந்து நோக்கும்படி செய்து விடுதலால் குற்றம் துகள் என வந்தது.

சொல்லும் செயலும் துகள் இலவாய்.

என்றது பேச்சிலும் நடத்தையிலும் பிழைபாடுகள் நுழையாமல் எவ் வழியும் புனிதனாய் ஒழுக வேண்டும் என்றவாறு.

பொய், கோள், புறங்கூறல் முதலியன சொல்லின் குற்றங்கள்.

பிராணிகளை வருத்துதல், பிறர் பொருள்களைக் கவர்தல், யாசகம் வாங்குதல், அயல் மனைவியரைத்தீண்டுதல், அழிகேடுகள் ஆற்றுதல் முதலியன செயலின் குற்றங்கள்.

001076

**இந்த மாசுகள் படின் அம் மனித வாழ்வு நீசம் அடையும்.**

*தீய மொழிசெயல்கள் தீவினைக ளாய்உயிரை*
*மாய வருத்தி மரபழிக்கும்—ஆயபிழை*
*சேராமல் காக்கும் திருவுடையான் என்ஞான்றும்*
*பேராத இன்பம் பெறும்.*

தன்னுடைய சொல்லையும் செயலையும் பழுது படுத்தினவன் தன் உயிரைப் பாழ் படுத்தினவனுகின்றான்; அவற்றைப் புனித மாகப் பேணி வருபவன் பெரிய மகிமைகளை அடைகின்றான்.

தான் பேசுகின்ற பேச்சுகளும், செய்கின்ற செயல்களும் மாசு மறுக்கள் மருவாமல் யோசனையுடன் ஓம்பி வர வேண்டும்; அவ்வாறு வரின் அவ்வாழ்வு தேசு மிக வுடையதாய் அவன் ஈசன் அருளை எய்துகின்றான். புனிதம் புக மனிதன் உயர்கின்றான்.

தன்பால் நிகழ்வன பிற வுயிர்களுக்கு யாதும் இடர் இன்றி எவ் வகையும் இத நலங்களாய் இயைந்து வரின் அவை இன்ப நிலையங்களாய்ப் பெருகி இருமையும் அருளுகின்றன.

நிலத்தைப் பண்படுத்தி உழுது உரம் பரப்பிப் பருவம் அறிந்து பயிர் செயின் விளைவு அதிகமாம்; மனிதன் மனத்தைப் பண்படுத்தி அன்புநலம் தோய்ந்து ஆருயிர்க்கு இதம் புரிந்து வரின் அரிய இன்ப நலங்கள் பெரிதாய் விளைந்து வரும்.

தன்னுடைய எண்ணமும் செயல்களும் எவ்வழியும் இனியனவாகவே நிலவி வர ஒருவன் ஒழுகிவரின் அவன் புனிதன் ஆகின்றான்; ஆகவே புண்ணிய போகங்கள் யாவும் அவனுக்குத் தனியுரிமைகளாய் இனிமை புரிந்தருளுகின்றன.

தன் கையே தனக்குத் துணை என்பது பழமொழி. பல உண்மைகளை இஃது உணர்த்தியுள்ளது. மனித வாழ்க்கையின் மருமங்களைச் சிறிய வாக்கியங்கள் தெளிவாக்கி ஒளி மணிகள் போல் உலக மொழிகளில் சிதறிக் கிடக்கின்றன.

தான் செய்கின்ற இனிய கருமங்களே புனித தருமங்களாய மனிதனுக்குப் போகங்களை யருள்கின்றன. தன்னை உயர்த்தி உய்தி நலம் அருளுவது தான் செய்த வினையே ஆதலால் அதுவே அவனுக்கு இனிய உறுதித் துணையாம்:

செய்வினை அல்லால் சிறந்தார் பிறிதில்லை;
பொய்வினை மற்றைப் பொருள்எல்லாம்—மெய்வினவில்
தாயார்? மனைவியார்? தந்தையார்? மக்களார்?
நீயார்? நினைவாழி நெஞ்சே! (அறநெறிச்சாரம்)

நெஞ்சை நோக்கி அறிவு கூறி யுள்ள இது நாளும் நினைவு கூர வுரியது. பிறர் எவரும் உனக்கு உதவி செய்ய முடியாது; உயர்வான உறுதி நலங்கள் உன்னிடமே இயல்பாக அமைந்திருக்கின்றன. நல்ல கருமங்களைச் செய்துவரின் எல்லா இன்ப நலங்களும் உளவாகின்றன. செய்வினை உய்வினை அருளுகின்றது.

---

400. ஆதி முதல்வன் அருள்நிலையை ஆராய்ந்து
நீதி முறையின் நெறியோர்ந்து—மோதும்
புலனடல் கண்டு புனிதமுடன் நின்று
நலனுணர்ந்து கோடல் நலம். (ம)

இ—ள்

இறைவனுடைய கருணை நிலையைக் கருதி உணர்ந்து, நீதி முறைகளைத் தெளிந்து, பொறி புலன்களின் தீதுகளை ஒழிந்து நெறி வழுவாது நின்றால் நிலையான இன்ப நலங்கள் நேரே பெருகி விளையும் என்பதாம்.

மனிதப் பிறவி அரியது ஆயினும், சிறிய அறிவும் சில வாழ் நாளும் பல அலமரல்களும் உடையதாய் மருவியுள்ளது. இந் நிலையிலிருந்து நிலையான இன்ப நிலையை அடைய வேண்டியவனாய் மனிதன் அமைந்து நிற்கின்றான்.

வழி தெரிந்து விழி திறந்து நடப்பவன் கருதிய இடத்தை இனிது அடைகின்றான்; அது போல் விதி முறை தெளிந்து ஒழுகுபவன் கதி நிலையை எளிதே காண்கின்றான். பேரின்ப வீட்டைக் காண வழிகள் பல உள்ளன. சரியை கிரியை யோகம் ஞானம் என்பன அந்த நெறியின் வகைகள் ஆகும். எத்தனையோ வழிகள் இருந்தாலும் அத்தனையும் சித்த சுத்தியாளன் எதிரே தெளிவாய் நிற்கின்றன.

நியமம் ஆன ஒழுக்க முறையால் நெஞ்சம் தூய்மை ஆகின்றது. தெளிவான நல்ல கண்ணாடியில் உருவங்கள் தோன்றுதல் போல் தூய உள்ளத்தில் உறுதியுண்மைகள் இனிது தெரிகின்றன.

தெரியவே அது தெய்வக் காட்சியாய்த் தேசு மிகுந்து உய்வைத் தருகின்றது. உள்ளம் புனிதமுற எல்லாம் இனிமையுறுகின்றன.

ஆதி முதல்வன் என்றது கடவுளை. கால தேச நிகழ்வுகள் யாவும் கடந்து என்றும் தனி முதல் தலைவனாய் நிலவியுள்ள பரம் பொருளின் திருவருளை உரிமையாக அடைந்து கொள்வதே பிறந்த சீவனுடைய உயர்ந்த பேறும்.

கடவுள் தரும உருவினர்; கருணை நிலையினர்; இந்தக் குண நீர்மைகளை மனிதன் எவ்வளவுக்கு எவ்வளவு மருவுகின்றானோ அவ்வளவுக்கு அவ்வளவு அவன் தெய்வமாய்ச் சிறந்து திகழ்கின்றான். பண்புகள் படிய இன்பங்கள் படிகின்றன.

தயையுடையவனது செயல் இயல்கள் என்றும் இதமாய் யாண்டும் இனிமை சுரந்து வருதலால் எவ் வுயிர்களும் அவனைத் தாய்ஆகவும் தெய்வம்ஆகவும் கருதி வாயார வாழ்த்தி வருகின்றன.

தன் உள்ளத்தில் அருள் நலம் தோய்ந்தவுடனே உலகத்தில் அவன் பரம் பொருள் இனமாய் மதிக்கப் படுகின்றான். கருணையுடையவனைக் கருணைக் கடலாகிய கடவுள் தனது இன உரிமையாத் தழுவிக் கொள்ளுதலால் அவனுடைய மகிமை அளவிடலரியதாய் ஒளி மிகப் பெறுகின்றது.

எவ்வுயிரும் பொதுஎனக் கண்டு இரங்கியுப
கரிக்கின்றார் யாவர்? அந்தச்
செவ்வியர்தம் செயல் அனைத்தும் திருவருளின்
செயல் எனவே தெரிந்தேன் இங்கே
கவ்வையிலாத் திருநெறியத் திருவாளர்
தமக்கு ஏவல் களிப்பால் செய்ய
ஒவ்வியதுஎன் கருத்தவர்சீர் ஓதிடஎன்
வாய் மிகவும் ஊர்வதாலோ. (1)

கருணை ஒன்றே வடிவாகி எவ்வுயிரும்
தமதுயிர் போல் கண்டு ஞானத்
தெருள் நெறியில் சுத்தசிவ சன்மார்க்கப்
பெருநீதி செலுத்தா நின்ற
பொருள் நெறிசற் குணசாந்த புண்ணியர்தம்
திருவாயால புகன்ற வார்த்தை
அருள்நெறி வேதாகமத்தின் அடிமுடி சொல்
வார்த்தைகள் என்று அறைவராலோ, (திரு அருட்பா)

எவ்வுயிரையும் தம் உயிர்போல் எண்ணிப் பேணுகின்ற தண்ணளியாளரே புண்ணிய சீலர்; அவர் தெய்வ நீர்மையர்; அவருடைய வார்த்தைகள் வேத வாக்கியங்களாய் விளங்கி வருகின்றன என இவை விளக்கியுள்ளன.

சீவ தயை தேவ கதி ஆகின்றது. எவ்வுயிர்க்கும் எவ்வழியும் இதமே காணலால் கருணையாளன் நித்திய இன்பத்தைக் காண்கின்றான். தண்ணளி விண்ணமுதாய் விளைந்து வருகின்றது.

புலன் அடல் கண்டு என்றது விடய இச்சைகளின் கொடுமையை உணர்ந்து உறுதி தெளிந்து ஒழுகுதலை.

தேக போகங்களையே நாடி மோகமுடன் திரியின் முடிவில் அதனால் நாசமே உண்டாம்; பொய்யான மையல் வெறியில் இழிந்து உழல்பவர் மெய்யான தெய்வ நெறியை இழந்து போகின்றார் ஆதலால் வெய்ய துயரங்களையே அடைந்து நோகின்றார்.

நியமம் உடையவன் நெறி முறையே சென்று நிலையான இன்ப நிலையை அடைகின்றான்; நியமம் தவறினவன் அவநிலையில் ஓடி அவல நிலையில் வீழ்கின்றான்.

புலன்களை அடக்கி ஒழுகிய அளவு மனிதன் புனிதனாய் நலன்களைக் காண்கின்றான். நியமமின்றி மனம் போனபடியே திரிகின்றவன் மிருகமாய் இழிந்து ஒரு நலனும் காணாமல் பருவரலே கண்டு படுதுயர் அடைந்து பதைத்து ஒழிகின்றான்.

நல்ல அறிவுடைய மனிதனாய் வந்தும் உயர்ந்த குறிக்கோளான நியமம் இல்லாமையால் இழிந்த விலங்காய்க் கழிந்து போக நேர்ந்தான். நிலைமையை நினைந்து நோக்கின் நியமத்தின் நன்மையும் தன்மையும் நன்கு தெளிவாம்.

சீவனுக்கு உரிய துணையாய் அரிய புணையாய் இனிய சஞ்சீவியாய் நியமம் அமைந்துள்ளமையால் அதனைக் கைக்கொண்டவர் நியம சீலராய் உயர்ந்து நிலையான கதியை அடைகின்றனர்.

நியமம் உடையவர் எப்படி இருப்பார்?

பொய் பேசார்; புறங் கூறார்; யார்க்கும் இடர் செய்யார்; எவ்வுயிர்க்கும் இரங்கி அருளுவார்; எல்லாரையும் தம் உயிர் போல் எண்ணுவார்; பொல்லாதவர்க்கும் நல்லதே போதிப்பார்;

பெரியோர்களைப் புகழ்ந்து போற்றுவார்; பகைமை வெறுப்பு முதலிய சிறுமைகளை நெஞ்சில் கொள்ளார்; தெய்வசிந்தனையுடன் மேலான எண்ணங்களையே யாண்டும் மேவி யிருப்பார் என்க.

உறுவர்ப்பேணல்; உவர்ப்பின்மை; உலையா இன்பம் தலைநிற்றல்;
அறிவர்சிறப்பிற்கு எதிர்விரும்பல்; அழிந்தோர் நிறுத்தல்; அறம்பகர்தல்;
சிறியார் இனத்துச்சேர்வின்மை; சினம் கைவிடுதல்; செருக்குஅவித்தல்;
இறைவன் அறத்து ளார்க்கெல்லாம் இனியர் ஆதல்; இது தெளிவே.

(சிந்தாமணி 2816)

தெளிவான நியம நெறிகளைக் குறித்து வந்துள்ள இது இங்கே கூர்ந்து சிந்திக்கத் தக்கது. உறுவர்=மேலோர். அழிந்தோர் நிறுத்தல்=தளர்ந்து தாழ்ந்தவரை ஆதரித்து உயர்த்துதல். இதில் குறித்துள்ள பத்து குண நலங்களையும் உய்த்துணர்ந்து ஒழுகுபவர் உத்தம நிலையராய் ஒளி பெறுகின்றனர்.

நலன் உணர்ந்து கோடல் நலம்.

என்றது உயிர்க்கு உறுதியான நன்மையைத் தெளிந்து தன்மையில் உயர்தல் எம்மையும் இதமாம் என்பது உணர வந்தது.

இந்த மனித உடம்பு அதிசய அமைதிகளை யுடையது. இதில் குடிபுகுந்துள்ள ஆன்மா பரமான்வின் உறவினம். மனிதன் பாவ வழிகளில் புகுந்தால் உயிர் பழுதாய் ஒளி மழுங்கும்; அவ்வாறு யின் எவ்வழியும் வெவ்விய துயரங்களை அனுபவிக்க நேரும்; அங்ஙனம் நேராதபடி புண்ணிய எண்ணங்களைப் பேணிப் புனித நிலையில் ஒழுகி இனிய பேரின்ப நலனை அடைவதே மனித சன்மத்தின் மாண் பயன் ஆகும். பிறந்த பயனை விரைந்து பெறுக

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

நியமம் என்பது நெறிமுறை ஒழுகல்.
அகம் தூய்மை அரிய மகிமையாம்.
புனித நினைவு புண்ணிய விளைவு.
இனிய செயல் இன்பம் அருளும்.
புண்ணிய கருமம் எண்ணியன தரும்.
உயிரின ஒளியாய் உய்தி புரியும்.
என்றும் நிலையாய் இனிமை நல்கும்.
வானும் நிலனும் வரும்படி செய்யும்.
இன்ப நலங்கள் யாவும் ஈயும்.
தெய்வ நிலையமாய்த் தேசு விளைக்கும்.

சா௰-வது நியமம் முற்றிற்று.

001081

# நாற்பத்தோராம் அதிகாரம்.

## அமைதி.

அஃதாவது சித்த சாந்தி. கொடிய ஆசை அவலங்களில் வீழ்ந்து அலமந்து உழலாமல் இனிய அமைதியுடன் புனித வாழ்வு புரிகின்ற முறைமையைக் கூறுகின்றமையான் நியமத்தின் பின் இயமநிலை கருதி உரிமை நயம் உணர இது வைக்கப்பட்டது.

401. அறிவாழும் ஆயின் அமைதி பெருகி
நெறிவாழ் வினிது நிலவும்—பொறிவீழ்வு
நீளா தடங்கின் நிலையான பேரின்பம்
கேளாய் அடையும் கிளர்ந்து. (க)

இ—ள்

அறிவும் அமைதியும் பெருகின் நெறிமுறையான வாழ்வு நேரே மருவும்; பொறி நுகர்வில் வெறியராய் வீழாதவர் அரிய பேரின்ப நலனை உரிமையாப் பெறுவர் என்பதாம்.

இது அமைதியின் நிலைமை கூறுகின்றது.

அறிவு சீவ ஒளி; அதனால் யாவும் நடந்து வருகின்றது. எதையும் கண்டு கொள்வது கண் என நின்றது. எல்லாம் அறிந்து கொள்வது அறிவு என வந்தது. கண் உருவமாய்உடலில் உள்ளது; அறிவு அருவமாய் உயிரில் உள்ளது. அந்தக் கரண விருத்திகள் எல்லாம் அறிவின் வயமாய்க் கதித் தெழுகின்றன.

நினைத்தல், சிந்தித்தல், அறிதல், ஆராய்தல், உணர்தல், தெளிதல் என வருவன எல்லாம் அறிவின் தொழில்களேயாம்.

மருவுக்கு வாசனை போல் உயிருக்கு அறிவு மணமும் தேசுமாய் மருவியுள்ளது. சீவ வாழ்வு அதனால் சிறந்து வருதலால் தேவ ஒளியாய் அது மேவி மிளிர்கின்றது.

கண் வழியே வெளியே காணும் காட்சிகளை எல்லாம் கவனித்து நிதானித்து நன்மை தீமைகளை நாடித் தெளிந்து உண்மை உறுதிகளை உள்ளிருந்தே உதவி யருளுகின்றமையால் அறிவு ஆன்ம அமுதமாய் அமைந்திருக்கின்றது.

"Understanding is a wellspring of life unto him that hath it."
(Bible)

"தன்னை யுடையவனுக்கு அறிவு உயிர் ஊற்று யுள்ளது" என்னும் இது இங்கே அறிய வுரியது. பயிர்க்கு நீர் போல் உயிர்க்கு அறிவு ஊற்றமாயுள்ளமையான் அதன் ஏற்றமும் இயல்பும் இனிது புலனும். அறிவு புனிதமாய்ப் பெருகிவரின் மனிதன் தெய்வமாய் ஒளி பெறுகின்றான்; அது மலினமாய் மாறுபடின் மிருகமாய் இழிவுறுகின்றான். இனிய அறிவு ஒருவனுக்கு உரிமையாய் அமையின் அவன் எல்லா நலங்களையும் எளிதே அடைந்து கொள்கின்றான்.

அறிவுடையார் எல்லாம் உடையார்; அறிவிலார்
என்னுடையர் ஏனும் இலர். (குறள், 430)

அறிவின் பெருமையைக் குறித்திருக்கும் இந்த அருமைத் திருக்குறள் நாளும் உரிமையுடன் நினைந்து உணர்ந்து வரத்தக்கது.

புறத்தே எவ்வளவு செல்வங்கள் நிறைந்திருந்தாலும் அகத்தே நல்ல அறிவு இல்லை ஆயின் அவன் யாதும் இல்லாத பேதை வறியனே; வெளியே ஒரு பொருளும் இல்லையாயினும் உள்ளே அறிவு மாத்திரம் உடையனாயின் அவன் எல்லாப் பாக்கியங்களையும் ஒருங்கே அடைந்துள்ள பெரிய திருவாளனே என்றமையால் அறிவினது உண்மை இன்மைகளால் உளவாகும் உயர்வு தாழ்வுகளை நன்கு உணர்ந்து கொள்ளலாம்.

"நுண்ணுணர் வின்மை வறுமை; அஃதுடைமை
பண்ணப் பணைத்த பெருஞ் செல்வம்." (நாலடி, 251)

என்பதும் ஈண்டு எண்ணத் தக்கது.

புகழ் புண்ணியங்களை உளவாக்கி இம்மை மறுமைகளை இனிது உதவி இறுதியில் உறுதியாய் உய்வைத் தருதலால் அறிவு தெய்வத் திரு என வந்தது. இத்தகைய அறிவை உரிமையாகப் பேணி வரின் மனிதன் உயர் கதியை அடைகின்றான்.

அறிவு ஆழும் ஆயின அமைதி பெருகி
நெறிவு வாழ்வு இனிது நிலவும்.

என்றது உண்மையான அறிவிலிருந்து உதயமாவதை இது உணர்த்தி நின்றது. கங்கை போல் உள்ளே ஆழமான நதியில் வெள்ளம் பெருகி வரின் அந்த நீர் ஓட்டம் அமைதியாய்ச் செல்லுகின்றது; அது போல் ஒருவனிடம் அறிவு பெருகி நிறையின் அங்கே அமைதியான இனிய சாந்தம் உண்டாகின்றது.

நல்ல அறிவு எவ்வழியும் உயிர்க்கு உறுதி புரிவது ஆதலால் அது அடக்கம் அமைதி முதலிய பண்பாடுகள் அமைந்து எங்கும் இனிமையாயுள்ளது. உயர்ந்த அறிவுக்கு அடையாளம் உள்ளம் கனிந்த சாந்தியே.

நிலைமதியில் நின்று நிலவும் நிலாவின்
கலைமதியில் சாந்தம் கனியும்—தலைமதி
சீவ ஒளியாய்த் திகழ்ந்து தெளிவின்பம்
யாவும் அருளும் அமைந்து.

ஓதி உணர்ந்த உயர்ந்த அறிவு சீதள சந்திரன் போல் இனிய சோதி வீசி அமைதியாயிருக்கும் என்றமையால் அதன் நிலைமையும் தலைமையும் நீர்மையும் நினைந்து கொள்ளலாம்.

அடங்கிய நீர்மை சிறந்த அறிவாய்ச் சீர் பெறுகின்றது; அடங்காமை சிற்றறிவாய்ச் சிறுமையுறுகின்றது.

கற்றறிந்த நாவினார் சொல்லார்தம் சோர்வஞ்சி
மற்றைய ராவார் பகர்வர்; பனையின் மேல்
வற்றிய ஓலை கலகலக்கும் எஞ்ஞான்றும்
பச்சோலைக் கில்லை ஒலி. (நாலடியார், 256)

சிற்றுணர்வோர் என்றும் சிலுசிலுப்பர்; ஆன்றமைந்த
முற்றுணர்வோர் ஒன்றும் மொழியாரே—வெற்றிபெறும்
வெண்கலத்தின் ஓசை மிகுமே விரிபசும்பொன்
ஒண்கலத்தின் உண்டோ ஒலி. (நீதிசாரம், 35)

நல்ல அறிவாளரையும் புல்லியரையும் இவை விளக்கியிருக்கின்றன. சுட்டியுள்ள உவமைகளால் பொருள்களை உய்த்துணர்ந்து கொள்க. உள்ளே ஈரமுள்ள பசிய ஓலையும், பசும் பொன்னும் அறிஞர்க்கு ஒப்பாயின. அமைதியாளர் தங்கமாய் உயர்கின்றனர்; அமைதி யில்லாதவர் வெண்கலமா யிழிகின்றனர்.

நல்ல அறிவாளர் நாவடக்கி யிருப்பர் எனக் கலாவினோதமாய்க் கம்பர் சொல்லியுள்ள இன்பக் கவி ஒன்று இங்கே காண வுரியது.

கல்வியில் திகழ்கணக் காயர் கம்பலைப்
பல்விதச் சிறுர்எனப் பகர்வ பல்லரி
செல்லிடத்து அல்லது ஒன்று உரைத்தல் செய்கலா
நல்லறி வாளரின் அவிந்த நாவெலாம்.

(இராமா, கார்கால, 114)

மழைக் காலத்தில் தவளைகள் அதிகமாக் கத்தும; குளிர் காலத்தில் அவை ஒலி அடங்கியிருக்கும்; அந்தப் பருவநிலைமையைக் குறித்து வந்த பாசுரம் இது. பள்ளிக்கூடத்தில் படிக்கும் சிறு பிள்ளைகளைப் போலப் பல படியாக் கத்திக் கொண்டிருந்த தவளைகள் கார் காலம் நீங்கியவுடன் சிறந்த அறிவாளிகளைப் போல் நாவடங்கி யிருந்தன என இங்ஙனம் நயமாக உரைத்திருக்கிறார். கணக்காயர் = உபாத்தியாயர் அரி = தவளை. பருவ உருவங்களில் பல வகைப்பட்ட பள்ளிச் சிறுவர்களைப் போல் பல திறப்பட்ட தவளைகள் உள்ளமையால் பல் அரி என்றார். பருவ காலங்களில் சல சரங்களின் நிலைமையைச் சொல்ல வந்தவர் உலக மக்களுக்கு இப்படி ஒரு உணர்வு நலனை உதவியிருக்கிறார். அடக்கமின்றித் துடுக்காய் வாய்க்கு வந்தபடி பேசுவது அறிவு குன்றிய சிறுவர் இயல்பாம்; நாவடங்கி யிருப்பது நல்ல அறிவுடைய மேலோர் பண்பாம்.

"மோனம் எனபது ஞான வரம்பு" (ஔவையார்)

என்றமையால் பரிபூரணமான உணர்வின் விளைவு மவுனம் என்பது உணரலாகும்.

மவுனம் மலையைத் தாங்கும் என்னும் பழமொழி அரிய பொருளுடையது. மனம் அடங்கிய அமைதி பரமன் அருளை மருவுகின்றமையால் அந்த மவுனிகள் அற்புத நிலையினராய் அதிசய நலங்களை அடைகின்றனர்.

மனத்தாலும் வாக்காலும் மன்னஒண் ணு மோன
இனத்தாரே நல்ல இனத்தார்—கனத்தபுகழ்
கொண்டவரும் அன்னவரே கூறரிய முத்திநெறி
கண்டவரும் அன்னவரே காண், (தாயுமானவர்)

என்னும் இது இங்கே காணத் தக்கது.

உள்ளம் தெளிந்து சாந்தமாய் அடங்கி யிருப்பவனை ஞான உலகம் நயந்து வியந்து புகழ்ந்து மகிழ்ந்து போற்றுகின்றது.

"சாந்தமு லேக சவுக்யமு லேது" எனத் தியாகய்யர் கூறியது அவரது அனுபவ நிலையை வெளியிட்டுள்ளது. ஆன்ம அமைதியில் ஆனந்தம் பொங்கியுள்ளது; அதனை ஞான யோகிகள் அனுபவித்து வருகின்றனர்.

நிலையான பேரின்பம் கேளாய் அடையும்.

என்றது சாந்த குண சீலருக்கு உளவாகின்ற ஆனந்த நிலையை உணர்த்தியது. அமைதியால் ஆன்ம பரிபாகம் உண்டாகின்றது. ஆகவே எல்லா மேன்மைகளும் தாமாகவே எதிர் வருகின்றன. இனிய அமைதி அரிய சிவ அமுதமாகிறது.

விடய இச்சைகளில் வெறிகொண்டு திரிதலும், படபடப்பும், துடிப்பும் துடுக்கும் மனம் அடக்கமில்லாத மடத்தனங்களாம்; தம்மை யுடையவரை அறிவில்லாத சின்ன மனிதர் என அவை தெரியப் படுத்துகின்றன. அப் புன்மை புகாதவர் புனிதராய் உயர்கின்றனர். இயல்பு இனிமையாக உயர்வு ஒளிர்கின்றது.

இயன்றவரையும் சொற்களைச் சுருக்கு; பேச நேர்ந்தால் பயனுடைய வார்த்தைகளையே பேசு; யாண்டும் நயனுடையனாய் அடங்கியிரு. இந்த அமைதியில் அதிசயநலங்கள் அடங்கியுள்ளன.

---

402. உள்ளம் அடங்கின் உலகமவன் பாலடங்கும்
கள்ளம் அடங்கிக் கதியடங்கும்—வெள்ளமென
இன்ப நலங்கள் இனிது பெருகுமவன்
இன்ப வுலகம் இவண். (உ)

இ—ள்

மனம் அடங்கிய சாந்த சீலனிடம் உலகம் அடங்கி நிற்கும்; கள்ளம் கவடுகள் எல்லாம் ஒழிந்து நல்ல கதி விளங்கும்; இன்ப நலங்கள் யாவும் அவனிடம் எளிது வந்து பெருகும்; அவன் ஒரு இன்ப உலகமாய் இங்கு இனிது திகழுவான் என்பதாம்.

அமைதியின் இயல்பை முன்னம் அறிந்தோம்; அதனுடைய பயனையும் வியன் விளைவுகளையும் இதில் அறிய வந்துள்ளோம்.

விடய நுகர்வுகளையே நாடி வெளி முகமாய் ஓடி எவ்வழியும் களி மிகுந்திருப்பதே மனித இயல்பாய் மருவியுள்ளது. உள் முகமாய்த் தன்னை நோக்கிக் காண்பது மிகவும் அருமையாகின்றது. அந்த அரிய காட்சி அமையின் அவன் பெரிய முனிவனாய்ப் பெரு மகிமை அடைகின்றான்.

"செயற்கரிய செய்வார் பெரியர்." (குறள், 26)

மனித இனத்துள் மேலான மகிமையாளரை இது சாதுரியமாய்க் குறித்துள்ளது. இங்கே பெரியர் என்றது யாரை? அரிய செயல் யாது? மனத்தை அடக்கி அகமுகமாய்த் திரும்பி ஆன்ம தரிசனம் செய்வதே அரிய செயல் என்க. சிந்தையை அடக்கி அமைதியுறுவது பெரிதும் அரிது ஆதலால் அது செயற்கு அரியது என வந்தது.

"கந்துக மதக்கரியை வசமா நடத்தலாம்,
கரடி வெம் புலி வாயையும்
கட்டலாம், ஒருசிங்கம் முதுகின்மேற் கொள்ளலாம்,
கட்செவி எடுத்து ஆட்டலாம்,
வெந்தழலின் இரதம்வைத்து ஐந்துலோகத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம்,
வேறொருவர் காணாமல் உலகத்து உலாவலாம்,
விண்ணவரை ஏவல் கொளலாம்,
சந்ததமும் இளமையோடு இருக்கலாம், மற்றொரு
சரீரத்தினும் புகுதலாம்,
சலமேல் நடக்கலாம், கனல்மேல் இருக்கலாம்,
தன்னிகரில் சித்தி பெறலாம்,
சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற
திறம் அரிது" (தாயுமானவர்)

செயற்கு அரிய செயல் என நாயனார் குறிப்பாக் குறித்ததைத் தெளிவாக விளக்க ஒரு அழகான விரிவுரையாய் இது வெளி வந்துள்ளது. பொருள்நிலைகளை ஆய்ந்து கொள்க கட்செவி = பாம்பு.

உலகில் எதையும் செய்து விடலாம்; தன் உள்ளத்தை அடக்குவது மிகவும் அரிது என்றது பெரிதும் கருதி உணர வுரியது.

ஆயின் மிக்கோர் அரிய செயல் எலாம்
நேயம் மிக்க மனத்தை நிறுத்தல்காண்!
வாயு நிற்க மனமும் உடன் நிற்கும்;
தோயம் நிற்குறின் நிற்கும் துரும்புமே. (1)

ஓடும் மாவை நிறுத்துறின் உள்ளுறக்
கோடும்வாய்க் கலினத்திணைக் கொள்ளுவார்;
நீடு மாமனம் நிற்க நிறுத்துறில்
ஓடும் வாயுவை உள்ளுற ஈர்ப்பரால். (2)

அடுத்த நாடிகள் ஆங்கொரு மூன்றினும்
விடுத்து வாங்கியும் மேவ நிறுத்தியும்
தடுத்தும் வாயுவைத் தன்வசம் ஆக்கில்வாய்
மடுத்திடாது மனமும் வசப்படும். (3)

மனம் ஒருத்தன் வசப்படுமேல் அவன்
பின்னை வருத்தும் பிறப்பை அடைந்திடான்;
மனம் ஒருத்தன் வசப்படாது ஓடுமேல்
நனி பிறப்பிடை நாளும் சுழலுமே. (4)

(பிரபுலிங்க லீலை)

மனத்தை அடக்கி ஆளுவது அரிது; அதனை அடக்கினவன் பிறவி நீங்கிப் பெரும்பதம் அடைவான் என்பதை இதனால் அறிந்து கொள்கின்றோம். மனம் அடங்குதற்குரிய சாதன முறைகள் இதில் குறிக்கப் பட்டுள்ளன. குறிப்புகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்க. மூக்கின் வழியே இயங்கி வருகின்ற மூச்சு சிவ ஓட்டமாயுள்ளது. அதில் நாட்டத்தைச் செலுத்தி வரும் அளவு மனத்தின் ஓட்டத்தை நிறுத்தி உய்தி காண்கின்றனர்.

உள்ளம் அடங்கின் உலகம் அவன்பால் அடங்கும்.

ஒரு நிலையின்றி எப்பொழுதும் அலைந்து கொண்டே வருகின்ற மனம் ஒருவனுக்கு வசமாய் அடங்கியிருக்குமாயின் அவனை உலகம் உவந்து தொழ நேர்கின்றது.

உலக மக்கள் எல்லாரையும் தனக்கு அடிமைகள் ஆக்கியாண்டும் தனித் தலைமையில் நீண்டு நிற்கின்ற மனத்தைத் தனக்கு இனிய அடிமையாக்கி ஒழுகுகின்றவன் அரிய அதிசய நிலையினன் ஆதலால் அவனை எவரும் துதி செய்து தொழுகின்றனர். உள்ளம் உரிமையுற உலகம் வழிபடுகின்றது.

தன் மனத்தை அணு அளவு ஒருவன் அடக்கி ஒழுகுவனாயின் அவன் உலகத்தை மலை அளவு அடக்கியாளும் வல்லமையை அடைகின்றான். மனம் சிறிது அடங்கியவுடனே மனிதன் பெரிய மகான் ஆய் அரிய நிலையில் உயர்கின்றான்.

மனத்தின் வழியே இழிந்து போகின்றவன் சிறியவனாய் இகழ்ச்சியை அடைகின்றான்; அங்ஙனம் இழியாமல் அதனைத் தன் வசமாக்கி நிற்பவன் பெரியவனாய் உயர் மதிப்புறுகின்றான்.

மனத்துக் கடியனேல் மாநிலத்துக் கெல்லாம்
கனத்த அடியனுய்க் காணும்—மனத்தினைத்
தன்வசமாக் கண்டுநின்ற தக்கோன் உலகமெலாம்
பின்வசமாக் காண்பன் பெரிது.

உள்ளம் அடங்கிய வழி உளவாம் உயர்வும், அடங்காவழி விளையும் இழிவும் இதனல் அறியலாகும். அடியவனுய் இழிதலும் ஆண்டவனுய் உயர்தலும் அக நிலையில் உள்ளன; புறத்தில் யாண்டும் இல்லை என்பதை ஈண்டு ஓர்ந்து கொள்ள வேண்டும்.

தன் மனம் தனக்கு உரிமையாய் அமையுமாயின் அவன் அளவிடலரிய பெருமைகளை எளிதே பெறுகின்ருன்.

கள்ளம் அடங்கிக் கதி அடங்கும்.

உள்ளம் இனிமையாய் அடங்கியபொழுது கள்ளம் கபடுகள் முதலிய இழி நிலைகள் யாவும் ஒழிந்து போகின்றன; உயர் நலங்கள் எல்லாம் ஒருங்கே விளைந்து வருகின்றன; இந்த அதிசய வரவை அடைவதே பிறந்த பயனைப் பெற்றபடியாம்.

மனம் இனிதாய் வசமாகவே மதி தெளிகின்றது புனிதமான அந்த ஞான ஒளி மோனமாய் ஈசனைக் காண்கின்றது அக்காட்சி பேரின்ப நிலையமாய்ப் பெருகி நிறைகின்றது.

வெளி முகமாய்ப் புலன்களின் வழியே ஓடும் பொழுது பொய்யான உலக மையல்களைக் காண்கின்றது; அக முகமாய் மனம் அடங்கி நின்றபோது மெய்யான தெய்வ இன்பத்தை ஆன்மா அனுபவிக்கின்றது.

"படிப்பு அற்றுக், கேள்வி அற்றுப், பற்று அற்றுச் சிந்தைத் துடிப்பு அற்ருர்க்கு அன்ரே சுகம்." என்றது உண்மையான சுகம் உதயமாகும் இடத்தை உணர்த்தி நின்றது.

கற்றதனல் தொல்லைவினைக் கட்டறுமோ? நல்லகுலம்
பெற்றதனல் போமோ பிறவிநோய்?—உற்றகடல்
நஞ்சுகந்து கொண்டருணை நாதரடித் தாமரையை
நெஞ்சுகந்து கொள்ளா நெறி. (குகை நமசிவாயர்)

எங்கும் சிவமே இரண்டற்று நிற்கில்நெஞ்சே!
தங்கும் சுகநீ சலியாதே—அங்கிங்கென்று
எண்ணுதே பாழில் இறந்து பிறந்துழலப்
பண்ணுதே யானுன் பரம். (1)

ஓராம லேஒருகால் உன்னுமல் உள்ஒளியைப்
பாராமல் உள்ளபடி பார்த்திருந்தால்—வாராதோ
பத்துத் திசையும் பரந்துஎழுந்து ஆனந்தவெள்ளம்
தத்திக் கரைபுரண்டு தான். (தாயுமானவர்)

உள்ளம் புனிதமாய் ஒடுங்கின் பிறவி நீங்கும்; பேரின்ப வெள்ளம் பொங்கி வரும் என மேலே வந்துள்ள அநுபவ மொழிகள் தெளிவுறுத்தியுள்ளன. தெய்வம் தோய்ந்த உரைகள் மெய்யான உறுதி நலங்களை உணர்த்தி உய்வு புரிந்தருள்கின்றன.

கண்ணை மூடி ஒருகணம் ஏனும் நாளும் உள் முகமாய் உன்னை நினை; இனிய நினைவுகளையே பேணி மன அமைதியுடன் மருவி வாழுக. அவ்வாழ்வு ஆனந்த நிலையமாய் அதிசயங்களை அருளும்.

---

403. எய்திய வாழ்வு இனிய அமைதியேல்
தெய்வ நிலையமாய்த் தேசுமிகும்—உய்திநலம்
யாவும் அதன்கண் அமையும் அமைதியுளம்
மேவினே மேவாத தில். (ந)

இ—ள்

தனக்கு அமைந்த வாழ்வு நல்ல அமைதி யுடையதாயின் தெய்வ நிலையமாய் அது சிறந்து விளங்கும்; உய்திகள் யாவும் அதன்கண் உளவாம்; அந்தச் சாந்த வாழ்க்கையை அடைந்தவன் அடையாதன யாதும் இல்லை என்றவாறு.

மனித வாழ்க்கை பலவகைத் தொடர்புகளோடு படர்ந்துள்ளது. எவ்வழியும் இடர்கள் நீங்கி இனிது வாழ்வதையே எவரும் விரும்பி வருகின்றனர்.

மனைவி, மனை, பொருள் முதலியன வாழ்வின் அநுகூல சாதனங்களாய் அமைந்துள்ளன. புறத்தே எவ்வளவு வசதிகள் வாய்த்திருந்தாலும் அகத்தே இனிய அமைதி யில்லையாயின் யாவும் துனிகளாய்த் தோன்றி நிற்கும். யாதும் இலனுயினும் மன அமைதியாளன் எல்லாம் உடையனுய் இன்பமிகப்பெறுகின்ருன்.

சுகம், புறப் பொருள்களில் இல்லை; அகத் திருவாகிய அமைதியில் அமைந்துள்ளது. பண்பு படிந்த மனம் இன்ப நிலையமாகின்றது; அது படியாதது துன்ப இருள் சூழ்ந்து கொடிதாய் இழிகின்றது. மோன இதயம் மூத்தி உதயம் என்க.

பல கோடி பொருள்கள் வெளியே புடை சூழ்ந்திருப்பினும் தன் உள்ளத்தில் நிம்மதி இல்லையானல் அந்த மனிதனுடைய வாழ்க்கை பரிதாபம் ஆகின்றது. ஆகவே மன அமைதியின் மகிமையை உணர்ந்து கொள்கின்றோம்.

எய்திய வாழ்வு இனிய அமைதியேல்
தெய்வ நிலையமாய்த் தேசுமிகும்.

என்றது கையகமாய் வந்த வையக வாழ்வின் வகையைத் தொகையாக உணர்த்தி நின்றது. சுக வாழ்வு புண்ணியத்தால் அமைகின்றது. புண்ணியம் நல்ல எண்ணங்களால் உளவாகின்றது. அந்த எண்ணங்கள் மனத்திலிருந்து விளைகின்றன. தரும விளைவுக்குத் தனி மூலமான மனம் இனிய அமைதியுடையதாயின் எல்லா இன்ப நலங்களும் அங்கே பொங்கி வந்து குவிகின்றன.

கிடைத்ததைக் கொண்டு தன் வாழ்வைச் சாந்தமாக நடத்துகின்றவன் மாந்தருள்ளே தெய்வமாய் இந்த வுலகத்திலேயே சுவர்க்க நிலையைக் காண்கின்றான்.

அதி மேதையான திருவள்ளுவப் பெருந்தகையின் தினசரி வரவு ஒரு பணமே. அது கொண்டு சீர்மை நீர்மைகளோடு தம் வாழ்க்கையை நேர்மையாக அவர் இனிது நடத்தினர். பொருள் வளம் குறைந்திருப்பினும் அவ் வாழ்வு அருள் வளம் நிறைந்து எவ்வழியும் இனிமையும் இதமும் சுரந்து, புனிதமும் புலமையும் பொலிந்து, அருமையும் பெருமையும் அமைந்து, மானமும் ஞானமும் மருவித், தானமும் தவமும் கனிந்து, மதிப்பும் மாண்பும் விளைந்து, அற நலங்கள் மிளிர்ந்து, புகழ் மணங்கள் கமழ்ந்து எங்கும் உயர் நிலையில் ஒளி மிதந்து நின்றது. அவருடைய விழுமிய மொழிகள் மனித சமுதாயத்திற்கு வழி வழியே தெளிவருளி வருகின்றன. உறுதிஉண்மைகளை உலகம் உவந்து கொள்கின்றது.

பெரிய அரச திருவாலும் அடைய முடியாத இனிய வாழ்வை நாயனர் எய்தியிருந்தது அவரது புனிதமான மன அமைதியினலேயாம்.

பெரும் பொருளுடையாராய் மாட மாளிகைகளில் உள்ளவரும் மன அமைதி யின்மையால் அவலக் கவலைகளில் ஆழ்ந்து அல்லல்களில் வீழ்ந்து அலமந்து உழலுகின்றனர்.

இனிய வாழ்வு செல்வத்தில் இல்லை; உள்ளத்தில் உள்ளது என்பதை உலகம் அறிய இவர் உணர்த்தி நிற்கின்றனர்.

போதும் என்ற மனமே பொன் மனம் என்னும் பழமொழி அரிய உண்மையை மருவி அறிவு போதித்துள்ளது.

"செல்வம் என்பது சிந்தையின் நிறைவே
அல்கா நல்குரவு அவாஎனப் படுமே." (குமரகுருபரர்)

என்னும் இது இங்கே நன்கு சிந்தனை செய்யத்தக்கது.

"Poor and content is rich." (Othello, 3-3)

"வறியனுயினும் மன நிறைவுடையவன் பெரிய செல்வனே" என மேல் நாட்டுக் கவிஞரும் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

சித்த சாந்தியுடையவன் தனது வாழ்வை அழகிய பூஞ் சோலைபோல் இனிமை செய்து கொள்கிறான். அந்த மனப் பண்பு இல்லாதவன் கொடிய காடாகத் தன் வாழ்க்கையைக் கடினம் ஆக்கி எவ் வழியும் மிடியனுய் அவலமடைந்து நிற்கின்றான்.

உள்ளத்தில் வீணை நசை மண்டிய பொழுது பசி கொண்ட நாயும் வெறி கொண்ட பேயும் போல் ஆவலாய் மனிதன் அலந்து திரிய நேர்கின்றான்; நேரவே அவன் வாழ்வு கோரமாகின்றது.

"Some have too much, yet still do crave!
I little have, and seek no more.
They are but poor, though much they have;
And I am rich with little store.
They poor, I rich; they beg, I give;
They lack, I leave; they pine, I live."

(Sir Edward Dyer)

"செல்வம் மிகுந்துள்ளவர் மேலும் அவாவித் திரிகின்றார்; எனக்கு ஒன்றும் இல்லை; ஆயினும் நான் எதையும் விரும்பேன; பொருள் நிறைந்திருந்தும் அவர் ஏழைகளே; யாதும் இலனுயினும் நான் செல்வன்; அவர் இழிந்த வறியர்; நான் உயர்ந்த பாக்கிய வான்; அவர் அலந்து யாசிக்கின்றார்; நான் உவந்து கொடுக்கின் றேன்; அவர் குறையுடையாராய் அலைகின்றார்; நான் நிறைவுடன் நிற்கின்றேன்; அவர் பதைத்துப் பரிதபித்து உழல்கின்றார்; நான்

படையாமல் இனிது வாழ்கின்றேன்" என சர் எட்வர்டு டயர் என்பவர் இங்ஙனம் பாடியிருக்கிறார்.

இற்றைக்கு மூன்னூற்று ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர் இங்கிலாந்திலே எலிசபெத் ஆட்சியிலே உயர்ந்த பதவியில் இருந்தவர். திருப்தியான மன அமைதியைக் குறித்து இவ்வாறு கூறியிருத்தலால் அவரது உள்ளப் பண்பையும் உணர்வு நிலையையும் நாம் இங்கே உணர்ந்து மகிழ்கின்றோம்.

அமைந்தது கொண்டு அமைதியாய் வாழ் என்றால், யாதும் முயலாமல் மடி மண்டியிரு என்றதாகப் பொருள் கண்டு கொள்ளாதே; பேராசையால் நெஞ்சைப் பஞ்சரிக்காதே என்பதாம்.

உள்ளம் அமைதியுறின் உறுதி நலங்கள் பல உளவாகின்றன. புனிதமான அந்தப் பாக்கியத்தை அடைய மனிதன் இனிமையாகத் தன்னைப் பண்படுத்திக் கொள்ள வேண்டும்.

---

404. ஓடி யுழலும் உளத்தை ஒருமுகமாய்
நாடி உணர நயமாகக்—கூடிப்
பழகி வருக பழக்கம் படியின்
விழவு விளையும விரிந்து. (௪)

இ—ள்

விடயங்களில் ஓடி உழலுகின்ற உள்ளத்தை ஒரு முகமாக்கி வருக; அதனால் அரிய பல நன்மைகள் பெருகி வரும் என்பதாம்.

இது உள்ளத்தை உரிமையாக்கி ஒழுகுக என்கின்றது.

மன உணர்வு வாய்ந்துள்ளமையால் மனிதன் உயர்ந்து விளங்குகின்றான். மனிதனுடைய பெருமைகள் யாவும் மனத்தினிடமே மருவியுள்ளன. அதனை இனிமையாக உரிமை செய்து கொண்டவன் பெரியமனிதனாய் அரியமகிமைகளை அடைகின்றான்.

எதையாவது ஒன்றை நினைந்து சலித்துக் கொண்டேயிருப்பது மனத்தின் இயல்பு. அதனால் அதனை ஒரு நிலையில் நிறுத்துவது அரிய செயலாயது. உலக இச்சைகளில் வெறி மண்டி அலைவதே இயல்பாக உடைய மனத்தை எவன் நிலையாக அடக்கி அமைதிப் படுத்தி வருகிறானோ அவன் உயர் நிலையாளனாய் ஒளி

மிகப் பெறுகிறான். உள்ளம் பண்பட்டு அடங்கின் அறிவும் ஆற்றலும் வெள்ளம் என விரிந்து வருகின்றன. அது பண்படாமல் பல வழிகளிலும் திரிந்து பழுது படுமாயின் ஒரு பலனும் காணுமல் இழிவுடையதாய் மனித வாழ்வு அழிவே அடைகின்றது.

மனத்தை நெறியே செலுத்தி மதியோடு பேணி வருகின்றவன் மலை என உயர்ந்து பல மகிமைகளை அடைகின்றான்; அங்ஙனம் பேணுதவன் பேதையாய் இழிந்து யாதொரு நலனும் காணுமல் அவமே கழிகின்றான்.

மனம், மனிதன் என்னும் பெயர் நிலைகளிலிருந்து இனவுரிமைகளை உணர்ந்து கொள்ளலாம். பறவை மிருகங்கள் முதலிய வேறு பிராணிகளை விட மனிதன் பெரியவன் என வந்தது மனத்திணுலேயாம்.

"The main difference between men and the animals is the difference in their power of concentration."

(Vivekananda)

"உள்ளத்தை ஒருமுகப் படுத்தி உணரும் ஆற்றலினலேதான் விலங்குகளினும் மக்கள் மேலோராய் விளங்கி நிற்கின்றார்" என விவேகானந்தர் இங்ஙனம் கூறியுள்ளார்.

மனிதனுக்கு அரிய மாட்சியாய் அமைந்துள்ள மனத்தை இனிமையாக வசப்படுத்திய அளவுதான் பெருமையும் இன்பமும் உரிமையாகின்றன.

ஓடி உழலும் என்றது அதன் இயல்பான பாடு தெரிய.

"காடும் கரையும் மனக்குரங்கு கால்விட்டு ஓட அதன்பிறகே
ஓடும் தொழிலால் பயன்உளதோ? ஒன்ருய்ப் பலவாய் உயிர்க்குஉயிராய்
ஆடும் கருணைப் பரஞ்சோதி அருளைப்பெறுதற்கு அன்புநிலை
தேடும் பருவம் இது கண்டீர்! சேர வாரும் செகத்தீரே!"

எனத் தாயுமானவர் இவ்வாறு கூறியுள்ளார். இதனல் அவரது ஆன்ம பரிபாக நிலையை அறிந்து கொள்கின்றோம். மனத்தைக் குரங்கு என்றது சபலமுடைமை கருதி. அது போன போக்கில் போனல் ஊனமாம்; அதனை வசமாக்கி ஞான நோக்குடன் இறைவனை நோக்கின் நிறை பேரின்பம் உண்டாம் என்க.

கூடிப் பழகி வருக என்றது உள்ளத்தோடு ஒன்றி வாழும் உளவு காண வந்தது. கண்டபடி ஓடித்திரியும் இயல்பினையுடைய மனத்தை உடனே வசப்படுத்த முடியாது. அதனை நாளும் நயமாக ஒரு முகமாய் உறவு கொண்டு வரின் நீளத்திரியும் நிலை குறைந்து நெறியே நிலை பெறும்.

கள்ளத்தனமாய் மேய்ந்து திரிகின்ற பட்டிமாட்டைக் கட்டி வைத்துத் தட்டிக் கொடுத்து நல்ல தீனி போட்டு இனிது பேணி உழவு முதலிய தொழில்களில் பழக்கி உடையவன் ஊதியம் பெறுதல் போல் புலன்களிலேயே ஓடிக் களித்து உரங் கொண்டுள்ள மனத்தை அறிவோடு அணைத்து வைத்து நல்ல சிந்தனைகளாகிய உணவுகளை ஊட்டி நலமாகப் பாதுகாத்துவரின அரிய பெரிய பலன்களை உரிமையாக அடைந்து கொள்ளலாம்.

மனம் எவ்வழியும் கட்டுக்கு அடங்காத கடுவேகமுடையது. வாயு வேகத்தினும் சிறந்தது எனக் கதி வேகங்களுள் மனவேகம் அதி வேகமாக மதிக்கப் பட்டுள்ளது.

குதிரைகளின் வேகத்தைக் குறித்துக் கூறுங்கால் மனத்தை இணைத்துக் காவியக் கவிகள் கூறுவது வழக்கம்.

கொட்புற உலாவுந் தோறும் குரத்தடை துகளின் குப்பை
நுட்பமார் அணுக்கள் என்னும் நுவலரு மனத்தின் கூட்டம்
கட்புலன் கதுவல் செல்லாக் கடுப்பினைக் கற்பான் காலைப்
பெட்புறப் பிடித்தல் போலப் பிறங்குமாக் கொணர்மின் என்றான்.

(நைடதம், அன்னத்தை, 21)

நள மன்னனுடைய குதிரையின் நிலைமையை இது குறித்துள்ளது. அதனிடம் கதி வேகத்தைக் கற்றுக் கொள்ள விரும்பி மனத்தின் கூட்டம் அதன் காலடியில் பல துகள்களாய் ஒட்டிக் கொண்டது போல் இருந்தது எனப் புழுதி படிந்த குளம்பை இங்ஙனம் சுட்டியிருக்கிறார்.

"போறி வழி உள்ளம் போக்காப் புரவலன்" எனப் புகழ் பெற்றிருந்த நளனது பட்டத்துப் புரவி இவ்வாறு பாராட்டப் பட்டது. உள்ளத்தை அடக்கி ஆள்பவன் உலகத்தை ஆள்கின்றான்.

மன வேகத்தினும் கதி வேகம் மிகுந்த பரியை மன்னன் அடக்கி ஊர்ந்தான் என அவனது மதிமாண்பு காண வந்தது.

மனம் அணு நிலையது; அதி வேகமானது; உயிரின் உணர்வாய் உள்ளமைந்துள்ளது எனப் பொறியின் கருவியை இங்ஙகே அறிகின்றோம்.

"இன்பம் முதலிய பண்புறத் தருஉம்
கருவியாம் பொறி மனம்; அஃது உயிர்தொறும்
இன்றியமையாது வேண்ட லிற் பலவாய்,
அணுவாய் நிற்கும் என்மனார் புலவர்."

என்னும் இதனால் மனத்தின் நிலையும் நீர்மையும் உணரலாகும். இத்தகைய மனத்தை ஒருவழிப்படுத்தி ஒழுகுபவர் விழுமிய நிலையினராய் மேலான கதியை அடைகின்றார்.

உள்ளப் பெருங்குதிரை ஊர்ந்து வயப்படுத்திக்,
கள்ளப் புலன்ஐந்தும் காப்பமைத்து—வெள்ளப்
பிறவிக்கண் நீத்தார் பெருங்குணத் தாரே
துறவித் துணைபெற்றக் கால். (அறநெறிச்சாரம், 203)

உள்ளத்தை அடக்கி ஆள்பவர் உயர்கதி அடைதலை இஃது உணர்த்தியுள்ளது. உரியது அமைய அரியது அமைகின்றது.

பழுதான விழைவுகளில் வீழாமல் மனதை அமைதியுடன் இனிது பேணி வருக; அதனால் அதிசய மகிமைகள் உளவாம்.

மனம் வெறி கொண்டு பொறி வழிகளில் ஓடி உழலும் போது அறிவு நிலை குலைகின்றது; அதனால் உறுதி நலம் ஒழிந்து போகின்றது. உள்ளம் ஒடுங்கி அமைதியுறின் உயிரை நெருங்கிக் காண்கின்றது; அந்தக் காட்சி அதிசய மாட்சியாய் ஆனந்தம் அருளுகின்றது.

சீவனுக்குப் பேரின்ப நிலையமாயிருத்தலால் சித்த சாந்தம் முத்தி விளைவு என முத்தர்கள் மொழிந்தருளினர்.

"In quietness lies our salvation." (Kirby page)

"நமது கதி மோட்சம் அமைதியில் உளது" என கிர்பை பேஜ் என்னும் மேல் நாட்டுப் பெரியாரும் இங்ஙனம் கூறியிருக்கிறார். ஆன்ம உய்தியும் அதிசய இன்பமும் அமைதியில் உள்ளமையால் அது யாண்டும் துதி செய்யப் பெறுகின்றது.

வெளி முகமாய்க் களி மிகுத்து அலைவதை இயன்றவரையும் குறைத்து உன் உள்ளத்தைச் சாந்தம் ஆக்கு; அங்கே எங்கும் காணாத உயர்ந்த இன்ப நிலையைக் கண்டு நீ உவந்து கொள்வாய்.

405. சாந்தம் உடைமை தவமாகும் அஃதுடையான்
காந்த இயல்பு கனிந்துமே — மாந்தருள்
வான மதியாய் வயங்கி விளங்குவான்
ஞான மதியாய் நயந்து. (௫)

இ—ள்

இனிய சாந்தம் அரிய தவமாம்; அதனையுடையவன் அதிசய நிலையினனாய் உயர்ந்து சிறந்த வான சந்திரன் போல் ஞான ஒளி வீசி விளங்குவான் என்றவாறு.

அறிவு உணர்வு ஞானம் என்னும் மொழிகள் உயிர் ஒளிகளாய் உயர்ந்த நிலைகளைக் குறித்து நிற்கின்றன. ஆன்மாவைத் தோய்ந்து மன அமைதியாய் மருவியிருப்பதே சிறந்த ஞானத்தின் தெளிந்த முடிபாம். அந்தத் தெளிவின் ஒளிதான் சாந்தம் என வாய்ந்துள்ளது. இனிய பண்பாடுகள் நிறைந்த இந்தப் புனித நிலையை அடைந்தவன் மனித சன்மத்தின் மாண் பயனை மருவினவன் ஆகின்றான்.

உள்ளம் கனிந்து உயிரை நோக்கியுள்ளமையால் சாந்தம் உயர்ந்த தவமாய்ச் சிறந்த மகிமையை அடைகின்றது.

காந்த இயல்பு கனிந்து.

என்றது சாந்தம் உடையவர் மாந்தர் உலகை வசீகரித்து நிற்கும் மாட்சியுணர வந்தது. புலன்களின் புலையாடல்களை ஒடுக்கி மன அமைதியுடன் தன்னை நோக்கி வருகின்ற மனிதன் மீது பரமான்மாவின் நோக்கம் பதிகின்றது; பதியவே அதிசய நிலைகளில் உயர்ந்து எவரும் துதி செய்யப் பெறுகின்றான்

உள்ளம் பரிபக்குவம் அடைந்த அளவு உயிர் பரமனை நோக்கி மகிழ்ந்து கொள்கின்றது. மேலான நிலைமையில் உயரவே கீழான உலக மையல் கழிந்து ஒழிந்து போகின்றது.

உயர்ந்ததைப்பற்றி மகிழ்ந்தது இழிந்ததை முற்றும்இகழ்ந்து விடுகின்றது. அவ் விடுதியே பின்பு வீட்டின்பம் ஆகின்றது.

வானைப் போல வளைந்து கொண்டு ஆனந்தத்
தேனைத் தந்தெனைச் சேர்ந்து கலந்தமெய்ஞ்
ஞானத் தெய்வத்தை நாடுவன்; நான் எனும்
ஈனப் பாழ்கெட என்றும் இருப்பனே. (1)

இரும்பைக் காந்தம் இழுக்கின்ற வாறுஎனைத்
திரும்பிப் பார்க்க ஒட்டாமல் திருவடிக்
கரும்பைத் தந்து கண்ணீர் கம்பலை எலாம்
அரும்பச் செய் எனது அன்னைஒப் பாமனே. (தாயுமானவர்)

சாந்த குண சீலராய்த் தவ ஞானங்களில் மருவி யிருந்த தாயுமானவர் இறைவனை நோக்கி இவ்வாறு உருகி உரையாடி யுள்ளார். பத்தி வசனங்களில் சித்த நிலைகள் தெரிகின்றன.

பரமனைக் காந்தம் என்றது பக்குவமான சீவர்களைத் தம்பால் ஈர்த்துக் கொள்ளும் இயல்பு கருதி. கல்லையும் மண்ணையும் காந்தம் இழுக்காது. இரும்பைத்தான் கவர்ந்து கொள்ளும். மண், கல் என இழிந்து கிடக்கின்ற மாக்கள் இறைவன் அருளை அடையார். இதய பரிபாகம் அடைந்து ஓரளவு உயர்ந்த பொழுதுதான் அந்த உயர்ந்த பரம்பொருள் நேரே உரிமை சுரந்து உதவி புரிந்தருளு கின்றது. பருவம் வரும் வரையும் அது அருவமா யுள்ளது.

உண்ணுகின்ற பருவம் நோக்கிக் கனிகளை மனிதர் விரும்பு கின்றனர்; எண்ணுகின்ற பக்குவம் கருதி மக்களை இறைவன் விழைந்து கொள்கின்றான். விளைவு கண்டு விழைவு வருகின்றது.

பழங்கள் பக்குவம் அடைந்தவுடன் உள்ளே இனிய சுவை யும் வெளியே நல்ல காட்சியும் நண்ணி நிற்கின்றன. பக்குவம் உற்ற மனிதனும் அவ்வாறே அகமும் புறமும் இனிமை சுரந்து திகழ்கின்றான். பண்பு படிந்த அளவு இன்பம் கனிந்து வழிகின்றது.

முதியவன் ஆயினும் அமைதியாளனிடம் அதிசய எழில் ஒளி வீசியுளது. சித்த சாந்தி தெய்வத் தேசாய்ச் சிறந்து வருத லால் சாந்த சீலர் வையத்தே ஒரு வான சோதியாய் வயங்கு கின்றனர்.

அந்தி யிடைமிளிரும் ஆதவன்போல் ஆன்றவிந்த
சிந்தை யுடையார் தெளிவமைந்து—முந்திய
காந்தி கனிந்து கதிர்வீசி எம்மருங்கும்
சாந்தி மிளிர்வர் சமைந்து.

என்றது மாந்தரிடையே சாந்தரது நிலை ஓர்ந்து கொள்ள வந்தது. மாலைக் காலத்துச் சூரியன் போல் இனிய ஞான சோதி வீசி அமைதியாளர் அமர்ந்திருக்கின்றனர். முதுமையிலும் சாந்த

ரது காட்சி இங்ஙனம் வாய்ந்திருத்தலால் அஃரது அனுபவ மாட்சிகள் அறிந்து கொள்ளலாம். ஆன்ம நிலையில் தோய்ந்தவர் அதிசய ஒளிகளாய் வெளி மிளிர்கின்றனர்.

வானமதி என்றது சாந்த சீலர் ஈசன் அருள் எய்தித் தேசு மிகுந்துள்ளமை கருதி. தனியே அமர்ந்து தனது ஆன்ம நிலையை நினைந்த போது அங்கே புனித ஒளி பொங்கி இனிய இன்பம் விளைகின்றது. அந்த இன்பப் பேற்றை எய்தி மகிழுக.

---

406. அல்லல் உலகில் அமைதி யுறுமாயின்
நல்ல அமுதம்கை நண்ணியதாம்—தொல்லைமிகு
துன்பங்கள் எல்லாம் தொலையும் தொலையாத
இன்பங்கள் எய்தும் இனிது. (சு)

இ—ள்

அல்லல் நிறைந்த இவ்வுலகில் அமைதி அமையுமாயின் அது நல்ல அமுதம் கையில் எய்தியது போலாம்; அதனை யுடையவர் துன்பங்கள்எல்லாம்நீங்கி இன்பங்கள்யாவும்எய்தி மகிழ்வர்என்க.

இது உள்ளச் சாந்தி தெள்ளமுதம் என்கின்றது.

அவலக் கவலைகளே எங்கும் நிறைந்திருக்கின்றன. பசி பிணி பகை முதலியன யாண்டும் நீண்டுள்ளமையால மனித சமுதாயம் எங்கணும் துடிப்புகளும்துயரங்களும் வெறுப்புகளும் தொடர்ந்து படர்ந்து அடர்ந்து வளர்ந்துள்ளன. பொல்லாத புலைக் கொடுமை களே நிலைத்து அலைத்து வருதலால் அல்லல் உலகம் என்று இது சொல்ல நேர்ந்தது. மக்களுடைய புன்மை மாதாவுக்குப் பழி புரிந்தது. வெய்யரைத் தாங்கி யுள்ளமையால் வையம் வையப் பட்டது. இனிய நீர்மைகள் மறையவே இன்னல்க ளாயின.

தன்னலம் கருதித் தன்பாடு பார்ப்பதே மனித இயல்பாய் மன்னியுள்ளமையால் துனியும் துயரும் பகையும் பொறாமையும் யாண்டும் பின்னிப் பிணைந்து பெருகி வருகின்றன. ஒருவரை ஒருவர் வஞ்சிக்கத்துணிந்து நெஞ்சத்தைப் பாழாக்கி நஞ்சங்களை வளர்த்து நெடுந் துயரங்களுக்கே ஆளாகி நிற்கின்றனர்.

செல்வம் நிறைந்திருந்தாலும் உள்ளத்தில் அமைதியின்மை யால் மனிதஉலகம் கொடுமையும் மடமையும் படிந்து இனிமையும் இதமும் இழந்து எவ் வழியும் கடுமையாயுள்ளது.

"Discontent and unhappiness everywhere abound. Not one person in ten gives the impression of serenity and joyousness." (Living creatively)

"அவலமும் துயரமும் எங்கும் நிறைந்திருக்கின்றன. அமைதியும் இன்பமும் எவனிடமும் காணோம்" என கிர்பை பேஜ் என்னும் அமெரிக்க அறிஞர் இவ்வாறு கூறியிருக்கிறார்.

பெரிய செல்வ வளங்கள் பெருகியிருந்தும் நெஞ்சத்தில் அமைதியின்மையால் இனிமைப் பண்பை இழந்து மேல் நாட்டாரும் கீழான நிலையிலுள்ளனர் என்றமையால் சித்த சாந்தத்தின் சீவிய அமுதத் தன்மையை உய்த்துணர்ந்து கொள்ளலாம்.

அமைதி உறும் ஆயின் என்றது அது அமைவது அரிது என்பது தெரிய வந்தது. புனிதமான நினைவுகளையே நாளும் பழகித் தனி அமர்ந்து தெய்வ நீர்மையோடு இனிது மருவினவரே அமைதியாளராய் அமைய நேர்கின்றார்.

உலக அலமரல்கள் உள்ளத்தின் அமைதியைக் கெடுத்து விடும். வெளியே நிகழும் வெறியாட்டங்கள் சாந்த சத்துருக்கள்; அவற்றைச் சாராத அளவு ஞான சீலம் கனிந்து மோன நலம் வளர்ந்து வருகின்றது. மலரில் மணம் மருவி யுள்ளது போல் அமைதியுள் ஆன்ம ஞானம் அமைந்துள்ளது. அதன் பான்மையும் மேன்மையும் பரம தத்துவங்களாய்க் கனிந்திருத்தலால் முத்தர்கள் அதனை முயன்று மகிழ்கின்றார்.

சாந்த சீலன் தனியிடத்தில் அமர்ந்திருந்து கடவுளோடு கலந்து திளைக்கின்றான். அவனுடைய உணர்வும் உள்ளமும் தெய்வ மணம் கமழ்ந்து திவ்விய மகிமைகள் சுரந்து நிற்கின்றன.

உலக மயக்கில் ஓடி உழலுவோர் தெய்வக்காட்சியை இழந்து விடுதலால் வெய்ய நிலையில் இழிந்து படுகின்றார். ஆனந்த உருவனை பரமன் மோனர்களிடம் குடிபுகுந்துள்ளமையான் மோனன் என்னும் பெயரினை அப் பெருமான் பெருமையாக அடைந்தான்.

"ஞானமே வடிவாய்த் தேடுவார் தேடும்
நாட்டமே! நாட்டத்துள் நிறைந்த
வானமே! எனக்கு வந்துவந்து ஓங்கும்
மார்க்கமே! மருளர்தாம் அறியா

மோனமே! முதலே! முத்திநல் வித்தே!
முடிவிலா இன்பமே செய்யும்
தானமே தவமே நின்னை நான் நினைந்தேன்
தமியனேன் தனைமறப் பதற்கே,"

கடவுளை மோனமே எனத் தாயுமானவர் இதில் அழைத் திருக்கிறார். ஞான சீலர் கடவுளை நாடுகின்றார்; கடவுள் மோன யோகிகளை நாடி வருகின்றது. மையல் நிலை ஒழிந்து உள்ளம் அமைதியுறவே அது தெய்வ நிலையமாய்ச் சிறந்து திகழ்கின்றது.

"தானந்தம் இலாத தனிப் பொருளை
மோனந்தரு கின்றது முந்தி எனு
ஞானந்திகழ் யோகியர் நாடியதை
ஆனந்தம தாக அடைந்தனரே."

என்னும் இது இங்கே அறிய வுரியது. இதய அமைதி தெய் வீகம் சுரந்து எவ்வகையும் திவ்விய இன்ப நிலையம் ஆகின்றது; ஆகவே அது அரிய தவ யோகமாய்ப் பெருமை மிகப் பெற்றது.

நல்ல அமுதம்கை நண்ணியது ஆம்.

சாந்த சீலம் ஒருவனுக்கு அமையுமாயின் அவன் அதிசய மான ஒரு திவ்விய அமுதம் பெற்றவனாய்த் தெய்வீக நிலையை எய்துகின்றான். பிறவித் துயரங்களை நீக்கிப் பேரின்பம் தரும் நீர்மையது ஆதலால் சாந்தம் அமிர்தம் எனவந்தது. சாவா மருந்து சீவ சஞ்சீவி என அமைதி மேவி யுள்ளது. அதனை மேவி உய்க.

---

407. நீரோட்டத் துட்பட்ட நீள்துரும்பு போலுலகப்
போராட்டத் துட்பட்டுப் போகின்றாய்—பாரோட்டம்
கண்டு திரும்பிக் கதியை விரைவாகக்
கொண்டு தெளிக குவிந்து. (எ)

இ—ள்

விரைந்து ஓடுகின்ற நீர் ஓட்டத்துள் அகப்பட்ட துரும்பு போல் உலகப் போராட்டத்துள் அகப்பட்டுப் பொறியழிந்து போகின்றாய்; அவ்வாறு போய்த் தொலையாமல் திரும்பி எதிர் ஏறி உன்நிலைமையை உணர்ந்து தலைமையைத்தெளிக என்பதாம்.

உலக நிலையில் மனித சமுதாயம் அறிவு மிக உடையது என்று பெருமை பெற்றுள்ளது. இருந்தும் பரிதாப நிலையில் விரு

தாவாக இழிந்து உழலுகின்றது. அதன் போக்கும் நோக்கும் ஆக்கக் கேடுகளாய் விக்க முற்று அவ நிலையில் நிற்கின்றன.

உண்மை நிலையை உணர்ந்து கொள்வதே நன்மையான அறிவாம்; அங்ஙனம் உணராதது புன்மையாய்ப் புலையுறுகின்றது.

ஒருவனுடைய வாழ்வு குறிக் கோளுடையதாயின் அது நெறியே சென்று கருதிய பலன்களைக் கைவரப் பெறுகின்றது. குறியில்லாதது குருட்டு வாழ்க்கையாய் இருளடைந்து ஒழிகின்றது. குறியான கருத்தின் அளவு விருத்தி விளைகின்றது.

உணர்வுடைய மனிதப் பிறப்பை உற்றவன் உறுதியாகக் கருதி ஒழுக வேண்டியது தனது இறுதி நிலையும் உறுதி நலனுமேயாம். முடிவு நேருமுன் முடிவு கண்டு கொண்டவன் பிறவித் துயரின் விடிவு காண்கின்றான். அவ்வாறு காணாதவன் எவ்வகையிலும் யாதொரு நலனும் இன்றி வெவ்விய நிலையில் வீணே கழிகின்றான். அறிவு விழி இழிவாய் அவமே அழிகின்றது.

தன்னை நோக்கி உணரும் அளவே மனிதன் உன்னத நிலையை அடைகின்றான். நோக்கம் குன்றின் ஆக்கம் பொன்றுகின்றது.

ஒரு நாள் அறுபது நாழிகைகளையுடையது. நாளும் இவை க்ஷணமாய்க் கழிந்து போகின்றன. இங்ஙனம் போகும் பொழுதுள் ஒரு கணம் ஏனும் தன்னைத் திரும்பிப் பாராதவன் பின்பு சாகும் பொழுது என்ன பலனைப் பார்ப்பான்? இதனை உன்னி உணர வேண்டும். சீவ பார்வை தேவ பார்வை ஆகின்றது.

தனது உயிர் நிலையை ஒருசிறிதும் ஓர்ந்து உணராமல் வெளி முகமாய் மனிதன் யாண்டும் அலைந்து திரிவது நீண்ட மாயாவினோதமாய் மூண்டு நெடிய கொடுமையாய் நிற்கின்றது.

உலக ஓட்டம் கலக நீட்டமாய்க் களித்து நிற்றலால் கதியுணரும் காட்சியாளர் அதனைக் கண்டு கவன்று என்றும் வருந்தி யாண்டும் கண்ணோடி நிற்கின்றார்.

> நீர் ஓட்டத்து உள்பட்ட நீள் துரும்புபோல் உலகப்
> போராட்டத்து உட்பட்டுப் போகின்றாய்!

என்றது மனிதனுடைய வாழ்க்கை நிலையை நுணுகி நோக்க வந்தது. பார் ஓட்டத்தை நீர் ஓட்டத்தோடு ஒப்ப வைத்தது போன போக்கிலேயே ஓர் ஓட்டமாய்ப் போதல் கருதி.

பெரிய நதியில் வெள்ளம் பெருகி ஓடுகின்றது. அந்த நீர்ப் பெருக்கின் இடையே ஒரு துரும்பு விழுந்தால் நீர் ஓட்டத்தின் வழியே விரைந்து போகுமே அன்றி அயலே திரும்பி மீளாது: மனித வாழ்வும் அவ்வாறே உலகப் போக்கில் போகின்றமையால் அது இங்கே உவமையாய் நேர்ந்தது.

உலகம் ஆகிய ஆற்றிலே கால வேகமாகிய நீர் ஓட்டத்திலே மனிதத் துரும்புகள் படுகின்ற பாட்டை இது காட்டி நின்றது.

நீர் ஓட்டத்தில் பட்டது கடலை அடைகின்றது; பார் ஓட்டத்தில் பட்டவரும் துயரக் கடலில் வீழ்ந்து பின்பு பிறவிக் கடலிலேயே ஆழ்ந்து படுகின்றார். படுவதை உணர்ந்து தேறின் பயனடைய விரைந்து நேர்கின்றார்.உணராவழி ஒழிந்தேபோகின்றார்.

நம் கதி என்ன? நாம் என்ன செய்ய வந்தோம்; நாளும் ஆயுள் கழிந்து போகின்றதே; காலம் கரைந்து போவது காலன் விரைந்து மேல் வருவதாமே; இறந்து படுமுன் பிறந்த பயனை அடைந்து கொள்ள வேண்டுமே; இது பொழுது அடையாவிடின் பின்பு யாதும் கிடையாதே! என இன்னவாறான சிந்தனைகள் உயிர்க்கு உறுதி நலங்களை உதவியருளுகின்றன.

பார் ஓட்டம் கண்டு திரும்பிக் கதி தெளிக.

தன்னை மறந்து வைய மய்யலிலே களித்துத் திரிகின்ற மனிதன் சிறிது விழித்து நோக்கித் தனக்கு வேண்டியதை உணர்ந்து கொள்ளும்படி இது வேண்டி நின்றது.

தேகம் ஆகிய ஆலயத்துள் அமர்ந்துள்ள ஆன்ம தேவதையை அமைதியாய்த் தரிசித்தவன் அதிசயமான பேரின்ப வாழ்வைப் பெறுகின்றான். ஞான நோக்குடன் அங்ஙனம் காணாமல் ஊன நோக்கமாய் உலக ஆசையில் வெறி கொண்டு அலைந்தவன் முடிவில் ஈனமே கண்டு இழிந்து கவல்கின்றான்.

ஆன்ம நாட்டத்தில் சாந்த சீலம் ததும்பியுள்ளது; அங்கே தண்ணமுதம் பொழிகின்றது. அந்த நாட்டத்தை இழந்து உலக ஓட்டத்தைத் தொடர்ந்த போது அது வெறிகொண்ட பேயாட்டமாய்ப் பெருகிப் பெருங்கேட்டுக்கே ஏதுவாகின்றது.

விதேக தேசத்து அதிபதியான சனக மன்னன் ஒரு நாள் தனது அழகிய அரண்மனையின் மேல்மாளிகையில் தனியே

அமர்ந்திருந்தான். இராச வீதிகளில் சனத்திரள்கள் விரைந்து அலைந்து திரிகின்ற அலமரல்களைப் பார்த்தான். "இந்தப் பாடுகள் படுகின்றனரே! முடிவில் இவர்கள் கதி என்ன?" என்று கருதி மறுகினான். உலக நிலையை எண்ணி உள்ளம் உருகினான். அந்த ஞான சீலன் அன்று பரிந்து மொழிந்தன யாரும் என்றும் நினைந்து சிந்திக்கத் தக்கன. அயலே சில வருகின்றன.

பறக்கின்ற பறவைகளின் சிறகுஎன்ன
அனவரதம் பதைத்துலாவி
இறக்கின்ற உலகநடை நோக்கிவாய்
விட்டிரங்கி இயம்ப லுற்றான்;
அறக்கன்றி அவத்தில் உழன்று அலமரும்இவ்
வுலகிடையான் அந்தோ அந்தோ!
நிறகின்ற மயக்கத்தால் கல்லிடைகற்
போல் உருண்டு நெரிந்தேன் அந்தோ! (1)

எல்லையிலா அண்டத்தில் யான் ஆளும்
புவிநோக்கில் இறையும் இல்லை;
அல்லலுறும் இதுபெரிதா ஆதரித்து
நிற்பதே அந்தோ! அந்தோ!
புல்லிமையற்று இனிதாகி உதாரமாச்
செயப்படாப் பொருள் ஈதென்னத்
தொல்லுலகில் ஒரு பொருளும் காணேன் இத்
தொடர்ச்சிநிலை என்னே! என்னே! (2)

மண்ணுடும் மன்னவரும் அவர்தனமும்
மாண்டன நுண் மணலை ஒக்கும்;
விண்ணுடும் இந்திரரும் அவர்வாழ்வும்
போயின விண் மீனை ஒக்கும்;
எண்ணுடும் பிரமரும் அண்டமும் பூதங்களும்
இறந்த எல்லை இல்லை;
கண்ணுடும் அவை எங்கே? நின்வாழ்க்கை
நிலைஎன்னே கவலும் நெஞ்சே! (3)

பாலகனாய் அஞ்ஞானத் தழுந்துவன்நற்
காளையாய்ப் பாவை மாரால்
சால வருந்துவன்; விருத்தன் தானாகிக்
குடும்பத்தில் தளர்ந்து சாவன்;
ஏல இவன் எக்காலத்து என்செய்வான்
மாயக்கூத்து இருந்த வாறே
ஞாலமெலாம் ஆடரங்காய்ப் பொறிமேளமாய்
மனப்பேய் நடிக்குமன்றே. (4)

வெம்மாய வாழ்வன்றோ துயர்க்கெல்லாம்
பிறப்பிடமாய் விளம்புகின்றது
அம்மா இங் கிதனிடையே அழுந்துமவர்க்கு
இன்பமுள தாவது எங்ஙன்?
மைம்மாயை என்னுமரம் பணையிலைபூ
காய்பழத்தால் வரம்பற்று ஓங்க
இம்மால்செய் மனம்வேராம்; இம்மனம் தான்
சங்கற்பம் என்ப தாகும், (5)

சங்கற்ப நாசத்தால் எளிதாக
மனநாசம் தானே எய்தும்;
அங்குற்ற மனம் இறக்கின் சநநமர
ணங்கள்எனும் மரமும் மாயும்;
இங்கிப்பால் எனைத்திருடும் கள்ளனைக் கண்டேன்
கண்டேன் இவன் பேர் நெஞ்சம்
பொங்குற்ற நெஞ்சத்தால் நெடுநாள் நொந்தேன்
இன்று பொன்று விப்பேன். (6)

பேதிக்கு மனம்என்னும் பெரும்பகையை
முழுவலியால் பிளந்து வென்றேன்
வாதித்த துயரெல்லாம் மாற்றினேன்
உபசாந்த வாழ்வு பெற்றேன்
சாதித்த விவேகமே உனைவணங்கி
னேன்என்று சனகர் கோமான்
சேதித்த மனஅலைவுஎல் லாம் ஒழித்துத்
தானே சித்திரம் போல் நின்றான். (7)

(ஞான வாசிட்டம்)

தத்துவ உணர்ச்சிகள் ததும்பி வந்துள்ள இந்தப்பாசுரங்களை உள்ளம் கனிந்து உற்று நோக்குபவர் உறுதி நலங்களை ஓர்ந்து கொள்ளுவர். சனகனுடைய அநுபவ நிலைகள் ஆன்ம அமுதங்களாய் வெளி வந்துள்ளன. மொழிகளைப் படித்த அளவில் விலகிவிடாமல் படிந்துள்ளபண்புகளை உரிமையுடன் உணர்ந்துகொள்ள வேண்டும். பெரிய உள்ளத்திலிருந்து விளைந்திருக்கின்ற அரிய சிந்தனைகள் ஆருயிர்களுக்குப் பேரொளிகளாய் ஆறுதலருளுகின்றன. கருணையால் உருகி வந்தன கருதியுணர வுரியன.

பறக்கின்ற பறவைகளின் சிறகுகள் போல் அனவரதம் பதைத்து உழலுகின்றது என உலக நடையை அவன் கருதியுள்ள காட்சி கருத்துடையார் எவர்க்கும் கண்ணைத் திறந்து காட்டி

யுள்ளது. வாழ்க்கைப் போராட்டத்தில் பேராசை வெறியராய்ச் சீவர்கள் படுகின்ற பாடுகளை இப்படிப் பாவனை செய்திருக்கிறார்.

லவா, லவா என்று அடித்துக் கொண்டு படியில் உழந்து திரிகிறார்களே; முடிவை உணர்ந்து கொள்ள வில்லையே! என முடிமன்னன் வருந்தியுள்ளமை வாக்கு மூலத்தால் அறிந்து கொள்ள வந்தது. வயிற்றை வளர்க்க விரும்பி உயிரை இழந்து போதலால் அந்த வாழ்க்கைப் போராட்டம் அதிக பயங்கர மாயது.

"The struggle for livelihood or success is so terrific that higher values are strangled." (Silence)

"பொருளைத் தொகுத்து உடலை ஓம்புதற்காக மனிதன் படுகிற பாடு உயிரின் உயர்ந்த குறிக்கோள்களை இழந்து விடும் கேடாய்க் கிளர்ந்து நிற்கின்றது" என்னும் இது இங்கே அறிய உரியது. நிலையான நிலையை நினையாது போவது புலையாகின்றது.

வயிற்றை மட்டும் வளர்த்து வாழ்நாளைப் பாழாக்குவது கொடிய பரிதாபமே யாம். அமைதியுடன் சிறிதேனும் தன்னை நினைந்து பாராமல் அவ நிலையில் அவாவி அலைதல் அழிகேடாதலால் அவ்வழி விலகி நின்று விழி திறந்து உய்ய வேண்டும்.

அரிய திருவுடைய பெரிய அரசனாயிருந்தும் உலக நிலையில் ஒரு சுகமும் இல்லை என்று தெளிந்து சனகன் அடைந்துள்ள அமைதியை விழைந்து காணின் மேலான கதி நிலையை எவரும் உணர்ந்து கொள்ளலாம். உபசாந்த வாழ்வு பெற்றேன் என்னும் அந்த மன்னன் வார்த்தை இன்னமிர்தம் அனையது.

மிகுந்த ஆசையால் பறந்து திரியாதே; அமைதியாய் ஆன்ம சிந்தனை செய்து உனது வாழ்வை இனிது நடத்துக; உறுதியுண்மையைக் கருதி ஒழுகுவது பெரிதும் நலமாம்.

---

408. பொறியோட்டம் எல்லாம் புலையாட்ட மாகி
வெறியாட்டம் எய்தி விளிவர்—அறிவீட்டம்
பேணி அமைதி பெறுவார் பெறுவரே
காணியா மேலாம் கதி. (அ)

இ—ள்

ஐம் பொறிகளின் வழியே அவாவி உழல்பவர் அவல வெறி

யாய் அழிவே அடைவர்; அறிவைப் பேணி அமைதி யுறுபவர் மேலான கதியைப் பெறுவர் என்பதாம்.

இது அழிவில் வீழாமல் அமைதியில் ஆழுக என்கின்றது.

போக நலங்களை விழைந்து உழலுவதே சீவர்களின் இயல்பாக அமைந்துள்ளது. உறங்குகின்ற நேரம் தவிர விழித்து எழுந்த போதெல்லாம் விடய இச்சைகளில் வெறியாகவே யாவரும் அலைந்து திரிகின்றனர்.

பொறிகள் ஐந்து ஆயினும் வெறி நிலைகள் அளவிடலரியபடி பல வகைகளில் பரவியிருக்கின்றன. கண்ணுக்குத் தெரிவன சில. எண்ணுக்கும் அரியன பல.

பெண்வெறி, மண்வெறி, பொன்வெறி, புகழ்வெறி, பதவி வெறி, பார்வை வெறி முதலாகப் பயித்தியங்கள் பலவாறு விரிந்துள்ளமையால் பல திறப்பட்ட வெறியர்கள் உலகம் எங்கணும் நிறைந்திருக்கின்றனர். ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையில் பித்தம் கொண்டு சித்த சுவாதீனத்தை இழந்து திரிகின்றார். பேதைப் பித்தர்கள் தம்மை மேதைச் சித்தர்களாக எண்ணிக் களிப்பது இயல்பா யுள்ளது.

இந்தப் பொறி வெறி எவ்வளவுக்கு எவ்வளவு குறைகின்றதோ அவ்வளவுக்கு அவ்வளவு இனிய தெளிவுடையனாய் மனிதன் ஒளி மிகப் பெறுகின்றான். வெறி என்பது அருள் அற்ற மருள் நிலை. அந்நிலை இருள் நிறைந்த இன்னலையே விளைத்து வரும். அந்தப் பொல்லாத புலை நிலையை நீங்கினவர் நல்ல தெருளுடையராய் உயர்ந்து திவ்விய மகிமைகளை அடைகின்றனர்.

தவம் சீலம் ஞானம் யோகம் என்பன எல்லாம் பொறிகளை அடக்கி நிற்கும் புனித நிலைகளையே குறித்து வருகின்றன.

பொறி வாயில் ஐந்து அவித்தான் (குறள், 6) எனக் கடவுளை இந்தவாறு குறித்திருத்தலால் பொறி யடக்கத்தின் அருமை பெருமைகளை அறிந்து கொள்ளலாம். பொறிகளை அடக்கிய அளவு மனிதன் தெய்வம் ஆகின்றான். அடக்காமல் போனால் பேயனாய் இழிந்து பிழைபட்டு ஒழிகின்றான்.

பொறி ஓட்டம் எல்லாம் புலையாட்டம்.

என்றது அதன் நிலை காட்ட நேர்ந்தது. புலன் வழியே ஓடி உழல்கின்றவன் தனது ஆன்மநலனை இழந்து விடுகின்றான். அந்த இழவால் இழி நிலைகளும் அழி துயரங்களும் உளவாம் ஆதலால் அது புலையாட்டம் என வந்தது

தூண்டில் இரையைக் கவ்வி மீனும், விளக்கு ஒளியைக் கண்டு விட்டிலும், ஓசையைக் கேட்டு அசுணமாவும், வீசிய மணத்தை விழைந்து வண்டும், பரிசத்தை நச்சி யானையும் அழிந்து படுகின்றன அவ்வாறே ஐந்து புலன்களிலும் வெறியராய் மனிதர் இழிந்து கெடுகின்றனர்.

"அழுக்குடைப் புலன்வழி இழுக்கத்தின் ஒழுகி
வளைவாய்த் தூண்டிலின் உள்இரை விழுங்கும்
பன்மீன் போலவும்,
மின்னுபு விளக்கத்து விட்டில் போலவும்,
ஆசையாம் பரிசத்து யானை போலவும்,
ஓசையின் விளிந்த புள்ளுப் போலவும்,
வீசிய மணத்தின் வண்டு போலவும்,
உறுவது உணராச் செறுவுழிச் சேர்ந்தனை!"
(கோயினான்மணி மாலை, 28)

"ஆனை யூற்றின், மீன் சுவையின், அசுணம் இசையின்,
அளி நாற்றத்து
ஏனைப் பதங்கம் உருவம் கண்டு இடுக்கண் எய்தும்;
இவை எல்லாம்
கான மயிலின் சாயலார் காட்டிக் கௌவை
விளைத்தலான்
மான மாந்தர் எவன்கொலோ வரையாது
அவரை வைப்பதே." (சாந்தி புராணம்)

உரைத்த அசுணம் களிறு விட்டில் மீன்தேன்
ஓசை ஊறு ஒளி இரதம நாற்றம் என்ன
நிரைத்த இவற்று ஒன்று ஒன்றால் மாய்ந்து போகும்
நிலையழிக்கும் அவைஐந்தும் நேரே கூடிக்
கரைத்தலுறு பவர்க்குஇன்பம் எங்கே? உன்றன்
கட்டுக்கு வாதனையே கயிற்றுச் சாலம்
புரைத்தெழுநெஞ்சே! அதுவே போகு மாகின்
பொருவில் சயம் அஃதுனக்குப் புகலுங்காலே.
(ஞான வாசிட்டம்)

சிந்தா குலமனிதர் சீசி செவிமுதலா
ஐந்தாலும் ஈடழிய வல்லரோ—ஐந்தில் ஒரு
வேட்கை அசுணம் இபம்விட்டில் மீன் வண்டு
கேட்கைமுதல் ஓரொன்றன் கேடு. (அமுதசாரம்)

நாயலகை நெய்விரும்பி நக்குவதும் நஞ்சிட்ட
பாயசமும் மெய்ப்பரிசம் பாவை மிகச்—சாயனீர்
வேட்கை அசுணம் இபம் விட்டில் மீன் வண்டிவையின்
சாக்கியைக்கண் டார்துறவா தார். (ஒழுவிலொடுக்கம்)

அசுணதிக்கு ஓரொன்றால் ஐம்புலனும்
இசையுமேல் கேடெமக் குந்தீ பற
எங்ஙனம் உய்தும்என் றுந்தீ பற. (அவிரோதவுந்தியார்)

முந்த வேலி ஆதியின் ஒருகுணம் முன்னிப்
பந்த மோடிட ருற்றிறந் தனபல என்னின்
ஐந்து சேர்குணங் களும்ஒருங்கு ஆசையின் அடைந்தோர்
உய்ந்து போம்நெறி உண்டுகொ லோமதித் துரைக்கின்.
(பாகவதம், 11-4)

பொறி வெறிகளால் அழிவுறுகின்ற உயிரினங்களைக் குறித்துக் காட்டி உறுதிநலங்களை இவை உணர்த்தியுள்ளன. பொருள் நிலைகளைக் கருதியுணர்ந்து மேலோருடைய உள்ளக்கருத்துக்களை ஊன்றி ஓர்ந்து கொள்க. உண்மை தெளிவது நன்மையாகும்.

வெளி முகமான விடய நுகர்ச்சி முதலில் இனிதாய்த் தோன்றினும் பின்பு கொடிதாய்த் துன்பம் தருதலால் அந்த மாய மயக்கில் வீழ்ந்து மாயாமல் அகமுகமாய்த் திரும்பி அமைதியுறின் தூய ஆன்ம போகம் நேயமாய் அமையும் என்க.

அமைதி பெறுவார் கதி பெறுவர்.

என்றது சித்த சாந்தம் முத்தி நிலையமாயுள்ளமையை உய்த்துணர வந்தது. மன அமைதி மன்னுயிரின் கதி ஆகின்றது.

சாந்தி யுடைமை தனிமகிமை யாயின்பம்
மாந்தி மகிழும் மதி.

புலையான பொறி நசைகளை ஒருவி உள்ளம் உள்ளே திரும்பவே நிலையான சாந்தமும் நேரான தெய்வ நீர்மையும் சேர்கின்றன. அந்த அனுபவம் பெருகிவரவே அது பேரின்பமாகின்றது.

409. பறந்து திரியும் பரிதாபம் எல்லாம்
இறந்து தொலைய இருந்து—பிறந்த
நிலையை நினைந்து நிலையாகி நிற்கும்
கலையை உணர்க கனிந்து. (க)

இ—ள்

பேராசையால் ஓடி உழலும் பரிதாப நிலைகள் யாவும் ஒழிந்து இனிய அமைதியாய் இருந்து பிறவிப் பயனான உறுதி நலனை ஓர்ந்து உணர்ந்து கொள்க என்பதாம்.

மனிதனுடைய வாழ்க்கை நிலைகளும் பதை பதைப்புகளும் அதிசயப்புகளாய் இருக்கின்றன. பசித் தீ வயிற்றில் இருத்தலால் மக்களை அது இயக்கி வருகின்றது. அந்த இயற்கைப் பிணியைத் தணிக்க மனிதன் முதலில் முயற்சியில் இறங்கினான். பின்பு படிப்படியே பலவகைத் தேவைகள் தொடர்ந்து பெருகின. அந்த அவலப் பெருக்கில் ஆழ்ந்து அல்லல் அடைய நேர்ந்தான்.

பறந்து திரியும் பரிதாபம் என்றது ஆசை என்னும் பெருங்காற்றாடு இலவம் பஞ்சு போல் மனிதன் நிலை குலைந்து அலையும் நிலைமை கருதி. பரிதாபம்=வருத்தம், துன்பம். பரிவால் நேர்ந்தது பரிதாபம் ஆயது. மேலோர் இரங்கி வருந்தும்படி சாந்தியும் மாந்தர் இழிந்து திரிகின்றனர்.

சிறந்த மனிதப் பிறப்பை அடைந்தும் அதன் பயனை அடைய நினையாமல் கொடிய மடமையாய்க் குருட்டு வழியில் மருண்டு திரிவது இருண்ட துயரமாய்த் திரண்டு நின்றது.

“பிறந்துமண் மீதில் பிணியே குடிகொண்டு பேரின்பத்தை
மறந்துசிற் றின்பத்தின் மேல்மய லாகிப்புன் மாதருக்காய்ப்
பறந்துழன் றேதடு மாறிப்பொன் தேடிஅப் பாவையர்க்கீந்து
இறந்திட வோபணித் தாயிறை வாகச்சி ஏகம்பனே!”

பிறவிப் பயனைப் பெற விழையாமல் வாழ்நாளை வீணே கழித்து விளிந்து படுவாரை நினைந்து பட்டினத்தார் இங்ஙனம் இரங்கி வருந்தியுள்ளார். வந்த வரவைச் சிந்தனை செய்யாமல் அந்தகராய் அலைந்து அந்தகனுக்கு இரை ஆகின்றனர் என உலக மக்களின் பரிதாப நிலைமையைக் குறித்து ஒரு பெரியவர் பரிந்து பேசியுள்ளார். அவல ஓட்டம் அழிவின் நீட்டமாயது.

சருகு அரிக்க நேரமே அன்றிக் குளிர் காய நேரம் இல்லை என்பது ஒரு பழமொழி. ஓயாமல் ஓடி அலைந்து பாடுபட்டு உழல்வதே யல்லாமல் அமைதியாய் அமர்ந்திருந்து தெய்வ சிந்தனை செய்து இனிய சுகத்தை அனுபவிக்க முடியவில்லை என்பது இம் முது மொழியில் மூடிந்துள்ளது. வருந்தி உழைக்கின்றவர்கள் இருந்து இளைப்பாறுகின்றார்கள். களைப்பு நீங்க அமர்ந்திருப்பது மீண்டு உழைப்பதற்கு உறுதியாகின்றது.

பறந்து அலைந்த வருத்தம் அமைதியாய் அமர்ந்திருந்த பொழுது நீங்கி விடுதலால் அமைதியின் சுவையை அறிந்து கொள்கின்றோம். உள் அமைதி தெள்ளமுதம் ஆகின்றது.

உறக்கத்தில் ஒரு சுகம் இருப்பதை அனைவரும் அனுபவித்து வருகின்றனர். எதனால் அது சுகம் என வந்தது? தூக்கத்தில் மனம் யாதும் அலையாமல் அமைதியாய் இருத்தலால "தூங்கும் சுகமது பிரமச் சுகம்" என அது துதிக்க நேர்ந்தது.

துயிலை இன்பெனச் சொல்லுதல் இந்தியத்து
இயலும் நெஞ்சம் இலாமையி னால்அன்றோ?
பயிலும் நெஞ்சம் பரந்து திரிதரும்
செயலில் இல்லைச் சிறிதும் சுகமரோ. (பிரபுலிங்கலீலை)

மனம் புறத்தே அலைந்து திரியாமல் உள்ளே அடங்கி யுள்ளமையினாலேதான் உறக்கம் இன்பம் என நேர்ந்தது. ஆகவே புலன்களின் வழியே வெளியே ஓடி அலைவதால் யாதொரு சுகமும் இல்லை என இது உணர்த்தியுள்ளது. உள்ளம் அகமுக மாகவே உயிர் சுக சொரூபமாகின்றது.

உயர்ந்த ஆன்ம சுகம் விளைவதால் சாந்தம் சிறந்த சீவ அமுதமாய் அமைந்து நிற்கின்றது. அந்த அனுபவத்தைப் பெற்ற அளவு மனிதன் புனிதன் ஆகின்றான். உயிர்க்கு உறுதி நாடுவதே உயர்ந்த உணர்வின் சிறந்த பயனும்.

நிலையை நினைந்து கலையை உணர்க.

மனிதப் பிறவியை எய்தியுள்ள மகிமையை உணர்ந்து உரிமையைத் தெளிந்து உறுதி நலனை விரைந்து பெறுக என இது வரைந்து வேண்டியது. தன் நிலையைத் தெளிவாகத் தெரிந்து கொண்ட பொழுது நிலையான இன்பம் எளிதாக வருகின்றது.

மன ஒருமையான அமைதியில் தேவ போகம் மேவியுள்ளமையால் மெய்ஞ் ஞானிகள் எவரும் எஞ்ஞான்றும் அதனை மேவி வருகின்றனர்.

நிலையுறும் நிராசையாம் உயர்குலப் பெண்டிரொடும்
நிகழ் சாந்தம் ஆம் புதல்வனும்
நெறிபெறும் உதாரகுணம் என்னும்நற் பொருளும் மருள்
நீக்கும் அறிவாம துணைவனும்
மலைவறு நிராங்கர நண்பனும் சுத்தமுறும்
மனம்என்னும் நல் ஏவலும்
வருசகல கேவலம் இலாதஇடமும் பெற்று
வாழ்கின்ற வாழ்வு அருளுவாய்
அலையிலாச் சிவஞான வாரியே ஆனந்த
அமுதமே குமுத மலர்வாய்
அணிகொள்பொற் கொடிபசும் கொடிஇரு புறம்படர்ந்து
அழகுபெற வருபொன் மலையே
தலைவர்புகழ் சென்னையில் கந்தகோட்டத் துள்வளர்
தலம் ஓங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. (அருட்பா)

நிராசையாகிய மனைவியை மணந்து சாந்தம் என்னும் புதல்வனைப் பெற்றுச் சித்த சுத்தியோடு வாழும் உத்தம வாழ்வைத் தமக்குத் தந்தருளும்படி முருகக்கடவுளிடம் இராமலிங்க அடிகள் இதில் வேண்டியிருக்கிறார். உயிர்க்கு உறுதியாய் இருமையும் சாந்தம் இதம் புரியும் என்பது புதல்வன் என்னும் குறிப்பால் பெறப்பட்டது. இனிய குண நீர்மைகளை மருவி மேலோர் இன்பம் நுகர்கின்றனர்.

தனது மனம் அமைதியுறின் அந்த மனிதன் அதிசய நலங்களை அடைகின்றான். சாந்தம் ஆகிய சம்பத்து தன்னுள்ளேயே அமைந்திருக்கின்றது; அதனை இனிது பயன்படுத்தி மனிதன் உயர் நிலையை அடைய வேண்டும்.

"Nothing can bring you peace but yourself."
(Self-Reliance)

"உன் உள்ளத்தைத் தவிர வேறென்றும் உனக்குச் சாந்தியைக் கொடுக்காது" என்னும் இது இங்கே அறிய வுரியது.

புலன்களின் புலையாடல்கள் ஒழிந்து உள்ளம் அமைதியாய் அமையின் அங்கே நலன்கள் பல விளைகின்றன. அந்த இனிய விளைவுகள் இருமையும் இன்பம் புரிகின்றன.

"சாந்தமே நல்லுறு தாரம்" (பாரதம், பழம்பொருந்து20)

என்று சகாதேவன் கண்ணனிடம் உரைத்திருத்தலால் அவனுடைய உள்ளப் பண்பையும் உண்மை நிலையையும் நாம் உணர்ந்து கொள்கின்றோம். சிற்றின்பத்திற்கு இனிய சாதனம் மனைவி ஆதல் போல் பேரின்பத்திற்கு உரிய துணை சாந்தமே ஆதலால் அது நல்ல தாரம் என வந்தது. பொல்லாத தாரங்களும் உள்ளன ஆதலால் அந்தக் கோரங்களை விலக்குதற்கு நலன் உறு தாரம் என நன்மையை நினைவுறுத்தினார் ஐம்புலன்களும் ஆர நுகரும் தேக போகத்தை எதிர் காட்டியது ஆன்மாவின் ஏக போகத்தை இனிது காண வந்தது.

பொறிகளால் நுகரும் உலக சுகங்களில் தலைமையானது மனைவியின்பால் உள்ளது. அறிவால் நுகரும் ஆன்ம சுகங்களுள் உயர்வானது அமைதியில் அமைந்திருக்கின்றது.

துணையோடு தோய்ந்து நுகர்வது சிறிது சுகமாய்த் தோன்றினும் அது ஒரு வெறியாய் விரைந்து தொலைகின்றது. தனிமையில் நுகரும் இனிமை புனித நிலையில் பொங்கி என்றும் அழியாத பேரின்பமாய் ஒளி வீசியுள்ளது.

"இனிது இனிது ஏகாந்தம் இனிது" (ஔவையார்)

என்றதனால் தனிமையின் மகிமையை மேலோர் எவ்வாறு கருதியுள்ளனர் என்பது இனிது தெளிவாம்.

வெளியே புலன் நுகர்வில் களி மயக்கங்களே களித்து வருகின்றன. உள்ளே உணர்வு நுகர்வில் உயர்வான பேரின்பமே பெருகி எழுகின்றது.

"That inward eye which is the bliss of solitude."

(Wordsworth)

"தனியான உள் நோக்கம் ஏகாந்தத்தின் பேரின்பம் ஆகின்றது" என வேட்ஸ்வோர்த் என்னும் ஆங்கிலக் கவிஞர் இங்ஙனம் பாடியிருக்கிறார். தனிமையில் புனித இனிமை மருவியுள்ளமையான் உயர்ந்தோர் எவரும் அதனைப் புகழ்ந்து வருகின்றனர்.

மோகாந்த காரம் முழுதும் ஒழியுமே
ஏகாந்தம் எய்தின் இவண்.

தனியான அமைதியில் அவலங்கள் ஒழிந்து ஆன்ம நலன்கள் வளர்ந்து வருகின்றன. அதனைப் பெறுவது பேரின்ப மாம்.

---

410. ஞான மணமான நல்லமைதி எய்தினர்
வான அமுதமாய் வாழ்கின்றார்—ஈனம்
படிந்து கொடிதாய்ப் பறந்து திரிவார்
மடிந்தார் துயரில் மருண்டு. (ம)

இ—ள்

ஞானத்தின் குணமான சாந்தத்தை அடைந்தவர் வானத்தின் அமுதமாய் இனிது வாழ்கின்றார்; ஈன நிலையில் பறந்து திரிபவர் இழி துயரில் மருண்டு அழிந்து படுகின்றார் என்றவாறு.

நித்திய அநித்தியங்களை ஆராய்ந்து அறிந்து உண்மையைத் தெளிவாக உணர்ந்து கொள்வது ஞானம். இந்த மெய் யுணர்வு வெய்ய நிலைகளை நீக்கி உய்தி புரிகின்றது. பூவுக்கு வாசமும் தேனுக்கு இனிமையும் போல் சாந்தம் ஞான நீர்மையாய் வாய்ந்திருத்தலால் அது ஞானமணம் என வந்தது.

உண்மையுணர்வின் பயன் உள்ளத்தின் அமைதியேயாம்.

தனது ஆன்ம நிலையையும், உலக இயல்பையும், இறைவனையும் முறையே தெளிந்து கொள்ளுகின்றமையால் ஞானதீரர் யாண்டும் நிலை குலையாமல் சாந்த சீலராய் விளங்கி நிற்கின்றார்.

வான அமுதமாய் வாழ்கின்றார்.

என்றது உலக வாழ்வில் சாந்தியாளரது நிலைமை தெரிய வந்தது.

உள்ளத்தில் அமைதி அமைந்த பொழுது அந்த மனிதருடைய வாழ்வு தெள்ளிய அமுதமாய் இனிமை சுரந்து திகழ்கின்றது. அகம் இனிமையாய் அமைதி யுறவே சகம் முழுவதும் சுக வாழ்வாய்த் தோய்ந்து வருகிறது.

சித்த சாந்தம் எவ்வழியும் உயிரோடு உறவு கொண்டுள்ளது; அவ்வுறவு கடவுளுடைய உரிமையை மருவி வருகின்றது; வரவே அதிசய மகிமையும் ஆனந்த விளைவும் அங்கே பொங்கி எழுகின்றன. சீவ பாவனையை எய்தியுள்ள அளவும் வாழ்வு தேவ அமுதம்

ஆகின்றது. அந்தப் பாவனையை இழந்து விடின் அது பாழான பாவ வாழ்வாய்ப் பழிபட்டு அழிகின்றது.

பறந்து திரிந்து பாடு படுவதெல்லாம் இன்பத்தை நாடியே; அந்த இன்பம் பொறி நுகர்வான தேக போகத்தின் அளவாய் நின்று விடின் அது இளிவாய் ஈனமுறுகின்றது. ஊன உடலைப் பேணுவதோடு நில்லாமல் உயிரையும் புனிதமாகப் பேணிவரின் அது ஞான சீலமாய் நலம் பல தருகின்றது.

ஆன்மா என்றும் அறிவானந்தமானது; அதனை மறந்து உலகச் சுழலில் பறந்து உழல்வது படுகேடாய் முடிகின்றது. அங்ஙனம் அலைந்து படாமல் அறிவோடு அமைதியாய் அமர்ந்த பொழுது அமுத போகம் விளைந்து வருகின்றது.

மனம் அடங்கி ஆன்மாவை நோக்கினவரே முனிவர் என உயர்ந்து அரிய மேன்மைகளை அடைந்து மகிழ்கின்றனர். வாக்கு மனங்களுக்கு எட்டாத ஆனந்த நிலையை அக நோக்குடையார் எளிதே அடைந்து கொள்கின்றனர்.

> "போக்கும் வரவும் இரவும் பகலும் புறம்பும்உள்ளும்
> வாக்கும் வடிவும் முடிவும் இல்லாதொன்று வந்துவந்து
> தாக்கும் மனோலயம் தானே தரும்எனைத் தன்வசத்தே
> ஆக்கும் அறுமுகவா! சொல்லொணாது இந்த ஆனந்தமே."
>
> (கந்தர் அலங்காரம், 73)

தனது மனம் இலயமாய் அமைதியுற்ற பொழுது பெற்ற பேரானந்த நிலையை அருணகிரிநாதர் இவ்வாறு உரைத்திருக்கிறார். அமைதியான மனம் ஆன்மாவைத் தோய்கின்றது; தோயவே தூய பேரின்பம் நேரே பாய்கின்றது

பொறி புலன்களின் வெறிகளை அடக்கி உலக அலமரல்களை அறவே வெறுத்து மலை முழைகளிலும் காடுகளிலும் முனிவர்கள் தனியே போய் இருப்பது எதற்கு? போகப் பொருள்கள் யாதும் இல்லாத தனி யிடத்தில் யோகியர் எதனை அனுபவித்து இனிமையாய் இருக்கின்றனர்? உயர்ந்த அரச செல்வங்களையும் உதறித் தள்ளி விட்டுப் புத்தர் முதலிய பெரியோர்கள் அடவியில் ஒதுங்கி எதனை நாடித் தனியே இருந்தார்கள்? அந்த நிலைகளைச் சிந்தனை செய்து நோக்கின் சித்த சாந்தியின் தத்துவத்தையும், அதனால் விளைகின்ற நலன்களையும் உய்த்துணர்ந்து கொள்ளலாம்.

புல்லிய மக்களுடைய புலை நிலைகள் யாதும் இல்லாமல் கடவுளின் இயற்கை அமைப்பான புனித நிலையில் தனிமையாய் உள்ளமையால் ஏகாந்தம் இனிமையாயது.

"How sweet, how passing sweet is solitude!
O solitude! where are the charms
That sages have seen in thy face?" (Cowper)

"தனிமை எவ்வளவு இனிமை! எவ்வளவு இனிய பொழுது போக்கு! ஓ ஏகாந்தமே! உன்பால் முனிவர்கள் அனுபவித்த இனிமைகள் எங்கே?" என கௌப்பர் என்னும் ஆங்கிலக் கவிஞர் தனிமையை நோக்கி இவ்வாறு பாடியிருக்கிறார்.

"He makes a solitude, and calls it-peace." (Byron)

"அவன் தனிமையில் அமர்ந்து சாந்தியை அனுபவிக்கிறான்" என பைரன் என்பவர் இங்ஙனம் கூறியுள்ளார்.

ஏகாந்த நிலையையும் சாந்த சீலத்தையும் மேல் நாட்டு அறிஞர்கள் எவ்வாறு கருதியுள்ளனர் என்பது இவற்றால் அறியலாகும்.

"Blessed are the meek: for they shall inherit the earth" (Bible)

"சாந்தமுள்ளவர் பாக்கியசாலிகள்; உலகம் அவரது உரிமையாயுள்ளது" என ஏசுநாதர் இவ்வண்ணம் அருளியிருக்கிறார். சாந்தத்தைப் பாக்கியம் என்று அந்தத் தீர்க்கதரிசி குறித்தது அது தெய்வத் திருவாய் உயிர்க்கு உய்தி தருதல் கருதி.

மன அமைதி ஆத்தும சத்தியைப் பெறுதலால் அதனையுடையவர் மகாத்துமாக்களாய் உயர்கின்றனர். மோட்ச இராச்சியம் அவர்களுக்குத் தனியுரிமை ஆகின்றது.

"Silent men are kings, for they rule over a great
country where none can follow them." (Still)

"மன அமைதியாளர் தனி அரசர்கள்; தம்மை யாரும் அணுக முடியாத பெரிய ஒரு இன்ப வுலகத்தை அவர் இனிது ஆண்டு வருகின்றனர்" என்னும் இது ஈண்டு அறிய வுரியது.

அலைகள் யாதும் இல்லாமல் அமைதியாயுள்ள நீர் நிலைகளில் உருவங்கள் தெளிவாகத் தெரிதல் போல் சலனமின்றிச் சாந்தமான உள்ளத்தில் நிலையான தெய்வக் காட்சி நிலவி நிற்கின்றது.

அதனால் அரிய இன்பங்களும் அதிசய மகிமைகளும் உளவாகின்றன.

வாக்குகளை அடக்கிக் கரணங்களை ஒடுக்கி ஞானிகள் மோனம் உற்றிருப்பதெல்லாம் பேரின்ப நலனைப் பெறுவதற்கே யாம்.

வாயின் அடங்குதல் துப்புரவாம்; மாசற்ற
செய்கை அடங்குதல் திப்பியமாம்;—பொய்யின்றி
நெஞ்சம் அடங்குதல் வீடாகும்; இம்மூன்றும்
வஞ்சத்தில் தீர்ந்த பொருள். (திரிகடுகம் 43)

இதனை நெஞ்சத்தில் வைத்துச் சிந்திக்க வேண்டும். மவுனத்தில் மகிமையும் இன்பமும் விளைதலால் மகான்கள் அதனை விரதமாக மருவி வருகின்றனர்.

"Silence is the perfectest herald of joy." (Shekespeare)

"அமைதி பரிபூரணமான இன்ப நிலையம்" என்னும் இது இங்கே அறிய வுரியது.

உலக நாட்டமாகவே யாண்டும் ஓடியலைந்து உழன்று திரிந்து முடிவில் ஒரு பயனும் காணாமல் வீணே மறுகி மருண்டு ஒழிந்து போகாதே; ஆனவரையும மோனமாக உன்னை நாடி யுணர்ந்து ஞான மணமுடன் வாழ்க்கையை நடத்துக.

---

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

சித்த சாந்தி தெய்வ நிலையம்.
உள்ளம் அடங்கின் உலகம் வசமாம்.
அமைதியால் யாவும் உளவாம்.
அரிய மகிமைகள் விளையும்.
சாந்த சீலன் தனி நிலையில் மிளிர்கின்றான்.
இன்ப நிலையமாய் இனிது திகழ்கின்றான்.
அமைதி குலையின் அவலம் நிலவும்.
பொறி ஓட்டம் வெறியாட்டமாம்.
அமைதியுள் ஆனந்தம் விளைகின்றது.
அது அமுத மயமா யுள்ளது.

சக-வது அமைதி முற்றிற்று.

# நாற்பத்திரண்டாம் அதிகாரம்.

## கருணை.



அஃதாவது எல்லா உயிர்களிடத்தும் இரங்கியருளும் தயை. இந்த இனிய நீர்மை சாந்த சீலத்தின் தனி விளைவாய்த் தழைத்து வருதலால் அமைதியின் பின் இணைத்து இது வைக்கப்பட்டது.

**411.** எவ்வுயிரும் தன்னுயிர்போல் எண்ணி இரங்கினன்றே
வெவ்வினைகள் யாவும் விலகியே—செவ்விய
புண்ணியங்கள் எல்லாம் புகுந்து திகழுமே
கண்ணெதிர் காணும் கதி. (க)

இ—ள்

எல்லா உயிர்களையும் தன் உயிர்போல் கருதி ஒழுகும் கருணை ஒருவனிடம் உறின் அன்றே பொல்லாத வினைகள் யாவும் தொலைந்து புண்ணியங்கள் எல்லாம் பெருகி உயர்ந்து முத்தி நலனை அவன் நேரே பெற்று மகிழ்வான் என்பதாம்.

இது கருணை கதி நிலையம் என்கின்றது.

அருள், தயை, கருணை, இரக்கம் என்னும் குணங்கள் ஆன்ம உருக்கங்களாய் வெளி வந்துள்ளமையால் அவை உயர்ந்த பண்புகளாய்ச் சிறந்து திகழ்கின்றன. எவனுடைய உள்ளத்தில் கருணை கனிந்துள்ளதோ அவனுடைய பிறவி புனிதமுடையதாய் உயர் நிலையை அடைகின்றது. படி ஏறிய மனிதனுடைய அடையாளமாக அருள் அமைந்து தெருள் ஒளி சிறந்து மிளிர்கின்றது.

தான் பெற்ற பிள்ளைகள்மேல் இயல்பாகவே தாய் உருகி வருகிறாள். அம் மன வுருக்கம் அதி மேன்மையாக மதிக்கப்பட்டுள்ளது. புனிதமான இனிய அந்தத் தாய்மை அன்பினும் கருணை மிகவும் உயர்ந்த நிலையில் ஒளி சிறந்துள்ளது.

அது சார்பு பற்றிக் குறுகிய நிலையில் மருவி வருகிறது. தன்னலமும் அபிமான உரிமையும் அதில் பின்னிப் பிணைந்துள்ளன.

யாதொரு சார்பும் சேராமல் எவ்வித அபிமானமும் சேராமல் எல்லா உயிர்களிடத்தும் பரந்து விரிந்து உள்ளம் பரிந்து வருதலால் கருணை யாண்டும் சிறந்த நீர்மையாய் உயர்ந்து திகழ்கின்றது. சீவ தயை தேவ அமுதமாய் மேவியுளது.

இந்தப் புனித நீர்மை எவ்வளவுக்கு எவ்வளவு ஒருவனிடம் கனிந்து விளைந்து வருகிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு அவன் மனித சமுதாயத்துள் உயர்ந்து மேலான ஒரு தனி மகிமையினை அடைகின்றான். உள்ளம் இரங்கியருள உயிர் ஓங்கி ஒளிர்கின்றது.

கல்வி, அறிவு, செல்வம் முதலியன உயர்வினை நல்குமாயினும் கருணைப் பண்பு போல் உண்மையான மேன்மையை அவை உதவ மாட்டா. கல்விமான் என்பதினும் கருணையாளன் என்பதில் எவ்வளவு பொருள் பொதிந்துள்ளது! கருதி யுணர வேண்டும்

கல்வியும் அறிவும் அருளோடு கலந்த அளவுதான் தெருளுடையனவாய் நலம் பல காண்கின்றன; கலவாதாயின் கடுமையும் கொடுமையும் மண்டி எவ்வழியும் அவை இழிவுறுகின்றன.

இனிய கருணையை இழந்த பொழுதே இன்ன நிலையனாய் மனிதன் இழிந்து படுகின்றான். கொடியன், தீயன், கொலைஞன், பாவி, அரக்கன், அசுரன், நீசன் என இங்ஙனம் பேசப்படுவன எல்லாம் கருணைப் பண்பை இழந்து போனமையால் நேர்ந்த ஈனங்களேயாம்.

"அருள் அற்றார் அற்றார்; மற்று ஆதல் அரிது." (குறள், 247)

அருளை இழந்தவன் பாவம் வளர்ந்து அழிந்தே போவான்; பின்பு அவன் விளங்கவே மாட்டான் என வள்ளுவப் பெருந்தகை உள்ளம் உருகி உரைத்துள்ள இது ஈண்டு ஊன்றி உணரவுரியது.

கருணையை இழந்தவன் அதோ கதியில் இழிந்து அழிந்து போகின்றான்; அதனையுடையவன் உயர் கதியில உயர்ந்து ஒளி சிறந்து மிளிர்கின்றான்.

எவ்வுயிர்க்கும் இனிமையாய்ப் புண்ணியம் சுரந்து வருதலால் கருணையுடையவர் யாண்டும் கண்ணியம் அடைந்து நிற்கின்றார். உயர்ந்தோர் பெரியோர் என ஒளி மிகுந்து உள்ளவர் எல்லாரும் தம் உள்ளத்தில் அளி புரிந்து வந்தவரே யாவர்.

"Sweet mercy is nobility's true badge."

(Titus Andronicus 1-1)

"இனிய தயை அரிய பெருந்தகைமையின் உண்மை அடையாளமாயுள்ளது" என்னும் இது ஈண்டு உணரவுரியது.

எவ்உயிரும் தன் உயிர்போல் எண்ணி.

என்றது கருணைபுரிந்து ஒழுகும் காட்சி காண வந்தது.

தனது உயிரை எந்த மனிதனும் மிகவும் அருமையாகக்கருதி எவ்வழியும் உரிமையோடு போற்றி வருகிறான். இந்த அனுபவத்தை ஊன்றியுணரின் சீவர்களுடைய இயல்பான சுபாவம் தெளிவாகின்றது. தன்னுடையது என்று கருதவே அங்கே ஒரு பிரியம் இயல்பாகவே மருவிச் செயல் புரிந்து வருகிறது.

தன்னலமே கருதி அவ்வளவில் நின்றுவிடின் அவன் சின்னவனாகவே தீர்ந்து படுகின்றான். தன்னைப் போலவே எல்லா வுயிர்களையும் எண்ணியருளின் அவன் பெரிய மகானாய் அரிய மகிமையை அடைகின்றான்.

எவ்வுயிரும் தன்உயிர்போல் எண்ணும் தபோதனர்கள்
செவ்வறிவை நாடிமிகச் சிந்தைவைப்பது எந்நாளோ?
(தாயுமானவர்)

பிறவுயிரையும் தன்னுயிர்போல் கருதி ஒழுகுபவர் விழுமிய தபோதனர்கள் என்று தாயுமானவர் இவ்வாறு துதித்திருத்தலால் அவரது புண்ணிய நீர்மையை உணர்ந்து கொள்கின்றோம்.

அந்தணர் என்போர் அறவோர்; மற்று எவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டுஒழுக லான். (குறள், 30)

எல்லா உயிர்களிடத்தும் தண்ணளி புரிந்து ஒழுகுவோரே சிறந்த தவசிகள்; உயர்ந்த தரும சீலர்கள் என இது இங்ஙனம் உணர்த்தியுள்ளது. அருந்தவர்களின் பெருந்தகவாய் அருள் மருவியுள்ளமையால் அதன் பெருமையும் பேறும் தெரிந்துகொள்ளலாம்.

புண்ணியங்கள் எல்லாம் புகுந்து திகழும்
கண்எதிர் காணும் கதி.

கருணையால் உளவாகும் அதிசய விளைவுகளை இது காட்டியருளியது. உயிரினங்களுக்கு யாதொரு துயரும் புரியாமல் யாண்டும் என்றும் இதமே கருதி வருதலால் அந்தத் தண்ணளி எண்ணரிய புண்ணியங்களுக்கு இனிய நிலையமாயது.

பிறவுயிர்களுக்கு இரங்கியருளும் கருணையாளனைத் தரும தேவதை உரிமை கொண்டு உவந்து வருகின்றது; வரவே அவன் இம்மை மறுமை என்னும் இருவகை நிலைகளிலும் அரிய பேறுகளை எளிதில் அடைந்து பெரிய இன்பங்களை மருவி மகிழ்கின்றான்.

அருளுடையானைத் தெய்வம் காத்தருளுதலால் அவன் திவ்விய மகிமைகளை அடைந்து யாண்டும் சிறந்து திகழ்கின்றான்.

"Mercy and truth preserve the king; and his throne is upholden by mercy." [Solomon]

"அருளும் சத்தியமும் அரசனைக் காக்கின்றன; தயையினாலேதான் அவனது சிம்மாசனம் நன்கு நிலைத்திருக்கின்றது" என சாலோமன் என்னும் அரசஞானி இங்ஙனம் கூறியிருக்கிறார்.

சீவகோடிகளுக்கு எவ்வழியும் செவ்விய இதமாய்த் தோய்ந்து நிற்றலால் கருணை என்றும் தருமநிலையமாய்த் தழைத்து யாண்டும் பெருமை விளைத்து இருமை நலன்களையும் அருளி வருகின்றது.

"மன்னுயிர்க்கு இன்னருள் புரியும் மாண்பினன்
தன்னுயிர்க்கு இனியனாய்த் தரும சீலனாய்
மன்னிய பரனருள் மருவி என்றுமே
இன்னுயிர் அமுதனாய் இன்பம் எய்துமே."

இன்னவாறு முன்னோர் பலரும் கருணைப்பண்பைப் புகழ்ந்து போற்றியுள்ளனர். ஆன்ம தத்துவங்களை உய்த்துணர்ந்தவர் மேன்மையான உறுதி நலங்களை உலகம் காண உணர்த்தியருள்கின்றார்.

அல்லல் யாதும் அணுகாமல் நல்ல சுகமே நல்கி வருதலால் கருணை ஒரு இனிய சீவ அமுதமாய் மேவியுள்ளது. அதனைக் கைக்கொண்டவர் என்றும் யாண்டும் இன்ப நலங்களையே கண்டு மகிழ்கின்றார். தண்ணளியில் விளைந்து வரும் தனி அமுதே எனக் கடவுளைத் துதித்திருத்தலால் அளியுடையார் அடையும் பொருள் நிலை தெளிவாம். அளியுடைமை அழிவில்லாத ஆனந்தத்தை அருளுகின்றது அதனை மருவி மகிழுக.

---

412. சார்ந்தார்க் கினிதான சார்பாகிச் சாராத
ஆர்ந்த வுலகிற் கருள்நலமாய்—நேர்ந்த
குடிக்குக் குலதனமாய்க் கூர்ந்து திகழ்வான்
படிக்குள் வளர்ந்த பலன். (உ)

இ—ள்

தன்பால் அன்பாய் அடுத்தவர்க்கு இனிய ஆதரவாய், பிற உயிர்கள்பால் பெருங்கருணை புரிந்து, தன் குடும்பத்தை இனிது பேணிவருபவன் வையகத்துள் வந்த தெய்வநீர்மையன் என்பதாம்.

சார்ந்தார் என்றது தன்னை ஆதரவாக நம்பி அடுத்த உறவினர் நண்பினர் முதலிய அன்புரிமையாளரை. சார்பு = துணை, உதவி. கிளைகளாய் அடுத்தவரை ஆதரித்து அருளுவது ஆண்மையின் முதல் உரிமையான கேண்மையாகின்றது.

மனிதன் பலவகைக் கடமைகளையுடையவன். வாழ்க்கையில் தனக்கு நேர்ந்துள்ள உரிமைகளை முறையாகச் செய்தபோதுதான் அவன் கரும தருமனாய் இனிய செவ்வியன் ஆகின்றான்.

தாய் தந்தை மனைவி மக்கள் முதலிய ஒக்கல்களை உரிமையுடன் பேணி வருபவன் உயர்ந்த ஆண்மையாளனாய்ச் சிறந்து திகழ்கின்றான். அங்ஙனம் பேணாதவன் பேதையாய் இழிந்து படுகின்றான். உரிமை இழந்தபோது பெருமை ஒழிந்து போகின்றது.

தனக்குரிய கருமங்களை மறவாமல் மனவுறுதியுடன் செய்து வருபவனைக் கரும வீரன் என்று உலகம் புகழ்ந்து வருகின்றது. உரிய வினையாளன் அரிய மகிமையை அடைகின்றான்.

தன்னைச் சார்ந்தவரைத் தகுதியுடன் ஆதரித்து வருவதில் அன்புரிமை பெருகி எழுகின்றது. இந்த அன்பு நிலையில் குறுகி நின்று விடாமல் எல்லா உயிர்களிடத்தும் கண்ணோடி உள்ளம் உருகிவரின் அங்கே புகழும்புண்ணியங்களும் பொங்கிவருகின்றன.

சார்பு பற்றிய பிரியம் அன்பு என அமைந்து நிற்கின்றது. இந்தப் பண்பு மனிதனை மாண்புடையன் ஆக்கும்; ஆயினும், மேலும் வளர்ந்து சென்றால் மகிமைகள் பல விளைந்து பெருகும்.

சார்ந்தவர் அளவில் நில்லாமல் எல்லா உயிர்களிடத்தும் அருள் புரிந்து வருபவன் பெரிய ஆன்ம ஊதியத்தை அடைந்து மேன்மை மிகப் பெறுகின்றான். அயலார்பால் இயல்பாக இரங்கியருள்பவனே உயர்வான நிலையில் யாண்டும் ஓங்கி ஒளிர்கின்றான்.

சாராத ஆர்ந்த உலகிற்கு அருள்.

என்றது தொடர்புடைய மனைவி மக்களிடமேயன்றி யாதொரு தொடர்பும் இல்லாத சீவ கோடிகள் யாவரிடத்தும் உள்ளம் உருகி அருள் புரியும் உரிமையைப் பொருள் தெரிய உணர்த்தியருளியது. ஆர்தல் = நிறைதல். பறவை, விலங்கு, ஊர்வன, நீர் வாழ்வன முதலாக எண்ணரிய உயிரினங்கள் மண்ணுலகில் யாண்டும் நிறைந்துள்ளன. அந்தப் பிராணிகளை எல்லாம் தன் உயிர்

எனவும், உறவினங்கள் எனவும் உரிமையுடன் எண்ணிக் கண்ணோடி ஒழுகுவது புண்ணிய அருளாய்ப் பொலிந்து வருகின்றது.

"எவ்வுயிரும் என்உயிர்போல் எண்ணி இரங்கவும்நின்
தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே!"

எனத் தாயுமானவர் இறைவனை நோக்கி இவ்வாறு உருகி உரைத்திருக்கிறார். பிறவுயிர்களுக்கு இரங்கியருளும் கருணைப் பண்பு ஒருவனுக்கு அமையுமாயின் அவன் பிறவி நீங்கி உயர் கதி அடைவன் ஆதலால் அந்தப் பண்பாட்டைத் தனக்குத் தந்தருளும்படி பரமனிடம் முறையிட்டு நின்றார்.

"Teach me to feel another's woe,
To hide the fault I see." (Pope)

"குற்றத்தைக் காணமல் பிறருடைய துயரங்களை உணர்ந்து இரங்கும்படி எனக்கு அருளுக" என போப் என்பவர் ஆண்டவனை நோக்கி இப்படி வேண்டியிருக்கிறார்.

பிறவுயிர்கள்மேல் இரங்கி உருகும் இரக்கம் எல்லார்க்கும் எளிதில் அமையாது; தரும நலம் கனிந்த புனித மனிதர்களிடமே அது இனிது அமைகின்றது.

ஆன்ம வுருக்கம் அதிசய மேன்மைகளை அருளுகின்றது. தன் உள்ளம் உருகிய அளவு ஒருவன் தருமாத்துமாவாய் ஒளி மிகப் பெறுகின்றான். பிறவுயிர்களின் துயர்களைக் கண்டபோது எவனுடைய உள்ளம் உருகியருளுகின்றதோ அவன் பிறவித் துயரம் நீங்கிப் பேரின்ப நலனை அடைகின்றான்.

அன்பு செய்து அருள் புரிந்து உன் வாழ்வை இன்பம் ஆக்குக.

---

413. கருணை அகத்தில் கனியின் சகத்தில்
அருணன் எனவே அமர்ந்து—தெருணிலை
ஓங்கி உயர்வான் உறுதி நலங்களவன்
பாங்கு குவியும் பரிந்து. (ங)

இ—ள்

தன் உள்ளத்தில் அருள் கனியின் அவன் உலகத்தில் ஒரு இனிய சோதியாய் உயர்ந்து திகழ்வான்; அரிய உறுதி நலங்கள் யாவும் அவனிடம் எளிதே வந்து குவியும் என்பதாம்.

உடல்களை மருவி உலாவுகின்ற உயிரினங்களுள் மனிதன் உயர் நிலையில் தலை சிறந்து நிலாவுகின்றான். அறிவு நலங்களும் குண நீர்மைகளும் மனிதனுக்குத் தனி உரிமைகளாய் மருவி நிற்கின்றன. இனிய தன்மைகளை எய்தியுள்ள அளவு அவன் தனியே ஒளி சிறந்து திகழ்கின்றான். நல்ல நீர்மை இல்லையாயின் அவன் புல்லியனாய்ப் புலையுறுகின்றான்.

வெளியே வீசுகின்ற நல்ல வாசம் மலரின் மாண்பைக் காட்டுகின்றது; உள்ளே கனிந்துள்ள கருணைப் பண்பு மனிதனது மேன்மையை உணர்த்துகின்றது.

கருணை கனியின் அருணன்.

என்றது அருளால் விளையும் அதிசயமேன்மையை உணர்த்தி நின்றது. கனிதல்—இனிது விளைதல். அருணன்—சூரியன்.

மண்ணுலகில் மனித சாதியுள் கருணையுடையவன் விண்ணுலகில் தேவ இனத்துள் சூரியன் என ஒளிர்கின்றான் என்றது அருள் நிலையின் பொருள் உணர வந்தது.

உள்ளத்தில் அருள் கனிய உயிர் ஒளி பெறுகின்றது. கருணை நீர்மையால் புனிதம் அடையவே சீவான்மா பரமான்வின் இனிய இனமாய்த் தனி மகிமை அடைகின்றது.

கருணாகரன் என்பது கடவுளுக்கு ஒரு பெயர். அருளுக்குத் தனி நிலையமா யுள்ளமையால் கருணைக் கடல் என இறைவன் யாண்டும் துதிக்க நின்றான். பிள்ளைகள்பால் பேரன்பு கொண்டுள்ள தாய்போல் சீவ கோடிகளிடம் பேரருளுடையனாய்ப் பரமன் பெருகியிருக்கிறான். கடவுளைக் குறித்து அறிஞர்கள் துதிக்கும் பொழுது அவனது கருணை நிலையையே கருதி உருகுகின்றனர்.

அருள் அருவி வழிந்து வழிந்து ஒழுக ஓங்கும்
ஆனந்தத் தனிமலையே! அமல வேதப்
பொருளளவு நிறைந்து அவற்றின் மேலும் ஓங்கிப்
பொலிகின்ற பரம்பொருளே! புரணம் ஆகி
இருளறுசிற் பிரகாச மயமாம் சுத்த
ஏகாந்தப் பெருவெளிக்குள் இருந்த வாழ்வே!
தெருளளவும் உளமுழுதும் கலந்து கொண்டு
தித்திக்கும் செழுந்தேனே! தேவ தேவே! (1)

அருள்விளக்கே! அருட்சுடரே! அருட்சோதிச் சிவமே!
அருளமுதே! அருள்நிறைவே! அருள்வடிவப்பொருளே!
இருள்கடிந்து என் உளமுழுதும் இடங்கொண்ட பதியே!
என்அறிவே! என்உயிரே! எனக்கினிய உறவே!
மருள்கடிந்த மாமணியே! மாற்றறியாப் பொன்னே!
மன்றில்நடம் புரிகின்ற மணவாளா! எனக்கே
தெருள்அளித்த திருவாளா! ஞானவுரு வாளா!
தெய்வநடத்து அரசே! நான் செய்மொழி ஏற்றருளே!
(அருட்பா)

கடவுள் அருள் வடிவினர் என அன்பு கனிந்து வந்துள்ள இந்தப் பாசுரங்களை இங்கே ஓர்ந்து சிந்திக்க வேண்டும். தேவனை நினைந்து உருகி வெளி வருகின்ற மொழிகள் சீவஒளிகளாய் மேவி மிளிர்கின்றன. அரிய பல உண்மைகளை விழிகள் காண அவை தெளிவுறுத்துகின்றன. தெய்வ நிலை தெளிந்த அளவு உய்தி நலம் விளைந்து வருகின்றது.

பரமன் கருணை நீர்மையனுயுள்ளமையான் அதனையுடையவர் அவனது உரிய உறவினமாய் அரிய ஒளி பெறுகின்றனர்.

உறுதி நலங்கள் அவன் பாங்கு குவியும்.

தன் நெஞ்சில் தயை கனியின் அந்த மனிதனுடைய நினைவு சொல் செயல் எல்லாம் யாண்டும் இதமாய் இனிமை சுரந்தே வரும்; வரவே தரும நலங்கள் யாவும் அவனிடம் பெருகி நிறையும்; நிறையவே அவன் ஒரு தரும தேவதையாய் ஒளி சிறந்து திகழ்வான். அருள் வளர அறம் வளர்கின்றது.

நதிகளின் நீர்கள் கடலை அடைந்து பெருகுதல் போல் புண்ணிய போகங்கள் எல்லாம் கருணையில் வந்து நிறைந்து நிற்கின்றன. தருமநிலையமா யுள்ளமையால் கருணையை இறைவன் உருவமாகக் கவிகள் வருணனை செய்ய நேர்ந்தனர்.

யாரும் யாதும் அறிய முடியாத அரிய பரமன் எவரும் எளிது காண வெளியே உருவம் மருவி வருவது கருணையால் ஆதலின் அது கருணையுருவம் என வந்தது.

"அறிவுக்கு அறிவாகி அவ்வறிக்கு எட்டா
நெறியிற் செறிந்தநிலை நீங்கிப்—பிறியாக்
கருணைத் திருவுருவாய்க் காசினிக்கே தோன்றிக்
குருபரன் என்று ஓர் திருப்பேர் கொண்டு."

"தெள்ளு திரை கொழிக்கும் செந்தூரில் போய்க் கருணை
வெள்ளமெனத் தவிசில் வீற்றிருந்து."
(கந்தர் கலி வெண்பா)

"தண்ணளி பொங்கிய கருணை நிதியே!"
"கருணை கொழித்த பெருக்காறே!"
(முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ்)

"என் உளம் குடிகொண்டு இரும்பயன் அளிக்கும்
கள்ளவிழ் குழல்சேர் கருணை எம்பெருமான்." (கல்லாடம்)

கருணைக்கும் இறைவனுக்கும் உள்ள உரிமையை நூல்கள் இவ்வாறு உணர்த்தி வருகின்றன. கருணை இங்ஙனம் கடவுள் என மருவியுள்ளமையால் அந்நீர்மையையுடையவரது நிலைமையும் தலைமையும் நேரே தெரியலாகும்.

தனது உள்ளம் தயையால் உருகுமாயின் அந்த மனித சன்மம் மிகவும் புனித முடையது; புண்ணிய பரிபாகம் எய்தியது என மேலோரால் எண்ணி மதிக்கப் படுகின்றது.

உயிர்க்கு இனிய உறுதி நலங்கள் எல்லாம் அருளால் உளவாகின்றன; அந்த அரிய சீவ அமுதத்தை யாண்டும் உரிமையாகப் பேணி ஒழுகி உயர் கதி காணுக.

---

414\. கடவுள் அருளைநீ கைக்கொள்ள வேண்டின்
உடலுள் மருவும் உயிர்கள்—இடருள்
படாவகை பேணிப் பரிந்து புரக்க
விடாதுனை வீடு விழைந்து. (ச)

இ—ள்

கடவுளுடைய கருணையை நீ அடைய விரும்பின் உடலுயிர்கள் யாதும் இடர் உறாவகை பேணி இதம் புரிந்தருளுக; அங்ஙனம் அருளின் பேரின்ப வீடு உன்னை விழைந்து வந்து உவந்து தழுவி வரைந்து கொள்ளும் என்பதாம்.

மனிதன் உலக நிலைகள் பலவும் காண்கின்றான். எவையும் நிலையில்லாதன என்று தெரிகின்றான். தனது உடம்பு அழிந்து போகுமுன் உயிர்க்கு உறுதி நலனை அடைந்து கொள்ள முயல்கின்றான். அம் முயற்சியின் அளவே உயர்ச்சி யுடையனாய் அவன்

ஒளி சிறந்து திகழ்கின்றான். அவ்வாறு முயலாதவன் எவ்வாற்றானும் உய்தியின்றி வெவ்விய துயரங்களிலேயே வீழ்ந்து உழலநேர்கின்றான். காலம்கருதிக் கதிநிலை காணுதல் சாலவும் இனிதாகிறது.

அநித்திய வாழ்வை அடைந்துள்ளவன் அது கழியுமுன் நித்தியமான உண்மை நிலையைப் பெற்றுக் கொள்வான் ஆயின் அவனே பிறவிப் பயனைப் பெற்ற பெருமகிமையாளன்; பேரின்ப நிலையினன்; தத்துவ ஞானி; நித்திய முத்தன்; நிரதிசயானந்தன்; என இன்னவாறு யாண்டும் வியந்து துதிக்கப் படுகின்றான்.

ஈண்டு எடுத்து வந்த ஊன உடலை ஒருவியவுடன் அடுத்து ஆண்டவன் உரிமையை மருவினவனே அதிசய பாக்கியவானாய் என்றும் எவராலும் துதி செய்யப் பெறுகின்றான்.

இறைவனுடைய உறவுரிமையைச் சீவகோடிகள் அடைய வேண்டுமாயின் அவனது இயல்பினை ஓரளவு மருவியாக வேண்டும். கருணை, சத்தியம், தருமம் என்பன அவனுடைய குண நீர்மைகளுள் தலைசிறந்துள்ளன. புனிதமான இந்த இனியநீர்மைகளை அடைந்த அளவு மனிதன் தேவனாய் மருவி வருகின்றான். அருள் நிலையமான அந்தப் பரம் பொருளின் ஒளி தண்ணளி கண்ட இடத்தில் தாவி வந்து மேவி மிளிர்கின்றது.

சீவ கருணையுள் தேவ கருணை விளைந்து வருதலால் சீவகாருணியம் யாவினும் பெரிய புண்ணியமாய்ப் பெருமகிமை பெற்றுள்ளது. இரக்கமே துறக்கம் என்றதனால் அதன் ஏற்றம் புலனாம்.

உயிர்கள் இடருள் படாவகை பரிந்து புரக்க

என்றது சீவ காருணியத்தின் பொருளைத் தெருள் செய்து காண வந்தது. இனிய தயையினாலேதான் மனித வாழ்வு புனிதம் அடைந்து வருகின்றது. மனம் இரங்க மகிமை பிறங்குகின்றது.

தனது செயல்இயல்கள் எவ்வழியும் எவ்வுயிர்க்கும் யாதொரு இடரும் நேராவகை பாதுகாத்து ஒழுகுவதோடு அமையாமல் நேர்ந்த துயரங்களை யாண்டும் நீக்கியருளுவதே தேர்ந்த சீவ காருணியமாய்ச் சிறந்து திகழ்கின்றது.

தன் உயிரைப் போல் பிறவுயிரையும் எண்ணி இரங்கி ஒழுகுபவனே உண்மையான உத்தம மனிதனாகின்றான்.

தன்னைப் போல் பிறரை எண்ணுவது தகுதியான நடுவு நிலைமை ஆதலால் தகவு என அருளுக்கு ஒரு பெயரும் வந்தது.

தகவும் கருணையும் இரக்கமும் தயவும்
கிருபையும் அபயமும் கிளர் அருள் ஆகும். (பிங்கலந்தை)

அருளின் பெயர்களும், அவை கருத்தோடு குறித்துள்ள பொருள்களும் கூர்ந்து ஓர்ந்து கொள்ளும்படி இங்ஙனம் சேர்ந்து வந்துள்ளன. பரியாய நாமங்கள் வெளியே ஓர் இனமாய்த் தோன்றினும் உள்ளே கூர்மையான வேறு நீர்மைகள் விரவி நிற்கின்றன.

இயல்பாகவே உயர் நிலையில் உயிர் உருகுவது கருணை. பிறருடைய துன்பம் கண்டு உள்ளம் இரங்குவது இரக்கம். இதயம் கனிந்து கரைவது தயை. அளி மிகுந்து விரைவது கிருபை. அவலம் அடைந்தவரை ஆதரித்து அருளுவது அபயம். கனிவான இந்த இனிய நீர்மைகள் மனிதனை எவ்வழியும் புனிதனாக்கித் தனி நிலையில் உயர்த்தித் திவ்விய மகிமைகளை விளைத்தருளுகின்றன.

சீவர்கள்பால் ஒருவன் இரங்கி அருளுகின்ற பொழுது கடவுள் அவனை உவந்து நோக்கி விழைந்து நிற்கின்றார்.

சீவ தயாபரன், ஏழை பங்காளன், ஆதரவாளன் என்னும் பெயர்களைக் கடவுள் இயல்பாகவே எய்தியிருக்கிறார். எளிய பிராணிகள்பால் தான் செய்யவுரிய கருணையை மனிதன் செய்யவே பரமன் அவனுக்குத் தனி உரிமை ஆகின்றார்.

"He that hath pity upon the poor lendeth unto the Lord; and that which he hath given will he pay him again." (Bible)

"ஏழைகள்பால் இரங்கி அருள்பவன் இறைவனுக்குக் கடன் கொடுக்கிறான்; அக்கடனை அவனுக்கு அவர் திருப்பிக் கொடுத்தருளுவார்." என்னும் இது இங்கே அறிய வுரியது. சீவர்கள்பால் கருணை புரிந்து வருபவன் கடவுளைத் தனக்குக் கடனாளி ஆக்கிக் கொள்கின்றான் எனின், அருள் நீர்மையின் மகிமையை ஓரளவு பொருள் தெரிந்து உணர்ந்து கொள்ளலாம்.

சீவ கருணை தேவ கருணையை விளைத்தருளுகின்றது. இனவுரிமையின் இயல்பும் அமைவும் நினைவு கூர்ந்து சிந்திக்கத்தக்கன.

உயிரினங்கள் யாவும் கடவுளின் உடைமைகளாய் அமைந்துள்ளமையால் அவைகளை உரிமையுடன் பேணி வருபவனிடம் அப் பரமனது அருள் காணியாய்க் கை வருகின்றது.

கடவுளுடைய கிருபையை ஒருவன் அடைய வேண்டின் வேறு யாதொரு பூசனையும் செய்ய வேண்டா; உயிர்களுக்கு இரங்கியருளினுல் போதும்; பரமன் கருணை அவன்பால் விரைந்து வந்து பெருகி நிற்கின்றது.

சீவ தயை யுடையவன் தேவ தயையை எளிதே அடைந்து கொள்ளுகின்றமையால் கருணை எவ்வளவு சிறந்த பாக்கியம்! என்பதைச் செவ்வையாகத் தெளிந்து கொள்ளலாம்.

உள்ளம் உருகி உயிர்களுக்கு இரங்குபவன் பரம்பொருளினுடைய பேரின்ப வெள்ளத்தை அனுபவிக்கின்றான். கருணை மாத்திரம் ஒருவனுக்கு அமையுமாயின் அவன் கடவுளின் பிள்ளையாய்ப் பெருமை மிகப் பெறுகின்றான்.

"That mercy I to others show
That mercy show to me." (Pope)

"எனக்கு நீ காட்டுகிற கருணையைப் பிறர்க்கு நான் காட்ட அருள்" என ஆங்கிலக் கவிஞர் இறைவனிடம் இவ் வண்ணம் விண்ணப்பஞ் செய்துள்ளார்.

பிறவுயிர்கள்பால் தயை புரிந்து வருபவன் தன் உயிர்க்கு அமுதத்தை ஊட்டியவனுய் ஆனந்தத்தை வளர்த்து வருகிறான்

"The merciful man doeth good to his own soul." (Solomon)

"தயையுடையவன் தன் ஆன்மாவுக்கு நன்மை செய்கின்றான்" என்னும் இது இங்கே எண்ணத்தக்கது.

வீடு உளை விடாது.

கருணையாளனுக்கு உண்டாகும் உறுதி நலனை இது உணர்த்தியருளியது. வீடு=மோட்சம். பற்றுக்களையும் பாவங்களையும் விட்டவர் பெறுவது ஆதலின் பேரின்ப பதவி வீடு என வந்தது.

சீவ காருணியம் எவ்வழியும் புண்ணியமே பொலிந்து வருதலால் அந்தத் தண்ணளியாளனுக்கு விண்ணவர் பதங்களும், மேலான பேரின்ப வீடும் நேரே தனி உரிமைகள் ஆகின்றன.

உயிர்கட் கிரங்கின் உயர்கதி அங்கே
இயல்புற நின்ற தெதிர்.

மனிதன் கருணை புரிந்த அளவே புனித இன்பனுக் கதி நிலையைக் காண்கின்றான் என்றது அருளுடைமையால் விளையும் ஆனந்தப் பேற்றை அறிந்து கொள்ள வந்தது.

உள்ளம் தயை புரிந்து வரின் பிறவித் தொல்லைகள் ஒழிகின்றன; எல்லையில்லாத இன்ப நலன்கள் வருகின்றன; இத்தகைய அருளை மருவி இருள் நீங்கி இன்பம் பெறுக.

---

415. கருணை அளவே கதியென் றிறைவன்
வருணன் அறிய வழங்கி—அருணனி
காட்டி மறைந்தான் கதிமொழியை யாவருமே
கேட்டு மகிழ்ந்தார் கிளர்ந்து. (ரு)

இ—ள்

அருளின் அளவே கதி உளது என வருணனிடம் இறைவன் அருளிய தெருள் மொழியை அமரர் அனைவரும் அறிந்து உவகை அடைந்தார் என்பதாம்.

இது கருணையின் தெய்வீக நிலையை உணர்த்துகின்றது.

தேவர்கள் ஒருமுறை மேரு மலையில் கூடினர். சீவர்கள் இயல்பையும் உலக வாழ்வையும் குறித்துப் பலவாறு பேசிக் கொண்டிருந்தனர். தங்களுடைய பொன்னுலக வாழ்வும் புண்ணியத்தால் அமைந்தன; அது கழியின் அந்நிலையும் ஒழியும் என அமரர் குருவாகிய வியாழன் கூறினன்.

மோட்சம், சுவர்க்கம், உலகம், நரகம் என்னும் நிலைகளில் ஆன்மாக்கள் நிலவி நிற்கின்றன. முத்தர், தேவர், மனிதர், நரகர் என அந்நிலையினர் முறையே மருவியுள்ளனர். முன்னவர் ஒருவரே நித்தியமான உத்தம நிலையினர்; பின்னவர் மூவரும் பிறவியில் உழலும் பிழைபாடுடையவர்; என்றும் அழியாத பேரின்ப வீட்டைப் பெறுவதே விழுமிய பேறு ஆம் என நாரதர் பேசினர்.

பற்று முற்றும் அற்றவரே அந்த அரிய முத்தியை அடைய உரியவர் மயலான பற்று அற்றபோது இயல்பாகவே பற்று அற்றுள்ள பரமனை உயிர் பற்றிக் கொள்கின்றது; பற்றவே நித்திய

முத்தியை அது பெற்று மகிழ்கின்றது; ஆகவே நிராசை, தெய்வ பத்தி என்னும் இரண்டும் மோட்ச உலகை அடைதற்கு இரு சிறகுகளாக சீவப் பறவைக்கு மருவியிருக்கின்றன என்று பிருகு முனிவர் உரைத்தார்.

உலக ஆசைகள் அறுதலும், கடவுள்பால் ஆசையுறுதலும் வீடு அடைதற்கு வழியாம் என முனிவர் கூறி முடிக்கவே வருணன் எழுந்தான். மோட்ச மார்க்கங்களான இந்த இரண்டினும் வேறு ஒரு வழியால் நேரே பேரின்ப வீட்டை அடையலாம். அது சீவகாருணியமே ஆம். கடவுளை நினைந்து அன்பு செய்வதைக் காட்டினும் உயிர்களுக்கு இரங்கி அருளுவது உயர்ந்தது. இறைவன் எங்கும் நிறைந்திருக்கிறான்; அகில சராசரங்களும் அவனுடைய உருவங்களாயுள்ளன. தன்னை நேரே எண்ணுகின்றவனை விடத் தனது உரிமைகளைப் பேணியருள்கின்றவனை அவன் பெரிதும் உவந்து பார்க்கின்றான். ஒரு புழுவுக்கு இரங்கினும் அந்த இரக்கமுடையானை முழுமுதல் பரமன் விழிகளிப்ப நோக்கி விழைந்து மகிழ்கின்றான். கருணையாளனைக் கருணைக் கடவுள் எவரினும் உரிமையாளனாத் தழுவி மகிழ்தலால் அவன் விழுமிய நிலையில் விளங்கி நிற்கின்றான். ஆகவே தன் உள்ளத்தில் கருணை தோன்றிய அளவே ஒருவனுக்குக் கதி உண்டாகின்றது என்று வருணன் இங்ஙனம் கூறுங்கால் அசரீரியாய் "கருணை அளவே கதி" என ஆகாயத்திலிருந்து ஒருஒலி எழுந்தது. தேவர் யாவரும் அதிசயமுடையராய்த் துதிசெய்து வியந்தனர்.

அந்த அரிய நிகழ்ச்சியை இது குறி செய்து வந்தது.

கருணை அளவே கதி.

என்றது பண்டு வான ஒலியாய் வந்த ஞான மொழியை வரைந்து காட்டியது. தெய்வ வாக்கு உய்வை ஊட்டியுள்ளது.

சீவர்கள்பால் அருள் புரிந்து வருகின்ற அந்த உள்ளம் தெருள் மிகுந்து திவ்விய மகிமையை அடைகின்றது. அடையவே படி ஏறிய கதி நிலை அதன் இனிய உரிமையாகின்றது.

இதயம் உருகி வருகின்ற அருள் ஒழுக்கம் புண்ணிய நீர்மையாய்ப் பொலிந்து வருதலால் எண்ணரிய இன்ப நலங்களை எளிதே எய்திக் கருணையாளன் இனிது மகிழ்கின்றான்.

கடவுள் கருணைக் கடலாய் உள்ளமையால் கருணையுடையவர் அவனை எளிதில் அடைந்து இன்பம் பெறுகின்றனர்.

அருளினில் விளைந்தெழும் அமுதை; யாண்டுமே
இருள்ஒழித்து இன்பருள் இறையை; எங்கணும்
தெருளொடு திகழ்தரு தேவைத்; தேர்ந்தருள்
உருவினர் மருவினர் உரிமை யாகவே.

என வரும் இதனால் கருணையாளர் கடவுள் இனமாய் மருவி மிளிர்தலை அறியலாகும். அரிய பேரின்ப நிலை அருளால் உளவாகின்றது; அதனைப் பொருள் செய்து போற்றி ஒழுகுக.

---

416. ஓரறிவே யாகி உறையும் கொடிசெடிக்கும்
கூர்துயரம் யாதும் குறியாமல்—பேரருளே
கொண்டு புரியும் குணமுடையார் பேரின்பம்
கண்டு மகிழ்வர் கலந்து. (சு)

இ—ள்

ஓர் அறிவுடைய கொடி செடிகளுக்கும் யாதொரு துயரமும் நேராமல் கருணையுடன் கருதி ஒழுகும் இயல்பினர் பேரின்ப நிலையை நேரே அடைந்து மகிழ்வர் என்பதாம்.

உயர்ந்த கருணை நீர்மையை இது உணர்த்துகின்றது.

உயிர் இனங்கள் யாண்டும் உயர் நலங்களையே விரும்புகின்றன. துயரங்களை எவ்வழியும் வெறுத்து அஞ்சுகின்றன. சீவர்களின் இயல்பு இவ்வாறு அமைந்திருத்தலால் இடர் செய்வது பாவம் என வந்தது. புண்ணியம் என்பது தண்ணளியுடையது.

பிறர்க்கு இரங்கி இதம் செய்கின்றவன் புண்ணியவானாய் இன்ப வுலகத்தை அடைகின்றான்; அகிதம் எண்ணுகின்றவன் பாவியாய்த் துன்ப நிலையைத் தொடர்கின்றான். அருளுடைமையில் இனிமை கனிகின்றது; அஃது இல்லாத இடத்தில் கொடுமை விளைகின்றது. சிறந்த அருள்நலமுடையவன் பிறந்த பயனை விரைந்து பெறுகின்றான்; அல்லாதவன் இழிந்த நிலைகளில் அழுந்தி உழல்கின்றான்.

மனிதர் விலங்கு பறவைகளிடமே அன்றி எறும்பு புழு முதலிய சிறிய பிராணிகள் பாலும் அளி புரிந்து வருபவன் ஒளி

யிருந்து வருகின்றான். நல்ல அறிவுடைய பிறவிக்கு அடையாளம் எல்லா உயிர்களிடத்தும் இரங்கி அருள் புரிதலேயாம்.

உலகப் பிறவிகளில் மனிதன் உயர்ந்தவன். ஆறு அறிவு உடைமையால் இச் சீரடைய நேர்ந்தான். மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்பொறி அறிவுகளோடு மன உணர்வும் கூடி யிருத்தலால் மக்கள் ஆறறிவுடையவர் என மாண்புற்று நின்றார்.

மேலே இப்படிப் படிஏறி உயர்ந்துள்ள மனிதன் கீழே ஓரறிவு முதலாய்த் தாழ்ந்துள்ள இனங்களிடம் கண்ணோடி அருள்வது கடமை ஆயது.

புல் பூண்டுகளிடமும் கருணை செய்து ஒழுக வேண்டும் என்பது ஓரறிவு என்றதனால் உணரவந்தது. தீண்டுதலை மாத்திரம் தெரியும் ஆதலால் மரம் செடிகள் இந்த இனத்தைச் சேர்ந்தன. தொட்டால் சிணுங்கி என்று ஒரு செடியும் உள்ளது. பரிசம் ஒன்றே அறியும் பரிசுடைமையால் முதல் வரிசையில் நின்றது.

ஒன்று அறிவதுவே உற்று அறிவதுவே;
இரண்டு அறிவதுவே அதனொடு நாவே;
மூன்று அறிவதுவே அவற்றொடு மூக்கே;
நான்கு அறிவதுவே அவற்றொடு கண்ணே;
ஐந்து அறிவதுவே அவற்றொடு செவியே;
ஆறு அறிவதுவே அவற்றொடு மனனே;
நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே.
புல்லும் மரனும் ஓர் அறிவினவே;
நந்தும் முரளும் ஈர் அறிவினவே;
சிதலும் எறும்பும் மூவறி வினவே;
நண்டும் தும்பியும் நான்கறி வினவே;
மாவும் மாக்களும் ஐயறி வினவே;
மக்கள் தாமே ஆறறி வுயிரே. (தொல்காப்பியம், மரபியல்)

ஓர் அறிவு முதல் ஆறு அறிவு வரையும் உள்ள உயிரினங்களை இதில் கூர்ந்து நோக்கி நிலைமைகளை ஓர்ந்து கொள்கின்றோம்.

மன உணர்வின் மகிமையினால் மனிதன் உயர் நிலையை அடைந்துள்ளான். நல்லதும் தீயதும் நாடி அறிய வல்லவன் ஆதலால் யாண்டும் தீமையை ஒழித்து நன்மையே செய்ய உரிய வனயினன். உரிமை புரிய உயர்வு வருகின்றது.

கொடி செடிக்கும் துயரம் குறியாமல்.

என்றது கனிந்த கருணையின் காட்சி காட்டியது.

மரத்தில் ஒட்டியிருக்கும் போது இலை தழைகளோடு கிளைகள் செழித்திருக்கின்றன. அவற்றை வெட்டிப் பிரித்துவிடின் வாடி வதங்கி மடிந்து போகின்றன. சாக மூலங்களிடம் இங்ஙனம் சோகங்கள் உள்ளமையால் அவற்றிற்கு இடர் செய்வதும் பாவம் ஆயது. புனிதமான அரிய தவ நிலையில் உள்ளவர் பசிய இலைகளை யும் புசியாமல் உதிர் சருகுகளை உண்பர். எவ்வுயிர்க்கும் யாதொரு தீதும் கருதாத கருணையாளரைக் குறித்துச் சொல்லும்பொழுது அவர் பசும்புல் நோக மிதியார் என்பது உலக வழக்கமாயுள்ளது.

"எச்சில் என்று பூவை இகழ்ந்தோர்க்கு ஊனப்போற்றப்
பச்சிலையும் கிள்ளப் படுமோ பராபரமே"

என்றதில் தாயுமானவரது கருணையுள்ளத்தைக் காண்கின் றோம். அருள் கனிந்த நெஞ்சம் எந்த உருவில் இடர் நேரினும் சிந்தை உருகி விடுகின்றது. யாண்டும் கண்ணோடித் தண்ணளி பொங்கி வருகின்றது.

இனிய மாங்கனியை அறுத்துப் பக்குவமா இலையில் வைத்து ஓர் அன்பர் கொண்டு வந்து கொடுத்தபோது புத்தர் அதனைக் கண்டு சித்தம் கரைந்தார். "அழகிய நல்ல பழ உருவம் சிதைந்து போயதே! அந்த விழுமிய வடிவினை இனி என்று காண்பேன்?" என்று உள்ளம் உருகிச் சொல்லி அதனை உண்ணாது போயினார்.

விநாயகர் சந்நிதியில் தேங்காய்கள் சிதற எறிவதைப் பார்த்து இராமலிங்க அடிகள் ஒருமுறை பதறியிருக்கிறார்.

கண்மூன் றுடையானைக் கண்மூன்றுன் செய்முன்னே
உண்மூன்றும் காணு துடைக்கின்றார்—விண்மூன்றும்
கண்டாலும் உள்ளே கருணை இலராயின்
கொண்டார் அவமே குடி.

கண்ணோட்டமுடைய தண்ணளியாளரது இயல் செயல் யாவும் புண்ணிய மணமே யாண்டும் பொலிந்து வீசுகின்றது.

ஓரறிவுயிர்க்கும் ஊறு செய்யாமையே ஆறு அறிவுபடைத்த அரிய பிறவிக்கு உரிய பயனும். உற்ற பயனை இழந்து விடின் பெற்ற பெருமை இறழ்ந்து குற்றம் மிகுந்து படும்.

தாழ்ந்தாரிடம் இரங்கி அருள்பவன் உயர்ந்த பெரும் பதவியை அடைந்து கொள்கின்றான். உருகிய நீர்மையோடு பிறர்க்குச் சிறிது இதம் செய்யினும் அது பெருகிய நீர்மையாய்ப் பேரின்பம் சுரந்தருள்கின்றது.

நல்ல அறிவுக்குப் பயன் உள்ளதை உணர்ந்து உறுதி தெளிந்து கொள்ளலேயாம். அயலார்பால் எது செய்யினும் அது தன் உயிர்க்கே உரிமையாய் வருதலால் விவேகிகள் யார்க்கும் இடர் எண்ணாமல் யாண்டும் இதமே செய்ய நேர்கின்றார்.

"பிறரிடை இன்னா இயற்றிடின் தமக்குப்
பிழைபபற எய்தும் என்பதனை
அறிகுநர் அறிஞர் ஆதலால் உயிர்கள்
அனைத்தையும் தமஉயிர்போல
நெறியினில் கருதல் இனியவாம ஐந்து
புலனையும நெறியலா வழியில்
பொறியினில் செலுத்தாது அடக்கல்நன் குணர்ந்தோர்
புலமையோர் ஒழுக்கு எனப் புகல்வார்."

(காசிகாண்டம்)

எவ்வழியும் இனியது செய்பவரே செவ்விய அறிவினர்; அவரே வெவ்வினைகள் நீங்கித் திவ்விய நலன்களை அடைகின்றனர்.

பேர்அருளே கொண்டு புரியும் குணமுடையார்
பேரின்பம் கண்டு மகிழ்வார்.

கருணையாளரே கதிபெற உரியவர் என்பதை விதிமுறையே இது விளக்கி யருளியது. தன் உள்ளத்தில் அருள் சுரந்து வருகின்றவன் பேரின்ப வெள்ளத்தில் மிதந்து வருகின்றான்.

எந்த உயிரையும் தன் சொந்த உயிராகப் பாவித்து எங்கும் இனியனாய் ஒழுகுவதே கருணையாகின்றது. அந்த சீவகாருணியம் புகழ் புண்ணியங்களாய்ப் பெருகி இருமையிலும் அரிய இன்ப நலங்களை யருளி வருகின்றன.

கடவுளைக் கருணைக் கடல் என அன்பர்கள் போற்றி வருவது அதனுடைய ஆனந்த நிலையின் ஆழம் கருதியே.

உருகிப் பெருகி உளம் குளிர முகந்து கொண்டு
பருகற்கு இனிய பரங்கருணைத் தடங்கடலை.

(திருவாசகம்)

எனப் பரமனை இங்ஙனம் கருதியுள்ளனர். 'மாறிலாத மாக் கருணை வெள்ளமே'' என உருகி யுள்ளமை உணர வுரியது.

அருள் நீர்மை பரம் பொருளான அருளமுதக் கடலில் கலந்து ஆனந்தம் அடைகின்றது.

---

417. புத்தர் அருள்நெறியைப் பூண்டிருந்தார் இவ்வுலகம்
முத்தர் எனப்போற்ற முன்னின்றார்—தத்தம்
உயிர்போல் பிறவுயிரை ஓம்பினர் அன்றே
செயிர்தீர்ந் துயர்வர் சிறந்து. (எ)

இ—ள்

அருள் ஒழுக்கத்தைக் கைக்கொண்டிருந்த புத்தரை எல்லாரும் முத்தர் என்று போற்ற அவர் முதன்மை பெற்று நின்றார்; தம்முடைய உயிர்போல் பிற உயிர்களையும் பேணி ஒழுகுவோரே பிறவிப் பிணி நீங்கிப் பெரு மகிமை பெறுவர் என்பதாம்.

இனிய குண நலங்கள் மனிதனைப் புனிதன் ஆக்கித் தனி நிலையில் உயர்த்துகின்றன. அறிவு அடக்கம் அமைதி முதலியன வும் மேன்மை தருமாயினும் கருணை போல் அவை பெருமகிமையை விளைத்தருளா. உள்ளம் உருகி உயிர்கட்கு இதம் புரியும் இயல் பினது ஆதலால் அருள் பேரின்ப வெள்ளமாய்ப் பெருகியுள்ளது.

மனம் மொழி மெய்களால் எவ்வழியும் எவ்வுயிர்க்கும் இதமே புரிந்து ஒழுகும் விழுமிய நிலை அருள் நெறி என வந்தது.

இந்தப் புனித நெறியில் தனி முதல் தலைவராய்ப் புத்தர் இனிது ஒழுகியுள்ளார். இவரது சரித நிலை அரிய பல மகிமைகளை யுடையது; எவ்வகையிலும் கருணை ததும்பி யாண்டும் பெருந் தகைமை நிறைந்து இருத்தலால் சீவகாருணிய மூர்த்தி என யாவரும் இவரை உவந்து போற்றி வருகின்றனர்.

இவர் இற்றைக்கு இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு முன்னர் இருந்தவர். உத்தர கோசலத்தை ஆண்டு வந்த சுத்தோதனன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகன். பேரழகன். யசோதரை என்னும் சிறந்த அழகியை மணந்து உயர்ந்த போகங் களை நுகர்ந்து இவர் மகிழ்ந்து வந்தார். வருங்கால் ஒருநாள் அரண் மனையிலிருந்து வெளி வருங்கால் மெய்து முதிர்ந்த ஒரு கிழவனை

இவர் கண்டார். தளர்ந்து அயர்ந்த அவனது நிலைமையை நினைந்து நெஞ்சம் உருகினர். மறுநாள் ஒரு நோயாளியை நோக்கினர்; நொந்து இரங்கினர். சீவர்கள் இவ்வாறு துயரமடைந்துள்ளனரே! இதனை நீக்க வழி காண வேண்டும் என்று நெடிது நினைந்து அன்றே கடிது துறந்தார். யாரும் அறியாமல் வெளி ஏறுங்கால் அந்தப்புரத்தில் மலரணையில் இளங்குழந்தையோடு குழைந்து படுத்திருந்த தமது அருமை மனைவியைப் பார்த்து மனம் மறுகி நின்றார். பிரிய நாயகியைப் பிரிய மனமில்லாமல் உருகி நின்ற இவர் இறுதியில் உறுதியாய் வெளி வந்து கண்டகம் என்னும் குதிரையில் ஏறிக் காரிருளில் கானகம் புகுந்தார். சூரியன் உதயமாகவும் தமது கரிய அழகிய மயிர்முடியை உடைவாளால் அறுத்தெறிந்து விட்டு அரிய தவசியாய்ப் பெரிய தவம் புரிந்து தெய்வத் திருவருள் எய்தி உலகம் உய்யும் வகையில் யாண்டும் அருள் உபதேசங்களைச் செய்தருளினர். எந்த உயிர்க்கும் யாதும் இடர் செய்யலாகாது என்று எங்கும் இவர் போதித்து வந்தமையால் கருணைநாயகன் என வையம் இவரை வாழ்த்தி வந்தது. இவருடைய பொருள் மொழிகளைக் கேட்டுப் பல்லாயிரம் பேர் அருள் நிலையராயினர். பரமனே இந்த உருவம் மருவிக் கருணையைப் போதிக்க வந்துள்ளது என அனைவரும் உருகி நின்றனர்.

"அருளாழி பயந்தோய்நீ அறவாழி நயந்தோய்நீ
மருளாழி துரந்தோய்நீ மறையாழி புரிந்தோய்நீ
மாதவரின் மாதவன்நீ வானவருள் வானவன்நீ
போதனருட் போதனன்நீ புண்ணியருட் புண்ணியன்நீ
ஆதிநீ அமலன்நீ அயனும்நீ அரியும்நீ
சோதிநீ நாதன்நீ துறைவன்நீ இறைவன்நீ
அருளும்நீ பொருளும்நீ அறவன்நீ அநகன்நீ
தெருளும்நீ திருவும்நீ செறிவுநீ செம்மல்நீ"

(வீரசோழியம்)

"இன்னார்க்கும் இனியனாய் இறந்தார்க்கும் இன்றீம்பால்
குன்றாமல் பொழிந்திட்ட குன்றாய குணத்தினன்."

(நீலகேசி)

"உலக நோன்பிற் பலகதி உணர்ந்து
தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்
இன்பச் செவ்வி மன்பதை எய்த

அருளறம் பூண்ட ஒருபெரும் பூட்கையின்
அறக்கதிர்ஆழி திறப்பட உருட்டிக்
காமற் கடந்த வாமன்''

''அருளும் அன்பும் ஆருயிர் ஓம்பும்
ஒருபெரும் பூட்கையும் ஒழியா நோன்பிற்
பகவன்''

''தன்னுயிர்க்கு இரங்கான் பிறவுயிர் ஓம்பும்
மன்னுயிர் முதல்வன்'' (மணிமேகலை)

இன்னவாறு நூல்கள் பல புத்தரைப் போற்றியிருக்கின்றன.

பிறவுயிர்கள் வருந்தக் காணின் உள்ளம் சகியாமல் உருகி மறுகினமையால் பரதுக்க துக்கி என உலகம் இவரைப் பாராட்டி நின்றது. தயாதருமம் இவர் வாயிலாய் எங்கும் பரவி யுள்ளது.

ஆசிய சோதி என இவரைக் குறித்து Edwin Arnold எட்வின் அர்நால்டு என்பவர் ஆங்கிலத்தில் ஒரு காவியம் செய்திருக்கிறார். இவருடைய அருள் நெறியை மேல் நாட்டார் மிகவும் வியந்து போற்றியுள்ளனர். போதனைகளைத் தரும சாதனங்களாக் கருதி மகிழ்கின்றனர்.

"Hatred is never ended by hatred but by love." (Buddha)

''பகை பகையால் தீராது; அன்பால் தீரும்'' என இவர் சொல்லியுள்ளதை மேலோர் பலரும் மேற்கோளாகச் சொல்லி வருகின்றனர்.

"Purify your hearts and cease to kill; that is true religion." (Buddhism)

''உங்கள் இருதயங்களைத் தூய்மைப் படுத்துங்கள்; எந்த உயிரையும் கொல்லாதீர்கள்; இதுதான் உண்மை மதம்'' என இவர் சொந்த மொழியில் போதித்துள்ள உறுதி நலங்களை மேல் நாட்டார் மொழி பெயர்த்துக் கருணை வழியை உவந்து நிற்கின்றனர். அருளாளன் அருளியது அவனி முழுதும் நிலவியுளது.

எவ்வழியும் பிறவுயிர்களுக்கு இதம் சுரந்திருத்தலால் அருள் நெறி எங்கும் பெருமை மிகப் பெற்றது. பர்மா, சீனம், ஜப்பான் முதலிய அயல் நாடுகளிலும் புத்தமதம் பரவி நிற்கின்றது.

உள்ளம் கருணை கனியின் உயிரின்ப
வெள்ளம் பொழியும் விரிந்தென்று—வள்ளல்
அருள்ஞானி சொன்ன அருமறை என்றும்
பொருள்ஞானம் ஆகும் புவிக்கு.

என இவரது கருணை வழி கதி நிலையமாய் ஒளி மிகுந்து அரிய மகிமைகள் புரிந்து பெருமை நிறைந்து மிளிர்கின்றது.

தம் உயிர்போல் பிற உயிரை ஓம்பினர்.

என்றது அருள் ஒழுக்கத்தின் பொருள் உணர்த்தி நின்றது.

தாய் தந்தை மனைவி மக்களினும் தன் உடலை எவனும் மிகவும் அபிமானித்துப் பேணி வருகின்றான். அவ்வாறு பேணுதலுக்குக் காரணம் என்ன? உயிரின் நிலையமா யுள்ளமையால் உடம்பை இவ்வாறு விரும்பிப் போற்றுகின்றான்.

தன் உயிர்க்கு யாதும் இன்னல் நேராவகை உன்னி ஒழுகுவது போல் பிறவுயிர்களையும் பேணி வருவது விழுமிய மகிமையாய் எழுமையும் இன்பம் தருகின்றது.

எல்லா உயிரையும் தன் உயிராக எண்ண நேர்ந்த போது அந்த மனிதன் புண்ணிய மூர்த்தி ஆகின்றான்; ஆகவே அவன் பிறவி தீர்ந்து பேரின்ப நிலையைப் பெறுகின்றான்.

செயிர் தீர்ந்து உயர்வர் சிறந்து.

உயிர்கள்பால் கருணையுடையவர் துயரங்கள் யாவும் நீங்கி உயர் பதங்களை அடைந்து உத்தம முத்தராய் ஒளி சிறந்து திகழ்வர் ஆதலால் அவரது சிறப்பும் சீர்மையும் குறிப்பாக ஓர்ந்து கொள்ள இது இங்ஙனம் உணர்த்தியருளியது.

செயிர் = குற்றம், துன்பம்.

பிறவிப்பிணிகளை நீக்கிப் பேரின்ப நலனை அருளும் என்றது கருணைப் பண்பால் உளவாகும் கதி நலங்களைக் காண வந்தது.

அல்லலெலாம் நீக்கி அருளும் அருள் நெறியே
எல்லையிலா இன்பநலம் ஈயுமெனத்—தொல்லை மறை
போதித் திருக்கும் பொருள் மொழியைப் போற்றினர்
பேதித்து நின்றார் பிறப்பு.

எங்கும் அருள் புரிந்து ஒழுகுக; எல்லா இன்பங்களும் உன்பால் பொங்கி வந்து புகும் என்று இது போதித்து நின்றது.

418. சீவ கருணை சிவகருணை யாய்விளைந்து
தேவ அமுதமெனச் சேருமே—பாவ
இருள்நீக்கி எவ்வழியும் இன்பம் பொழியும்
அருள்நீக்கி வாழ்தல் அவம். (அ)

இ—ள்

சீவ கருணை தேவ கருணையை விளைத்து எவ்வழியும் திவ்விய அமுதமாய் அமைந்து பாவத் துயர்களை நீக்கி யாண்டும் இன்ப நலங்களையே சொரியும்; அத்தகைய அருளைக் கைவிட்டு வாழ்தல் அவமாம் என்க.

பரிபக்குவமான ஆன்ம உருக்கமே கருணை என வெளியாய் ஒளி புரிகின்றது. உள்ளம் இரங்கி உருகிய அளவு அங்கே பரம் பொருளின் அருள் இறங்கி வருகின்றது. சீவ தயாபரன் என்னும் பேரை இறைவன் மிகவும் பெருமையாகப் பெற்றுள்ளமையால் அருளியல்பில் அப்பொருள் உயர்ந்துள்ளமை உணரலாகும்.

அருள் சுரந்த நெஞ்சம் தெருள் நிறைந்து என்றும் இன்ப நிலையமாய் இனிது திகழ்கின்றது. அருள் படியாதது மருள் படிந்து யாண்டும் துன்பமயமாய்த் துடித்து இழிகின்றது.

இனிய நீர்மை குன்றிய பொழுது கொடிய கேடுகள் குடி புகுந்து விடுகின்றன; பின்பு குடிகேடுகள் ஆகின்றன. ஒளி நீங்க இருள் ஓங்குகின்றது; அளி மறையப் பழி நிறைகின்றது.

நல்ல குண நீர்மைகளை யுடையவன் நல்லவனாய் உயர்ந்து எல்லா நலங்களையும் இனிது அடைகின்றான்; அல்லாதவன் பொல்லாதவனாய் இழிந்து பொன்றி ஒழிகின்றான்.

தண்ணளி மனிதனைப் புண்ணிய புனிதன் ஆக்கி எவ்வழியும் கண்ணியம் சுரந்து கதி புரிந்து வருதலால் அது அரிய இனிய அதிசய அமுதமாய்த் துதி செய்யப் பெறுகின்றது.

சீவ கருணை சிவ கருணை.

என்றது அருள் விளைவின் பொருள் நிலை அறிய வந்தது. சிறிய துளி அளி பெரிய வெளி ஒளியாய் விளங்கியருள்கின்றது.

மனம் உருகி மனிதன் அருள் புரியின் கடவுளின் இன வுரிமையாய் உயர்ந்து அவன் தனி மகிமையை மருவுகின்றான். உள்ளம் இரங்கி உயிர்களுக்கு இரங்குவது உயர் பரனைத் தன்பரமாய்க்

கொள்ள வருகின்றது. எவனுடைய உள்ளத்தில் கருணை பெருகி வருகின்றதோ அவன் கடவுளுடைய பிள்ளையாய் உயர் நிலையை அடைகின்றான்.

கண் ஒளி கதிர் ஒளியைக் கலந்து எண்ணரிய காட்சிகளை எய்தி மகிழ்கின்றது; தண்ணளி தயாபரன் அளியை மருவி விண்ணும் புகழ வியனான மாட்சிகளை விளைத்தருள்கின்றது.

உள்ளம் அருளுடையான் ஓங்கு பரம்பொருளின்
வெள்ளம் பெருக விளைகின்றான்—உள்ளம்
மருளடைந்து வன்மையுறின் மாறாத் துயர
இருளடைந்து நிற்பன் இழிந்து.

அருள் இழந்த பொழுதே மனிதன் அநியாயமாய் இழிந்து அழிந்து படுதலை இதனால் அறிந்து கொள்ளலாம்.

நெஞ்சில் அளியில்லாதவன் கண்ணில் ஒளி இல்லாதவன் போல் இளி பழியனாய் அழிவான் என்றதனால் அவனுடைய வழியும் வாழ்வும் தெளிவாகி நின்றன. நல்ல அருள் வாசனை இல்லையாயின் எல்லாம் படு நீசமாய் நாசம் அடைகின்றன.

சீவர்களிடம் பிரியமாய்க் கருணை செய்கின்றவன் சிவ பெருமானுடைய இனிய கருணையை இயல்பாக எய்துகின்றான் என்றது உயிர் பரங்களின் தத்துவ உண்மைகளை உய்த்துணர வந்தது.

கடவுள் எங்கும் நிறைந்து எல்லார்க்கும் பொதுவான சாட்சியாய் விதி முறை செய்து விளங்கி நிற்கின்றார். பகை உறவு என்னும் வகைகள் யாரிடமும் யாதும் அவர்க்கு இல்லை; சீவர்களுடைய செயல் இயல்களின் படியே அவரிடமிருந்து பலன்களை அவை அடைந்து கொள்கின்றன.

அருள் புரிபவன் அருள்பெற்று வாழ்கின்றான்; மருளுடையவன் மருள் உற்று மாளகின்றான். வாழ்வும் வீழ்வும் தன் அகத்தே தழுவியுள்ளமையால் மனிதன் உண்மை நிலைமையை ஊன்றி உணர்ந்து யாண்டும் நன்மையுடையனாய் உய்ய வேண்டும்.

பிற உயிர்களிடம் தயவு புரிந்து வரின் அந்த இதயம் தரும நிலையமாய் மருவி வருகின்றது; வரவே தரும மூர்த்தியான பரமன் அதனைத் தனக்கு உரிய இனிய மனையாக உவந்து கொள்ளுகின்றான். அருள் மருவிய அளவே பாவ இருள் யாவும் கழிந்து சீவனிடம் சிவ ஒளி பெருகி எழுகின்றது.

ஆனந்த வடிவமான பரமன் ஆன்மாக்களுடைய அருள் நீர்மையில் விளைந்து வருதலால் அருள் பழுத்த பழச் சுவையே! என ஆர்வத்தோடு அன்பர்கள் கூவி அழைக்க நேர்ந்தார்.

கருணை கனிந்த கனிரசமே கண்ணின் ஒளியே விண்ணிலவும்
அருண வெளியே அற்புதமே அகிலம் முழுதும் பரவியுள
வருண சீவ பேதங்கள் வாழ வாழும் வானகமே
தருண நிலவே தயாவுடையார் தன்னுள் இருக்கும் தனிமுதலே.

என இன்னவாறு இறைவன் யாண்டும் துதிக்கப் படுதலால் கருணையில் அவன் நீண்டு நிலைத்துள்ள நிலைமை புலனும்.

தேவ அமுதம் என்றது சீவ கருணையால் ஆன்மா ஆனந்த போகங்களை அடைந்து வருதலை உணர்ந்து கொள்ள வந்தது. அருள் தேவ அமுதம் என்றமையால் அஃது இல்லாமை பாவ விடம் என்பது பெறப் பட்டது.

இரக்கம் அற்ற கொடிய நெஞ்சங்களிலிருந்துதான் நெடிய தீமைகள் விளைந்து வருகின்றன. அதனுல் கருணையில்லாதவர் கதி நிலையை இழந்து இழி துயரங்களை அடைய நேர்கின்றனர்.

அருள் இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை; பொருள் இல்லார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு. (குறள், 247)

சீவர்கள்பால் இரங்கி அருள் புரியாதவர் பரகதியை இழந்து பரிதபிப்பர் என இது உணர்த்தியுள்ளது. அதனைத் தெளிவுறுத்த உவமை வந்தது. இவ் வுலகில் பொருள் இல்லாதவர் வறியராய் இழிந்து இன்ப நலங்களை இழந்திருத்தல் போல் அருள் இல்லாதவர் மருளராய் மறுமை அவ் வுலகில் யாதொரு நலனுமின்றி அலமந்து தவிப்பர் என்க.

அருளுடையவரே பேரின்ப வீட்டுக்கு உரியவர்; அல்லாதவர்க்கு அங்கு யாதும் இடம் இல்லை என்றமையால் கருணையின் மகிமையும், அது கதிநலம் அருளும் தகைமையும் காணலாகும்.

அருளால் அமுதப் பெருங்கடல் ஆட்டி
அருளால் அடிபுனைந்து ஆர்வமும் தந்திட்டு
அருளான ஆனந்தத்து ஆரமுது ஊட்டி
அருளால்என் நந்தி அகம்புகுந் தானே. (1)

அருளின் தலைநின்று அறிந்தழிந்து ஆரூர்
அருளின் தலைநில்லார் ஐம்பாசம் நீங்கார்;
அருளின் பெருமை அறியார் செறியார்
அருளில் பிறந்திட்டு அறிந்தறி வாரே. (2)

அருட்கண் இலாதார்க்கு அரும்பொருள் தோன்றா;
அருட்கண் உளோர்க்கு எதிர்தோன்றும் அரனே;
இருட்கண்ணி னோர்க்கு அங்கு இரவியும் தோன்றா;
தெருட்கண்ணி னோர்க்கு எங்கும் சீரொளி யாமே. (3)

அருளது என்ற அகலிடம் ஒன்றும்
பொருளது என்ற புகலிடம் ஒன்றும்
மருளது நீங்க மனம்புகுந் தானைத்
தெருளறும் பின்னைச் சிவகதி ஆமே. (4)

(திருமந்திரம்)

அருளைக் குறித்துத் திருமூலர் இவ்வாறு கூறியிருக்கிறார்.

பரம்பொருளுக்கும் அருளுக்கும் உள்ள உரிமையை இந்தச் சிவயோகி சுவையாக விளக்கியுள்ளார். குறிப்புகளைக் கூர்ந்து உணரின் அருளின் சிறப்புகளைத் தேர்ந்து கொள்ளலாம்.

தன்னையுடையானை முன்னவணுக்கிப் பேரானந்தப் பெரு வாழ்வைத் தந்து வருதலால் அருள் நீர்மை மனிதனுக்கு இனிய அமுத சஞ்சீவியாய் அமைந்துள்ளது.

அருள் நீக்கி வாழல் அவம்.

இருள் நீக்கி இன்பம் பொழிகின்ற அருளை இழந்து ஒருவன் வாழ்வது மருள் மலிந்த துன்பம் ஆதலால் பழிபட்ட அப் பாழ் வாழ்வை இது பரிந்து இகழ்ந்தது.

சீவ கருணை குன்றிய வுடனே பாவம் படிகின்றது; படுதுயர்கள் தொடர்கின்றன ஆதலால் அது கெடு நிலை என வந்தது. அருளுடைய வாழ்வே உயிரின் பொருளுடையதாம்; அல்லாதது மருளுடையதாய் மாண்டு படுகின்றது. ஆன்ம அமுதை மேவிய அளவு மேன்மையும் இன்பமும் மேவி வருகின்றன.

கருணைப் பண்பு மனிதனைத் தெய்வம் ஆக்கி மங்கைமை பல தருகின்றது; அதனை உரிமையுடன் ஓம்பி உயர் நிலை அடைக.

419. உலகுயிர் எல்லாம் ஒருபேர் இறைவன்
இலகும் உடலாம் இயல்பால்—நிலவுயிர்க்கு
ஓர்துயரம் செய்யின் உடையான் உனக்குடனே
கூர்துயரம் செய்வன் குறித்து. (கூ)

இ—ள்

சீவ கோடிகள் யாவும் இறைவனுடைய திருமேனிகளாயுள்ளமையால் ஒரு சிறு பிராணிக்கு ஊறு செய்யினும் கடவுள் உடனே உனக்குக் கொடிய துயரம் செய்வர்; இவ் வுண்மையை உணர்ந்து புன்மை புகாமல் நன்மையுறுக என்பதாம்.

சீவதயை மிகவும் உயர்ந்த குணம்; இருமையிலும் பெருமை தரும்; கதி நலங்களை அருளி வருகின்ற அதனை உரிமையாகப் பேணி வருபவன் உயர் பதவிகளை எளிதே பெறுகின்றான் என்பதை இதுவரை அறிந்து வந்தோம்; அத்தகைய இனிய அருளை மறந்து இடர் புரிய நேர்வது கொடிய மடமையாம் என இது உணர்த்துகின்றது.

தன்னால் எவ்வகையிலும் பிறவுயிர்களுக்கு இடர் நேராமல் ஓர்ந்து ஒழுகுதலும், நேர்ந்த துயரங்களை நீக்கி அருளுதலும் ஆகிய இருவகை நிலைகளில் கருணை இயங்கி வருகின்றது.

அல்லல்களை நீக்கியருளும் வல்லமை எல்லாம் வல்ல இறைவன் ஒருவனுக்கே இயையும் ஆதலால் இடர் தீர்க்க முடியாவழி உள்ளம் கரைந்து பரமனை நினைந்து கருணையாளர் உருகி நிற்க நேர்கின்றார்.

ஆருயிர் யாதொன்று இடருறும் ஆங்கதற்கு
ஒருயிர் போல உருகி உயக்கொள்ள
நேரின் அதுமுடி யாதெனின் நெஞ்சகத்து
ஈரம் உடைமை அருளின் இயல்பே. (சூளாமணி)

அருளின் அமைதிக்கு இது பொருள் செய்துள்ளது.

உயிர்கள் துயருறக் காணின் நெஞ்சம் இரங்கித் தஞ்சம் புரிவது உயர்ந்த மனிதத் தன்மையாம்; அங்ஙனம் புரியாது போகின்றவன் சிறியவன் ஆகின்றான்; அவ்வளவோடு போகாமல் இடர் செய்ய நேரின் அவன் கொடிய கடையனாய் இழிவுறுகின்றான். மருளனாய் இழிந்து படாமல் அருளனாய் உயர்ந்து கொள்க.

**உலகு உயிர் எல்லாம் இறைவன் உடல்.**

**என்றது உண்மை நிலைகளை ஓர்ந்து கொள்ள வந்தது.**

காணப் படுகின்றன யாவும் கடவுள் உடைமைகள்; எங்கும் அவன் நிறைந்திருத்தலால் எல்லாம் அவனுடைய திருமேனிகளாய் இசைந்து நிற்கின்றன.

இருநிலனாய்த் தீயாகி நீரும் ஆகி
இயமானனாய் எறியும் காற்றும் ஆகி
அருநிலைய திங்களாய் ஞாயிறு ஆகி
ஆகாசமாய் அட்டமூர்த்தி ஆகிப்
பெருநலமும் குற்றமும் பெண்ணும் ஆணும்
பிறர் உருவும் தம்முருவும் தாமேஆகி
நெருநலையாய் இன்றாகி நாளை ஆகி
நிமிர்புன் சடையடிகள் நின்றவாறே. (1)

கல்லாகிக் களறாகிக் கானும் ஆகிக்
காவிரியாய்க் கால்ஆறாய்க் கழியும் ஆகிப்
புல்லாகிப் புதலாகிப் பூடும் ஆகிப்
புரமாகிப் புரமூன்றும் கெடுத்தானாகிச்
சொல்லாகிச் சொல்லுக்கோர் பொருளும் ஆகிச்
சுலாவாகிச் சுலாவுக்கு ஓர் சூழலாகி
நெல்லாகி நிலனாகி நீரும் ஆகி
நெடும் சுடராய் நிமிர்ந்தடிகள் நின்றவாறே. (2)

(தேவாரம்)

வானாகி மண்ணாகி வளிஆகி ஒளிஆகி
ஊனாகி உயிர்ஆகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யான் எனது என்று அவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே.

(திருவாசகம்)

இறைவன் எங்கும் நிறைந்து எல்லாமா யுள்ளபடியை அப்பரும், மாணிக்கவாசகரும் இவ்வாறு உருகிப் பாடியுள்ளனர். அருள் சுரந்த நெஞ்சினர் ஆதலால் பரம்பொருளின் உண்மை நிலையை உலகம் தெளிந்து உய்ய இங்ஙனம் வெளியாக்கி யருளினர். திவ்விய விழியினர் எவ்வழியும் அளி புரிகின்றனர்.

தாயுமானவர் சிவபூசை செய்ய விரும்பி ஒருநாள் காலையில் பூ எடுக்கப் போனார். அழகாய் மலர்ந்துள்ள மலரைப் பார்த்தார்.

அதில் பரமன் இருப்பதாகக் கருதினார். அந்தப் பூவைப் பறிக்காமல் அவனி மீதூர்ந்து வெளியே வந்தார். கருணைக் கண்ணரான அவர் கண்ட பொருள்களை எல்லாம் கடவுள் வடிவங்களாகவே எண்ணி இறைஞ்சியிருக்கிறார்.

பண்ணேன் உனக்கான பூசை ஒரு வடிவிலே
 பாவித்து இறைஞ்ச ஆங்கே
பார்க்கின்ற மலர்ஊடு நீயே இருத்தி அப்
 பனிமலர் எடுக்க மனமும்
நண்ணேன் அலாமலிரு கைதான் குவிக்கஎனின்
 நாணும் என் உளம் நிற்றி நீ
நான் கும்பிடும்போது அரைக்கும்பிடு ஆதலால்
 நான் பூசை செய்யல் முறையோ?
விண்ணே! விண் ஆதியாம் பூதமே! நாதமே!
 வேதமே! வேதாந்தமே!
மேதக்க கேள்வியே! கேள்வியாம் பூமிக்குள்
 வித்தே! அவ் வித்தின் முளையே!
கண்ணே! கருத்தே! என் எண்ணே! எழுத்தே!
 கதிக்கான மோன வடிவே
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
 கருணா கரக் கடவுளே. (தாயுமானவர்)

கடவுளைக் கருணாகரன் என்று கூவி அழைத்து வந்திருக்கும் இந்தப் பாசுரத்தில் தாயுமானவரது அருள் நிலைகளும் அனுபவ அமைதிகளும் வெளியாயுள்ளன. உரைகளை உரிமையுடன் கருதி நோக்கி உள்ளப் பண்புகளையும் உணர்வு நலங்களையும் உறுதி நிலைகளையும் உணர்ந்து கொள்ள வேண்டும்.

பனிமலர் எடுக்க மனமும் நண்ணேன் என்றதில் கருணைக் காட்சி கனிந்து நிற்கின்றது. கண்டன யாவும் கடவுள் உருவங்களாகவே கருதி ஒழுகிக் கருணை புரிந்து வந்துள்ள அந்த மகானுடைய ஞான சீலங்கள் மனித சமுதாயத்திற்கு அமுத தாரைகளாய் அமைந்து இனிமை சுரந்து வருகின்றன.

நெஞ்சில் அருள் கனிந்தபொழுது அந்த உயிர் வாழ்வு தெய்வத் தேசுடன் சிறந்து திகழ்கின்றது. மேலான சால்பின் பரிமளமாய்க் கருணை கமழ்ந்துள்ளது.

இந்த ஆன்ம மணம் குன்றின் எல்லா மேன்மைகளையும் இழந்து மனிதன் கீழ்மை நிலையை அடைகின்றான்.

உன் உடலில் ஒருவன் ஊறு செய்தால் அவனை நீ சீறி இகழ்கின்றாய்; கடவுளின் உடல்களாகிய சீவகோடிகளுள் யாருக்காவது ஏதேனும் இடர் செய்தால் இறைவன் உன்னைச் சினந்து நோக்குகின்றான்; அந்தத் தேவ கோபத்திற்கு ஆளாகாதே; எந்த உயிரையும் இறைவனாகவே சிந்தனை செய்து எங்கும் இதம் புரிந்து ஒழுகுக.

எப்பொருள் களும்தா னாகி இலங்கிடும் அறிவாம் ஈசன்
அப்படி விளங்கு கின்றது அறிதலே அவன் தனக்கு
மெய்ப்படு பூசை; வேறு ஓர் செயலினால் அன்று; மெய்யே
இப்படி ஞானம் தன்னால் இறைஞ்சிடப் படுவான் ஈசன். (பிரம கீதை)

அறிவு சமபாவனை சந்தோடம்எனும் மலர்களால் அந்தத் தேவாம்
பிறிவரிய ஆன்மதத்து வத்தை அருச்சிப்பதே பெரிய பூசை;
குறிவடிவில் பூசனை பூசனைஅல்ல; அகண்டம்எனக் கூறும்தெய்வம்
நெறிகொள்புறத்தொழில்களானே ராதிங்கிதனாலேநிறையுமின்பம். (ஞான. வாசிட்டம்)

எங்கும் சிவாலயமாம் எங்கும் சிவமாகும்
எங்கும் சிவனடிமை எங்குமாய்ப்—பங்கறவே
நிற்றல் சிவபூசை நின்றநிலை யாய்நிறைவில்
பற்றுஒழிதல் பூசா பலம். (சிவானந்தமாலை)

இறைவன் யாண்டும் பரவியுள்ளான்; சீவர்கள் அவனுடைய உடைமைகள்; அவைகளுக்கு நன்மை செய்வதே அவனை உண்மையாகப் பூசிப்பதாம் என இவை உணர்த்தியுள்ளன. உயிர்களுக்கு இரங்கி அருள் புரிவதே கடவுளுக்குப் பெரும் பிரியம்; அந்தத் தெய்வப் பிரீதி உய்வைத் தருகின்றது.

கருணையாளர் கடவுள் உரிமையைக் கலந்து மகிழ்கின்றார்; அல்லாதவர் அவல நிலையில் இழிந்து கெடுகின்றார்; இவ் வுண்மையை உணர்ந்து எவ்வழியும் தண்மை மருவி நன்மை யுறுக.

---

**420.** நெஞ்சில் அருளுடையார் நீளுலகில் எவ்வுயிர்க்கும்
தஞ்சமென நின்று தழைத்தலால்—விஞ்சுபுகழ்
சூடிப் பரமனருள் தோய்ந்து சுரர்மகிழ
வீடு புகுவர் விரைந்து. (ο)

இ—ள்

தம் உள்ளத்தில் கருணை யுடையவர் உலகில் உள்ள எவ்

வுயிர்க்கும் இனிய ஆதாரவாய் இசைந்து நிற்றலால் அவர் இறைவன் அருளைத் தனி உரிமையாக அடைந்து பெரும் புகழுடன் அமரரும் மகிழ உயர் பதம் பெறுவர் என்பதாம்.

அருளுடையவரது செயல்களும் நிலைகளும் உலக இயல்புகளைக் கடந்து உயர் தலைமைகளில் ஒளி வீசி உலாவுகின்றன.

தன் உயிர் என மன் உயிர்களைக் கருதி ஒழுகுவது மகாத்துமாக்களுடைய அரிய இயல்பாய்ப் பெருகி எழுகின்றது. பண்பும் பரிபக்குவமும் எங்கும் அன்பும் அருளுமாய்ப் பொங்கி வருகின்றன. செவ்விய கருணை திவ்விய நிலையமாய்த் திகழ்கின்றது.

தாம் ஈன்ற கன்றுகளைக் காணின் பசுக்கள் கரைகின்றன; பெற்ற பிள்ளைகளிடம் தாய்கள் உருகுகின்றனர்; அவ்வாறு மருவிய தொடர்பு இல்லாமலே கருணையாளர் எல்லா உயிர்களிடமும் உள்ளம் இரங்கி உரிமை புரிகின்றனர்.

ஆன்ம நேயம் பெருகி வருகின்ற அருள் நிலையானது பரமான்மை அணுகியுள்ள பருவ நிலையை வெளியிடுகின்றது. அகில சீவ கோடிகளையும் தனதாகப் பாவித்து வருதலால் அவை துயருறக் காணின் அருளுடையார்க்கு உயிர் உருக நேர்கின்றது.

எவ்வுயிர்த் திரளும் என் உயிர் எனவே
எண்ணி நல் இன்புறச் செயவும்
அவ்வுயிர் களுக்கு வரும் இடை யூற்றை
அகற்றியே அச்சம் நீக்கிடவும்
செவ்வையுற் றுனது திருப்பதம் பாடிச்
சிவசிவ என்று கூத்தாடி
ஒவ்வுறு களிப்பால் அழிவுறு திங்கே
ஓங்கவும் இச்சைகாண் எந்தாய் (1)

கருணையே வடிவாய்ப் பிறர்களுக் கடுத்த
கடுந்துயர் அச்சம் ஆதிகளைத்
தருணநின் அருளால் தவிர்த்தவர்க்கின்பம்
தரவும் வன் புலை கொலை இரண்டும்
ஒருவிய நெறியில் உலகெலாம் நடக்க
உஞற்றவும் அம்பலம் தனிலே
மருவிய புகழை வழுத்தவும் நின்னை
வாழ்த்தவும் இச்சைகாண் எந்தாய்! (2)

மண்ணுல கதிலே உயிர்கள் தாம் வருந்தும்
வருத்தத்தை ஒரு சிறிதெனினும்
கண்ணுறப் பார்த்தும் செவியுறக் கேட்டும்
கணமும் நான் சகித்திட மாட்டேன்;
எண்ணுறும் எனக்கே நின்னருள் வலத்தால்
இசைத்தபோ திசைத்தபோ தெல்லாம்
நண்ணுமவ் வருத்தம் தவிர்க்கநல் வரந்தான்
நல்குதல் எனக்கிசை எந்தாய்! (3)

வாடிய பயிரைக் கண்டபோ தெல்லாம்
வாடினேன்; பசியினால் இளைத்தே
வீடுதோறு இரந்தும் பசியறா தயர்ந்த
வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்;
நீடிய பிணியால் வருந்துகின் றோரென்
நேருறக் கண்டுளம் துடித்தேன்;
ஈடின் மானிகளாய் ஏழைகளாய் நெஞ்சு
இளைத்தவர் தமைக் கண்டே இளைத்தேன். (4)

நலிதரு சிறிய தெய்வம் என்று ஐயோ
நாட்டிலே பல பெயர் நாட்டிப்
பலிதர ஆடு பன்றிகுக் குடங்கள்
பலிக்கடா முதலிய உயிரைப்
பொலிவுறக் கொண்டே போகவும் கண்டே
புந்திநொந்து உளம் நடுக்குற்றேன்;
கலியுறு சிறிய தெய்வவெங் கோயில்
கண்டகா லத்திலும் பயந்தேன். (5)

துண்ணெனக் கொடியோர் பிறவுயிர் கொல்லத்
தொடங்கிய போதெல்லாம் பயந்தேன்;
கண்ணினால் ஐயோ பிறவுயிர் பதைக்கக்
கண்ட காலத்திலும் பதைத்தேன்;
மண்ணினில் வலையும் தூண்டிலும் கண்ணி
வகைகளும் கண்டபோ தெல்லாம்
எண்ணிஎன் உள்ளம் நடுங்கிய நடுக்கம்
எந்தை நின் திருவருள் அறியும். (அருட்பா)

இந்தப் பாடல்கள் சிவ தயையின் தேவ வெள்ளமாய் ஓடி வந்துள்ளன. உள்ளப் பரிவுகளும் உயிர் உருக்கங்களும் உரைகளில் ஒளி புரிகின்றன. தண்ணளி கண்ணீராய் மிளிர்கின்றது.

இராமலிங்க அடிகளுடைய கருணைப் பண்புகளைக் கருதி நோக்கி இங்கே உருகி நிற்கின்றோம். இத் தகைய ஆன்ம நேயம் எல்லாரிடமும் எளிதில் அமையாது; படிப்பாலும் பழக்கத்தாலும் முயன்று கொள்ள முடியாது; புண்ணிய பரிபாகமுடைய சிவன் முத்தர்களிடம் இயல்பாய் இசைந்து வருகின்றது.

சத்தியம் பொறுமை தவம் முதலிய உத்தம நீர்மைகளும் அருளால் ஒளி பெற்று அதிசய நிலைகளில் மிளிர்கின்றன. நல்ல தன்மைகள் எல்லாம் கருணைப் பண்பால் கனிந்து வருகின்றன.

மெய்தகளி ஆகப் பொறையாம் திரிக்கொளீஇ
நெய்தவம் ஆக நிறைதரப்—பெய்தாங்கு
அருளாம் விளக்குஏற்றி அம்மைப்பாற் செல்ல
இருள்போய் வெளியாய் விடும். (பாரதம்)

இந்த உருவகத்தைக் கருதிக் காணுக. அகல், திரி, நெய் இருந்தாலும் சுடர் இல்லை ஆயின் அங்கே ஒளி இல்லை. தவம் முதலிய உயர் நலங்கள் இருப்பினும் அருள் இலதேல் ஆண்டு இனிய தெருள் ஒளி இலதாம். அருள் அற்ற இடத்தில் மருள் படர்ந்து இருள் அடர்ந்து இருக்கும் என்க.

ஆன்ம வுருக்கமாய் அமைந்துள்ளமையின் அருளை இவ்வளவு மேன்மையாக மேலோர் பேணி வருகின்றனர். எவ்வழியும் இதமே கனிந்து இனிமை சுரந்து வருதலால் அருள் தரும மணம் கமழ்ந்து பரமன் என மிளிர்ந்து உயர் சுகம் அருளுகின்றது.

எவ்உயிர்க்கும் தஞ்சம் என நின்று தழைத்தலால்.

என்றது கருணையாளரது நீர்மையும் நிலைமையும் தெரிய வந்தது. தண்ணளியுடையவர் எல்லா வுயிர்களிடமும் யாண்டும் கண்ணோடி இதம் புரிதலால் அவர் ஒரு புண்ணிய நிலயமாய்ப் பொலிந்து விளங்குகின்றார். மனித சாதி அவரைப் புனிதமாகப் போற்றி வருகிறது. தஞ்சம் = ஆதரவு, பற்றுக்கோடு.

பாரி வள்ளல் ஒரு முறை காட்டுக்குப் போயிருந்தான். அங்கே ஒரு முல்லைக் கொடி நெடிது வளர்ந்து கொழுந்து ஓடிப் படர்ந்து நின்றது. பூத்து அலர்ந்த அந்தப் பூங்கொடி யாதொரு கொழு கொம்புமின்றி அலைமோதி அசைந்து நிற்றலைக் கண்டதும் உளம் மிக இரங்கினான்; தான் ஏறிவந்த தேரை அதன் அருகே

கொண்டுவந்து நிறுத்தி அது இனிது படருமாறு இதம் புரிந்து விட்டுத் தனியே நடந்து மீண்டு அவன் ஊருக்குப் போனான்.

"பூத்தலை அறாஅப் புனைகொடி முல்லை
நாத்தழும் பிருப்பப் பாடாது ஆயினும்
கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்தோங்கு சிறப்பிற் பாரி." (புறம், 200)

"சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய
பரம்பின் கோமான் பாரி." (சிறுபாண், 88)

ஓரறிவுடைய கொடியினிடமும் உள்ளம் இரங்கி அவ் வள்ளல் அருள் புரிந்துள்ளமையை உலகம் வியந்து போற்றி வருகின்றது. புண்ணிய நீரர் எங்கும் கண்ணோடி அருள்கின்றார்.

தன் ஊர் அயல் இருந்த சோலையில் பேகன் ஒருநாள் உலாவி வந்தான். குளிர் காலம்; காலை வேளை. அங்கு ஓர் மயிலைக் கண்டான். குளிரால் அது வருந்துமே என்று இரங்கி உயர்ந்த சால்வையை அதன் மீது இதமாகப் போர்த்தி அருளினான்.

"மடத்தகை மாமயில் பனிக்கும் என்று அருளிப்
படாஅம் ஈத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக" (புறம், 145)

அருளாளருடைய செயல் இயல்கள் உலக நிலை கடந்து உயர் நிலைகளில் ஒளிர்கின்றன. தன் உயிரையும் பேணாமல் பிறவுயிர்களைக் கண்ணோடிக் காக்கும் தண்ணளியுடையவர் விண் ஒளி என யாண்டும் வியன் புகழ் பெற்று விளங்குகின்றனர்.

முதிர்ந்து தளர்ந்த ஒரு வேதியன் தண்டு கை ஊன்றிக் காவிரிப்பூம் பட்டினத்தில் வீதி வழியே நடந்து சென்றான். அங்ஙனம் செல்லுங்கால் இடையே மதம்மீறிவந்த ஓர் யானை அவனைப் பிடித்துக் கொல்ல நேர்ந்தது. உடனே கோவலன் வேகமாய்ப் பாய்ந்து அவனை விலக்கி விடுத்து துதிக்கையின் வழியே மத்தகத்தின் மீது ஏறி யிருந்து அதன் மதத்தை அடக்கி அருளினான்.

"தளர்ந்த நடையில் தண்டுகால் ஊன்றி
வளைந்த யாக்கை மறையோன் தன்னைப்
பாகுகழிந்து யாங்கணும் பறைபட வரூஉம்
வேக யானை வெம்மையிற் கைக்கொள
ஒய்யெனத் தெழித்துஆங்கு உயர்பிறப் பாளனைக்

கையகத்து ஒழித்து அதன் கையகம் புக்குப்
பொய்பொரு முடங்குகை வெண்கோட்டு அடங்கி
மையிருங் குன்றின் விஞ்சையன் ஏய்ப்பப்
பிடர்த்தலை இருந்து பெருஞ்சினம் பிறழாக்
கடக்களிறு அடக்கிய கருணை மறவ!" (சிலப்பதிகாரம் 15)

தன் உயிரையும் கருதாமல் பிறவுயிர்க்கு இரங்கியருளியுள்ளமையால் கருணை மறவன் என்று கோவலனுக்கு ஓர் அருமைத் திருநாமம் அமைந்தது. கரும வீரமும் தரும நீர்மையும் கனிந்து கருணைப் பண்பு எங்கும் இனிமை சுரந்து வரும் என்பது இங்கே தெளிவாகி நின்றது. தண்ணளியுள் தாய்மை யுள்ளது.

சுரர் மகிழ வீடு புகுவர்.

சீவ காருணியம் உடையவர் சர்வ சீவ தயாபரனுன இறைவனின் இனமாய்த் தனிப் பெரும் பதவியை அடைதலால் அவரது பேறும் பேரின்ப நிலையும் இங்ஙனம் பேச வந்தது.

அல்லல் அருள் ஆள்வார்க்கு இல்லை. (குறள், 245)

இந்த அருள் வாக்கு ஈண்டு ஆய்ந்து சிந்திக்கத் தக்கது.

அல்லலை யாரும் அஞ்சுவர்; அது நேரும் என்று நினைத்தாலே எவரும் நெஞ்சம் துடிப்பர்; அந்தப் பொல்லாத துன்பம் ஒருவன்பால் யாதும் என்றும் இல்லாமல் இருக்க வேண்டின் அவன் நல்ல அருளாளன் ஆக வேண்டும் என்க.

அருள் எவ்வழியும் இதமாய் யாண்டும் இன்பமே விளைத்து வருதலால் அதனை யுடையவர் துன்பம் யாதும் காணுமல் எங்கும் இன்பமே கண்டு என்றும் சுக சீவிகளாய்த் துலங்கி வருகின்றார்.

கருணை தெய்வ குணம்; தரும மணம்; தவ ஒளி; ஞான சீலம்; பேரின்ப நிலையம்; அதனை மருவி ஒழுகி மகிமை பெறுக.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு

கருணை சீவ அமுதம்.
தரும நிலையம்.
அதனையுடையவன் மகான் ஆகின்றான்.
மகிமைகள் பல மருவுகின்றான்.
உயர் நலங்கள் அடைகின்றான்.
இறைவன் அருளை எய்துகின்றான்.
பிறவிப் பயனை நேர்கின்றான்.
பேரின்பங்கள் சேர்கின்றான்.
அருள் இழந்தவன் மருள் உறுகின்றான்.
கருணையாளன் கதி பெறுகின்றான்.

சஉ வது கருணை முற்றிற்று.

001152

# நாற்பத்து மூன்றும் அதிகாரம்

## காட்சி.

அஃதாவது காணுகின்ற எதையும் கருதி ஓர்ந்து உறுதி தெளிதல். சிவர்கள்பால் இரங்கி ஒழுகும் அருளுடையவர்க்கே தெருளும் தெளிவும் எளிது அமையும்ஆகலான் கருணையின் பின் இது வைக்கப்பட்டது. கண்ணோட்டமும் காட்சியும் காண வந்தன.

421. கண்எதிரே காணுகின்ற காட்சியெல்லாம் கண்ணேடி
எண்எதிரே ஏந்தி எதிர்ஓர்ந்து—மண்எதிரே
வந்துள்ள இந்த வரவு நிலையுணரின்
நொந்துள்ளம் வெந்து விடும். (க)

இ—ள்

உலகில் காணப்படுகின்ற நிலைகளை எல்லாம் நுணுகி நோக்கி நாம் இங்கே வந்துள்ளதை எண்ணி உணர்ந்தால் நம் உள்ளம் நைந்து உருகி வெந்து போம் என்பதாம்.

இது காட்சியைக் கருதி உணர்க என்கின்றது.

கண்கள் காண்கின்றன; நெஞ்சம் நினைக்கின்றது; சித்தம் சிந்திக்கின்றது; புத்தி அறிகின்றது; கரணங்கள் இங்ஙனம் இயங்கி வரினும் உண்மையை உய்த்துணர மாட்டாமல் பித்த வெறியில் பெருகி மனித சமுதாயம் மறுகி உழலுவது பரிதாபமாகின்றது.

பொறிகளின் அறிவுகளோடு அலைந்து திரிந்து உண்டு உறங்கி உழைத்து வருவதால் மட்டும் தனது பிறவியின் மேன்மையை மனிதன் அடைந்தவனுகான். பகுத்தறிவை நன்கு பயன்படுத்திப் பண்பு படிந்த பொழுதுதான் பிறப்பின் சிறப்பை அவன் பெற நேர்கின்றான். அப்பேற்றை அடையாவழி அவமே அடைகின்றான்.

அறிவு நலம் கனிந்த பிறவியில் வந்தவன் உரிமையை உணர்ந்து உறுதி நிலை யுறுவது உயர் பயன் ஆய் ஒளி பெறுகின்றது. வந்த வரவை அறியாதவன் நிந்தை யுறுகின்றான்.

எண் எதிரே ஏந்தி எதிர் ஓர்ந்து.

என்றது தன் கண் எதிரே காணுகின்ற உலகத் தோற்றங்களைக் கருதி ஆராய்ந்து உறுதி உண்மையைத் தெளிந்து கொள்ளுதலை. நிலைமை தெளியின் தலைமை வெளியாகின்றது.

கண்ட காட்சிகளைக் கண் ஊன்றி உணருக; அங்ஙனம் உணராமல் ஆடு மாடுகள் பார்த்துப் போவது போல் வீணே பார்த்துப் போகாதே. பார்வையில் உன் தீர்வை பதிந்து கிடக்கின்றது. ஆகாயத்தைப் பார்க்கின்றோம்; சூரிய சந்திரர்களை நோக்குகின்றோம்; மலை கடல் நிலம் மனிதர் பறவை மிருகம் ஊர்வன தாவரம் முதலாகப் பல கோடி பொருள்களைக் காண்கின்றோம்; எண்ணரிய நிலையில் இங்ஙனம் கண்ணுக்குப் புலனாகின்ற இந்தக் காட்சிகள் எல்லாம் எங்கிருந்து தோன்றின? எப்படி உண்டாயின? இவை நித்தியமா? அநித்தியமா? இவற்றின் நிலை என்ன? இவற்றை எல்லாம் காண்கின்ற நாம் யார்? என இன்னவாறு சிந்தனை செய்துவரின் அந்த மனிதன் ஓரளவு உண்மையை உணர உரியவன் ஆகின்றான். கருத்து உயரக் காட்சி தெளிகின்றது.

ஓர்ந்து சிந்திக்கும் அளவு மனிதன் உயர்ந்து வருகிறான்; புலையான பொய்யுணர்வு குறைய நிலையான மெய்யுணர்வு நிறைகின்றது. அறிவுடைய அரிய பிறவியை அடைந்தவன் கருதி உணராமையால் உரிய தகுதியை இழந்து விடுகின்றான். மெய்யறிவு இல்வழி மக்கள் ஆயினும் அவர் மாக்கள் ஆய் இழிகின்றனர்.

உறுதி உண்மையைத் துருவி அறிந்த அளவுதான் மனிதன் புனித மதிமானாய் இனிய கதி நலம் காண்கின்றான்.

> எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்பது அறிவு. (குறள், 355)

மனிதனுடைய புனிதமான உயர்ந்த அறிவுக்கு இது இலக்கணம் குறித்துள்ளது. பொய்யான உலகத் தோற்றங்களிலிருந்து உண்மையைத் தெளிந்து கொள்கின்றவனே உயர்ந்தவன்; அவனே மெய்யுணர்வனாய் உய்தி பெறுகின்றான். உண்மையை உய்த்து அறிகின்றவனைத் தத்துவ ஞானி என்று உலகம் வித்தகமாய் வியந்து அழைத்து வருகின்றது.

காண்பான் காட்சி காணப்படுபொருள் என்னும் மூன்று நிலைகளிலும் முன்னதான தன்னுடையதை உன்னி யுணரின் அன்னியங்கள் தெளிவாகின்றன.

தேகத்துள் சீவன் மறைந்திருத்தல் போல் உலகப்பொருள்களில் பரமன் [illegible] அந்தத் திரை மறைவுகளில்

மருகி மயங்காமல் மெய்யை ஓர்ந்து கொள்ளின் அதனால் உய்தி உண்டாகின்றது. தன்னை அறிவது தலைமை யுறுவதாம்.

பொன்னை மறைத்தது பொன்அணி பூடணம்;
பொன்னின் மறைந்தது பொன்அணி பூடணம்;
தன்னை மறைத்தது தன்கர ணங்களாம்;
தன்னின் மறைந்தது தன்கர ணங்களே. (1)

மரத்தை மறைத்தது மாமத யானை;
மரத்தின் மறைந்தது மாமத யானை;
பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்;
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே. (2)

(திருமந்திரம்)

மனிதன் நேரே ஒன்றைக் காணும் பொழுது வேறே ஒன்றை மறந்து விடுகின்றான் என இரண்டு காட்சிகளை எடுத்துக் காட்டித் தத்துவ நிலையைத் திருமூலர் இதில் தெளிவாக்கியிருக்கிறார். அரிய உண்மைகளை எளிய முறையில் விளக்கியுள்ளமை உவகை நிலையமாய் ஒளி புரிகின்றது. உவமானங்களை ஊன்றி நோக்கிப் பொருள் நிலைகளை ஓர்ந்து கொள்ள வேண்டும்.

கை கால் முதலிய அவயவங்களோடு கூடிய தேகத்தையே தான் என்று கருதுகின்றவன் தனது உண்மை நிலையான ஆன்மாவை அறியாது நிற்கின்றான்; ஆன்ம தரிசனம் செய்கின்றவன் தேக புத்தியை இழந்து போகின்றான்.

பஞ்ச பூத மயமான உலகம் எங்கணும் பாலில் வெண்ணெய் போல் பரமன் பரவி நிற்கின்றான். அந்த நிலைமையை உணர்ந்தவன் நித்திய முத்தன் ஆகின்றான் மருள் மறையப் பொருள் தெரிகிறது.

மரத்தால் செய்த ஒரு யானையை ஒருவன் கண்டான்; அதன் வடிவழகை நோக்கி யானை என்று நினைந்தான்; மரத்தினை மறந்தான். மரம் என்று உண்மையை நோக்கினான்; யானை என்னும் உணர்வு நீங்கியது. உலக நாட்டமாய் நின்ற போது கடவுளைக் காணாது நிற்கின்றான். கடவுட் காட்சி எய்தியபோது உலகத்தை மறந்து விடுகின்றான். இந்த மறைவு தெளிவுகளை ஓரளவு விளக்கி நிற்றலால் மரமும் யானையும் இங்கே உவமைகளாய் வந்தன.

வெளித் தோற்றங்களில் மயங்கி ஏமாறாமல் எப்பொருள் களிலும் மெய்ப்பொருளைத் தெளிந்து கொள்பவனே சிறந்த மகானாய் உயர்ந்த நிலையை அடைந்து கொள்கின்றான்.

ஐயர், பிள்ளை, நாயக்கர், செட்டியார், ரெட்டியார் என இன்னவாறு பலபடியாய் வழங்கப் படுகின்ற நாமங்களும் உருவங்களும் பொய்யான மாய மயக்கங்கள் என்று ஒதுக்கி மெய்யான தெய்வம் ஒன்றே வையம் எங்கணும் இங்ஙனம் பரவியுள்ளது என்னும் உண்மையை உறுதியாக என்று ஒருவன் அறிகின்றானே அன்றே அவன் பிறவிப்பேறு கண்ட பெரியவனாய்ப் பேரின்பம் காண்கின்றான். காண வுரியதைக் காணாதிருப்பது கடுங்கேடாகின்றது.

வந்துள்ள இந்த வரவு.

என்றது மனித சன்மம் மருவி இங்கே வந்துள்ள நிலைமையை. இழிந்த பல பிறவிகளிலிருந்து தப்பிப் பிழைத்து உயர்ந்த இந்தப் பிறப்பை அடைந்தது மிகவும் அரிதான பெரிய பேறும்.

நிலை உணரின் உள்ளம் நொந்து வெந்து விடும்.

நாம் பிறந்து வந்துள்ள நிலையையும் பிறப்பின் துயரங்களையும் சிந்தித்து உணர்ந்தால் நெஞ்சம் வெந்து நிலை குலைந்து போம் என்றது அல்லல்களின் எல்லைகளைக் கருதி உணர வந்தது.

புல் பூண்டு முதலிய புல்லிய நிலைகள் எல்லாம் கடந்து மனித உருவில் வந்தது கடலைக் கையால் நீந்தி மூடவன் கரை கண்டது போலாம். மானுட சாதியை மருவியவுடன் ஞானம் அடைய நேர்கின்றது. நேரவே போன பிறவிகளையும் புகுந்த வாவிளையும் அறிந்து வியந்து இனிமேல் பிறவியில் புகலாகாது என்று கருவிலிருந்து கொண்டே இறைவனை நினைந்து உயிர் மறுகி உருகுகின்றது. தாயின் உதரத்தில் அங்ஙனம் பரிதபித்துக் கிடந்த சீவன் பிறந்து வெளிவரும் துயரமும், உலகில் வந்தவுடன் பழைய நினைவை மறந்து விடும் நிலைமையும் பெரிதும் பரிதாபமுடையன.

அன்னை அருந்தும் ஆகாரத்து ஆறு சுவையும் அடைவுறவே
துன்னு நாபி சூத்திரத்தால் உதரத்திடையே தொகும் அதனல்
மன்னு மனுதி யவற்றாலும் மாந்தும் துக்கம் சுகம் சீவன்
முன்னைச் செயலும் கனவு எனவே முளைக்கும் பிரியும் மோகமுமே. (1)

இறந்தேம் முனமே; இனிப்பிறப்பேம்; என்றும் இந்தமுறை; இனியாம்
பிறந்த பொழுதே பிறவாத பெருமை யுடைய பிஞ்ஞகனை
அறிந்தே அவலப் பிறப்பிறப்பை அறுத்து விடுவோம் அவன் அருளால்
செறிந்தே குரவன் திருவடியைத் திகழ்ந்த வேதாகமம் தெருண்டே (2)

என்றென்று எண்ணி இருக்கும்உயிர் இடர்ப்பட்டழியும்எழில்வரைக்கீழ்
ஒன்றும் ஒருவன் தனைப்போலக் கருப்பா சயப்பை உறுத்துதலான்
மன்ற உததி மறிந்து ஆழ்வான் வருத்தம் என்ன வருந்தியிடும்
நின்ற கருப்பா சயவுதக வெள்ளம் கொள்ள நிறை அழிந்தே. (3)

கருப்பா சயமே கட்டமதாம் அதனின் அதிகம் கடுங்காலும்
மூரிக்க மிகவும் மோகமுற முன்னை உணர்வும் அந் நிலையே
மரிக்க ஆலைக் கரும்புஎனவே யோனி வழியின் வலிதொலைய
நெரிக்கப் பட்டு நிலமிசையே தோன்றும் உயிரும் நிலையுடனே. (4)

சூக்க உருவைத் தொட்டுஎழுந்த தூல வுருவைத் துதைந்து அந்த
ஆக்கை தன்னை யான்என்றே அபிமானித்தே அறம் பாவம்
ஆக்கும் பயனை முறையுறவே அருந்திப் பின்னும் அறம்பாவம்
ஆக்கி யான்என் செருக்காலே அடங்கிப் பிறக்கும் ஆருயிரே. (5)

(சிவதருமோத்தரம்)

கருப்பையில் கட்டுண்டு கிடந்து சீவர்கள் பிறந்து வருகிற அவல நிலைகளை இதில் அறிந்து கவல்கின்றோம். எல்லையில்லாத காலம் அல்லல்களில் உழந்து வந்துள்ளதை நினைந்து "ஆண்டவனே! இந்தத் துயரம் போதும்; இனி மீண்டு பிறவாதபடி என்னைக் காத்தருளுக" என்று தாய் வயிற்றில் உச்சிமேல் கூப்பிய கையோடு உருகியிருந்த சிசு பிறந்து வெளியில் வந்ததும் அதனை முழுதும் மறந்து வைய மையலில் இழிந்து வெய்ய வினைகளைச் செய்து மீண்டும்மீண்டும் பிறவிகளை வளர்த்துவரும் விசித்திரங்கள் அதிசயமான மாயா விநோதங்களாயுள்ளன.

உற்ற பிறப்பின் உறுதியை ஓர்ந்து உண்மை தெளிந்து உய்தி காண்பவனே சிறந்த தத்துவ ஞானியாய் உயர்ந்து நிற்கின்றான்.

> பெற்ற பிறவிப் பெரும்பயனைப் பெற்றிலையேல்
> கற்ற கலைஎன்னும் காண்!

என்னும் இது இங்கே கருதிக் காணத் தக்கது.

துன்பத் தொடர்பு நீங்கி இன்ப நிலையை அடைக.

---

422. ஞாலம் எனுமரங்கில் நாளும் பலகாட்சி
காலம் எனுமடபடத்தில் காண்கின்றோம்—கோலமுடன்
எண்ணிறந்த கோடி இறந்தொழிந்த நாமுமவ்
வண்ணம் ஒழிகின்றோம் வந்து. (உ)

இ—ள்

உலகம் என்னும் அரங்கில் காலம் ஆகிய படத்தில் அரிய பல காட்சிகளை நாளும் நாம் பார்த்து வருகிறோம்; அளவிறந்த கோடிகள் தோன்றி அழிந்து ஒழிந்து போயின. நாமும் அவ்வாறே மறைந்து போகப் போகின்றோம் என்பதாம்.

இது, ஞாலத்தின் கோலத்தை உணர்த்துகின்றது.

ஞாலம் = உலகம்; பூமி. விரிந்து பரந்து வளைந்திருப்பது என்னும் ஏதுவான் வந்தது அரங்கு = நாடக சாலை.

உலக நிலையும் உயிர் வாழ்வும் கால வேகமும் அதிசயமுடையன. பல வகையான கதிகளில சீவ கோடிகள் ஓடி வருகின்றன. அந்த வரவு செலவுகள் அறிய அரியனவாய் விரவி விரைகின்றன. உலகக் காட்சிகளைப் பார்க்கின்றோம்; உண்மையை நோக்கி உறுதியுணராமல் போகின்றோம். அப் போக்கு பொல்லாத பிறவித் துயரங்களையே ஆக்கி வருதலால் அது ஞான ஒளி இழந்த ஈனம் என இழிக்கப்பட்டது.

மனிதன் எதையும் காணுகின்றான்; கருதுகின்றான்; அக் காட்சியும் கருத்தும் தன் உயிர்க்கு உறுதி நலம் காணின் உயர்ந்த ஞானமாய் ஒளி புரிகின்றது. அங்ஙனம் காணுவழி இழிந்து படுகின்றது. ஆன்ம நாட்டம் உடையது மேன்மையைக் காட்டுகின்றது; அல்லாதது இழிந்த மாட்டுப் பார்வையாய்க் கழிந்து தொலைகின்றது. விழி இருந்தும் குருடராய்ப் பழிபடுவது அழிவடைவாம்.

உணர்வு நலம் கனிந்த உயர்ந்த மனிதனாய்ப் பிறந்திருக்கின்றாய்; கலைகள் பலவும் கருதி யுணர்கின்றாய்; சென்ற காலத்தையும எதிர்காலத்தையும் சிந்தித்து நோக்குகின்றாய்; நிகழ்கால நிலைகளையும் நேரே காண்கின்றாய்; இங்ஙனம் எல்லாம் கண்டும் உனது உண்மை நிலையைக் காணுமல் வீணே உழலுவது அதிசயமான மாயா விநோதமாகின்றது. மாயம் தெளிக; மயக்கம் ஒழிக.

"நான் யார்? ஏன் இங்கு வந்தேன்? முன்னம் எங்கு இருந்தேன்? ஈண்டு என்ன செய்ய உரியேன்? இந்த நிலை இனியதா? சொந்தமானதா? இடையே வந்ததா? எந்த நிலையை அடைந்தால் என்றும் குன்றாத இன்ப நலனை அடையலாம்?" என்னும் இந்த வாறான சிந்தனைகள் என்றாவது ஏதாவது உனக்கு வந்தது உண்டா? இத்தகைய விசாரணைகள் உற்றபொழுது நித்தியமான உத்தம உண்மைகள் உதயம் ஆகின்றன.

தனக்கு உறுதி நலம் கண்டவன் நல்ல காட்சியாளனாய் மாட்சி மிகுந்து ஞான சீலங்களை மருவிப் பேரின்ப நிலையை அடைகின்றான். உண்மை காண்பதே உய்தி காண்பதாம்.

காட்சிநன் னிலையில் ஞானக் கதிர்மணிக் கதவு சேர்த்திப்
பூட்சிசால் ஒழுக்கம் என்னும் வயிரத்தாழ் கொளுவிப் பொல்லா
மாட்சியில் கதிகள் எல்லாம் அடைத்தபின் வரம்பில் இன்பத்து
ஆட்சியில் உலகம் ஏறத் திறந்தனன் அலர்ந்த தாரான். (1)

செப்பிய சீலம் என்னும் திருமணி மாலை சூழ்ந்தார்
கற்பத்துள் அமரர் ஆவர்; காட்சியின் அமிர்தம் உண்டார்
ஒப்பநீர் உலகம் எல்லாம் ஒருகுடை நிழற்றி இன்பம்
கைப்படுத்து அலங்கல் ஆழிக் காவலர் ஆவர் கோவே. (2)

(சீவக சிந்தாமணி)

காட்சியைக் குறித்து வந்துள்ள இவை இங்கே கருதி உணர வுரியன. உலகத் தோற்றங்களைக் கண்ணால் காண்பதோடு ஒழிந்து போகாமல் உயிர்க்கு உண்மையான உறுதி நிலையைக் கண்டு கொள்வதே காட்சியாம்.

பலகாட்சி காலம் எனும் படத்தில் காண்கின்றோம்.

கால நீட்சியிலேதான் யாவும் கண்டு வருகின்றோம் ஆதலால் அரிய பல காட்சிகளைக் காட்டும் படம் என உருவகமாய் ஈண்டு அது மருவி நின்றது. படம்=திரைச்சேலை. பலவகையான படிவங்களையும் பாடங்களையும் நேரே காட்டி வருதலால் அது படம் என வந்தது. காலத்தின் கோலத்தைக் கருதிக் காணுக.

காலச் சுருள் எல்லையின்றி நீண்டு வருதலால் அளவிடலரிய காட்சிகள் அதில் இடையறாது தொடர்ந்து வெளி வருகின்றன.

ஞாலத்தை அரங்கு என்றது உலக வாழ்வு ஒரு கூத்தாட்டம்

என்பதை உணர வந்தது. ஆசையாகிய பிசாசுகள் வசப்பட்டுப் பாச பந்தங்களில் பாய்ந்து நீசங்கள் தோய்ந்து யாதும் ஆய்ந்து பாராமல் எங்கும் நிலையாய் ஆடி வருதலால் மனித வாழ்க்கை மாயா விநோதமான பேயாட்டம் என்றே மதிக்கப் பட்டுள்ளது.

பலவகையான உருவத் தோற்றங்களை மருவி வந்து வினைக்கு ஈடாக உயிரினங்கள் நடித்து நிற்கின்றன ஆதலால் இவ் வுலகம் நாடக சாலை என நேர்ந்தது.

சீவ கோடிகளை இவ்வாறு அதிசய நிலையில் விதிமுறையே ஆட்டி வருதலால் கடவுளுக்கும் கூத்தன் என்று ஒரு பெயர் வந்தது.

"The world's a theatre, the earth a stage
Which God and nature do with actors fill."

(Thomas Heywood)

"உலகம் ஆகிய நாடக சாலையுள் பூமி என்னும் மேடையில் சீவர்களாகிய நடிகர்களைக் கடவுளும் இயற்கையும் நிரப்பியருள்கின்றன" என்று தாமஸ் ஹீவுட் என்பவர் இவ்வாறு பாடியிருக்கிறார். உலக இயக்கமும் உயிர்களின் மயக்கமும் உணர வந்தன.

"All the world's a stage
And all the men and women merely players."

(Shakespeare)

"உலகம் எல்லாம் நாடக அரங்கு; ஆண் பெண் எல்லாரும் நடிகர்கள்" என ஷேக்கிஸ்பீயர் இங்ஙனம் கூறியுள்ளார்.

பலரும் வந்து சிறிது கூடியிருந்து விரைவில் பிரிந்து மறைந்து போதலால் மனித வாழ்வு மாயக் கூத்து என வந்தது.

நாம உருவங்களாய் வெளியில் தோன்றுவன வெறும் வேடங்கள்; அந்த மாயக் காட்சிகளில் மயங்கி மருளாமல் ஆன்ம நோக்கம் புரிந்து வருபவர் பெரிய பாக்கியசாலிகள் ஆகின்றனர்.

நார்த்தொடுத்து ஈர்க்கில்என்? நன்றாய்ந்து அடக்கில் என்?
பார்த்துழிப் பெய்யில் என்? பல்லோர் பழிக்கில் என்?
தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டும்
கூத்தன் புறப்பட்டக் கால். (நாலடியார்)

உயிரை இதில் கூத்தன் என்று குறித்திருக்கிறார். சீவப் போர்வையான உடலைப் பார்வைக்குக் கொண்டு வந்து காட்டி

உண்மை நிலையை உணர்த்தியுள்ளது உவகை நிலையாய் ஒளிர்கின்றது. வந்துள்ள வரவுகள் சிந்தை தெளிய நேர்ந்தன.

"நந்த வனத்தில் ஓர் ஆண்டி—அவன்
நாலாறு மாதமாக் குயவனை வேண்டி
கொண்டு வந்தான் ஒரு தோண்டி—அதைக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி."

மனித வாழ்வின் நிலைமையை எளிது தெளிவாக உல்லாச விநோதமாய்ச் சொல்லியுள்ள இதன் உள்ளக் கருத்தை உணர்ந்து கொள்ளவேண்டும். தோண்டி = மண்பானை. ஈண்டு அது உடம்பைக் குறித்து நின்றது. மண்பாண்டம் போன்ற தேகத்தைச் சில காலம் சுமந்து திரிந்து முடிவில் ஒருநாள் போட்டு விட்டு தேகி ஓடிப் போய் விடுகிறான்; இந்தப் பொய்க்கூத்தில் மெய்க்கூத்தனைக் கண்டு உய்ய வேண்டும் என்று உணர்த்திய படியிது. உருவகங்களில் புனைந்து அரிய கருத்துக்களைச் சுவையுடன் விளக்குவது உவகை தருகின்றது.

தோலால் செய்த பாவைகளுள் புகுந்து பலவகை நிலைகளில் சீவ கோடிகள் ஆடுகின்றன. தலைவன் ஒருவன் மறைவில் நின்று ஆட்டி வைக்கின்றான்; யாவும் ஆடி வருகின்றன. அந்த அற்புதக் கூத்தன் அதிசய நிலையினன் ஆதலால் விதி முறையே தொடர்ந்து நிகழ்கின்றன.

"நீ ஒரு பெரிய கூத்தாடி; பாவ புண்ணியங்களாகிய பாசங்களில் பிணித்து சீவர்களை ஆட்டி வருகின்றாய்; ஓயாத உனது மாயக் கூத்து யாதும் என்றும் தேயாத திருக் கூத்தாயுள்ளது; இந்தக் கூத்தாடித் தனத்தில் உனக்கு ஆசை அதிகம் ஆதலால் பேய்களோடும் கூடி ஆடி மகிழ்கின்றாய்; உன் ஆட்டமும் நாட்டமும் யாரும் அளவு காண முடியாதன; கொஞ்சம் நின்று என் பாட்டைக்கேட்டு வீட்டுக்கு அனுப்பி விட்டு மேலே ஆட்டத்தைத் தொடங்கிக் கொள்" என்று பதஞ்சலி முனிவர் நடராச மூர்த்தியை நோக்கி வட மொழியில் அழகாக ஒரு கவி பாடியிருக்கிறார். உலகநிலையை யோகிகள் தெளிவாக உணர்ந்து கொள்ளுகின்றனர்.

"கபடமா நாடகத்து ஐந்தொழில் நடத்தும் பிரான்"

எனக் குமர குருபரர் இறைவனை இவ்வாறு துதித்துள்ளார்.